# திருக்கோயில் கருத்தரங்கம்

## ஆய்வுக் கோவை



ளயார்பட்டி, 1997 சனவரி 3,4,5








உ
சிவமயம்

# திருக்கோயில் கருத்தரங்கம்

## ஆய்வுக்கோவை






1997 சனவரி, 3,4,5 நாள்கள்
பிள்ளையார்பட்டி

வழங்குநர்

திருவண்ணாமலை ஆதீனம்
குன்றக்குடி – 630 206

சிவநெறிக்கழகம்
பிள்ளையார்பட்டி – 630 207

அழகப்பா பல்கலைக் கழகம்
காரைக்குடி – 630 003

முதற்பதிப்பு : 1997 சனவரி

வெளியீடு :



இம்மூன்று நிறுவனங்களுமிணைந்து 3-1-1997 - 5-1-1997
பிள்ளையார் பட்டியில் நடத்திய கருத்தரங்கக் கட்டுரைகளின் கோவை.

நூலாக்கம்:

கே.பி.எஸ்.வி. கம்ப்யூட்டர்ஸ்
டாக்டர் வ.சுப. மாணிக்கனார் சாலை
காரைக்குடி – 2

உ



# தோரண வாயில்



தமிழகத்தின் தலைசிறந்த பெருமைகளுள் குறிப்பிடத்தக்கது விண்ணளந்து காட்டி வினைமறைக்கும் திருக்கோயில்களின் மாட்சி. ஊர்தோறும் அமைந்த திருக்கோயில்கள், அவ்வூர்ச் சமுதாய மையங்களாக, பணிமனைகளாக விளங்கி வந்துள்ளன. கல்வி, மருத்துவம், நுண்கலைகள் முதலியவற்றை வளர்த்து வழங்கி வந்துள்ளதன்மூலம் இம்மை நலன்களையும், தோத்திர, சாத்திர ஆகமங்களை வழங்கி வந்துள்ளதன் மூலம்மறுமை நலன்களையும் சமுதாயத்துக்கு ஊட்டி வளர்த்து வந்துள்ளன. இவ்விருமை நலன்களும் ஒருசேரச் சமுதாயத்தைச் சென்றடைந்து செழுமையூட்ட வேண்டிய காலச் சூழல் இன்று.

இச்சூழலில் அமைந்துள்ளதே இத்திருக்கோயிற் கருத்தரங்கம். இதனை 1997 சனவரி 3,4,5 ஆகிய மூன்று நாள்களிலும் பிள்ளையார்பட்டியை மையமாக வைத்துக் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனமும், காரைக்குடி அழகப்பா பல்கலைக் கழகமும், பிள்ளையார் பட்டி சிவநெறிக்கழகமும் இணைந்து நடத்துகின்றன.

இம்மூன்று நிறுவனங்களைப்பற்றிய குறிப்புகளுடன், சிவாகமம், சிற்பம், சோதிடம், சாத்திரம், தோத்திரம், நாதசுரம், தவில் ஆகிய திருக்கோயிற்கலைகள்பற்றிய ஆறு அமர்வுகளில், அந்தந்தத் துறைகளில் தோய்ந்து பழுத்த முதறிஞர்கள், தத்தம் நுண்மாண் நுழை புலங்கொண்டு படித்தளிக்கவுள்ள கட்டுரைகள் இக்கோவையில் இடம் பெறுகின்றன. இதனைத் தொடர்ந்து திட்ப நுட்ப வொட்பம் வாய்ந்த தனிக்கட்டுரைகளும் இதில் இடம் பெறுகின்றன.

இவற்றுக்கு மணி முடிகட்டினாற் போல வணக்கத்திற்குரிய தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் "கோயில் வளர்த்த வாழ்வியற் கலைகள்" என்ற கட்டுரை இடம்பெற்றுப் பொலிவு கூட்டுகிறது.

தோன்றாத் துணையாய் விளங்கும் தவத்திரு அடிகளார் அவர்களின் கட்டுரையைப் பயன்படுத்திக்கொள்ள மகிழ்வுடன் இசைவளித்த குன்றக்குடி குருமகா சந்நிதானம் அவர்களுக்கும், பிற கட்டுரைகளை வழங்கிச் சிறப்பித்துள்ள அறிஞர் பெருமக்களுக்கும், நன்முறையில் அச்சிட்டுத் தந்துதவியுள்ள காரைக்குடி கே.பிஎஸ்.வி. கம்ப்யூட்டர்ஸ் நிறுவனத்தினருக்கும், இக்கட்டுரைக் கோவை வெளிவர உதவியுள்ள அனைவர்க்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

திருவண்ணாமலை ஆதீனம்
குன்றக்குடி

அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி

சிவநெறிக் கழகம்
பிள்ளையார்பட்டி



03-01-1997
பிள்ளையார்பட்டி

## உள்ளே...

உ

குன்றக்குடித்

# திருவண்ணாமலை ஆதீனம்

திருவண்ணாமலை ஆதீனப் புலவர்
வித்துவான் க. கதிரேசன், எம்.ஏ., பி.எட்.,

---

"குருவாய் வருவாய் அருள்வாய் குகனே" – கந்தரனுபூதி. உயிரினங்கள் உய்தி குறித்து எழுந்தவை ஆதீனங்கள். "தங்கருமம் செய்வாரா"க மட்டுமன்றிப் பிறர் நலம் பேணும் பெருந்தகையாளராகவும் இவ்வாதீனங்களின் அருளாளர்கள் விளங்கி வந்துள்ளனர். மறுமை நலம் நல்குவது மட்டுமா? இம்மை நலங்களும் இவர்களால் வழங்கப்பெற்றன.

"பலம் தரும் பெரிது இகம்பரம் தன்னில்
.................................................
வலம் தரும் புகழ்த் தேவ சிகாமணி
வான்மணி தராது ஒன்றே" (பா 36)

என்று அருட்டிரு குமாரசாமி முனிவர் பெருந்தகை அருளிய ஸ்ரீ தெய்வசிகாமணி நான்மணிமாலை நமக்கு உணர்த்துகிறது. "இம்மையே தரும் சோறும் கூறையும், அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு யாதும் ஐயுறவில்லை" என்பது நம் சமய குரவர் நெறியல்லவா?

நம் குன்றக்குடித் திருவண்ணமலை ஆதீனத்தின் முதற்பெருங் குரவராக விளங்கி இருமை நலங்களையும் தன் அடைந்தார்க்கு வாரிவழங்கிய அருளாளர் ஸ்ரீ தெய்வசிகாமணி தேசிக பரமாசாரிய சுவாமிகள். இவர்கள் தன்டைந்தார்க்கு இன்பங்கள் தந்து, நலிவு தீர்த்துப் பொலிவுகட்டிப் பொன்றுப் பெருவாழ்வு தந்தவர்கள்.

"சுகம்எறிந் தேகுற மாதரும் மாதவத் தோர்களும் கண்
அகம்உறும் தேவசி காமணி யால்அங்கு அவண் அடுத்தே
தகவுறைந்து ஐவனம் காத்துஅரு ணுசலச் சாரலிலே
இகமுறு போகமும் இன்பர போகமும் எய்துவரே"

– ஸ்ரீ தெய்வசிகாமணி நான்மணி மாலை–10

என்ற பாடலால் இவர்களையடுத்தவர் எவராயினும், அவரவர் பக்குவ நிலைக்கேற்ப நலம் பெறுவது உறுதி என்பதை அறியலாம்.

எவ்வுயிரும் தம்முயிர்போல் எண்ணி உள்ளே ஒத்துரிமை உடையவராய் உவக்கின்ற இவ்வருளாளர், நினைக்க முத்திதரும் திருவண்ணுமலையில் அவதரித்தவர்கள்; அருள்நந்தி சிவாசாரியாரின் தலைமாணுக்கராகி உபதேசம் பெற்றவர்கள்; 'அவனுடைய செயலெல்லாம் நமக்கு உவப்பன' என்று பெருமான் கண்ணப்பரைக் குறித்து அருளிய திருக்காளத்தி அண்ணல் அருள்பெற்று, அப்பெருமானையே தம் வழிபடு மூர்த்தியாகப் பெற்ற பேறு பெற்றவர்கள்; முப்போதும்

திருமேனி தீண்டும் சிவாசாரியார் மரபினர்; இல்லறத்தார். இவர் இல்லற நெறி நின்று, வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வானுறையும் தெய்வமானவர்கள் என்பதை,

இருபரு வம்தன் னிடத்துநீங் காத
ஒருபரு வத்தின் உதாசீனன் அரூபி
ஆனசு பாவத்து அனைவரும் உறங்கினும்
தான்உறங் காத தனிக்குடி வாழ்க்கையில்

– ஸ்ரீ தெய்வசிகாமணி நான்மணிமாலை 7:10–15

என்ற பகுதியால் உணரலாம். நம் ஆதீனக் குருமூர்த்திகள் அனைவரும் – பரம்பரை பரம்பரையாக – முப்புரிநூல் அணிதலும், நித்திய வேள்வி செய்தலும் ஆகிய இவற்றால் இம்மூலவரின் "தனிக்குடி வாழ்க்கை" உறுதிப்படுகிறது.

"காக்கையைத் தன்நிறம் ஆக்கும் மேருப்போல் என்போலியரையும் தன்போலாக்கும்" இத் தனிப்பெருஞ் சான்ரோரால் கி.பி. 1310 இல் அமைக்கப்பெற்றதே நம் குன்றக்குடித் திருவண்ணுமலை ஆதீனமாகும். இவர்கள், திருவண்ணுமலை – வேட்டவலம் சாலையின் தெற்கில் சிவயோகநிலையில் ஞானசமாதி கூடியுள்ளார்கள்.

தான் தீண்டிய பொருளின் மாசு தீர்த்துத் தன்னிலை தந்து விளக்கமுறச் செய்வது தீ. உயிர்க்குலத்தின் உள்ளும் புறம்புமாய் இயங்கி, உயிர்ப்புத் தந்து வாழ்விப்பது காற்று வாயு. இவ்விரு செயல்களும் இவர்கள் அவதரித்தருளிய தலச் சிறப்பாலும், அருள்பெற்ற தலச் சிறப்பாலும் இவர்க்கு இயல்பாகவே அமைந்திருந்தன.

"இவருடைய வரலாற்றின் ஒரு பகுதி, திருவண்ணுமலைத் திருக்கோயிலின் தெற்கு மதிற் சுவரில் புடைப்புச் சிற்பங்களாக அமைந்துள்ளது. அதாவது, வல்லாளமகாராசனின் இறந்த பட்டத்துக் குதிரையைத் தம் அருளாற்றலால் எழுப்பித் தந்த வரலாறு. அருணைமலை அண்ணலின் சந்நிதியின் அர்த்த மண்டபத்திலும் இவருடைய திருவுருவம் புடைப்புச் சிற்பமாக அமைந்துள்ளது" – என்று ஸ்ரீ தெய்வசிகாமணி நான்மணி மாலையின் ஆய்வுரை, வாழ்த்துரையில் வணக்கத்திற்குரிய 45 ஆவது குருமகாசந்நிதானம் அவர்கள் (தவத்திரு குன்றக்குடி அடிகளார்) குறிப்பிட்டுள்ளார்கள்.

இவ்விருவகை அமைவுகளும், துன்பம் துடைத்து இன்பம் ஆக்கும் இவர்களது சமுதாயப் பணியினையும், மும்மலம் கழுவி மூர்த்தியிடம் சேர்க்கும் ஆன்மிகப் பணியினையும் அங்கை நெல்லியாக்கும்.

ஞானத்திரளாய் நின்ற இப்பெருமானின் அருள்ஞான வழிவந்து, திருவண்ணுமலைத் திருமடத்தில் ஆட்சி செலுத்திய 17 ஆவது குருமூர்த்திகள், இராமேசுவர யாத்திரை மேற்கொண்டருளியபோது, நம் பகுதியில் வான்மழை மலியப் பெய்தது. இவர்கள் திருவருளால் பெய்யெனப் பெய்த மழை யுணர்ந்த அந்நாளைய இராமநாதபுரம் இரகுநாத சேதுபதி அவர்கள், இவர்களை இப்பகுதியிலேயே நிலையாக எழுந்தருள வேண்டினர். இதனுல் இவர்களது காலம் முதல் (கி.பி. 1690) பிரான்மலை, நம் ஆதீனத்தின் தலைமையகமாயிற்று. இதனை,

"இத்திரு நாட்டில் எழுந்தே யருளி
எங்களை ஆட்கொள வேண்டும் என்ன
அவ்வா றதனுக் கிசைந்த நாக
லிங்கரும் பிரான்மலை எனும்திருத் தலத்தில்
மடம்தா பித்து இருந்தே மகிழ்ந்தனர்"

– குருபரம்பரை அகவல்: அடி 123 – 127

31 ஆவது குருமூர்த்தியாகிய திருவருள்திரு தெய்வசிகாமணி மருதநாயக தேசிக பரமாசாரிய சுவாமிகள் காலத்தின் முற்பகுதிவரை குருமூர்த்திகள் அனைவரும் பிரான்மலையில் எழுந்தருளி அருளாட்சி புரிந்தனர். 31 ஆவது குருமூர்த்தி அவர்கள் குன்றக்குடி அருள்தரு சண்முகநாதப் பெருமான்மீது அளவற்ற ஈடுபாடு கொண்டவர் களாதலால் பையப்பைய, 32 ஆவது குருமூர்த்திகளின் காலத்தில் குன்றக்குடி, நம் ஆதீனத்தின் தலைமையகமாயிற்று.

............... மூன்றும் ஆறுமுக
தேசிகர் இன்பமாய்க் குன்றக் குடியில்
மடாலயம் மாண்புறக் தாபித் திருந்தனர்

– குருபரம்பரை அகவல்: அடி. 141 – 143

கடந்த 700 ஆண்டுகளாக அருளாட்சி புரிந்துவரும்நம் ஆதீனத்தின் சென்ற காலத்தின் பழுதிலாத் திறத்துக்கும், இனி எதிர்காலத்தின் சிறப்புக்கும் அன்றே வித்திட் டவர்கள், சமயப் பணியையும், சமுதாயப் பணியையும் தமது உயிரும் உடம்புமாகக் கொண்ட வழிபாட்டிற்குரிய ஆதீனக் குருமுதல்வர் ஆவார்.

"உறக்கும் துணையதோர் ஆலம்வித்து ஈண்டி
இறப்ப நிழல்பயந் தாங்கு – அறப்பயனும்
தான்சிறிதாயினும் தக்கார்கைப் பட்டக்கால்
வான்சிறிதாப் போர்த்து விடும்"

என்பதற்கிணங்க நம் ஆதீனம் அன்று முதல் இருவகைப் பணியை ஈடுபாட்டுடன் புரிந்து வருகின்றது. இவற்றுள் ஒரு சிலவற்றை மட்டும் நினைவுகூர்வோம்.

ஆன்மநலத் திருப்பணிகள்

நம் ஆதீனத்து அருட்டிரு ஞானப்பிரகாச முனிவர் பெருமான் சிவஞான சித்தியார் சுபக்கம் பகுதிக்கு அரிய உரை எழுதியவர்கள் என்பதும், இவ்வுரை, முதல் நூல் கருத்துக்கு ஒத்தது என்பதும் கொன்றை மாநகரம் சண்முகசுந்தர முதலியாரவர்கள் வெளியிட்ட (கி.பி. 1875) நூற் குறிப்பால் உணரமுடிகிறது. மேலும், சிவஞானபோத வியாக்யானம், பௌஷ்கர ஆகமவிருத்தி முதலிய வடமொழி நூல்கள் ஒன்பதும் இவர்கள் இயற்றியுள்ளார்கள்.

– திருவண்ணாமலை ஆதீன வரலாறு பக்.37 – 39

சென்னையில் நம் ஆதீனத்துக் கட்டளை மடத்தில் தம்பிரானுக இருந்த அருட்டிரு ஆறுமுகத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள், பெரியபுராணத்துக்குத் திட்பமும் நுட்பமும் ஒட்பமும் வாய்ந்த உரை வகுத்துள்ளார்கள். திருவருள்வலத்தால் இந்நூல் மறுப்பதிப்பாக வெளிவர உள்ளது. காசியாத்திரை மேற்கொண்டவர்கள் ஆதலால் காசி யாத்திரை மான்மியம் என்ற நூலும் இவர்களால் எழுதப்பெற்றது.

"இரு மொழிப் புலமையும் இலக்கணத்திட்பமும், கற்பனை ஆற்றலும் கவித்திறனும் சாத்திரத் தோய்வும் சிவஞானச் செறிவும், கைவந்தநிட்டையும் கனவிலும் குருமுதல் வரையன்றிக் கருதாத் தகைமையும்" வாய்ந்த இவ்வாதீனத்து அருட்டிரு குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள், ஸ்ரீ தெய்வசிகாமணி நான்மணிமாலை, ஸ்ரீ தெய்வசிகாமணி சிற்குருமாலை, ஸ்ரீ தெய்வசிகாமணி ஞான அந்தாதி என்ற அரிய மூன்ற நூல்களை இயற்றியுள்ளார்கள்.

சென்னை மைலாப்பூரில் இருந்து இருவகைப் பணியும் செய்து மகிழ்ந்தவர்கள் நம் அருட்டிரு சரவணத்தம்பிரான் சுவாமிகள். "சபாபிரசங்க சிங்கம்", "சைவசாத்திர பண்டிதர்" என்று இவர்களை அந்நாளைய "பேரறிஞர் ஏறு" ஆகிய யாழ்ப்பாணம் ஆறுமுகநாவலர் அவர்கள் பாராட்டியுள்ளார்கள்.

"நாற்கவி விலாசன்', "மெய்த்தவ பூஷணன்", "சைவாகம பொக்கிஷன்" என்று பலவாறு பாராட்டப்பெற்றவர்கள் நமது அருட்டிரு சங்கரலிங்க முனிவர் பெருமான்.

தமக்கென ஒரு வாழ்க்கைமுறை, ஒரு நடையழகு, ஒரு பழகும் பாங்கியல் வகுத்துக்கொண்டு எவ்வகை மேடையிலும் தன்னிலை வழுவாது கருத்துப் பொழிந்து, திசை தடுமாறுவோர்க்குத் துருவ விண்மீனுக நின்று வழிகாட்டி வழி நடத்திய வழிபாட்டிற்கும் போற்றுதலுக்குமுரிய 45 ஆவது குருமகாசந்நிதானம் அவர்களை (தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள்) இந்நானில மறியும்.

இவர்களது வழியில் இருவகைப் பணிகளையும் ஈடுபாட்டுடன் செய்து புகழ்பெற்று வருகின்றவர்கள் வணக்கத்திற்கும் போற்றுதலுக்குமுரிய 46 ஆவது குருமகாசந்நிதானம் திருவருள்திரு தெய்வசிகாமணி பொன்னம்பல தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்.

ஆன்மநலம் சார்ந்த திருப்பணிகள்

"உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்"

ஆதலின் உடல்நலம் பேணும் சமுதாயப் பணிகள், ஆன்மநலத்துக்கு உதவுவனவாகும். இவ்வாதீனம் அரும்பி வளர்ந்தது திருவண்ணுமலையில்; தழைத்துச் செழித்தது பிரான்மலையில்; புகழ்பூத்து மணம் பரப்புவது குன்றக்குடியில். இம் மூன்று தலங்களுமே குறிஞ்சியாகும். குறிஞ்சிக்குரிய கருப் பொருள்களுள் மூலிகைகள் அடக்கம். எனவே பண்டுதொட்டே இவ்வாதீனம் பச்சிலைகளுடன் பழகி வந்துள்ளது. எனவேதான் இவ்வாதீனத் தம்பிரான் சுவாமிகள் தாம் செல்லுமிடங்களிலெல்லாம் பச்சிலை மருந்து தந்து, மக்களின் உடல் பிணி தீர்க்கும் மருத்துவராய் விளங்கியுள்ளனர். இவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் அருட்டிரு சரவணத் தம்பிரான் சுவாமிகள் அவர்களும், அருட்டிரு சங்கரலிங்க முனிவர் அவர்களும் ஆவர்.

அருட்டிரு ஞானப்பிரகாச முனிவர் பெருமான் தாம் தில்லையில் தங்கியிருந்தபோது தில்லைக் கோயிலின் தென்மேற்கு மூலையில் திருக்குளம் ஒன்று அமைத்தருளினர்கள். அது ஞானப்பிரகாசர் திருக்குளம் என்று வழங்கப்பெறுகிறது. பின்னுளில் திருக்குளம் அமைக்கும் பணி, திருக்குளம் பேணும் பணியாகப் பரிணமித்து, 45 ஆவது குருமூர்த்தியின் காலத்தில் மதுரை "இம்மையே நன்மை தருவார்" திருக்கோயில் திருக்குளத் தூர்வை எடுக்கும் பணி, திருவாரூர் கமலாயத் திருக்குளம் தூர்வை எடுக்கும் பணி, குன்றக்குடி மருதாபுரித் திருக்குளத் தூர்வை எடுக்கும் பணி முதலியனவாக மணம் பரப்பியது.

நமது இன்றைய குருமகாசந்நிதானம் அவர்கள் செய்தருளியுள்ள குன்றக்குடி சரவணப்பொய்கை தூர்வை எடுத்த பணியும், குன்றக்குடி மருதாபுரித் திருக்குளத் தூர்வை எடுத்த பணியும் இங்குக் குறிப்பிடத்தக்கன.

உ.வே.சா. அவர்களுக்குத் திருமடத்திலிருந்த பண்டை இலக்கியச் சுவடிகளுடன், உ.வே.சா. குறிப்பிட்டுள்ளவாறு சிலப்பதிகார ஏட்டுச் சுவடி தந்துதவியது நம் ஆதீனம். தாமே உதவியது மட்டுமன்றித் திருமடத்தின் தலைமை எழுத்தர் "அப்பாகுட்டி"யை உடன் அனுப்பி, இப்பகுதியில் ஏட்டுச் சுவடிகள் பெறவும் உதவியுள்ளது. இவ்வகையில் உதவியவர்கள் 39ஆம் பட்டம் திருவருள் திரு தெய்வசிகாமணி ஆறுமுகதேசிக பராமசாரிய சுவாமிகள் ஆவார்கள்.

சென்னைக் கிளை மடத்தில் இருந்த நம் ஆதீனப்புலவர் திருவம்பலத்து இன்னமுதம் பிள்ளையவர்களை, மகாவித்வான் தி.மீ.சு. பிள்ளையவர்கள் தமது இளமைக் காலத்தில் நெருங்கியிருந்து, பல்வேறு நூற் செய்திகளைக் கேட்டு ஐயந்தீர்ந்தார்கள் என்பது உ.வே.சா. அவர்கள் தரும் குறிப்பு.

38 ஆவது பட்டம் திருவருள்திரு தெய்வசிகாமணி ஆறுமுகதேசிக பரமாசாரிய சுவாமிகள் 39ஆவது பட்டம் திருவருள்திரு தெய்வசிகாமணி ஆறுமுகதேசிக பரமாசாரிய சுவாமிகள் முதலிய மகாசந்நிதானங்களும், அருட்டிரு சங்கரலிங்க முனிவர் அவர்கள், அருட்டிரு ஆறுமுகத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள், அருட்டிரு அமிர்தலிங்கத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள், அருட்டிரு சரவண சுவாமிகள் அவர்கள், அருட்டிரு குமாரசாமி முனிவர் அவர்கள், அருட்டிரு வேலாயுதத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் முதலிய தம்பிரான் சுவாமிகள் பாடம் சொல்லுதலில் நன்னூலார் கூறுவதுபோல,

"குலன் அருள் தெய்வம் கொள்கை மேன்மை
கலைபயில் தெளிவும் கட்டுரை வன்மையும்
நிலம்மலை நிறைகோல் மலர்நிகர் மாட்சியும்
உலகியல் அறிவோடு உயர் குணம் இனையனவும்"

பெற்ற ஞானசிரியர்களாக விளங்கியுள்ளனர். இவர்களின் வரிசையில் வழிபாட்டிற்குரிய 45 ஆவது குருமகாசந்நிதானம் அவர்கள் நடத்திய திருக்குறள் வகுப்பும், பெரியபுராண வகுப்பும் நெஞ்சில் நிறைந்து நிற்பன.

யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுகநாவலரவர்களைத் திருமடத்துக்கு அழைத்து அவர்களுக்குத் தனிச் சிவிகை (பல்லக்கு) செய்வித்து அதில் அவர்களை அமரச்செய்து திருவீதி உலாவரச் செய்து மகிழ்ந்ததுடன் பல்வேறு சிறப்புகளும் செய்து பாராட்டியது (38 ஆவது பட்டம்) நம் ஆதீனம்.

மகாவித்வான் திரிசிரபுரம் மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்களை அழைத்துச் சின்னுள் திருமடத்தில் தங்கச் செய்து, பேணி, அவர்கள் காரைக்குடிக்குச் செல்லும்போது தக்க மரியாதைகள் சூழச் சிவிகையில் ஏற்றி வழியனுப்பி மகிழ்ந்தது (38 ஆவது பட்டம்) நம் ஆதீனம்.

43 ஆவது பட்டம் திருவருள் திரு தெய்வசிகாமணி பொன்னம்பல தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் வீணை இசையில் வல்லவர்கள்; இசைக்கலைஞர்களைப் பேணியவர்கள்.

பல்கலைக் கழகமாக விளங்கிவரும் இவ்வாதீனம், புகழ்வாய்ந்த புலவர் பெருமக்களைப் பாராட்டிச் சிறப்பித்துள்ளது. அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் யாழ்ப்பாணம் தில்லைநாத நாவலர், சிலேடைப்புலி வேம்பத்தூர் பிச்சுவையர், சாந்துப் புலவர், வெண்பாப்புலிக் கவிராயர், வேல்சாமிக் கவிராயர், வீரபத்திரக் கவிராயர், கணேச ஐயர் முதலியோராவர்.

பிற்காலத்தில் திரு.வி.க., ரா.பி. சேதுப்பிள்ளை, தெ.பொ.மீ., க.வெள்ளை வாரணனுர், ஔவை சு.துரைசாமிப் பிள்ளை, மகாவித்வான் ச. தண்டபாணி தேசிகர், இலால்குடி நடேசமுதலியார் போன்றவர்கள் நம் ஆதீனத்தால் பாராட்டப் பெற்ற பெரும்புலவர்களுள் சிலராவர்.

மேலும் சங்கத் தமிழ் விழாவாகப் பிரான்மலையில் நடத்திய பாரி விழா, திருமுறைத் தமிழ் விழாவாகத் திருப்புத்தூரில் நடத்திய திருமுறை விழா மற்றும் திருப்புத்தூர்த் தமிழ்ச் சங்கம்; முருகன் தமிழ் விழாவாகக் குன்றக்குடியில் நடத்திய விசாக விழா, சாத்திரத் தமிழ் விழாவாகக் குன்றக்குடியில் நடத்திய ஆதீன குருமுதல்வர் குருபூசை விழா ஆகிய விழாக்களில் ஆண்டுதோறும் தமிழகத்துப் பெரும் புலவர் பெருமக்கள், இசைத்துறை வல்லுநர்கள், நாடக, நாட்டியக் கலைஞர்கள், உயர் பண்பாளர்கள் ஆகியோர்களுக்குப் பட்டமளித்துப் பாராட்டுச் செய்து வருவது நம் ஆதீனம்.

அருள்நெறித் திருக்கூட்டம், திருக்குறட் பேரவை, தெய்வீகப் பேரவை, திருவருட் பேரவை, அருள்நெறித் திருப்பணி மன்றம் ஆகியவற்றை நாடெங்கும் அமைத்துச் சமயத் தொண்டும், சமதாயத் தொண்டும் இலக்கியத் தொண்டும் ஆற்றிவருவது நம் ஆதீனம்.

இத் திருக்கூட்டம் மற்றும் பேரவைகள் மூலம் கீழவெண்மணி தீவிபத்து, இராமநாதபுரம், புளியங்குடி, மண்டைக்காடு, திண்டுக்கல் இனக் கலவரங்களில் அவ்விடங்களுக்குத் தாமே "நவகாளிக் காந்தியண்ணல்" போலத் தனியே சென்று அமைதி ஏற்படுத்தியுள்ளது நம் ஆதீனம்.

அருள்நெறித் திருப்பணி மன்றத்தின் மூலம் தமிழகமெங்கும் கல்விப் பணிக்காகத் தொடக்கப் பள்ளி முதல் கல்லூரிவரை 19 நிறுவனங்களை நிறுவிப் பணி செய்து வருவது நம் ஆதீனம்.

மனித ஆற்றல், விஞ்ஞான அறிவு, அரசுப் பொருளாதார உதவி இவற்றை இணைத்துக் குன்றக்குடி நேமம் ஒருங்கிணைப்புத் திட்டக்குழு அமைத்துப் பணி புரிந்து, முன்னாள் தலைமை அமைச்சர் அமரர் திருமதி இந்திராகாந்தியம்மையாரின் நெஞ்சார்ந்த பாராட்டுப் பெற்றது நம் ஆதீனம்.

இத்திட்டக் குழுவினை விரிவுபடுத்தித் திருக்கோளக்குடி, பிரான்மலை, கன்னிராசபுரம், மேலாதனூர் முதலிய பல்வேறிடங்களில் திட்டக்குழு அமைத்து நாட்டு நலப்பணி புரிந்தது நம் ஆதீனம்.

இளைஞர் முதல் பெரியவர்கள் வரை அனைத்து மட்டத்திலும் அறிவியல் நோக்கு வளரச் சுதேசி விஞ்ஞானி இயக்கம் நிறுவித் திங்கள் பத்திரிகை, ஆண்டுதோறும் பல ஊர்களில் அறிவியல் கண்காட்சி முதலியன நடத்தி வருவது நம் ஆதீனம்.

இவைபோன்ற எண்ணற்ற பணிகளைத் தன் விழுதுகளாகிய மகாசந்நிதானங்கள், தம்பிரான் சுவாமிகள் மூலம் நாடெங்கும் தரையில் ஊன்றித் தளிர்த்துச் செழித்து வளர்ந்துள்ள ஆலமரமாம் நம் ஆதீனத்தின் ஆன்ம வளர்ச்சிப் பணிகளையும், ஆன்ம வளர்ச்சி சார்ந்த பணிகளையும் விரிக்கிற் பெருகும்; தொகுப்பின் எஞ்சும்.

திருச்சிற்றம்பலம்



# அழகப்பா பல்கலைக் கழகம்

**காரைக்குடி**

---

'கோடி கொடுத்த கொடைஞன்' வள்ளல் அழகப்பர் கி.பி. 1947 இல், ஒருங்கிணைந்த இராமநாதபுரம் மாவட்டத்தில் அழகப்பா கல்லூரியைத் தொடங்கினார்; இதுவே இம் மாவட்டத்தின் முதற்கல்லூரி. வள வாழ்வுமிக்க வள்ளல் அழகப்பர், இளைய சமுதாயத்தின் மீது அக்கரை காட்டிக் காரைக்குடியில் பல்வேறு கல்லூரிகளை நிறுவினார். கி.பி. 1985 ஆம் ஆண்டு மேத்திங்கள் 9ஆம் நாள், அழகப்பா கல்லூரியை நடுநாயகமாகக் கொண்டு அழகப்பா பல்கலைக்கழகம் தோன்றியது. இது தமிழகத்தின் பதினொராவது பல்கலைக்கழகமாகும். இது கல்லூரிகள் இணைக்கப்படாது தனித்ததொரு பல்கலைக்கழகமாக (unitary university) இயங்கி வருகிறது. இப்பல்கலைக் கழகத்தின் குறிக்கோள்' செயலிற் செம்மை' என்பதாகும்.

தமிழ் வணிகவியல், இயற்பியல், கணிதம் என்ற நான்கு துறைகள், உடற்பயிற்சிக் கல்லூரி, கல்வியியல் கல்லூரி என்ற இரண்டு கல்லூரிகள் என்று தொடங்கிய அழகப்பா பல்கலைக்கழகத்தில், இன்று பதினான்கு துறைகள் அமைந்திருக்கின்றன. மாண்பார்ந்த இக்கலைக்கோயில் மழவிளம் பருவத்திலேயே பெருமைமிகு காமன்வெல்த் பல்கலைக் கழகங்களின் கூட்டமைப்பில் உறுப்பினராகியது. இந்தியப்பல்கலைக்கழகங்களின் கூட்டமைப்பிலும், இப்பல்கலைக்கழகம் உறுப்பினராயிற்று.

புதிய துறைகளில் படிப்பும் பயிற்சியும் அளித்து, அவற்றில் ஆய்வும் அறிவு வளர்ச்சியும் அறிவுப் பரப்பலும் மேற்கொள்ள வேண்டும் என்ற தனது விழுமிய நோக்கிற்கு ஏற்ப, இந்தியாவில் வேறெங்கும் இல்லாத புதிய முது கலைத்துறைகளை அழகப்பா பல்கலைக்கழகம் நிறுவியுள்ளது. அவை வங்கி மேலாண்மை இயல், நிருமச் செயலரியல், மகளிரியல், பன்னாட்டு வணிக மேலாண்மையியல், தொழிலக வேதியியல், படிக வளர்வியல் என்பனவாகும். இவை பல்கலைக்கழகத்திற்கு அணி சேர்க்கும் தகையன.

அழகப்பா பல்கலைக்கழகம் தோன்ற வித்தாக விளங்கிய தமிழ்த்துறையில், தமிழோடு கோயிற்கலையும் இணைத்துப்பயிற்றுவிக்கப் பெறுகிறது. தமிழ் முதுகலை பயிலும் மாணாக்கர் ஒவ்வொருவரும் ஏதேனும் ஒரு கோயிலை ஆய்வு செய்து ஆய்வேடு வழங்கியுள்ளனர்; இதுகாறும் இந்த வட்டாரத்திலுள்ள அறுபதுக்கு மேற் பட்ட கோயில்கள் ஆராயப் பெற்றுள்ளன. 'தொலைதூரக் கல்வி இயக்ககமும்' இப்பல் கலைக்கழகத்தில் செயல்படுகிறது. கணிப்பானியல், இளங்கல்வியியல் (B.Ed), முதுகல்வியியல் (M.Ed), போன்ற பலதுறைகளுக்கு வகுப்புகளும், பட்ட மேற்படிப்புப் பெருஞ்சான்றிதழ் வகுப்புகளும் இந்த இயக்ககத்தின் வழி நடைபெறுகின்றன. கோயிற்கலைப் பட்டமேற்படிப்புப் பெருஞ்சான்றிதழ் வகுப்பும் இங்கு நிகழ்வது குறிக்கத்தக்கது.

அழகப்பா பல்கலைக்கழகத்தின் முதல் துணைவேந்தராகத் திகழ்ந்து, பல்கலைக்கழகத்திற்கு வித்திட்டுத் திட்டமிட்டவர்கள் டாக்டர் (திருமதி) இராதாதியாகராஜன் அவர்கள். இவர்களே பணிசார்ந்த பல புதிய புலத்துறைகளை உருவாக்கிய பெருமைக்குரியவர். இவர்கள் காலத்தில், அழகியதோர் ஆட்சிக் கட்டிடமும் நூல்பல நிறைந்த நூலகக் கட்டிடமும் பல்வேறு துறைகளும் பெருகின. அவர் தம் அரும்பணியைத் தொடர்ந்து இடையறவின்றி, இன்றையத் துணைவேந்தர் டாக்டர் பெ. இராசாமி அவர்கள், பல புதிய கட்டிடங்களையும் புலத்துறைகளையும் உருவாக்கி வளர்த்து வருகிறார்.

1996 ஆம் ஆண்டு மேத்திங்கள் அனைத்திந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் கருத்தரங்கை, அழகப்பா பல்கலைக் கழகம் முதன்முதலாக நடத்தியது குறிப்பிடத்தக்கது. நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக அழகப்பா பல்கலைக்கழகம் வளர்ச்சிப் பாதையில் நடைபோட்டு வருகிறது.



# பிள்ளையார்பட்டி – சிவநெறிக்கழகம்

குன்றக்குடி–பெரியபெருமாள்

தெய்வமாக் கவி சேக்கிழார் பெருமான் உருக்கத்தோடும் கனிந்த அன்பின் பெருக்கத்தோடும், திண்ணப்பர் கண்ணப்பர் ஆன வரலாற்றைத் திருத்தொண்டர் புராணத்தில் சொல்லும் பகுதியில் திருக்காளத்தி மலையினில் எழுந்தருளித் திருவருள்பாலிக்கும் இறைவனுக்கு வழிபாடு செய்ய சிவகோசரியார் வருகை புரிந்த முறையைக் குறிப்பிடுகிறார். "எய்திய சீர் ஆகமத்தில் இயம்பிய பூசனைக்கேற்ப, கொய்த மலரும் புனலும் முதலான கொண்டணைந்தார்" என்று சொல்கிறார். கண்ணப்பர் வரலாறு நிகழ்ந்த காலம், ஆயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முந்தியதென்பது ஆய்வாளர் கணிப்பு. எனவே ஆகம நெறி சார்ந்த இறைவழிபாடு. பன்னூறு ஆண்டுகளுக்கு முன்னரே பழக்கத்தில் இருந்துள்ளதென்பது கண்கூடு.

இறைவழிபாட்டினை 'ஆத்மார்த்தம்' என்றும் 'பரார்த்தம்' என்றும் இரு பிரிவாகக் கொள்வது நமது மரபு. தனி வழிபாடாகிய ஆன்மப் பிரார்த்தனையை 'ஆத்மார்த்தம்' என்பர். பிறருக்காக இறைவனை எழுந்தருளச் செய்வித்து, வழிபாடு நிகழ்த்துவதை 'ப்ரார்த்தம்' எனக் குறிப்பிடுவர். சீலமும், இறையுணர்வுச் சித்தமும், வேதாகம நெறியில் வித்தகமும் கொண்டோர், பெருமானின் அருகிருந்து பிறருக்காக அர்ச்சித்துப் போற்றி வழிபடும் பரார்த்த முறை, மிகப் பழங் காலத்திலிருந்தே இறைவழிபாட்டில் பின்பற்றப்பட்டு வந்துள்ளது.

பரார்த்த முறையில் வழிபாடு செய்வோரை 'அருச்சகர்' என அழைப்பதும், உரிய தகுதி பெற்று, அரிய சடங்குகளை ஆற்றிக்கொண்ட பின்னர், 'சிவாச்சாரியார்' எனச் சிறப்பித்துக் குறிப்பிடுவதும், வழிவழியாக மேற்கொள்ளப் பெற்ற சமய வழக்கு.

திருக்கோயில்களில் இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதிவரை அருச்சகர்களாக அருட்பணியேற்றுத் தொண்டாற்றிய பெருமக்களில் பெரும்பான்மையினர், உரிய வேதாகமங்களைப் பரம்பரையாகத் தந்தையிடமிருந்து மகன் கற்றுத் தெளியும் பாங்கினையே பழக்கமாக்கிக் கொண்டிருந்து வந்துள்ளனர். ஒரு சிலர் குருவாக வரித்துக்கொண்ட கற்றறிருந்தவர்களிடமும் பயின்று, பணியாற்றி உள்ளனர்.

வேதங்களையும், சாஸ்திரங்களையும், இலக்கணங்களையும், ஆகம நெறிகளையும், அநுஷ்டானங்களையும், அர்ச்சகருக்கு உரிய அனைத்து அருளாக்கங்களையும், முறையாகப் பயில்விக்கும் அமைப்புகள் தோன்றவில்லை. ஆயினும் வழிவழியாக வந்த தொடர்நிலையில், பூசனைக்குரிய வேதஆகமக் கல்வியைப் பரம்பரைத் தன்மையில் பயின்று, பரார்த்த முறையில் வழிபாடு செய்து வைக்கும் பழக்கம் பல நூற்றாண்டுகளாக மேற்கொள்ளப்பட்டு வந்துள்ளது.

இருபதாம் நூற்றாண்டுப் பிற்பகுதியின் உதய காலத்தில், வேதாகமப் பாடசாலை ஒன்றை, தருமபுரம் ஆதீனம் 'கயிலைக் குருமணி' சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள், முதன் முதலில் தருமபுரத்தில் உருவாக்கம் பெறுமாறு அருளினார்கள்.

அருச்சகர்களுக்குத் தேவையான யஜுர் வேதம், சாஸ்திரம், ஆகமம், தேவாரத் திருமுறைகள் ஆகியவற்றை ஆளுகைக்குட்பட்ட திருக்கோயில்களுக்கு அனுப்பி வைத்தார்கள். தேவைக்குரியவர்களைத் திறமுடையவர்களாக்கும் முயற்சிதான்; எனினும் இவ்வகைக் கல்விக்குத் திட்டமிட்ட பாடத்துடன், பயில்விக்கும் அமைப்பாக முதன்முதலில் வடிவாக்கம் கொள்ளச் செய்த அருமை – தருமையாதீனத்தின் தனிப் பெருமை.

தருமபுரத்தைத் தொடர்ந்து, காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடத்தின் ஆதரவில், திருச்சி மாவட்டம் அல்லூரில் ஓர்அமைப்பு உருவாகி உரிய கல்வியும், பயிற்சியும் அளித்து வருகின்றது.

பழநி தேவஸ்தானம் வேதாகமப் பாடசாலையை உருவாக்கியதோடு வேறுபாடோ, பாகுபாடோ இன்றி எந்தச் சமூகத்தைச் சார்ந்தவராயிருப்பினும், சில குறிப்பிட்ட தகுதி உடையவர்களைப் பயிற்சிக்கு அனுமதித்தது.

தஞ்சை மாவட்டம் திருப்புகலூர் அக்கினீஸ்வரர் சுவாமி தேவஸ்தானம் ஒரு பாடசாலையைத் தொடங்கி, உரிய பயிற்சியளிக்க முன் வந்தது.

அதன்பின்னர், சைவ சமய நெறியில் மிகுந்த ஈடுபாடு கொண்ட நகரத்தார் சமூகம் நிர்வகித்து வருகின்ற பிள்ளையார்பட்டி கற்பக விநாயகர் திருக்கோயில், வேதாகமப் பாடசாலை ஒன்றைத் தோற்றுவித்தது.

தொடர்ந்து அருள் நெறிச் சீலர் பாலசுப்பிரமணிய சிவாச்சாரியார் முன்னின்று உருவாக்கிய வழுவூர் ஆகமப் பாடசாலையும், கோவை மாவட்டம் கௌமாரமடாலய மகரிஷி சுந்தர சுவாமிகள் தொடங்கிய பாடசாலை அமைப்பும், திருப்பரங்குன்றம் தேவஸ்தானம் வடிவு கொள்ளச்செய்த வேதாகமப் பாடசாலையும் அருச்சகர் பயிற்சி அமைப்பில் குறிப்பிடத்தக்கவை.

பன்னூறு திருக்கோயில்களைக் கொண்டுள்ள தமிழ்நாட்டில், வழிபாட்டுக்குரிய, வழிபாட்டை நடத்தி வைக்கக் கூடிய அருச்சகர்களை முறையாகத் தகுதி உடையவர்களாக உருவாக்கும் வேதாகமப் பயிற்சிக் களங்கள் எட்டு மட்டுமே இருக்கின்றன.

கற்பனைக்கு அடங்காத கருணை காட்டும், அற்புதக் கீர்த்தி பெற்ற பிள்ளையார்பட்டி கற்பக மூர்த்தியை, முப்போதும் தீண்டி வழிபாட்டு முறையாற்றும் நற்றவப் பெரும் பேறு, சிவத்திரு மு. கிருஷ்ணசாமிக் குருக்கள் புதல்வரான சீலத்திரு பிச்சைக் குருக்களுக்கு 1969 ஆம் ஆண்டு மரபுவழி உரிமையாக வந்து சேர்ந்தது. அர்ச்சகருக்குரிய அனைத்து வேதாகமங்களையும் பிதாவிடமிருந்தே கற்றுப்பெற்றவர் பிச்சைக் குருக்கள். என்றாலும் சாஸ்திரங்களையும், இலக்கணங்களையும் மேலும் மேலும் கற்க வேண்டுமெனும் தாகம், அப் பெரு மகனாரை, பிள்ளையார்ப்பட்டி நாராயண ஆசிரமத்தில் வாழ்ந்திருந்த ஞானச் செல்வர் சாது மாதவன் நாயரிடம் அழைத்துச் சென்றது. தாகத்துடனும், வேகத்துடனும் சாது மாதவன் நாயரிடம், பிச்சைக் குருக்கள் சாஸ்திர இலக்கணங்களைப் பெரிதும் வேட்கையுடன் கற்றுத் தேர்ந்தார்.

ஏழு வேதாகமப் பாடப் பள்ளிகளிலும் ஓர் ஆண்டில் நாற்பதுக்கு உள்ளிட் டவரே பயிற்சி பெற்று வருவதையும் பிச்சைக் குருக்கள் சற்றே சிந்தித்தார். விரிவான வேதாகமப் பயிற்சி அமைப்பைப் பிள்ளையார்பட்டியில் உருவாக்கலாமா? என எண்ணிய வேளையில், கற்பகக் கணநாதர் கோயில் மணி கேட்டது.

மணி ஓசையைக் குருவருளாகவும், திருவருளாகவும் மனத்தில் கொண்ட அருள்நெறிச் செம்மல் பிச்சைக் குருக்கள், 1985ஆம் ஆண்டு செயலூக்கத்தோடு 'சிவநெறிக் கழகம்' என்றோர் அமைப்பை உருவாக்கினார்.

வேத சிவாகம வளர்ச்சிக்கு ஆவன செய்தல்; தீட்சை வழங்கல்; ஆகம சைவசித்தாந்தத் திருமுறை நூல்கள் வெளியிடல்; வேத சிவாகம, திருமுறைக் கருத்தரங்குகள் அமைத்தல்; வேதாகமப் பாடசாலையை விரிவாக்குதல்; வல்லுநர்களைக் கொண்டு உரிய பாடத் திட்டங்களை உருவாக்குதல்; நான்கு ஆண்டுகளில் கற்றுத் தெளியுமாறு நல்லமுறையில் அருச்சகர்களைப் பயிற்றுவித்தல்; அப்படிப் பயின்றவர்களுக்கு சைவாச்சாரியார் 'சிவாகம ரத்தினம்' எனும் பட்டங்களை அளித்தல்; ஆண்டுதோறும் மெய்கண்டார்விழா நடத்தி, சீரிய பணிகளாற்றும் சிவாச்சாரியார் ஒருவருக்குச் 'சிவநெறிச் செம்மல்' எனும் பட்டம்வழங்கிச் சிறப்பித்தல் ஆகிய அரிய நோக்கங்களைச் செயற்படுத்தும் உரிய அமைப்பாகச் 'சிவநெறிக் கழகம்' உருவாயிற்று. மாணவர்கள், சிவாச்சாரியார்கள், ஆன்மீகச் செல்வர்கள், நகரத்தார்கள் ஆகிய பெருமக்கள் மகிழ்ந்து போற்றப் பிள்ளையார்ப்பட்டியில் சிவநெறிக் கழகம் நடைபயின்றது.

கற்பக விநாயகர் வேதாகமப் பாடசாலை ஆண்டுதோறும் பயிற்றுவிக்கும்ஐந்து மாணவர்களை உள்ளிட்ட முப்பத்தைந்து மாணவப் பயிற்சியாளர்களைக் கொண்டு, பத்து ஆண்டுகளுக்கு முன் தொடங்கிய சிவநெறிக் கழகத்தின், இன்றைய பயிற்சி மாணாக்கர்களின் எண்ணிக்கை 186. நான்கு ஆண்டுகள் பயிற்சி அளிக்கப் பெறுகின்றது. தமிழ்நாட்டின் வேறு ஏந்த வேதாகமப் பாடசாலை அமைப்புகளும் இந்த அளவு எண்ணிக்கை கொண்ட பயிற்சியாளர்களைப் பயில்விக்க இல்லையென்பது குறிப்பிடத்தக்க செய்தி

அருச்சகர்களுக்குத் தேவையான யஜுர் வேதபாடம் முதலாம் ஆண்டு நடத்தப்பெறுகின்றது. தொடர்ந்து சாஸ்திரமும் இலக்கணமும் கற்பிக்கப் பெற்று, திருமுறைகளும், சித்தாந்த சாத்திரங்களும், வேதாகமங்களும் பயிற்று விக்கிறார்கள்.நான்காம் ஆண்டில் நடைமுறைப் பயிற்சிக்கு மாணவர்கள் அனுப்பப் பெறுகிறார்கள். கும்பாபிஷேகம், சதாபிஷேகம், கணபதி ஹோமம், மணிவிழா முதலிய சமயம் சார்ந்த நிகழ்ச்சிகளுக்கு மாணவர்கள் அனுப்பப் பெற்று, நேர்முகப் பயிற்சி பெறுகின்றனர். இடையே தமிழறிந்த சைவ சித்தாந்த நுட்பமுணர்ந்த பெரும் புலவர்களை அழைத்து வந்து, சிவஞான போதம், உண்மை விளக்கம், திருவருட் பயன் முதலான அருள் நூல்களைப் பற்றிய விளக்கவுரைகள் வழங்குவதைச் சிவநெறிக் கழகம் வழக்கமாகக் கொண்டுள்ளது. பாலகவி இராமநாதன் செட்டியார், பெரும்புலவர் பா. நமச்சிவாயம் ஆகிய சான்றோர்கள், மாணவர்களுக்கு விளக்கஉரைகள் வழங்கி வருகின்றனர்.

சிவநெறிக்கழக நிறுவுநர் அருள்நெறிச் செம்மல் பிச்சைக் குருக்கள், கழகத்தின் தலைமைப்பொறுப்பில் ஜி. துரைச்சாமிக் குருக்களை வீற்றிருக்கச் செய்து, இருபது உறுப்பினர்கள் கொண்ட நிர்வாகக் குழுவையும் நியமித்துள்ளார்.

சிவநெறிக் கழகத்தின் உயர்நோக்கங்களை அறிந்த, பிள்ளையார்பட்டித் திருக்கோயிலை நிர்வகிக்கும் நகரத்தார் பெருமக்கள், கழகத்திற்கு 45 செண்ட் நிலத்தையும், இருபத்தையாயிரம் ரூபாய் நிதியும் வழங்கி, முயற்சிக்கும், வளர்ச்சிக்கும்,

முழு மனதுடன் ஆதரவு தந்ததைக் கழக நிறுவுநர் பிச்சைக் குருக்கள், நன்றிப் பெருக்குடன் கூறி மகிழ்ந்தார்.

பத்து ஆண்டுகளில் ஐந்நூற்றுக்கும் மேற்பட்ட அருச்சகர்களுக்குச் 'சைவாச்சாரியார்' சிவாகம ரத்தினம்' ஆகிய சான்றிதழ்ப் பட்டங்களை அளித்து அரிய வரலாறு படைத்துள்ளது. பிள்ளையார்பட்டி சிவநெறிக்கழகம் கழகம். பயிற்சி அளித்து அனுப்பிய அனைவரும் திருக்கோயில்களில் பணியாற்றி வருகின்றனர். இந்தியாவில் மட்டுமின்றித் தென்னாப்பிரிக்கா, மலேசியா, சிங்கப்பூர், இலங்கை, இலண்டன் முதலிய அயல் நாடுகளிலும் மக்களுக்காக நாள்தோறும் இறைவழி பாட்டுப் பணியில் அனைவரும் ஈடுபட்டு வருவது குறிப்பிடத்தக்கது.

ஒருவர் கூட வழிபாட்டுப் பணியின்றி இருக்கவில்லை என்பதையும், நாள்தோறும் திருக்கோயில்களிலிருந்து பயிற்சி பெற்ற அருச்சகர்களை அனுப்பி வைக்குமாறு வேண்டுதல்கள் வந்து கொண்டிருப்பதையும் பெருமிதமான மகிழ்ச்சியுடன் குறிப்பிட்ட நிறுவுநர் பிச்சைக் குருக்களிடம், 'ஆமாம் பயிற்சிக்கு மாணவர்களிடமிருந்து ஏதும் கட்டணம் பெறுகிறீர்களா? எனக் கேட்டோம்.

"பயிற்சிக்கு மட்டுமல்ல! உணவு, தங்குமிடம் ஆகியவற்றிற்கும் கழகம் கட்டணம் பெறுவதில்லை!" என்றார். புன்னகைத்தவாறே, பிச்சைக் குருக்கள்.

"அப்படியா?" என்று ஆச்சரியப்பட்டோம். "சரி, நூற்று எண்பத்தாறு மாணவர்கள் இப்போது உள்ளார்களே? இவர்களுக்கு ஒரு நாள் உணவு அளிப்பதற்கே ஆயிரக் கணக்கில் செலவாகுமே?" எனக் கேட்டோம்.

"ஒரு நாளைக்கு இரண்டாயிரம் ஆகலாம். மாதத்திற்கு அறுபதினாயிரம் வரை செலவு ஆகலாம்!" என்றார் நிறுவுநர்.

"ஆமாம்.... இதை எப்படி ஈடுகட்டுகிறீர்கள்?"

சற்றே வாய்விட்டுச் சிரித்த பிச்சைக் குருக்கள், "எல்லாம் கற்பக மூர்த்தியின் திருவருள்!" என உருக்கமாகச் சொன்னவர், உரிய நிதி ஆதாரங்களைச் சற்றே விளக்கினார்.

சிவநெறிக் கழகத்திற்கு 80 ஜி வருமான வரி விலக்கு வாங்கப் பெற்றுள்ளது. எனவே கழகத்தின் நோக்கத்திலும், ஆக்கத்திலும் ஈடுபாடு கொண்ட செல்வர் சிலர், தங்கள் பெயர்களைக் குறிப்பிடக் கூடாதென்று வேண்டுதலோடு, உதவி நிதி அளித்து வருகின்றனர். அத்துடன் நான்காம் ஆண்டுப் பயிற்சியாளர்களை கும்பாபிஷேகம், சதாபிஷேகம், கணபதி ஹோமம் முதலான அருட் பணிகளுக்கு அனுப்பி வைப்பதின் மூலம் கிடைக்கும் வருமானமும் கழகத்திற்கே வந்து சேர்ந்து விடும் வழக்கம் கையாளப்பட்டு வருகிறது. எனவே பொருளாதாரச் சிக்கல் சிவநெறிக் கழகத்திற்கு இதுவரை ஏற்பட்டதில்லை.

யஜுர் வேதம் பயில்விக்கப் பிள்ளையார்ப்பட்டி கே.கணேச கனபாடிகள், சிவாகமம் கற்றுத்தர ஆராவயல் திருமூலநாத சிவம், சாஸ்திர, இலக்கணங்கள் பாடம் நடத்த கணபதி அக்ராஹாரம் தியாகராஜக் குருக்கள், தமிழ்ச் சாத்திரம், திருமுறை வகுப்பெடுக்க குன்றக்குடி ஆதீன வித்வான் புலவர் க.கதிரேசன் ஆகிய புலமை கொண்ட நல்லாசிரியர்கள், முறையாகத் திருமுறை இசைகற்பிக்க குன்றக்குடி ஆதீன அடிகளார் கண்ணாயிரம், சோதிடம் கற்பிக்க பள்ளத்தூர் சோதிடக் கலாநிதி நாராயணன்" ஆகிய

புலமை கொண்ட நல்லாசிரியர்கள் பயிற்சியாளர்களுக்கு வழிபாட்டுத் துறையில் நிறை ஞானம் உருவாக நாளும், கழகத்தில் உவந்து பணியாற்றி வருகின்றனர். அவ்வப்போது பிள்ளையார்பட்டி ஆறுமுக ஓதுவார் பயிற்சியாளர் களுக்குப் புராண வரலாறுகளைப் போதித்து வருகிறார்.

புரட்டாசி மாதம் விஜயதசமி நாளன்று மாணவர்கள் தேர்வு செய்து பயிற்சி வகுப்பில் சேர்த்துக் கொள்ளப்பெறுகின்றனர். அடிப்படைக் கல்வியாக எட்டாம் வகுப்பு மாணவர்களுக்குத் தகுதிக்கு உரியதாக வைக்கப் பெற்று இருக்கிறது. என்றாலும் மாணவர்களில் சிலர் பல்கலைப்பட்டம் பெற்ற பின்னரும், இங்குப் பயிற்சியாளர்களாக வருகின்றனர். தேர்வு செய்து பயிற்சியில் சேர்க்கப்பெறும் மாணவர்களுக்கு, முதன் முதலில் அளிக்கப் பெறுவது உத்திராட்சம். கழுத்தில் உத்திராட்சம் அணிவது பயிற்சியார்களுக்குக் கட்டாயமாக்கப் பெற்றுள்ளது. சிவ வேதாகமப் பாடசாலைகளைப் போல், இங்குப் பயிற்சியாளர் குடுமி வைத்துக் கொள்ள வேண்டுமென்று கட்டாயம் பேணப்படவில்லை. ஆண்டுதோறும் திருவாடுவதுறை கண்ணப்ப சிவாச்சாரியார், திருவையாறு சுந்தரேச சிவாச்சாரியார், பொன்னமராவதி புதுப்பட்டி ஜம்புநாத சிவாச்சாரியார் ஆகிய சிவநெறிச் செம்மல்கள் தேர்வாளராக வருகை புரிந்து மாணவர்களைத் தேர்வு செய்கின்றனர். அயல் நாடுகளிலிருந்து அருச்சகர் பயிற்சிக்கு வருகின்ற மாணவர்களுக்கு ஓராண்டுப் பயிற்சியில் 'நித்திய பூஜைத் தகுதி அளித்து, 'சைவாச்சாரியர் என்னும் சான்றிதழ் வழங்கிச் சிவநெறிக் கழகம் அனுப்பி வைக்கிறது. இத்தகைய முறையில் பயிற்சி பெற்றுச் சென்றவர்கள், உலகத்தின் பல நாடுகளில் திருக்கோயில் அருச்சகராகப் பணியாற்றி வருகின்றனர்.

அதிகாலை 4.30 மணிக்கே மாணவர்கள் எழுந்து விடுகின்றனர். புறச் சுத்தம் செய்து திருநீறு இட்டுக்கொண்டு 'திருவை' செய்கின்றனர். 'திருவை' என்றால் வேத பாடங்களைத் திரும்பத் திரும்பப் பத்துமுறை சொல்லி மனத்துள் பதிய வைப்பது. பின்னர் 'ப்ராத சாந்தி, எனும் சந்தியா வந்தனம் செய்கின்றனர். தொடர்ந்து சிவபுராணம்; திருவாசகம் ஓதி, அதர்வண வேதத்தில் உள்ள கணபதி உபநிஷத் பாராயணம். காலை ஆகாரத்திற்குப் பின்னர் முறையாக வகுப்புகள். பிறகு மதிய உணவுக்குப் பின் பிற்பகல் வகுப்புகள். மாலை 'சாயும் சந்தி' எனும் சந்தியா வந்தனம். ஆண்டுக்கு 18 நாள்களே விடுமுறை. தீபாவளிக்கு நான்கு நாள்கள்; பொங்கலுக்கு நான்கு நாள்கள்; பிள்ளையார் சதுர்த்திக்குப் பின்னர்ப் பத்து நாள்கள் மாணவர்களுக்கு விடுமுறை அளிக்கப் பெறுகின்றது. சமையல் தயாரிப்புக்கு இரண்டு சமையல்காரர்களே உண்டு. உணவுத் தயாரிப்பிற்கான உரிய உதவிகளை மாணவர்கள் 'முறை வைத்து' அளித்து வருகின்றனர்.

சிவநெறிக் கழகம், ஆண்டுதோறும் சைவ அனுட்டானம் கொண்ட பெருமக்களுக்குத் 'தீட்சை' பஞ்சாட்சரம் உபதேசித்தல் அளித்து வருகின்றது. பட்டமங்கலம், திருப்பரங்குன்றம், குன்றக்குடி, பிள்ளையார்பட்டி ஆகிய ஊர்களில் தீட்சை கொடுக்கப்பட்டிருக்கிறது.

அருச்சர்களாக உருவாக்கப் பெற்ற மாணவர்கள் 'விசேடம்' 'நிர்வாணம்' முதலிய தீட்சைகள் பெற்று, இல்லற வாழ்வை ஏற்ற பின்னர் உரிய நெறிமுறைப்படி 'ஆச்சாரிய அபிஷேகம்' செய்துகொண்டு 'சிவாச்சாரியர்' எனும் சிறப்புத் தகுதி பெறுகின்றனர். சிவாச்சாரியர்கள் மட்டுமே திருக்கோயில் திருவிழாக்களில் 'காப்புக்

கட்டுதல்' தகுதியும், மகா கும்பாபிஷேகங்களை நடத்தி வைக்கக் கூடிய தகுதியும் பெறுகின்றனர்.

சில தகுதிகள் இருந்தால் குல வேறுபாடு கருதாமல் பயிற்சிக்கு மாணவர்களைச் சேர்த்துக் கொள்ளும் சீரிய பான்மை, பிள்ளையார்ப்பட்டி சிவநெறிக் கழகத்தின் வீரிய மேன்மைக்கு விளக்கம் தருவதாக உள்ளது!

செம்பொருள் காணும் மெய்யுணர்வும், செந்தண்மை பூண்டொழுகும் சிந்தையும், செயற்கரிய ஆற்றும் செயலூக்கமும் கொண்ட சிவநெறிக் கழக நிறுவுநர் அருள்நெறிச் செம்மல் கி. பிச்சைக் குருக்கள் கனிந்த மனம் கொண்டவர்; பணிந்த ஒழுகலாறு உடையவர். மாணவர்கள் அனைவரும் அவரை அன்பொழுக 'அண்ணா' 'அண்ணா' என அழைத்து மகிழும் வாஞ்சையை நேராகக் கண்டு நெகிழ்ந்தோம். சமய உலகிற்குத் தம்மாலான 'சிறிய தொண்டு என்கிறார் நிறுவுநர். சிறிய தொண்டா இது? 'அரிய தொண்டு எனப் போற்றிய தவத்திரு குன்றக்குடி அடிகளார் 'ஆதீன சிவநெறிச் செம்மல்' எனும் விருது வழங்கிச் சிறப்பித்தார். திராவிட தேச ப்ராஹ்மண ஸமஸ்கிருத ஸர்வகலாசாலை சிவநெறிச் செம்மல் பிச்சைக் குருக்களுக்குக் 'கௌரவ டாக்டர் பட்டம் அளித்துப் பாராட்டியது. இன்னும் பல்வேறு சமய அமைப்புகள் டாக்டர் பிச்சைக் குருக்களைப் பாராட்டிப் போற்றிச் சிறப்பித்துள்ளன.

இத்தகைய சிறப்புகளுக்கெல்லாம் மூல காரணங்களாக அமைந்த, பிள்ளையார்பட்டி திருக்கோயிலை நிர்வகிக்கும் நகரத்தார் பெரு மக்களின் உதவியையும், ஒத்துழைப்பையும் கூறித் தற்போதைய அறங்காவலர்களான ஆத்தங்குடி நாரா.சித.தண்ணீர்மலைச் செட்டியார், காரைக்குடி பி.எஸ்.ஆர்.எம்.ஏ.என். ராமு செட்டியூார் ஆகிய பெருமக்களின் பெயரையும் குறிப்பிட்டுச் சொன்ன டாக்டர் பிச்சைக் குருக்களின் நன்றியுணர்வும் நற்பண்பும் நம் நெஞ்சில் அழுத்தமாகப் பதிகின்றன.

– (நன்றி: ஓம்சக்தி தீபாவளிமலர் நவம்பர்'95)



# கோயில் வளர்த்த வாழ்வியற் கலைகள்

தவத்திரு குன்றக்குடிஅடிகளார்

---

தமிழ்நாடு வரலாற்றுப் புகழ்மிக்க நாடு. மனிதகுல வரலாறு தொடங்குவதற்கு முன்பே தமிழ் மக்கள், மொழி, கலை, இலக்கியம், சமயம் முதலிய பல்வேறு துறைகளில் வளர்ந்து புகழ் பெற்றிருந்தனர். இவ்வகையில் தமிழ் மக்களின் பழமைக்கும் வளர்ச்சிக்கும் சான்றாக இருப்பவை பல. அவற்றுள், தமிழ் மொழி வாழ்க்கைக்கு இலக்கணம் கண்டிருப்பதும், தமிழ் மக்களின் வழிபடு தெய்வம் ஆடல் வல்லோனாக அமைந்திருப்பதும் குறிப்பிடத்தக்கவையாகும். தமிழ் கூத்து, இசை, இயல் என மூன்று திறத்ததாக வளர்ந்து முழுமை பெற்றுள்ளது. அதுபோலவே தமிழ் நாட்டு மக்களின் வாழ்க்கையில் திருக்கோயில்கள் முக்கியமான பாத்திரத்தை வகிக்கின்றன. இமயம் முதல் குமரிவரை நமது இந்திய நாட்டு மக்களிடத்தில் திருக்கோயிலைச் சார்ந்து வாழும் நெறி கால் கொண்டு உள்ளது; சிறந்து பரந்துள்ளது.

"திருக்கோயில் இல்லாத திருவி லூரும்
திருவெண்ணீறணியாத திருவி லூரும்
பருக்கோடிப் பத்திமையாற் படாத வூரும்
பாங்கினொடு பலதளிகள் இல்லா வூரும்
விருப்போடு வெண் சங்கம் ஊதா வூரும்
விதானமும் வெண்கொடியும் இல்லா வூரும்
அருப்போடு மலர்பறித்திட் டுண்ணா வூரும்
அவையெல்லாம் ஊரல்ல அடவி காடே!"

என்ற அப்பரடிகளின் திருப்பாடலும்,

"கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்".

என்ற உலக நீதிப் பாடல் அடியும் திருக்கோயில்கள் தமிழ் மக்களின் வாழ்க்கையில் எவ்வளவு முக்கியத்துவம் பெற்றிருந்தன என்பதற்குச் சான்றாக விளங்குவன.

தமிழர்கள் திருவுருவ வழிபாட்டில் அசைவிலா நம்பிக்கையுடையவர்களாய் விளங்கி வருகின்றனர். தமிழர்கள் தீவிரமான பக்தி நெறி நிற்பவர்கள், அவர்கள் தாங்கள் விரும்பும் ஒரு பொருளிடத்தில் கடவுளாற்றலை உருவகப்படுத்திக்கொண்டு பத்திமை செய்பவர்கள்.

திருக்கோயில்கள் பரம்பொருளை உணர்வதற்குக் கருவியாகவும் பக்தி நெறியைப் பரப்புவதறகுச் சாதனமாகவும் விளங்கி வருகின்றன. ஆதலால், நமது இந்திய நாட்டில் இந்துமதக்கோயில்களின் எண்ணிக்கை மிகுதி. இத்திருக்கோயில் களைக் கட்டும் பணி கிறித்து பிறப்பதற்குப் பல நூறு ஆண்டுகளுக்கு முன்பே தமிழகத்தில் தொடங்கப்பெற்று விட்டது என்பதை வரலாறும் இலக்கியமும் எடுத்துக்காட்டுகின்றன. கடல் கொண்ட தென்குமரிக்கண்டத்திலிருந்த தென்மதுரை என்ற நகரத்தில் நகரமனைய திருக்கோயில் இருந்ததைப் புறநானூறு பேசுகிறது. குமரியாறு கடல் கொள்ளப்படுவதற்கு முன்னும்

தென்குமரி நாட்டில் பஃறுளியாறு கடல் கொள்ளுவதற்கு முன்னும் எழுந்த பாடல்கள் புறநானூற்றில் உள்ளன. பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி பஃறுளியாறு கடல் கொள்ளப்படுவதற்கு முன் திகழ்ந்தவன். முக்கட் பெருமான் என்னும் முழுமுதற் கடவுளொருவருக்கே இம்மன்னன் வணக்கம் காட்டும் இயல்பினன் என்றும், அக்கடவுள் முனிவர்களால் பரவப் பெறுபவர் என்றும் அப்பெருமானுக்கு ஒரு நகரத்தைப் போல் அகன்று உயர்ந்து அமைந்த திருக்கோயில் அவ்வளவு பழங்காலத்திலேயே இருந்தது என்றும் அறிகின்றோம். முதுகுடுமிப் பெருவழுதியைப் பற்றி வருகின்ற புறப்பாட்டில்,

"பணியிய ரத்தைநின் குடையே! முனிவர்
முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே!" (புறம்–6)

என்று காரிகிழார் என்னும் நல்லிசைப் புலவர் இதனைக் கூறுவர். இத்தகைய திருக்கோயில்கள் சமுதாயத்தின் மையமாக் அமைந்து மக்களின் அனைத்துத் தேவைகளையும் நிறைவு செய்யத் தக்கவகையில் இயங்கியும் வந்தன.

தமிழகத்தின் திருக்கோயில்கள் மங்கலமிக்க அருள் நலத்துடன் பொருள் நிறைந்த கலைகளையும் பெற்று விளங்குகின்றன. விண்ணளந்து காட்டி வினை மறைக்கும் திருக்கோயில்கள் ஆயிரம் ஆயிரம், தமிழகத்தை அணி செய்கின்றன! கல்லெல்லாம் கலை! பேசும் பொற் சித்திரம்' கடவுள் திருவுரு!

மானுட வாழ்க்கை, வென்று விளங்கவேண்டும். மானுடத்தின் வெற்றியே மண்ணுக்குப் புகழ் சேர்ப்பது! விண்ணுக்கும் சிறப்பாவது! மானுடம் வென்று வீரம் நிகழ்த்துவது வாழ்க்கையின் குறிக்கோளாகும்.

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்."

என்று திருக்குறள் கூறும். நெறிப்பட நின்று வாழ்தல் ஒரு கலை. வாழ்க்கையென்பது கட்டி முடிக்கப் பெற்ற ஒரு மாளிகையன்று; நாழிகைதோறும் உரியோரால் கட்டப்பெற்று வருவது. வாழ்க்கை ஒரு சுமையன்று; துன்பமும் அன்று; வாழ்க்கை குறிக்கோளுடையது. வாழ்க்கை மகிழ்ந்து வாழ்வதற்குரியது. அதனால், கால உணர்வோடு கலந்து வளர்ந்த வாழ்வியற் கலைகள் நமது திருக்கோயில் வளர்த்த கலைகள்.

வாழ்க்கைக்குச் சோறு மட்டும் போதாது. வாழ்க்கைக்குக் களிப்பும் மகிழ்ச்சியும் தேவை. உயிர் தழைத்து வளர்வதற்கு இன்பம் துணை செய்கிறது. ஒருவர் நெறிப்பட வாழ்தல் அவருக்கும் பெருமை; அவரைச் சார்ந்த மற்றவர்களுக்கும் பயன்தரும். ஒரு நல்ல இசைக்கலைஞன் இனிமையாகப் பாடும் பொழுது அவனுக்கும் பெருமை; மகிழ்ச்சி; இன்பம்! அந்த இசையமுதைத் துய்த்து மகிழும் மற்றவர்களுக்கும் களிப்பு; மகிழ்ச்சி; இன்பம்! ஆதலால் வாழ்க்கைக்குக் கலை இன்றியமையாதது. கலைநலம் சான்ற வாழ்க்கையில்தான் அன்பு இருக்கும்; அமைதி இருக்கும்; இன்பம் இருக்கும்.

வாழ்தல்! – இஃது ஓர் அருமைப்பாடான கலை. 'பிழைத்தல்' வாழ்க்கையன்று வாழ்க்கையில் வழங்கப்பெற்றுள்ள வாய்ப்புகள் அனைத்தும் முழுமையாகப் பயன்படவேண்டும். வாழ்க்கை ஒரு சுமையாக இருத்தல் ஆகாது. எவ்வளவு நெருக்கடியான துன்பச் சூழலிலும் பரிந்து மகிழ்ந்து வாழ்தலே வாழ்க்கை! அழுது புலம்புவது அவலம்! வாழ்க்கை, கலையாக அமைய வேண்டுமானால் வந்து சூழ்ந்துள்ள

துன்பங்களுக்குரிய காரண காரியங்களை ஆராய்ந்தறிய வேண்டும். துன்பங்களுக்கெல்லாம் காரணம், பெரும்பாலும் முறையாக வாழாமையேயாம்! ஒருவரைக் காணல், ஒருவர் சொல்வதைக் கேட்டல், ஒருவரோடு பேசுதல் முதலிய நிகழ்வுகள் துன்பத்திற்கும் இன்பத்திற்கும் காரணமாய் அமைந்துவிடுகின்றன. "முகனமர்ந்து இனிது நோக்குதல்" என்பது திருக்குறள். கண்கள் ஆயிரம் ஆயிரம் கூறும். கண்களால் வளர்ந்த கதைகளும் உண்டு; கண்களால் விளைந்த தீமைகளும் உண்டு. ஆதலால், பரபரப்பின்றி, அமைதியான, மகிழ்ச்சி நிறைந்த குளுகுளுப்பைக் கண்களால் காட்டுதல், காண்பவர்களுடன் நெடிய இனிய உறவை வளர்த்துக் கொள்ளுதல், பார்வைக் கலையின் இலக்கணம்.

மற்றவர்களின் மீது கூறும் குறைகளைக் கேளாதிருத்தல், கோள் கேளாதிருத்தல் ஆகியன கேட்டறிதலின்பால் உள்ள கலைத்திறன். இனியனவே பேசவேண்டும்; மற்றவர் குணமே கூறவேண்டும்; முகமன் கலவாத புகழ் கூறவேண்டும். இது பேசும் கலை. பொறிகள் ஐந்தும் பண்பட்ட நிலையில் பழக்கப்படுத்தப் பெற்றால் மனம் தூய்மை ஆகும்; புத்தி புண்ணியச் செயலில் ஈடுபடும்; சித்தம் அழகுடன் விளங்கும். இந்த நிலையில் வாழ்வே கலை, கலையே வாழ்வு. வாழ்வே சமயம், சமயமே, வாழ்வு என்றாகிறது.

சமயம் என்பது ஒரு தத்துவம்; ஒரு கொள்கை, ஒரு கோட்பாடு. அது வாழ்க்கைக்கு அப்பாற்பட்ட தத்துவமன்று. சான்றோர் வாழ்க்கையினின்றும் பிறந்தது சமயம். வாழ்க்கையை வழி நடத்துவது சமயம். சமயம், ஒரு வாழ்க்கை முறை. அதனால், சமயம் என்பது திருநெறி: தவநெறி; தூநெறி நன்னெறி; அருள் நெறி; சன்மார்க்கம் என்றெல்லாம் அருளாசிரியப் பெருமக்களால் பாராட்டப் பெற்றுள்ளது. நெறியென்றால் வழி. உயிரும் உணர்வும் செல்லும் ஆறு! ஆதலால் நெறி என்று கூறப் பெறுகிறது! இறையருளை நாடிச் செல்லுவோர் செல்லும் நெறி திருநெறி. புலன்களிலே அழுக்கின்றித் தூய்மை வழிச்செல்லும் நெறி தூநெறி; வஞ்சப் புலனைந்தைப் பக்குவப்படுத்த ஏற்கும் நெறி தவநெறி. எங்கும் எல்லாவற்றிலும் எப்பொழுதும் நன்மையைச் காணவும் நன்மையைச் செய்யவும் விரும்பிச் சென்றிடும் நெறி நன்னெறி. யார் மாட்டும் எவ்வுயிர்க்கும் தடையிலா அன்பைக் காட்டும் ஒழுக்கத்தினை ஏற்கும் நெறி, அருள்நெறி. இதுவென்றும், அதுவென்றும், நன்றென்றும் தீதென்றும் சமய பேதா பேதங்களில் ஈடுபடாது, சமயங்களைக் கடந்த பொதுநிலை நின்று வாழ்வோர் ஏற்பது சன்மார்க்க நெறி. ஆக, வாழ்க்கையில் நாகரிகம், பண்பாடு, சான்றாண்மை ஆகியன பொதுள வேண்டுமானால் சமயம் சார்ந்த வாழ்க்கை தேவை. சமயம் சார்ந்த வாழ்க்கைக்கு எளிதில் இட்டுச் செல்வது கலை. கலை சமயத்திற்கு ஆதாரம். சமயம் கலைக்கு ஆதாரம். இரண்டும் மானுடத்தை வளர்க்கும் தகையன.

கலகப் பூச்சிகளாக வாழ்ந்து, வெற்று வேடிக்கை மனிதராய் மாண்டு போகாமல் தடுக்க, சமயமும் கலையும் துணை செய்வன. கலைகளை அனுபவிக்கும் இதயமுடையோர் குற்றமுடையோராய் இருத்தல் அரிது. சமயம் சார்ந்த வாழ்க்கையுடையோர் யாதோர் உயிருக்கும் தீங்கு செய்யார். கலைகளின் வளர்ச்சி, கறைகளைத் தவிர்க்கும்; குற்றங்களைக் குறைக்கும்; சிறைச்சாலைகளை மூடும். பரஸ்பரம் நல்லெண்ணமும் அமைதியும் தழுவிய சமுதாய வாழ்க்கையை உருவாக்கும். இம்மண்ணுலக வாழ்க்கை அமைதியாக நடைபெறச் சமயமும் தேவை; கலைகளும் தேவை. இனி எதிர்வரும்

காலத்திலும் இன்பம் தழுவிய வாழ்க்கையை அமைக்கச் சமயமும் தேவை; கலைகளும் தேவை.

கலைகளில் முதலில் தோன்றியது கூத்து. மொழி தோன்றுவதற்குப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே கூத்துத் தோன்றியிருக்க வேண்டும். மக்கள் தம்முடைய உணர்வுகளை நினைத்திடும் பொருட் குறிப்பை, முதன் முதலில் அங்க அசைவுகளால்தான் புலப்படுத்தினர். அதுவே காலப்போக்கில் கூத்தாயிற்று. இக்கூத்திலிருந்து தான் நாட்டியம், நாடகம், திரைப்படம் முதலிய கலைகள் தோன்றின. தமிழரின் தலைசிறந்த வழிபாட்டுத் திருவுருவம் ஆடல்வல்லான் திருவுருவம்! வழிபாட்டுத் திருவுருவங்களில் பழமை சான்றதும் எழில் வாய்ந்ததும், இன்பம் அளிப்பதும் ஆடல்வல்லான் திருவுருவமே!

குனித்த புருவமும் கொவ்வைச் செவ்
வாயிற் குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல்
மேனியில் பால்வெண் ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற்
பாதமும் காணப் பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே
இந்த மாநி லத்தே!"

(நான்காம் திருமுறை – 783)

என்று அப்பரடிகள், ஆடல்வல்லானைப் போற்றிப் புகழ்ந்து மகிழ்ந்து இங்கு நினைவுகூரத் தக்கது. தமிழரின் வழிபடும் தெய்வங்களில் சிறப்புடைய சிவம், சக்தி இருவருமே ஆடற்கலை நிகழ்த்தியிருக்கின்றனர். இன்றும் ஆடிய திருக்கோலத்தில் உள்ள அத்திருமேனிகளுக்கு வழிபாடு செய்யப் பெறுகின்றது. ஆடற்கலையில் நூற்றுக் கணக்கான வண்ணங்கள் உண்டு. பழந்தமிழகத்தில் திருக்கோயில்களில் அன்றாட வாழ்வியலில் நாட்டியமும் இடம் பெற்றிருந்தது. சோழர் காலத்தில் "பதியிலார்" என்று பெருமை பெற்றவர்கள்' திருக்கோயில்களில் ஆடற்பணி செய்துகொண்டிருந்தனர். இங்ஙனம் பணி செய்தவர்களில் தலைசிறந்தவர்களுக்கு, சோழ மன்னர்கள் "தலைக்கோல்' என்னும் பட்டம் அளித்துச் சிறப்புச் செய்துள்ளனர். இங்ஙனம் தலைக்கோல் என்று பட்டம் பெற்ற ஆடற்பெண் "தலைக்கோலி" என்றழைக்கப் பெற்றாள். திருக்கோயில்களில் நடனமாடுவதற்கு, மாமன்னன் இராசராசன் 400 பெண்கள் வரை நியமித்திருக்கிறான். நடனமாடும் இவர்களுக்குப் பக்க வாத்தியமாக, பாடவ்யம், கானபாடி, உடுக்கை வாசிப்போர், கொட்டி மத்தளம் வாசிப்போர், முத்திரைச் சங்கு ஊதுவோர், பக்க வாத்தியார், உவைச்சர் என்றெல்லாம் பலர் இசைப் பணி புரிந்தனர் என்று கல்வெட்டுச் செய்திகள் அறிவிக்கின்றன.

"ஐந்துபே ரறிவும் கண்களே கொள்ள
அளப்பரும் கரணங்கள் நான்கும்
சிந்தையே யாகக் குணம்ஒரு மூன்றும்
திருந்துசாத் துவிகமே யாக

இந்துவாழ் சடையான் ஆடும் ஆனந்த
எல்லையில் தனிப்பெருங் கூத்தின்
வந்தபே ரின்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியில் திளைத்தார்"
– (பெரியபுராணம், தடுத். 106)

என்று ஆடற் பெருமானை ஆரூரர் வணங்கி மகிழ்ந்த செய்தியினைச் சேக்கிழார் பெருமான் சிந்தை குளிரப் பாடியுள்ளார். பொறிகள், புலன்கள் ஒன்றிய ஐந்து பேரறிவின் உணர்வுகளும் கண்களிலேயே நின்று ஆடல்வல்லானைக் கண்டு மகிழ்கின்றன. மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய அகக்கருவிகள், அனுபவக் கருவிகள் நான்கும் சிந்தையை இடமாகக் கொண்டு விட்டன. மானுடத்தின் குணம் மூன்று. தாமதம், இராசதம், சாத்துவிகம், ஆகிய இம்மூன்று குணங்களில் சாத்துவிகமே உயர்ந்தது; சிறந்தது. ஆடல் வல்லானின் ஆனந்தக் கூத்தில் ஈடுபடும் ஆன்மா, இன்ப அனுபவங்களை அடைகின்றது. இதனினும் சிறந்த பேறுண்டோ? திருக்கோயில்கள் வளர்த்த வாழ்வியற் கலைகள், மனித வாழ்வை ஈர்த்துப் பதப்படுத்தி இன்பம் அளித்து வாழ்வளிக்கின்றன.

கலை, நாகரிகம் அடைந்த சமுதாயத்தின் படைப்புக்களுள் ஒன்று. கலைத்துறை ஒன்றல்ல; பலப்பல, அறுபத்து நான்கு கலைகள் என்று கூறுவர். கலை, அனுபவத்தில் பிறந்து, அனுபவத்திற்கு உரியதாகி, அனுபவத்தை வளர்த்துச் செழுமைப்படுத்துவது. இந்தக் கலைத்துறையில் தமிழகம் வரலாற்றுக் காலந் தொட்டுப் புகழ் பெற்று வளர்ந்து வந்திருக்கிறது. சங்க காலத்தில் கலை உலகு திறம்பட வளர்ந்திருந்தது. நாளைப், பொழுதுகளாகப் பிரித்து, அந்தந்தப் பொழுதுக்குரியவாறு பண்களையும் நிர்ணயித்திருந்தனர். இதுபோலவே வேறு வேறு நிலைகளில் பாடும் பாடல்களும் வழக்கத்திலிருந்தன. விளையாடும் காலத்தில் பாடுகின்ற பாட்டுக்கள் "கந்துகவரி" முதலியன. "மங்கல வாழ்த்துப் பாடல்", "செருப்பறை" "வள்ளைப் பாட்டு" முதலிய பாக்களும் சங்க காலத்தில் பயின்றன. இவையன்றி, ஆறுகள், கடற்கரைகள் முதலியவற்றின்–இயற்கையின் எழிலின்பத்தில் ஈடுபட்டுப் பாடிய பாடல்கள் "ஆற்றுவரி" "கானல்வரி" முதலியனவாகும். சங்க நூல்களில் "பரிபாடல்" என்பதும் ஒன்று. அது முற்றிலும் இசைப் பாட்டினாலேயே ஆனது.

கலை, கலைக்காகவே என்பது ஒரு கொள்கை. இல்லை, கலை வாழ்க்கைக்காகவே என்பது தமிழர் கொள்கை. அதிலும் உலகாயத வாழ்க்கைக்கன்றி, அருள் நலம் சார்ந்த சமய வாழ்க்கைக்குக் கலை, தொண்டு செய்ய வேண்டும் என்பது தமிழர் கொள்கை. அதனாலேயே தமிழகத் திருக்கோயில்களெல்லாம் இசைக் கலையைப் போற்றி வளர்த்தன. குரலிசை, வாத்திய இசை, முதலியவை திருக்கோயில்களிலேயே வளர்ந்தன. "ஊசற்பாட்டு", "திரு அம்மானை" "திருப்பொற்சுண்ணம்" முதலிய இசைப்பாடல்கள் – பக்திப் பாடல்கள் தமிழ் மக்களின் வாழ்க்கையில் இரண்டறக் கலந்து இருந்தமையே இதற்கு எடுத்துக்காட்டு.






இசைவிப்பது இசை! ஆன்மாவிற்கும் கடவுளுக்கும் இடையில் உள்ள இடைவெளியை இட்டு நிரப்பி இசைவிப்பது இசைதான். இசை, இறைவனை நினைந்து நினைந்து எண்ணுவதற்குரிய எளிய சாதனமாகும். இன்னிசையோடு தமிழ்ப் பாடல் பாடியருளி இறைவனைத் தொழுத திருஞான சம்பந்த சுவாமிகளை, "நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞான சம்பந்தர்" என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாராட்டுவார். சேக்கிழார் பெருமான் "கானத்தின் எழுபிறப்பு" என்று வாய் மணக்கச் சிறப்பித்துப் பாடுவார். திருஞான சம்பந்தரும் பண்ணொடு கலந்த தமிழில் யாழிசை கூட்டி வழிபாடு செய்து வந்தார். "தமிழோடு இசை பாடல் மறந்தறியேன்" என்றார் அப்பரடிகள். இறைவன் "பண் சுமந்த பாடற் பரிசு படைத்தருளி"னான் என்று மாணிக்கவாசகர் கூறினார். இங்ஙனம் சமய உலகில் இசை ஏற்றம் பெற்றிருந்தது. திருமுறைகள் அனைத்தும் பண் சுமந்த பாடல்களே! இசைப்பாடல்களே! தமிழோடு இசை கலந்த இப்பாடல்களைக் கேட்க இறைவன் பெரிதும் விரும்பினான். "தமிழோடு இசை கேட்கும் இச்சையால் காசு நித்தம் நல்கினான்" இறைவன். இத்தகைய திருமுறை இசைக்கலை, திருக்கோயில்கள் மையமாகக் கொண்டே வளர்ந்தது. இறைவன் புகழ் பாடும் பண்ணிறைந்த பாடல்களாகத் திருமுறைப் பாடல்கள் விளங்குகின்றன.

இறை நலம் சான்ற இன்பத்தமிழிசைப் பாடல்களாகத் திருமுறைப் பாடல்கள் இருந்தமையால் இறைவனே இத்திருப்பாடல்களுக்குச் சான்று செய்தான். "தனதுரை" யென ஒப்பம் தந்தான். அதனால் இத்திருப்பாடல்கள் ஐந்தொழில்களையும் நிகழ்த்தும் ஆற்றலுடையனவாய் இருந்தன. நீரையும் நெருப்பையும் வென்று விளங்கின.

"பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதும்
காலனைஅன் றேவிக் கராங்கொண்ட – பாலன்
மரணம் தவிர்த்ததுவும் மற்றவர்க்கு நந்தம்
கரணம்போல் அல்லாமை காண்"

என்று திருக்களிற்றுப்படியார் சிறப்பித்துக் கூறும்.

தமிழர் தம் சமய வாழ்க்கையில் பண்ணிசையும் பரதக் கலையும் நிலையான இடம் பெற்றவை; பெருமை சேர்த்தவை. அதனால் பிற்காலத் தமிழரசர்கள் இத்திருமுறைப் பண்ணுக்கு நிறைந்த ஆக்கமளித்தனர். குறிப்பாக மாமன்னன் இராசராச சோழன் தமிழ்ப் பகைவரின் சூதிலிருந்து திருமுறைகளை மீட்டுத் தந்தான். தான் வணங்கிய இறைவனுக்குத் "தேவார தேவர்" என்று பெயர் சூட்டினான். தமிழகத் திருக்கோயில்களில் திருமுறைப் பதிகம் விண்ணப்பிப்பார் பலரை நியமித்தான். திருமுறைகள் மனித நெஞ்சத்தை உருக்கும் தன்மையன. திருமுறைகள் ஓதப்பெறாத திருக்கோயில்கள் பண்டைய தமிழகத்தில் இருந்ததில்லை. மீண்டும் அதே நிலை உருவாக வேண்டும். தமிழ் நாட்டில் திருக்கோயில்களில் எல்லாம் திருமுறை விண்ணப்பிக்கும் பண்ணிசையாளர் நியமிக்கப் பெறுதல் வேண்டும். "அர்ச்சனை பாட்டேயாகும்" என்ற "உண்மை வழிபாட்டு நெறி" உயிர்ப்புப் பெற்றாகவேண்டும்.

இசை, தமிழோடு பிறந்தது. தமிழ், இசையோடு பிறந்தது. தமிழ் மக்கள் வாழ்வில் இசைக்கலை ஒன்றியிருந்தது. பிறந்த நாள்தொட்டு இறக்கும் நாள்வரையில், தமிழர்கள் வாழ்க்கையின் அனைத்து நிகழ்ச்சிகளிலும் இசை இடம் பெற்றிருந்தது. தமிழிசை நெஞ்சத்தை ஈர்க்கும் ஆற்றலுடையது; இதயத்தைக் குழைக்கும் தன்மையுடையது. கற்றும் கேட்டும் மனம் அடங்காமல் அல்லற்படுவோர் பலர். பேய் மனம் எளிதில் அடங்காது; ஒடுங்காது; திருந்தாது. எண்ணில்லாத காலமாக, அலைந்து திரிந்த "ஊர் நாய்" போல் மனம் பழக்கவாசனையில் அகப்பட்டிருப்பது. ஆனால் அந்த மனத்தைத் தமிழிசை கேட்டுப் பழக்கப்படுத்தினால் எளிதில் கட்டுப்படும். நமது நாட்டு வழி, இசை இன்பத்தில் இலயித்து நிற்றலே உய்வுக்கு வழி; உய்திக்கு வழி. இது மட்டுமா? தமிழோடு இசை வளர்ந்தது. திருக்கோயில்களில் தமிழிசை வளர்ந்தது. திருக்கோயில் தமிழிசையை வளர்த்தது. தமிழிசை இறைவன் புகழைப் போற்றி வளர்ந்தது; தமிழ் மக்களின் வாழ்நிலையை உயர்த்தியது. திருக்கோயிலயிலிலேயே தமிழ்ச் சங்கத்தில் இசைபயிலும் இடம் தனியே இருந்தது. இந்த இடத்திற்குப் பெயர் "ஏழிசைச் சூழல்" என்பதாகும்.

"சிறைவான் புனல் தில்லைச் சிற்றம்
பலத்தும், எம் சிந்தை யுள்ளும்
உறைவான் உயர்மதிற் கூடலின்
ஆய்ந்தஒண் தீந்தமிழின்
துறைவாய் நுழைந்தனையோ? அன்றி
ஏழிசைச் சூழல் புக்கோ?
இறைவா தடவரைத் தோட்கென்கொ
லாம்புகுந் தெய்தியதே!"

என்று வரும் திருக்கோவையார் திருப்பாடல் "ஏழிசைச் சூழல்' என்று குறிப்பது அறிக. தமிழிலக்கியங்களிற் பல, இசைக்கலை தழுவியன. இசை, உயிர்! பாடல், உடல்! "பண் என்னாம் பாடற்கு இயை பின்றேல்" என்று திருக்குறள் கூறும் திருக்கோயில் வளாகத்தைச் சுற்றித் தமிழிசை வளர்ந்தது. பண்ணொன்றைப் பாடிப் பரிசில் பெற்றனர் பலர். இவைனைத் தூதாக நடக்கச் செய்தது, சுந்தரரின் இசைத்தமிழ். எலும்பைப் பெண்ணுருவாகக் கண்டது திருஞானசம்பந்தரின் இசைத்தமிழ். திருமுறைக் காட்டுத் திருக்கதவும் திறந்தது அப்பரடிகளின் பண்ணிசைத் தமிழ். இங்ஙனம் தமிழிசை, திருக்கோயில்களைத் தழுவியிருந்த சமுதாயத்தின் துயரங்களைத் துடைத்து வாழ்வித்த வரலாறுகள் இவை.

இசை, மக்களின் வாழ்க்கையில் எழுச்சியும் ஏற்றமும் மிக்க உணர்வுகளைத் தந்து வழிநடத்தியது. திருக்கோயில்களில் வளர்ந்த பண்ணிசையில் கற்பனை வளமும் எடுப்பும் உண்டு. தருமபுரத்தில் பாடிய யாழ்மூரிப்பண் இதற்கு ஓர் எடுத்துக்காட்டு! இவ்வாறு தமிழினத்தின் வரலாற்றை உந்திச் செலுத்திய பெருமை திருமுறைப் பண்ணிசைக்கு உண்டு.

"ஏழிசையாய் இசைப் பயனாய்
இன்னமுதாய் என்னுடைய
தோழனுமாய் யான் செய்யும்
துரிசுகளுக்கு உடனாகி
மாழை ஒண்கண் பரவையைத் தந்து
ஆண்டானை மதியில்லா
ஏழையேன் பிரிந்திருக்கேன்
என் ஆரூர் இறைவனையே!"

என்ற திறப்பாடலில் சுந்தரமூர்த்தி நாயனார் இறைவனே "இசையின் பயன்" என்கிறார். இன்ப அன்பு அடைதலே இசையின் பயன். மாணிக்கவாசகரிடம், அவர்தம் பாட்டுடைப் பொருள் எது? – எனக் கேட்ட பொழுது, அம்பலத்திலாடும் ஆடல் வல்லானை மாணிக்கவாசகர் காட்டியதாக ஒரு வரலாறு உண்டு. ஆதலால் கலையின் பயன் சாதாரணக் களிப்பு மட்டு மன்று. களிப்பினும் உயர்ந்த இன்பமாகும். திருவருளின்பத்தில் திளைத்தலாகும்; திருவருளின்பத்தில் ஒன்றுவதாகும்.

நமது புலன்கள் அடங்காத் தன்மையன. பொறிகள் மதம்பிடித்த களிறுகள் போல்வன. இவற்றை அடக்கி நெறிப்படுத்தும் ஆற்றல் திருமுறைப் பண்ணிசைக்கு உண்டு அலையும் ஆன்மாவை, பெருமான் திருவடிப் போதில் கட்டிப்போடும் ஆற்றல் திருமுறை இசைக்கு உண்டு. இறைவனே ஆரூரரின் இசைத் தமிழில் ஒன்றிப்போய் அவன் தன் கடமையைக் கூட மறந்துவிட்டானே!

"..................வன்தொண்டன்
ஒன்றும் உணர்வால் நமைப் போற்றி
உரைசேர் பதிகம் பாடுதலால்
நின்று கேட்டு வரத்தாழ்த்தோம்
என்றார் அவரை நினைப்பிப்பார்"

என்று சேக்கிழர் பெருமான் இச்செய்தியை எடுத்துரைப்பார். ஆதலால், இசையின் பயன் கட்டறுத்தல்; அன்பில் தோய்தல்; திருவருள் நலத்தினைப் பெறுதல்.

ஓர் ஆன்மா திருக்கோயிலைத் தழுவியுள்ள கலையால், எப்படி வளர்கிறது, பயன் பெறுகிறது என்பதற்கு இஃதோர் எடுத்துக்காட்டு.

கூத்தில் பிறந்து, இசையில் வளர்ந்து நிறைவு பெற்று விளங்குவது இயற்றமிழ். இயற்கை எப்பொழுதும் இன்பமாக இருப்பது, பதிகங்கள், இசைப்பாக்கள், பரிபாடல் முதலியன கூத்தும் இசையும் முதிர்ந்த இயற்றமிழாகும். இயற்றமிழ், கலை நிறைந்தவடிவத்தில் உணர்வைத் தொடுவது; செழுமைப் படுத்துவது. இயற்றமிழ் இதயத்திற்கு இதமளிப்பது; களிப்புத் தருவது. இயற்றமிழே மக்கள் முன்னேற்றத்திற்கு உந்து சக்தியாக விளங்குவது. அதனால் இயற்றமிழ் விரித்துரைக்கும் நிகழ்வுகள் திருக்கோயில் தோறும் நிகழ்ந்துள்ளன; ஆங்கு பட்டிமண்டபங்கள் நடந்துள்ளன.

இறைவனும் இறைவியும் இயற்றமிழ் ஆராயும் தமிழ்ச் சங்கங்களில் வந்தமர்ந்தனர்; தமிழை ஆய்ந்தனர்; இறைவன் "நன் பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறினான்", பாடலும் இயற்றினான். இறைவன் நாட்டு மக்களின் வாழ்க்கை நயந்தினிது நடைபெற அகப்பொருள் இலக்கணமும் அருளிச் செய்தனன். எனவே, இயற்கையோடிசைந்தது வாழ்க்கை. வாழ்க்கையோடு இசைந்தது சமயம். சமயமும் கலையும் ஒன்றையொன்று தழுவியன. எல்லாம் மானுடகுலத்தை வளப்படுத்தவேயாம்.

சமய வாழ்க்கையின் மணிமுடியான நிலை உள்ளக்கிழியில் உருவெழுதுதல், உற்று நோக்குதல்.

"உயிரா வணமிருந்து உற்றுநோக்கி
உள்ளக் கிழியின் உருவெழுதி
உயிராவணம் செய்திட் டுன்கைத் தந்தால்
உணரப் படுவாரோடு ஒட்டி வாழ்தி
அயிரா வணமேறா தானே றேறி
அமரர்நா டாளாதே ஆரு ராண்ட
அயிரா வணமேயென் னம்மா னேநின்
அருட்கண்ணால் நோக்காதார் அல்லாதாரே!"

என்றருளிச் செய்வார். அப்பரடிகள் ஞானக் காட்சியில் ஒன்றைக் காணுதல் அரிய தவத்தின் பயன். அங்ஙனம் கண்ட ஒன்றினைத் தொடர்ந்து நினைந்து நினைந்து மகிழ, உள்ளக் கிழியில் உருவெழுதுதல் சமயக் கலையின் – ஓவியக் கலையின் – சிற்பக் கலையின் தாய்மை நிலை. ஓர் உருவமும் ஒரு நாமமும் இல்லாதானை, உணர்வரிய மெய்ஞ்ஞானத்தில் கண்ட காட்சியே முதல்! அக்காட்சியின் அனுபவமே வழிபாடு! வழிபாட்டினை அனைவரும் அனுபவித்து மகிழவே சிற்பம்; திருவுருவ வழிபாடு! மலையெல்லாம் குகை! குகையெல்லாம் திருக்கோயில்! மனம், வாக்குக் கடந்த பரம்பொருள், பேசும் பொற் சித்திரமாக, அருளும் திருமேனியாக எழுந்தருளியுள்ள காட்சி! தமிழகத்தில் உள்ள கோயில்கள் சிற்பக் களஞ்சியங்கள்! கல்லுக்கு உயிர் கொடுத்துப் பேசவைக்கும் கலையில் தமிழ்ச் சிற்பக் கலைஞர்கள் விஞ்சிய புகழுடையவர்கள். ஊழி தோறும் சாதாரண மக்கள் கூடக் கடவுளைக் கண்டு மகிழ்த்தக்க வகையில் சிற்பத்தில் சிந்தைக்கினிய மாட்சிமையைத் தந்தமைக்கு கைம்மாறு ஏது? தமிழகத் திருக்கோயில்கள் இயல்பான – வாழ்க்கையோடியைந்த அனைத்து உணர்வுகளும் ததும்பும் சிற்பங்களைக் கொண்டு அழகுற விளங்குகின்றன. தமிழகத் திருக்கோயில்களின் சிற்பங்கள் கண்ணுக்கு விருந்து அளிப்பன; சிந்தைக்குக் களிப்பு நல்குவன; எண்ணுவதற்குக் கற்பனைக் களஞ்சியமாய் விளங்குவன! இதனினும் உயிர்ப்புள்ள கலை வேறு ஏது?

தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் 80 காரணங்களைச் சிவன் அபிநயித்துக் காட்டுவதாகச் சிற்பத்தில் செதுக்கப்பட்டுள்ளன. பரதமுனி இயற்றிய நாட்டிய நூலில் கண்டுள்ள காரணங்களோடு இவை ஒத்திருக்கின்றன.

தஞ்சைப் பெருவுடையார் கோயிலைப் போலவே – ஆனால், தந்தை, மகன் என்ற மரபுக்கேற்ற உயரத்திலும் அளவிலும் சற்றுச் சிறியதாகக் கங்கை கொண்ட சோழபுரம் திருக்கோயில் கட்டப் பெற்றுள்ளது. இத்திருக்கோயிலில் உள்ள சிற்பங்களும் உயர்ந்து விளங்குபவை. இங்குள்ள சிற்பங்கள் உயிர்ப்புள்ள உருவங்களாக – நம்முன் பேசுவன போன்று அமைந்துள்ளவை. கங்கைகொண்ட சோழபுரம் திருக்கோயிலில் இறைவன், சண்டேசுவர நாயனாருக்குச் சண்டீசபதம் அருளும் காட்சி மிகச் சிறந்த அழகிய சிற்பமாகச் செதுக்கப் பெற்றுள்ளது. அடுத்து நம்முடைய கவனத்தைக் கவரும் சிறந்த சிற்பங்கள் உடைய திருக்கோயில், தாராசுரத்திலுள்ள இராசராசேசுவரம் என்ற திருக்கோயில். இந்தத் திருக்கோயிலில் அறுபத்து மூன்று நாயன்மார்களின் வரலாறு முழுவதும் சிற்பமாகச் செதுக்கப் பெற்றுள்ள காட்சி, காண்பார் உள்ளத்தைக் கவரும் காட்சி! இங்ஙனம் தமிழ்நாட்டுத் திருக்கோயில்களில் அமைந்துள்ள சிற்பங்கள், கலைகளின் கருவூலமாக மட்டுமல்லாமல், தமிழக வரலாற்றைப் பாதுகாத்து, அந்தப் பழமையான வரலாற்றுச் செய்திகளைப் புத்துணர்வோடு மக்கள் அனுபவிக்கத் தக்க வகையில் படைத்துத் தந்துள்ள பெருமையை என்னென்று புகழ்வது?

தமிழகத் திருக்கோயிற் சிற்பங்கள் பல திற்ந்தன. இச்சிற்பங்களைச் சாதாரண உருவங்களாகக் கருதுதல் கூடாது. கலையுணர்வில் ஆவேசித்து நின்ற ஒரு கலைஞன், அர்ப்பணிப்பு உணர்வுடன் தன்னை மறந்து இந்தச் சிற்பங்களைச் செதுக்குகின்றான். சிற்பக் கலைஞன் வாழும் உலகம் வேறு; அவனுடைய மனோ நிலையும் வேறு. சாதாரணமாக – சராசரி வாழ்க்கைத் தரத்தைக் கூட உயர்த்திக் கொள்ளாதவர்கள் இத்தகைய சிற்பங்களை அனுபவிக்கவும் விமர்சிக்கவும் இயலாது. பொதுவாகச் சமய உலகில் ஆண், பெண் என்ற வேறுபாட்டின் காரணமாக உயர்வும் இல்லை; தாழ்வும் இல்லை; கவர்ச்சியும் இல்லை. காதல் வாழ்க்கை தவிர்க்க இயலாத ஓர் இயற்கை நியதி. எனவே, இவ்வகையான சிற்பங்களில் பெண்பால் உருவங்களைப் பார்க்கும்பொழுது சிலர் அதனைக் கொச்சையானது என்று நினைக்கின்றனர், பேசுகின்றனர். அந்த உருவத்தைச் செதுக்கிய சிற்பி, கலை உபாசனா முறையில் பால் உணர்வுகளுக்கு அப்பாற்பட்டு நின்றே வடித்துக் கொடுத்துள்ளான். அந்தக் கலைஞனின் உணர்வுப் போக்கிலேயே அவற்றை அனுபவிக்க வேண்டும்.

சிற்பக் கலையில் வளர்ந்து மகிழ்ந்த செந்தமிழ் மக்கள், வானவில்லின் வண்ணங்களில் திளைத்திருப்பர் போலும்! வண்ணப்பூச்சுக் கலையில் தமிழர்கள் வளர்ச்சி பெற்று, ஓவியக் கலையினைக் கண்டனர். "ஓவத்தன்ன வினைபுனை நல்இல்" என்று அகநானூறும், "ஓவுக் கண்டன்ன இல்" என்று நற்றிணையும் கூறும். ஆதலால் சங்க காலத்திலேயே ஓவியக்கலை தமிழகத்தில் சிறந்திருந்தது என்பதை அறியலாம். ஓவியமும் நுண்கலைகள் வரிசையைச் சேர்ந்தது. திருக்கோயில் முழுவதும் தூய்மையாகவும் அழகாகவும் எடுப்பாகவும் விளங்க வண்ணப்பூச்சு செய்யப் பெற்றது. தஞ்சைப் பெருவுடையார் திருக்கோயிலில் உட்புறச் சுவரில் நாயன்மார்கள் வரலாறு, ஓவியமாய்ப் வரையப்பெற்றுள்ளது. சுந்தரமூர்த்தி நாயனார், சேரமான் பெருமாள் நாயனார் வரலாற்றை விரிவாகச் சித்திரித்துக் காட்டும் வண்ண ஓவியங்கள் மிகச் சிறப்பாகவும் அழகாகவும் அமைந்துள்ளன. சிவன்–பார்வதி முன்னிலையில்தேவ மாதர்கள் நட.னமாடுகின்றனர். இரண்டு நாயன்மார்களும் அதைக் கண்டுகளித்த வண்ணம்

உள்ளனர். இந்தத் திருக்கோயிலில் உள்ள ஓவியங்களிலெல்லாம் சிறந்த ஓவியம் திரிபுராந்தகச் சிவன் கதையைச் சித்திரித்துக் காட்டும் ஓவியமே! திரிபுராந்தகச் சிவனுருவத்தில் ரௌத்திரம், வீரம், கருணை முதலிய மெய்ப்பாடுகள் அற்புதமாகத் தீட் டப் பெற்றுள்ளன. இந்த ஓவியங்களுக்குப் பயன்படுத்தப் பட்டிருக்கும் வண்ணக்கலவை மிகமிக உயர்ந்தது. இன்றும் இந்த ஓவியங்கள் உயிரும் அழகும் நிரம்பியவையாக விளங்குகின்றன. ஓவியத்திற் சிறந்து விளங்கும் இந்தத் திருவுருவங்கள் பக்தர்களிடத்தில் சிறந்த பத்திமை உணர்ச்சியை ஏற்படுத்துகின்றன என்பது வெள்ளிடைமலை. ஓவியத்திற்கும் ஆடற் கலைக்கும் தஞ்சைப் பெருவுடையார் திருக்கோயில் கருவறையைச் சார்ந்த அந்த உட்சுவரே தாயேடு! சித்தன்னவாசல் வண்ண ஓவியங்களும் நினைவு கூரத்தக்கவை. தமிழகத்தின் பல்வேறு திருக்கோயில்களில் அருளார்ந்த நாயன்மார்கள் மற்றும் தலபுராண வரலாறுகள் சிறந்த வண்ண ஓவியங்களாகத் தீட்டப் பெற்றுள்ளன. அந்த ஓவியங்களின் வண்ணப் பூச்சுக்கள் இன்றளவும் மாறாமல் ஒளிமயமாய் விளங்குவன. தமிழகத்தின் திருக்கோயில்களைச் சார்ந்து வளர்ந்த ஓவியக் கலையின் சிறப்புக்குச் சான்று. இந்த ஓவியங்களெல்லாம் நம்மனோர் வாழ்க்கையை ஓவியமாய் விளங்கச் செய்வதற்குத் துணையாய் அமைவன.

உயிர், உடலோடு இயைந்து இயங்குகிறது. உடம்பு – உயிர்க் கூட்டு வாழ்க்கையே. இந்த வாழ்க்கை இடையீடின்றி இயங்குவதற்கு உயிர் தேவை. அதனாலேயே "உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே" என்று கூறினர். திருக்கோயிலைச் சார்ந்து நல்ல சமையற்கலையும் உணவுப் பழக்கமும் வளர்ந்தன. நல்ல வண்ணம் நலமுடன் வாழ்வதற்கு, எவ்வகை உணவு ஏற்றது என்பதெல்லாம்கூட திருக்கோயில் திருவமுதுப் படையல் மூலம் நாடு கற்றுக்கொள்ள முடிந்தது. இன்னின்ன பொழுதில் இன்னின்ன உணவு என்றெல்லாம்கூட வரையறை செய்தனர். இன்று, புரதச் சத்து அடங்கிய பயறு வகைகளே உணவில் இன்றியமையாதவை, உடல் ஆற்றலுக்குத் துணை செய்பவை என்கின்றனர். நம்முடைய திருக்கோயில்களில் பயறு வகைகளில் ஒன்றான சுண்டல், திருவமுதுப்படையலில் முக்கிய இடம் பெற்றதை எண்ணுக. நலமான வாழ்க்கைக்குப் பழங்கள் உண்ணும் பழக்கம் தேவை. திருக்கோயிற் பூசை பழமின்றி நிகழாது. இங்ஙனம் உடலில் உயிர் பேணும் திறனைப் பெறுதற்குரிய கலையாகிய சமயற் கலைக்கும் சமயமே துணை செய்தது; வழிகாட்டியது. திருக்கோயில் திருவமுதுப் படையல் நெறிமுறைப்படி, ஒருவன் உண்டுவருவானாகில் அவன் நெடிய நாள் வாழ்வான்; நோயின்றி வாழ்வான்!

கூடி வாழ்தல் ஒரு கலை. கூடி வாழ்தலுக்கு ஒரு மையம் வேண்டும். பழந்தமிழர் வாழ்க்கையின் மையமாகத் திருக்கோயிலே விளங்கியது. நடுவூருள் திருக்கோயில்; நான்கு புறமும் மக்கள் சூழ்ந்து வாழும் ஊர் என்று நம்முடைய நாட்டில் ஊர்கள் அமைந்தன. இதுவே திருக்கோயிலைச் சார்ந்து ஊர்கள் இயங்கின என்பதற்குச் சான்று. தமிழ் மக்களின் சமய மரபுப்படி கடவுள், வாழ்த்துப் பொருள் மட்டுமின்றி வாழ்வுப் பொருளாகவும் விளங்குபவர். அன்றைய தமிழ் மக்கள் வாழ்க்கையின் நன்மை, தீமை ஆகிய அனைத்தையும் திருக்கோயிலை மையமாகக் கொண்டே செய்தனர். திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவனிடம் விண்ணப்பித்து, அவன் திருவுளம் அறிந்தே செய்தனர். சுந்தரர் திருமணம், திருக்கோயிலின் சூழலில் இறைவனே

முன்னின்று செய்துவைக்கப் பெற்றது, ஓர்ந்தறிக. ஆலயச் சுற்றிற்குள் அழுத குழந்தைக்குப் பால் கிடைத்தது என்பதைத் திருஞான சம்பந்தர் வரலாற்றால் உய்த்துணர்க! அப்பரடிகள் குடரோடு துடக்கி முடக்கியிட்ட சூலை நோயிலிருந்து திருவதிகைத் திருக்கோயிற் சூழலில், திருவதிகைத் தலைவனாலேயே மீட்கப் பெற்றார் என்பதறிக! கொற்றாளின்றித் தவித்த ஏழை பிட்டு வாணிச்சிக்கு ஆலவாயண்ணல் கொற்றாளாக வந்து ஏவல் செய்த வரலாறு கற்றுத் தரும் பாடம் என்ன? தாயாக வந்து மகப் பேறு பார்த்ததும் தயாபரன் தானே! மாமனாக வந்து வழக்குரைத்த மாட்சிமை மிக்க வரலாறு என்றும் மறத்தற்கியலாதது. இவையெல்லாம் நமது சமுதாய வாழ்க்கை திருக்கோயிலை மையமாகக் கொண்டு நிகழ்ந்தது என்பதற்கு எடுத்துக்காட்டுக்கள்! இத்தகைய நடைமுறைகளில் திருக்கோயில்கள் இயங்கிய போதும், நமது சமுதாய மக்கள் வளர்ந்த போதும் வாழ்க்கை இன்பமாக இருந்தது. திருகோயில்களும் உயிர்ப்புடன் அருள் நிலையங்களாக விளங்கின. இன்று, அவை பண்டைய மாட்சியுடன் விளங்கவில்லை என்பது வெளிப்படையான – கசப்பான உண்மை. இந்த நிலை மாறினால் தமிழகம் புத்துயிர் பெறும்; புதிய வரலாறு படைக்கும்; கலைகளும் செழித்து வளரும்.

தாயாகிக் குழந்தை வளர்த்தல் ஒரு நுண்ணிய கலை. இன்று தாயர் பலர் குழந்தைகளை முறையாக வளர்ப்பதில்லை. ஒரு தாய் எங்ஙனம் பாலூட்டி, எப்படி வளர்க்க வேண்டும் என்பதற்குச் சீர்காழியில் எழுந்தருளியுள்ள திருநிலை நாயகி ஓர் எடுத்துக்காட்டாவாள். குழந்தை அழுகிறது. அவள் தாய்! நான்கு சுவர்களுக்கிடையில் இருக்கும் தாயல்லள்! அண்டத்திற்கு எல்லாம் தாய்! அதனால் யாருடைய குழந்தை, எந்தக் குழந்தை என்ற வினாவிற்கு இடமில்லை. பிறந்த குழந்தைகளெல்லாம் பாலுண்டு வளர வேண்டுமல்லவா? அவள் அருளின் வடிவு! பாலுண்டு வளர வேண்டுமல்லவா? அவள் அருளின் வடிவு! ஆதலால் பாலூட்டுகிறாள். சாதாரணமாகப் பாலூட்டினால் குழந்தையின் ஊனுடல் வளரும்;

உயிர் வளராது. ஆதலால், திருஞானத்தையும் பாலிற்குழைத்தூட்டினாள்! இது தாய்க்குலத்திற்கோர் எடுத்துக்காட்டு! அவர்கள் முறையாகக் குழந்தைகளை வளர்க்கவேண்டும்; பாலூட்டி வளர்க்கவேண்டும். உடன் சிறந்த அறிவையும் தந்து வளர்க்கவேண்டும். தாய்மைக் கலைப் பயிற்சிக் கூடம் சீகாழி. அதன் பேராசிரியை திருநிலை நாயகி; முதல்வர் பிரமபுரீச்சுரர்; அங்கு வளர்ந்த குழந்தை திருஞானசம்பந்தர். திருக்கோயில் வழங்கும் உயிர்ப்புள்ள வாழ்வியற் கலைக்கு இதைவிடச் சிறந்த சான்று வேறு வேண்டுமோ?

மானுட வாழ்க்கை அகனமர்ந்த காதலில் மலர்வது; மகிழ்வது. இறைவனே உமையொடு காதல்புரிந்து பெண்பால் உகந்து வாழ்கின்றான்.

"தென்பால் உகந்தாடும் தில்லைச் சிற்றம்பலவன்
பெண்பால் உகந்தான் பெரும்பித்தன் காணேடீ
பெண்பால் உகந்திலனேல் பேதாய் இருநிலத்தோர்
விண்பாலி யோகெய்தி வீடுவர்காண் சாழலோ"

என்பார் மாணிக்க வாசகர். ஆதலால் காதலின் அருமை திருக்கோயில் உள்ளிருக்கும் சிவன் தனக்குத் தெரிகிறது. ஆதலால், தாம் விரும்பிய ஒருவரைச் செட்டிப் பெண் மணந்து கொள்ள, திருமருகலுறை எம் தலைவன், திருஞானசம்பந்தர் வாயிலாகத் துணை செய்த அருமைப்பாடு எண்ணி எண்ணி இன்புறத்தக்கது. நற்றமிழ்ச் சுந்தரர் காதல் நிறைவுறுவதற்காகப் பரவையார் பாலும், சங்கிலியார் பாலும் இறைவன் நடந்த தூது மண்ணகம் மணக்கும் வரலாறு அன்றோ! காதல் இயல்பில் அரும்பி மலர்வது. அதையும் யாராவது செயற்கையாக்க விரும்பினால் கண்ணுதற் பெருமானின் நெற்றிக்கண் கனல்கக்கும். இதற்குச் சான்று காமனை எரித்தது. ஆதலால் ஓரறிவுயிரிலிருந்து ஆறறிவுயிர் வரை கலந்து மகிழும் காதலுக்கும் திருக்கோயிலே மையம்.

வாழ்வு, வாழும் தன்மையுடையது. ஒரோவழி இயற்கையின் காரணமாக வாழ்விக்க நேரிடலாம். உண்ணும் உணவுக்கும் நெருக்கடி ஏற்படலாம். அதைத்தான் பஞ்சம் என்பது. பஞ்சம் என்பது மனித உலகத்திற்குத் தீமை செய்வது; பண்பாட்டைக் கெடுப்பது; வாழ்வை அழிப்பது. ஏழாம் நூற்றாண்டில் திருவீழிமிழலை வட்டத்தில் பஞ்சம் வந்து விட்டது. எங்கும் வறட்சி! வறட்சியினால் ஏற்பட்ட துயர் தணிக்க திருவீழிமிழலையில் உறையும் எந்தை ஈசனே முன்வந்தான்! வறட்சித் துயர் தணிக்கும் பணியில் ஈடுபட்டிருந்த திருத்தொண்டர்களான திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகியோருக்கு நாளும் பொற்காசு—வறட்சியொழிப்புக்கு மான்யம் தந்தருளினன்; திருக்கை வழக்கம் தந்தருளினன். வறட்சித் துன்பம் தெரியாமல் பலர் உண்டு மகிழ்ந்தனர். ஆதலால், துன்பம் வந்துற்ற பொழுதும் தொழுத கைத் துன்பம் துடைக்கும் கலையிலும் திருக்கோயிலே முன்னின்றது. வழக்குகள் வாரா வாழ்க்கையே உத்தமமான வாழ்க்கை. ஆனால், வழக்குகள் வாரா வாழ்க்கை வையகத்தில் அமைவது அரிது. ஒரோவழி வாழ்க்கையில் வழக்குகள் வந்துற்றால் என்ன செய்வது? வழக்கைத் தாமே பேசிப் பேசி வழக்கைக் காழ்ப்பாக மாற்றக்கூடாது.

உடனடியாக வழக்கை நடுவர் மன்றத்திற்குக் கொண்டு செல்லவேண்டும். இதுவே வழக்கு வளராமல் தடுக்கும் முறை; வழக்கைப் பகையாக வளர்க்காமல் தடுத்து நிறுத்தும் உபாயம்! பண்டைய தமிழ் மக்களுக்கு முறை மன்றம் எங்கிருந்தது? திருக்கோயிலிலிருந்த ஊர்ச்சபைதான் முறைமன்றம். நற்றமிழ்ச் சுந்தரர் வழக்கு திருவெண்ணெய்நல்லூர்த் திருக்கோயிலில் இருந்த ஊர்ச் சபையிலேயே விசாரிக்கப் பெற்றது. ஆதலால், வழக்கை வளராது தடுத்து, உறவை வளர்க்கும் கலையும் திருக்கோயிலைச் சேர்ந்தே வளர்ந்தது.

வாழ்க்கையில் சிறப்புற்று விளங்க அடக்கம் தேவை. அடக்கத்துடன் வாழ்தல் ஒரு நுண்ணிய கலை, முற்றிய கதிர்மணிகள் தலை சாய்ந்து கிடக்கும். தாழ்வெனும் தன்மை பூண்டொழுகல் சைவத்தின் பண்பு. எந்தச் சூழ்நிலையிலும் அடக்கம் தவறுதல் கூடாது. சான்றோர்க்கு வணங்கி வாழ்தலைத் தவிர்க்கலாகாது. நற்றமிழ் நாவலூரார் திருவாரூரில், எந்தை ஈசனை வணங்கும் விரைவுணர்ச்சியில், தேவாசிரிய மண்டபத்தில் தங்கியிருந்த சிவனடியார்களை வணங்காமல் சென்று விடுகிறார். வணங்கக் கூடாது

என்பது சுந்தரரின் எண்ணமன்று. பரபரப்பான விரைவு உணர்ச்சி! ஆனால், திருவாரூர்த் தியாகேசன் ஆரூரர்க்கு இதனை நயம்பட எடுத்து உணர்த்துகின்றார். அதன்பின் ஒரு தடவை வணங்க மறந்த ஆரூரர், பல தடவை "அடியேன், அடியேன்" என்று பன்னிப்பன்னிக் கூறி வணங்குகின்றார். வெற்றி பொருந்திய வாழ்க்கை அடக்கத்தில் பிறக்கிறது. புகழ் பொருந்திய வாழ்க்கை அடக்கத்தினாலேயே கிடைக்கும் அடக்கத்தோடு தொடர்பில்லாத புகழ், வெற்றி ஆகியன வெறும் ஆகாச வாணமேயாம். நிலைத்த பயன் தாரா.

"அருளுரு பெருஞ் சூலையினால்
ஆட்கொள்ள அடைந்துய்ந்த
தெருளும் உணர்வில்லாத
சிறுமையேன் யான்"

என்று அப்பரடிகள் கூறிக் கொண்டதே அவரை ஆளுடைய அரசு ஆக்கிற்று.

நட்பு ஒரு கலை! பழகிய நட்பைப் பெருகும் வண்ணம் வளர்த்துக் கொள்ளுதலும் ஒரு கலை. இங்ஙனம் நட்பில் பயின்று வளர்தல் ஒரு சிறந்த வாழ்வியல் அறம். ஒருவர் பிறிதொருவர்க்கு நட்பை உருவாக்கித் தருதலும் ஒரு கலை. ஒரோ வழி நட்பிற் பிரிவு வரும்பொழுது, பிரிவினை நீக்கி நட்பை இசைத்து வைத்தல் ஒரு பண்பு. மானிடத்தின் வாழ்வியலோடிசைந்த நம் கடவுள், நற்றமிழ் ஆரூரர்க்குச் சேரமான் பெருமாள் நாயனாரை நட்பாக அறிமுகம் செய்வித்து, நட்பு ஏற்படுத்தித் தந்தது ஓர் உயரிய கலை; பண்பாடு. சுந்தரருக்காகத் திருவாரூர் நெடுவீதியில் பரவையாரிடம் தூதாக நடந்து செல்கிறார் சிவபெருமான். சிவபெருமானிடம் மாறாத பக்தி பூண்ட ஏயர்கோன் கலிக்காமருக்கு இது பிடிக்கவில்லை. அவர் பார்வையில், பெண்களிடம் சமாதானம் செய்வதற்குக் கடவுளைத் தூதராக அனுப்பியது தகாதது என்று நினைக்கிறார். சுந்தரர் மீது ஏயர்கோனுக்குக் கோபம் பிறக்கிறது. சிவபெருமான் செய்யாதன எல்லாம் செய்து, சுந்தரருக்கும் ஏயர்கோன் கலிக்காமருக்கும் இடையே உறவை உண்டாக்குகிறார். இது உயிர்ப்புள்ள வாழ்வுத் தொண்டு.

திருவொற்றியூர் சுந்தரர் மனம் சங்கிலியார் பால் சார்கிறது. வழக்கம்போல சுந்தரர் இறைவனை அணுகினார். நட்புக் கருதிச் சிவபெருமான் அதனை மறுத்தற்கியலாது, சங்கிலியாரிடம் தூது செல்கிறார். கடனுக்காகவன்றி, உணர்வு பூர்வமாகச் செல்கிறார். சங்கிலிக்கு மணாளனாக வாய்க்கப்போகும் ஆரூரரைப் பற்றி மிக அழகாக – உயர்வாக அறிமுகம் செய்கிறார். அன்பர்கள் தங்களுடைய நண்பர்களை வாய்ப்பேற்படும் பொழுது எவ்வளவு கவனமாகவும், எவ்வளவு உயர்வாகவும் பிறர்க்கு அறிமுகம் செய்துவைக்க வேண்டுமென்பதற்கு இந்த அறிமுகம் ஒரு சிறந்த எடுத்துக் காட்டு.

"சாருந் தவத்துச் சங்கிலிகேள்
சால வென்பா லன்புடையான்
மேரு வரையின் மேம்பட்ட

தவத்தான் வெண்ணெய் நல்லூரில்
யாரு மறிய யானாள
உரியான் உன்னை யெனையிரந்தான்
வார்கொண் முலையாய் நீயவனை
மனத்தா லணைவாய் மகிழ்ந்தென்றார்"
(பெ.பு. ஏயர்கோன் – 2839)

என்பார் சேக்கிழார் பெருமான். இதில் வியப்பு என்ன வென்றால், சங்கிலியாரிடத்தில் இறைவன், சுந்தரர் பரவையாரைத் திருமணம் செய்திருப்பதைக் கூறவில்லை. நன்னெறியும் நட்பு நெறியும் ஒரோ வழி முரண்படுவதுண்டு. அப்பொழுதெல்லாம் நன்னெறியைவிட நட்பு நெறிக்கே முன்னுரிமை தரவேண்டும். அதனால், நன்னெறியைத் துறத்தல் என்பது பொருளன்று. நட்புறவில் உடன்போய் பின் நன்னெறியில் நிறுத்தலே நட்பின் பாங்கு. இக்காரணத்தால் நன்னெறியை முன்னிட்டு நட்புநெறியைப் பாதிக்க விடலாகாது. சுந்தரரை மணக்கச் சங்கிலியார் இசைகின்றார். சங்கிலியார் சுந்தரர் மனையறம் சில ஆண்டுகளேனும் நடைபெற வேண்டுமே என்று கருதித் திருவுளம் கொண்டார். ஆதலால், திருவொற்றியூரிலிருந்து 'பிரிந்து செல்வதில்லை என்று சுந்தரரிடம் உறுதிமொழி கேட் கும்படி சங்கிலியாருக்குச் சொல்லிக் கொடுக்கிறார். இளமை நலம் கொழிக்கும் ஒரு பெண்ணின் வாழ்வில் இறைவனுக்குள்ள திருவருள் என்னே! இவையெல்லாம் வாழ்வியலின் நுண்ணிய கலையாகும்.

சுந்தரர் தம்மிடம் பெரிதும் அன்பு பூண்டவராயினும், சுந்தரர்–சங்கிலியார் இருவர் உரிமைகளில் இறைவன் சங்கிலியாரின் உரிமைக்கே பெரிதும் துணையாக நிற்கின்றார். சங்கிலியாரைப் பிரியேன் அதாவது திருவொற்றியூரைவிட்டுப்பிரியேன் என்ற உறுதிமொழியைச் சுந்தரர் கொடுக்க முயற்சி எடுக்காமலிருந்தார். சுந்தரரின் அந்த முயற்சியின்மையையெல்லாம் சங்கிலியார்பால் நின்று, பெருமானே முறியடிக்கிறார். மெலியார்க்கு அரண் செய்து நிற்றலே சமுதாய அறம் என்ற வாழ்வியற் கலையை இந்நிகழ்ச்சி தெள்ளிதின் விளக்குகிறது.

நோயின்றி வாழ்தல் ஒரு கலை. உடம்பு ஒப்பற்ற கருவி. "உடம்பை வளர்த்தேன்; உயிர் வளர்த்தேனே" என்பார் திருமூலர். உடலுக்கு இருவகையான நோய். ஒன்று உடலினைப் பாதுகாக்கும் வகையிலும் வளர்க்கும் வகையிலும் ஏற்படும் பசி என்னும் நோய். பிறிதொன்று உடலை நலிவுறச் செய்யும் நோய். இது உடற் கழிவுகள் நீங்காமையினாலும் சுற்றுப்புறச் சூழ்நிலையின் கேட்டினாலும் பொருந்தாப் பழக்க வழக்கங்களினாலும் வரும் நோய். இந்நோய்க்கு மருந்து வேண்டும். இறைவன் மந்திரமும் தந்திரமும் மருந்துமாகி நின்றருள் செய்கின்றான். புள்ளிருக்கு வேளூர் என்ற திருத்தலத்தில் அவன் வைத்திய நாதனாகவே எழுந்தருளியிருக்கின்றான். ஆதலால், வாழ்க்கையில் உடல் நலம் பேணும் வகையிலும் மருத்துவ வகையிலும் திருக்கோயில்களே முன்னிற்கின்றன.

புள்ளிருக்கு வேளூர்த் திருத்தலத்தில் திருச்சாந்துருண்டை என ஒன்றிருக்கிறது. இந்த உருண்டையைத் தொடர்ந்து 45 நாட்கள் உண்டு வந்தால் தீராத வயிற்று வலியும் தீர்கிறது. இத்திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள செல்வமுத்துக் குமரனுக்கு இரவிற்

சாத்தும் சந்தனக் காப்பு மருத்துவத் தன்மையுடையது. இச்சந்தனக் குழம்பை நாள்தோறும் பருகி வந்தால் நோய்கள் நீங்கும்; ஆற்றல் பெருகும்; அழகு வளரும். திருக்கோயில்கள் என்றாலே திருத்தலமரங்கள் உண்டு. இப்புண்ணியத் தலமரங்கள் மருந்து மரங்களேயாம். வேம்பு, நாவல், வில்வம், திருஆத்தி ஆகியன சிறந்த தலமரங்களாகும். இவைகளின் மருத்துவத்தன்மை அளப்பரியது. நாள்தோறும் ஐந்து வில்வம் தின்று வந்தால் உடல் பொன்னிறமாகும்; இரத்தம் சுத்தியாகும். முன்கூறிய வில்வம், நாவல், வேம்பு ஆகிய தழைகளில் ஐந்தைந்து எடுத்தரைத்து, கெட்டி மோரில் கலக்கி, நாள்தோறும் உண்டு வந்தால் நீரிழிவு நோய் வரவே வராது. வந்திருந்தாலும் போம்.

எல்லாவற்றையும் கடந்து மேவி வாழ்ந்து வரும் பொழுதில் சிலருக்கு நாள், கோள்களில் அச்சம். நாள் கோள்களை நினைந்து அஞ்சுதல் பேதைமை. அறிவறிந்த ஆள்வினையுடையார்க்கு நாளும் கோளும் நன்மையே செய்யும். ஈசன் அடியார்க்கு என்றும் இன்பமே செய்யும். ஆயினும், அஞ்சிச் சாவாரை என்ன செய்ய முடியும்? ஏழாம் நூற்றாண்டில் திருஞான சம்பந்தர், "வேயுறுதோளிபங்கன்" என்று பதிகம் அருளிச் செய்து, அதில் நாளும் கோளும் நல்லவையே என்றருளிச் செய்துள்ளார். ஆயினும் இன்னமும் அஞ்சுவார் பலருண்டு. அவர்தம் அச்சத்தை நீக்கும் வகையில் திருநள்ளாற்றில் நளனைப்பிடித்திருந்த சனி நீங்கியதாக ஒரு வரலாற்று நிகழ்ச்சி உண்டு. இதுவும் ஒரு கலை.

திருக்கோயில் அமைப்பே ஒரு கலையின் வடிவம். பொறியியற் கலைச் செறிவு நிறைந்த கோயிலின் கட்டுமானக் கலை, ஒரு சிறந்த வாழ்வியலை உணர்த்துவது. ஒருவர் வாழ்க்கையின் இளமைக் காலத்தின் அடிப்படை, கோபுரத்தின் அடித்தளம்போல அகலமாகவும் உறுதியாகவும் இருக்கவேண்டும். அப்பொழுதுதான் எதிர்கால வாழ்க்கை சிறந்து, கோபுரம் என உயரமுடியும். தமிழகத்தின் திருக்கோயில்கள் அடிப்பாகத்தில் அகன்றும், உயர உயர அகலம் குறைந்தும் இருப்பதைக் காண்க. அடிப்படையை அகலமாகப் போடுக! உம் வாழ்க்கை உயரும்!

இங்ஙனம் திருக்கோயிலின் உயரத்தை உயர்த்திக் கட்டும் முயற்சி, திருச்சி மாவட்டம் சீனிவாச நல்லூரிலுள்ள குரங்கநாதர் ஆலயத்தின் கட்டுமானத்திலேயே கால் கொண்டது. பின் முதலாம் இராசராசன் காலத்திலும் அதற்குப் பின்னும் இந்த முயற்சி பரவலாக வளர்ந்தது. முதலாம் இராசராசன் எடுத்த தஞ்சைப் பெருவுடையார் திருக்கோயில் மிகப் பெரிய திருக்கோயில். இத்திருக்கோயிலில்தான் ஒரே கல்லில் செய்யப்பெற்ற மிகப் பெரிய நந்தி இருக்கிறது. இத்திருக்கோயில் தோற்றத்தைத் தொடர்ந்து நான்கு திசைகளிலும் இராசகோபுரங்கள் கட்டும் புதிய முயற்சி மிகுந்தது. பெரும்பான்மையான திருக்கோயில்கள் மூன்று சுற்றுக்களுடன் அமைந்தவை. இந்த மூன்று சுற்றும் மும் மூன்று முறை வலம் வந்தே வணங்க வேண்டும் என்பது வழிபாட்டு முறை. இங்ஙனம் மும்மூன்று சுற்று வலம் வரும் பொழுது ஏற்படும் உடற்பயிற்சி; மூச்சுப் பயிற்சி முதலியன உடல் நலத்திற்கு உரியன. திருக்கோயிலில் அமைத்து வணங்கும் திருவுருவங்கள் அனைத்தும் வாழ்வியற் கலையைச் சார்ந்த அறிவியலின் வெளிப்பாடேயாம். ஒவ்வொரு திருக்கோயில் கருவறையிலும் எழுந்தருளியிருப்பது சிவலிங்கத் திருமேனி. இதற்குப் பலவேறு பொருள் காணலாம். விரிவஞ்சி ஒன்றிரண்டு காட்டுகிறோம். உலகே இறைவன்; இறைவனே உலகு. இந்த உலகு உருண்டை என்பது பண்டைத் தமிழரின் தெளிவான முடிவு. "அண்டைப் பகுதியின் உண்டைப்

பிறக்கம்" என்று அறநூல்கள் கூறும். உலகையே இறைவனாக நினைந்து வழிபடத் தொடங்கிய காலத்தில், உலக வடிவத்தில் பாணமும் அதனைத் தாங்கி நிற்கும் ஆற்றலாக ஆவுடையும் என்று கருதி வழிபாடு செய்யப்பெற்றது. தொன்மைக் கால மக்கள் தீயினையே வழிபட்டு வந்திருக்கின்றனர். "சோதியே, சுடரே! சுடரொளி விளக்கே!" என்று திருவாசகம் கூறும். கடவுட் காட்சியில் முதற் காட்சி சோதிதான்! எரிகின்ற எந்தப் பெருஞ் சோதி நெருப்பும் அடிப்பகுதி அகன்றும், நுனிப்பகுதி குறுகியும் இருக்கும். இது இயற்கை நியதி. இங்ஙனம் பாணம் குறுகி எழும் சோதியாகவும் ஆவுடை அச்சோதியின் அடிப்பாகமாவும் கண்டு வழிபாடு செய்யப் பெற்றது. அறிவியல் உலகில், பொருளையும் ஆற்றலையும் ஒன்றாகக் கிடந்து, செயற்படும் பொருளையும் பொருளின் ஆற்றலையும் பிரித்துத் தனித்தனியே பெயர் சூட்டி அழைக்கும் பழக்கம் வளர்ந்து வருகிறது. சிவம் பொருள்; அகப்பொருளின் ஆற்றல் சக்தி. சக்தியாய், சிவமாய் ஒருங்கிணைந்து நின்றிடும் திருமேனி சிவலிங்கத் திருமேனி. இங்ஙனம் வாழ்வோட பொருந்திய கலை ஞானத்தின் மறு பதிப்புக்களே திருக்கோயில் திருவுருவங்கள்.

அடுத்துப் பொருளையும், பொருளின் ஆற்றலையும் பிரித்து வழங்குமாறு போலத் தனித்தனியே பிரித்துச் செய்யும் வழிபாட்டு முறையால்தான் அம்மையப்பன் வழிபாட்டு முறை தனித்தனியே பிரிந்தது. பொருள், பொருளாற்றல் இவற்றின் ஒருங்கிணைந்த செயற்பாட்டின் பயனே இன்பம். அதுவே முருகு எனத் தோன்றி நின்றது. திருக்கோயில் திருவுருவங்கள் எல்லாமே வாழ்க்கையின் – அனுபவத்தின் வெளிப்பாடேயாம்.

வாழ்க்கையில் களிப்பும் மகிழ்ச்சியும் சிறக்க, திருவிழாக்கள் துணை செய்யும். திருவிழாக் காலத்தில் மக்கள் ஒன்று திரளுவர்; சமூக உறவுகள் வளரும்; பாட்டும் கூத்தும் மேடைகள் தோறும் நிகழும். கடைசியாகத் திருத்தேர்த் திருவிழா நிகழும். பல டன் எடையுள்ள தேரைச் சில நூறு பேர் இழுப்பர். சமூக ஒருமைப்பாட்டுக்கு இஃதோர் அளவுகோல். சமூகம் வலிமையும் வனப்பும் பொருந்தியதாக இருப்பதை உலகோர் முன் எடுத்துக்காட்ட இஃது ஒரு நிகழ்ச்சி. மானிட சாதி ஒருமைப்பாட் டுடனும் வலிமையுடனும் இருப்பின் வையகத்தில் எதையும் நிகழ்த்தலாம். இயலாதது ஏது? இத்திருத்தேர் விழாவும் வாழ்வியற் கலையைச் சார்ந்தது என்று எடுத்துக் கூறவும் வேண்டுமோ?

இங்ஙனம் நம்முடைய வாழ்க்கை முழுவதற்கும் மையமாக விளங்கும் திருக்கோயில் நமது செல்வமல்லவா? இத்திருக்கோயில்களைச் சற்றும் சிதைவுபடாமல் நாம் பேணல்வேண்டும். மிகப்பெரிய திருக்கோயில்களை எடுத்த மன்னர்கள் கூட எடுத்த பெருமையை விடப் பேணும் பெருமையே சிறந்தது என்று கருதியிருக்கிறார்கள்; தென்காசித் திருக்கோயிலை எடுத்த பாண்டிய மன்னன், திருக்கோயிலை எடுப்பித்து முடித்த பிறகு வெட்டி வைத்த கல்வெட்டில் பின்வருமாறு பொறித்து வைத்துள்ளான்.

"ஆராயினும் இந்தத் தென்காசி
மேவும் பொன் ஆலயத்து
வாராத தோர்குற்றம் வந்தால்
அப்போதங்கு வந்து, அதனை

நேராக வேயொழித் துப் புரப்
பார்களை நீதியுடன்
பாரா ரறியப் பணிந்தேன்
பராக்கிரம பாண்டியனே!”

என்பது அக்கல்வெட்டுப் பாடலாகும்.

ஆதலால் நாமனைவரும் நம்முடைய திருக்கோயில்களைக் கண்ணெனப் பேணுவோமாக! இத்திருக்கோயிலுக்குப் பகை, திருக்கோயில் மதிற்கோபுரங்களில் செடி கொடிகள் முளைத்தலாகும். இவற்றை உழவாரம் கொண்டு அவ்வப்போது அகற்றுவோமாக! சிற்பங்களையும் ஓவியங்களையும் பாதுகாப்போமாக! திருக்கோயில் தூய்மை, நமது தூய்மை. திருக்கோயில் பேணல் ஒரு கலைத்தொண்டு. திருக்கோயில் பேணல் ஒரு வரலாற்றை இயக்கும் தொண்டு. திருக்கோயில் நிறுவனம் அன்று; அஃது இயக்கம்; அஃது ஒரு கலைச் சூழல். நமது வாழ்வியலோடு கலந்த கலைச் செல்வமாகிய திருக்கோயிலை நாளும் பேணுவோமாக!



---

திருச்சி, அகில இந்திய வானொலியில் 10.3.85இல் ஒலிபரப்பானது.

# முதன்மையுரை

அறிஞர் பி.ஆர். சீனிவாசன்
தொல்லியல் ஆய்வறிஞர் – சென்னை.

---

திருச்சிற்றம்பலம்! மஹாகணபதியே நம:

ஈரேழு உலகங்களையும் உள்ளும் புறமும் வியாபித்து இயக்கி வருவது ஒரு சக்தி என்று பாரத நாட்டில் பல்லாயிரமாண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த ரிஷிகள், முனிவர்கள், ஆசார்யர்கள் மற்றும் தெய்வத்தைத் தாமே அறிந்த அருளாளர்கள் கண்டறிந்தனர் (அந்தர்பஹிஸ்சயத்ஸர்வம் வியாப்ய நாராயண ஸ்தித:). இதைப் பரமாத்மா, பரம்பொருள், மெய்ப்பொருள் என்றழைத்தனர் (பரமாத்மேத்யூதாஹ்ருத:). இது ஜோதிர்மயமானது, தேஜோமயமானது, ஸ்வயம் பிரகாசமானது, மற்றும் ஆனந்தமயமானது. உலகில் நாம் காணும் அத்தனை வஸ்துக்களும் இச்சக்தி, தெய்வசக்தியிலிருந்து உற்பத்தியாகின்றன. முடிவில் இவை அதில் போய் ஒன்றுபடு கின்றன; லயமாகின்றன. (ஆனந்தாத்யேவ கல்விமானி பூதாநி ஜாயந்தி, யேநஜாதாநி ஜீவந்தி, ஆனந்தம் பிரயந்தபிஸம் விசந்தீதி). இது உண்மையானது, மங்கலகரமானது, அழகானது (சத்யம், சிவம், சுந்தரம்), நிலையானது, ஒருகாலும் அழியாதது. (நித்ய: சாஸ்வதோயம்ஸநாதந:) மற்றும் ஆரம்பமும் முடிவுமில்லாதது (அநாத்யந்த ரஹித:).

இந்தத் தெய்வீக சக்தியை மேற்சொன்ன மஹான்கள் போலவே நம் தமிழ் நாட்டில் தோன்றிய நாயன்மார்கள், ஆழ்வார்கள் மற்றும் பல சான்றோர்கள் அறிந்து அனுபவித்து, அனவரதமும் ஆராதித்தது, இகலோகத்தில் அளவிலா இன்பத்தையும், அமைதியையும் பெற்றனர். முடிவில் தம் பிறவிப் பயனான மோக்ஷத்தை அதாவது மறுபிறவி இல்லாத நிலையையும் அடைந்தனர். இவர்களில், வள்ளுவர், கபிலர், மூலர், மணிவாசகர், நாதமுனி, ராமனுஜர், நம்பியாண்டர் நம்பி, வேதாந்த தேசிகர், மெய்கண்டார், அருணகிரியார், தாயுமானவர் மற்றும் சைவ வைணவ மடாலய தபஸ்விகள் மற்றும் வள்ளலார் என்போர் மிகவும் முக்கியமானவர்கள்.

இன்றைக்குச் சுமார் 2500 ஆண்டுகள் வரை பாரதநாடு முழுவதிலும் பல பெரியோர்கள், வேதங்களை ஆதாரமாகக் கொண்டு, இச்சக்தியை முதலில் 33 தேவதைகள் எனவும் பிற்பாடு 33 கோடி தேவதைகளாகவும் பாகுபடுத்தி, அவற்றை யஜனம் அல்லது யாகங்கள் என்ற முறைப்படி ஆராதித்தனர். தமிழகத்திலும் சுமார் 2000 ஆண்டுகள் முன்பு இந்த முறை வழக்கிலிருந்திருக்கிறது. பெருவழுதி என்ற அரசன் பலயாகங்கள் செய்து "பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி" என்ற பெயர் பெற்றான். இந்தத் தகவல் சில சங்க நூல்களிலிருந்து தெரியவருகிறது.

யாகங்கள் மூலம் செய்யப்படும் தெய்வ வழிபாடு, கர்மாவழி எனப்படும். இதில் ஆடு, குதிரை போன்ற மிருகங்களின் புலால், மற்றும் சோமலதையின் ரஸமான ஒரு வகை மதுவும் நைவேத்யமாகக் கொடுக்கப்பட்டன. காலப்போக்கில் இம்முறையிலான வழிபாடு மிக அதிக அளவில் ஆனது. அப்பொழுது பிராணிவதையும் அதிகமாயிற்று. இவ்வழிபாட்டை நடத்துபவர்கள் பல கடினமான தகுதிகளைப் பெற்றிருக்க வேண்டும், தவிர யாகங்கள் செய்வதற்கு மிகப் பெருமளவில் பொருள் தேவைப்படும். ஆகையால் மக்களிடையே இந்த வழிபாட்டு முறை வலுவிழந்தது. இதுதவிர இந்த முறைப்படி

தெய்வத்தை ஆராதித்தால் சொர்க்கப்பதவி கிடைக்கும் என்றும் ஆனால், யாகங்கள் செய்த புண்யத்தின் சக்தி போனவுடன் மனிதன் மறுபடியும் பூவுலகில் பிறக்க வேண்டிவரும் (க்ஷீணேபுண்யே மர்த்யலோகம் விசந்தி) என்றும் வேதங்களிலேயே கூறப்பட்டுள்ளது. இந்த நிலையில்லாத பலனைப் பிராணிவதை மூலமும், பெரும் பொருட்செலவிலும் மக்கள் அடையவிரும்பவில்லை.

இதற்குமாருக அக்காலத்திலே தோன்றிய மஹான்கள் மக்களின் துன்பங்களைத் தவிர்த்து, அவர்கள் காலம் சென்றபின் ஒரு இன்பமயமான மறுபிறவியற்ற நிலையை அடைவதற்கு உதவும் வழிபாட்டு முறையைத் தம் அனுபவத்தால் கண்டுபிடித்தனர். அதற்குப் பூசை செய்யும் முறை என்று பெயர். இம்முறையில் முன்பு சொல்லிய முழுமுதல் சக்தி (தெய்வம்)யையும் மற்றும் அதன் அமசங்களான வேறு தெய்வங்களையும், மந்திர தந்திர, சாஸ்த்திரங்களின் உதவியால், பூசை செய்து வழிபடுவது என்ற ஏற்பாடு செய்யப்பட்டது. இவ்வழிபாட்டில் பால், தயிர், மற்றும் பூ, காய், பழங்களே நைவேத்தியப்பொருள்களாக உபயோகிக்கப்பட்டன. இது சாத்வீகமான முறை; வேறு ஒரு உயிருக்கும் தொந்தரவுஇல்லாத முறையு மாகும். இந்த முறையின் முக்கிய தத்துவம் இறைவனை உளமார, கள்ளங்கபடில்லாமல், வணங்கி வழிபடுவதாகும். இதற்குப் பக்தி மார்க்கம் என்று பெயர். இதன் மூலம் எல்லா மக்களும் இறைவனடி சேர்ந்து பேரின்பத்தை அடைய முடியும். உள்ளன்போடு கடவுளை வழிபடுபவன் அத்தெய்வம் போலவே ஆகிவிடுகிருன் என்றும், இதுவே வீடுபேறு என்றும் மஹான்கள் கூறுவர். வேதமோதுதல் தபஸ்செய்தல், தானம் செய்தல், யாகங்கள் செய்தல் ஆகியவற்ருல் அடைய முடியாத இந்நிலையை ஒருமுகமான தெய்வபக்தியால் அடையலாம் என்று பகவான் கிருஷ்ணன் தம் கீதையில் சொல்லிப்போந்துள்ளார் (பக்த்யா அநந்யயாசக்யம், நவேதேன, நதபஸா, நதாநேந, நேஜ்யயா).

கி.மு. சுமார் 300வது ஆண்டு முதல் பக்தி மார்க்கம் நம் பாரத நாட்டில் அதிக அளவில் பரவலாயிற்று. தமிழ் நாட்டிலும் இம்முறைப்படி சிவன், திருமால் என்ற சங்க நூல்களில் குறிக்கப்படும் இருபெரும் தெய்வங்களும், மற்றும் கொற்றவை, இந்திரன் போன்ற தெய்வங்களும் வழிபடப்பட்டு வந்தனர். அக்காலத்திலிருந்தே திருமாலை வழிபடுபவர் பாகவதர்கள் என்றும், சிவனை வழிபடுபவர் சிவபாகவதர்கள் என்றும் அழைக்கப்பட்டனர். இந்த விஷயம் கி.மு. சுமார் 150ஆவது ஆண்டில் வட நாட்டில் வசித்த பதஞ்சலி என்ற மாபெரும் முனிவர் தமது அரிய இலக்கண நூலான மஹாபாஷ்யத்தில் குறித்துள்ளார். அக்காலத்தில் பக்திவழி, பிரசாரத்தில் இருந்ததற்கு இன்னுமொரு குறிப்பும் அந்நூலிலிருந்து கிடைக்கிறது. அதாவது பதஞ்சலியின் காலத்துக்கு 100, 150 ஆண்டுகளுக்குமுன் ஆண்டமௌரிய அரசர்கள் காலத்தில் பூசை செய்து வழிபடுவதற்கெனத் தெய்வங்களின் படிமங்கள் செய்யப்பட்டு விற்கப் பட்டன என்பதாகும். படிமங்களைத் தனிமனிதன் வீட்டில் வைத்தும் வழிபட்டிருக்கலாம், அல்லது அவை கோயிலில் வைத்துப் பூசிக்கப்பட்டுமிருக்கலாம். பதஞ்சலி முனிவரின் நூலில் கோயில்களும் அக்காலத்தில் இருந்தன என்பதை வருணனின் பிராஸாதம் அதாவது வருணன் கோயில் இருந்தது என்ற குறிப்பினுல் அறிய முடிகிறது. பிராஸாதம் என்ற சொல் கோயில் என்ற பொருளில் வட இந்தியாவில் இன்றுவரை வழக்கிலிருக்கிறது என்பது இங்கு நோக்கத்தக்கது. மேற்கூறியவற்றிலிருந்து பதஞ்சலி முனிவர் காலத்திற்கு முன்பிலிருந்தே கோயில், அதில் தெய்வ படிமங்கள் பிரதிஷ்டை செய்வது, அவற்றிற்குப்

பூசை செய்வது, இதற்கு ஆதாரமான ஆகமங்கள், கோயில் கட்டிடம் எழுப்ப உதவும் வாஸ்து, சிற்ப நூல்கள் இருந்திருக்கவேண்டும் என்று கருத இடமுண்டு. இவற்றைக்கற்றறிந்த ஆசார்யர்களும், ஸ்தபதிகளும், வித்துவான்களும் அப்பொழுது இருந்திருக்கவேண்டும்.

இப்பொழுது மேற்கூறப்பட்ட பக்திமார்க்கத்தின் மூலம் செய்து வரப்படுகிற வழிபாட்டின் வரலாற்றையும் வளர்ச்சியையும் பற்றிச் சிறிது இங்கே கூற நினைக்கிறோம்.

இன்றைக்கு சுமார் 5000 ஆண்டுகளுக்கு முன்பே இம்முறை வழிபாடு நம் பாரத நாட்டில் வழக்கிலிருந்து வந்துள்ளது. சிந்து நதிப்பள்ளத்தாக்கிலுள்ள மொஹஞ்சதாரோ, ஹரப்பா போன்ற இடங்களில் அகப்பட்ட புதை பொருள்களிலிருந்து இது தெரிய வருகிறது. இவற்றில் சில பெண் தெய்வபடிமங்கள், பசுபதி ரூபத்தில் சிவபெருமானின் மூர்த்தம் செதுக்கப்பட்ட முத்திரைகள், மற்றும் நந்தி, நாகங்களின் பொம்மைகள் அடங்கும். தவிர நம் நாட்டில் கோயில் வழிபாட்டின்போது நடனமாடும் பெண்போன்ற ஒரு வெண்கலத்தில் செய்யப்பட்ட சிற்பமும் கிடைத்துள்ளது. இவற்றின் முக்கியத்துவம், தமிழ் நாட்டில் இன்றும் பரவலாக வழிபட்டு வரும் சிவன், பெண் தெய்வங்களான, மாரி, காளி போன்றவற்றுடன் இவை ஒரு ஒற்றுமை கொண்டுள்ளதாகும். எல்லாவற்றிற்கும் மேலாக, சிந்துநதி தீரத்தில் கிடைத்த பொருள்களில் மிக முக்கியமானவை ஒரு வகை எழுத்துப்பொறிக்கப்பட்ட முத்திரைகள் ஆகும். இந்த எழுத்துக்களைக் கூட்டிப்படித்த சில அறிஞர்கள், இது தமிழில் எழுதப்பட்டுள்ளது என்று கூறுவர். வேறு சிலர் வேறு மொழியிலானது என்பர். இன்னும் இந்தப் பிரச்னை முடிவு பெறாது உள்ளது. இருப்பினும் மேலே கூறப்பட்ட தெய்வ வழிபாட்டுக்குகந்த பொருள்களை, இந்த முத்திரைகளிலுள்ள கல்வெட்டுக்களோடு ஒத்துப்பார்க்கும்போது சிந்துவெளி நாகரிகம் தமிழ் பேசிய மக்களால் உருவாக்கப் பட்டது என ஒருவாறு கூறலாம். இதை நிரூபிக்கும் இன்னுமொரு விஞ்ஞானக் கண்டு பிடிப்பும் உள்ளது. மனிதவியல் மூலம், மேற்கூறிய இடங்களில் கண்டுபிடிக்கப் பட்ட மனிதர்களின் எஞ்சிய பாகங்கள் மத்தியதரைக்கடல் பகுதியில் வசித்து வந்த இனத்தைச் சேர்ந்தவர்கள் என்று அவ்வியலில் வல்லுநர்கள் கூறுவர். இவர்களால் தான் பக்தி முறை வழிபாடும் நாடு முழுவதும் பரவியிருக்கக்கூடும். தமிழகத்து மக்களில் பெரும்பாலோரும் இந்த இனத்தைச் சேர்ந்தவர்கள் தாம். இதிலிருந்து, சிந்துவெளி நாகரிகத்தைச் சேர்ந்த தமிழ் இனத்தின் சந்ததியினரே தமிழகத்தில் பண்டைக்கால முதல் வசித்து வருகிறார்கள் எனலாம். அதனால் தமிழ்நாட்டில் பக்திமார்க்க வழிபாடு அதிக அளவில் பிரசாரத்தில் இருந்து வந்துள்ளது.

இனி, திருக்கோயிலின் அமைப்பைப்பற்றிப் பார்ப்போம். அதன் வரலாற்றையும் சிறிது ஆராய்வோம். கோயில் என்ற சொல் தெய்வத்தின் இருப்பிடத்தையும் அரண்மனையையும் குறிக்கும். இது சங்ககாலத்து நூல்கள் வாயிலாகவும் மற்றும் அதே காலத்தைச் சேர்ந்த வடமொழி நூல்களிலிருந்தும் தெரிய வருகிறது. அரண்மனை அரசன் வசிக்கவும், இருந்து ஆட்சி புரியவும் ஏற்படுத்தப்பட்ட அமைப்பு. இது அந்தந்த அரசனின் மகிமையையும், பொருளாதார வசதியையும் பொறுத்து அளவாலும், அணிகளாலும் அமைக்கப்படும். சகல உலகத்தையும் அருள்பாலிக்கும் தெய்வத்தின் இருப்பிடமும், அந்தத் தெய்வத்தைப் போற்றி வழிபடும் அரசர்கள் மற்றும் இதர மக்களின்

ஆசைக்கும் பொருளாதார வசதிக்கும் ஏற்ப அமைக்கப்படும். தமிழ்நாட்டைப் பொறுத்தவரையில் இங்கு பக்தி முறை வழிபாடு குறைந்தபட்சம் கி.பி 7ஆவது நூற்ருண்டிலிருந்து மிக அதிக அளவில் பரவியிருந்ததால் அக்காலத்திலும் அதற்குப் பிற்காலத்திலும், சிறிய பெரிய அளவுகளால் ஆன பல கோயில்கள் கட்டப்பட்டன. அவற்றில் பல இன்றும் இருக்கின்றன. இந்தக் காலகட்டங்களில் இந்நாட்டை ஆண்ட அரசர்கள் திருக்கோயில் கட்டடங்கள் கட்டப்பேருதவி செய்தனர். இக்கோயில் கட்டடங்களுக்கு அவர்கள் செய்த அளவு தமது அரண்மனைக்குச் செய்யவில்லை. இதனுல் அவ்வரசர்கள் வசித்த அரண்மனைகள் முழுவதாகவோ, அல்லது அவற்றின் இடிபாடுகளோ காணக் கிடைக்கவில்லை. இதிலிருந்து ஒட்டு மொத்தத் தமிழ் மக்களின் தெய்வபக்தியின் மாஹாத்ம்யத்தை நாம் அறிகிரேம்.

கோயில் கட்டிடங்கள் கட்டும் விதம் போன்ற விஷயங்களைக் கூறுமுன், மற்ற ஓரிரு விஷயங்களைப்பற்றிக் கூறுவோம். தமிழ்நாட்டில் வழிபடப்பட்டுவரும் தெய்வங்கள் சிலவற்றைப்பற்றி ஏற்கெனவே கூறியுள்ளோம். இங்குக் கூறப்போவது என்னவெனில் தமிழ்நாட்டின் ஒரு பிரதான தெய்வம் அம்பிகை. அதாவது சிந்துவெளி நாகரிகத்தில் வழிபட்டு வந்த அதே பெண் தெய்வத்தின் வளர்ச்சியடைந்த தெய்மாகும். இத்தெய்வமும் இதன் அம்சங்களான மாரியம்மன், கொப்புடையம்மன், காளியம்மன் போன்ற தெய்வங்களும் இன்று வரை நாடெங்கும் வழிபட்டு வருபவையாகும். இன்னுமொரு பிரதான தெய்வம் நம் நாட்டிற்கே உரித்தான குன்றுதோறுமிருந்து அருள்பாலிக்கும் முருகன் ஆகும். இத் தெய்வத்தின் மாஹாத்மியத்தை நக்கீரரின் திருமுருகாற்றுப்படை என்ற தெய்வீக நூலின் வாயிலாக அறிய முடிகிறது. இங்கு, தெய்வழிபாட்டில் தமிழ்நாட்டின் ஒரு சிறப்பு வழக்கைக் கூறவேண்டியுள்ளது.நாட்டை ஐந்து திணைகளாகப் பிரித்து ஒவ்வொன்றிலும் முருகன், திருமால் போன்ற ஒரு தெய்வமிருந்து அருள் பாலிக்கிறது என்பது சங்க நூல்களிலிருந்து அறியப்படும் விஷயமாகும்.

இந்த பக்தி வழி தெய்வழிபாட்டில் கோயில் போன்ற வெளிப்புற அமைப்புகளே இல்லாது ஒரு மஹான் தமக்குள்ளேயே பரம்பொருளை இருக்கச் செய்து வழிபடுவதாகும். இம்முறையில் வழிபடுவோர், ஜீவன் முக்தர்கள் எனப்படுவர். இவர்களது உடலே தெய்வத்தின் கோயில் என்றும் (தேஹோ தேவாயப்ரோக்த:) அவர்களது உள்ளத்தின் உறையும் சக்தியே பரம்பொருள் என்றும் இவர்கள் உணர்ந்துவழிபடுவர். இதற்கு உதாரணமாக பூசலார் நாயனுரைக் கூறலாம். இவரையும் இவர் வழிபட்ட முறையையும் பற்றிக் குறிக்கும் இவர் காலத்தைச் சேர்ந்த இராஜசிம்ஹவர்மன் என்ற பல்லவ அரசன் காஞ்சிபுரத்தில் தான் கட்டுவித்த கைலாசநாதர் கோயிலில் அவனுல் பொறிக்க ஏற்பாடு செய்யப்பட்ட கல்வெட்டு ஒன்றிலிருந்து தெரிய வருகிறது. இம்மாதிரி வழிபாட்டை நடைமுறையில் கையாண்ட சமீபகாலத்து மஹான் வள்ளலார் ஆவார். இவர் வழிபட்டது அருட்பெருஞ்சோதி என்ற ஜோதிஸ்வரூபமான சிவபெருமான்.

இனி கோயிலுடையவும் அதில் பிரதிஷ்டை செய்யப்பட்ட தெய்வத்தையும், அதன் வழிபாட்டிற்கென ஏற்படுத்தப்பட்ட பூசை விதிகளையும் இவற்றிற்கெல்லாம் காரணமான ஆசார்யர்கள், அவர்களுக்கு உதவும் ஸ்தபதிகள், சில்பிகள், அறிஞர்கள் கைவினைஞர்கள் போன்ற விஷயங்களைப் பற்றிக் கூறுவோம்.

சுமார் 2000 ஆண்டுகளுக்கு முன்பு தமிழ் மக்கள் கோயிலாகக் கருதியது தங்கள் ஊரின் ஒரு பொது இடத்தில் அமைக்கப்பட்ட ஒரு மேடை மீது ஒரு சிறிய பீடத்தை ஏற்படுத்தி அதில் வேல், சூலம் அல்லது வெறும் கல்துண்டு ஒன்றை வைத்து, அதைத் தெய்வமாக வழிபட்டிருக்கலாம் என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுவர். சற்றுப் பிற்பட்ட காலத்தில் கோட்டம் என்ற ஒரு கட்டடம் கட்டி அதில் தெய்வத்தைப் பிரதிஷ்ட்டை செய்து வழிபட்டதாகச் சிலப்பதிகாரம் போன்ற நூல்கள் வாயிலாக அறிய முடிகிறது.

கி.பி. சுமார் 4ஆவது நூற்றாண்டில் தேவகுலம் என்ற பெயரில் கோயில் அமைக்கப்பட்டதாகப் பொன்னமராவதிக்கு அருகில் உள்ள பூலாங்குறிச்சி என்ற கிராமத்தில் அகப்பட்ட ஒரு கல்வெட்டு மூலம் நாம் அறிகிறோம். இந்தக் கல்வெட்டு, கோயில் வழிபாட்டின் வரலாற்றுக்கு ஒரு சிறந்த சான்ருகும். இந்தக் குறிப்பிலிருந்து தெய்வ வழிபாட்டுக்குத் தேவையான சாதனங்கள் அக்காலத்தில் இருந்தன என்பதை ஊகிக்கலாம். இருப்பினும் அக்காலத்தில் கட்டப்பட்ட கோயிலோ அல்லது அப்படிப்பட்ட கட்டடங்களின் இடிபாடுகளோ காணக்கிடைக்கவில்லை.

கி.பி. 5ஆவது, 6ஆவது நூற்ருண்டுகளில் தமிழ்நாடு, வடபுறத்திலிருந்து வந்த களப்பிரர் என்ற கூட்டத்தினரால் ஆக்கிரமிக்கப்பட்டு இருந்தது. இவர்கள் சமணம் பௌத்தம் போன்ற புறச்சமயங்களைச் சார்ந்தவர்கள். ஆதலால் இங்கு அக்காலகட்டத்தில் கட்டப்பட்டிருந்த அகச் சமயக் கோயில்கள் அழிக்கப்பட்டிருக்கலாம் என ஆராய்ச்சியாளர் கருதுவர். புறச்சமயப்பற்றுள்ள களப்பிரர்களை கி.பி. 6ஆவது நூற்ருண்டின் இறுதியில் தமிழ்நாட்டை ஆண்ட பாண்டிய பல்லவ அரசர்கள் போரில் வென்று இங்கிருந்து விரட்டி அடித்தனர். இருப்பினும் இவர்களால் இந்நாட்டில் பரப்பப்பட்ட புறச்சமயங்கள் வெகுவாகத் தமிழ் மக்களைப் பாதித்தன. இந்தப்பாதிப்பிலிருந்து மக்களை மாற்றவும் அகச்சமயங்களை மறுபடியும் நாட்டில் வளர விடவும் அக்காலத்திலிருந்தே மஹான்களான பலநாயன்மார்களும் ஆழ்வார்களும் இங்கு தோன்றினர். இவர்களில் காரைக்கால் அம்மையார், கண்ணப்பநாயனர், முதல் மூன்று ஆழ்வார்கள் முதலிடத்தைப் பெறுவர்.

கிபி 7ஆவது நூற்ருண்டிலிருந்து நம் பாரத நாட்டு சநாதன சமயங்கள் மறுபடியும் தமிழகத்தில் புத்துயிர் பெற்றுத்திகழ பல்லவர்கள், பாண்டியர்கள், சோழர்கள் போன்ற அரசவம்சத்தினர் பெரிதும் பாடுபட்டனர். பல்லவர், சோழர்கள் ஆண்ட கிபி 600 முதல் கிபி 1350 வரையான காலத்தில்தான் இந்நாட்டில் மஹான்களான நாயன்மார்கள், ஆழ்வார்கள் தோன்றிப் புறச்சமயங்களைத் தமது இனிய, சக்திவாய்ந்த, மனத்தைப்பண்படுத்தும் செந்தமிழிலான தெய்வீகப் பாடல்கள் மூலம், வன்மையாகக் கண்டித்தனர். சைவ சமயத்தைச் சார்ந்த பாடல்கள் தொகுப்பு திருமுறை என்றும், வைணவ சமயத்தைச் சார்ந்த பாடல்கள் தொகுப்பு திவ்யபிரபந்தங்கள் என்றும் பிற்காலத்தில் பெயர் பெற்றன. இம்மஹான்கள், தாம் வசித்த காலத்தில் நாட்டை ஆண்ட அரசர்களைத் தெய்வ வழிபாட்டையும், சமயப் பிரசாரத்தையும் மக்களிடையே பரப்பப் பெரிதும் ஊக்குவித்தனர்.

தெய்வ வழிபாட்டை மக்களிடையே வளர்க்கக் கூடிய முக்கியமான வழி, அவர்களை ஈர்க்கும் அதாவது ஆகர்ஷிக்கும் கோயில்களை நிர்மாணிப்பது, அவற்றில் தெய்வசாந்நித்யத்தை ஏற்படுத்தி, பூசை செய்வது, திருவிழா எடுப்பது போன்றவற்றை

ஏற்படுத்துவதாகும். இந்த வழியை ஒவ்வொரு ஊரிலும், நகரத்திலும், காடு, மலை போன்ற இடத்திலும் அனுசரிக்க வேண்டும். இப்படிச் செய்வதால் நாட்டு மக்கள்

அனைவரும் இந்தச் சமயக் கோட்பாடுகளைத் தம் வாழ்க்கையில் மட்டுமின்றி, தம் பிற்காலச் சந்ததியினரின் வாழ்க்கையிலும் அனுஷ்ட்டிக்கச் செய்ய ஏதுவாகும். உதாரணமாக இங்கு ஒன்று கூறவேண்டும். பௌத்த சமயம் கி.மு.6ஆவது நூற்றுண்டில் ஆரம்பிக்கப்பட்டது. ஆனுல் இதன் வளர்ச்சியோ, மௌரிய வம்சத்து கி.மு. 3ஆவது நூற்றுண்டில் ஆண்ட அசோக சக்கரவர்த்தி, பிற்பாடு கி.பி. 1ஆவது – 2ஆவது நூற்றுண்டுகளைச் சேர்ந்த குஷாண வம்சத்து கனிஷ்கர் மற்றும் ஆந்திர சாதவாஹன வம்சத்து சாதகர்ணி போன்ற அரசர்கள் இந்தியாவில் பல பகுதிகளில் பல நகரங்களிலும் ஊர்களிலும் பெருமளவிலான பௌத்த ஸ்தூபங்கள், விஹாரங்கள் போன்றவற்றை அமைத்து மக்களிடையே அந்தச் சமயத்தைப் பெருமளவில் பரப்பினார்கள். இவர்களுக்கு உதவியாக அந்தந்தக்கால கட்டடங்களில் தோன்றிய மொழி, அறிவியல் விஞ்ஞானம், சமயம் போன்றவற்றில் நிகரற்ற ஞானம் பெற்ற, அஸ்வகோஷர், நாகார்ஜுனர் போன்ற ஆசார்யர்கள் இயற்றிய நூல்களும் இருந்தன. இதுதவிர சாஞ்சி, மற்றும் அமராவதி போன்ற இடங்களில் பெரிய அளவும், வனப்பும் மிக்க ஸ்தூபங்கள், அஜந்தா, எல்லோரா, கன்ஹேரி போன்ற மலை வனப்பிரதேசங்களில் குடைவிக்கப்பட்ட விஹாரங்கள் போன்றவற்றைச் செய்வதற்குத் தேவையான அறிவாற்றல், செயல்திறன், மற்றும் பக்தி ஆகியவை நிரம்பப் பெற்ற ஸ்தபதிகளும் அக்காலத்தில் இருந்திருக்கிறுர்கள். இவ்வளவு பெரிய அளவில் பேரரசர்கள் மற்றும் தெய்வீக சக்தி கொண்ட ஆசார்யார்கள் எடுத்த முயற்சியால் பரப்பப்பட்ட பௌத்தம் சமணம் போன்ற சமயங்கள் நம் நாட்டில் சுமார் 1000 ஆண்டுகாலம் வேரூன்றி இருந்தன. இப்படியான பாதிப்பில் கி.பி 6ஆவது நூற்றுண்டுவரை உழன்ற தமிழ் மக்களை அதிலிருந்து மீட்டு, மறுபடியும் சநாதன அகச்சமயங்களில் ஈடுபடுத்தவே கி.பி. சுமார் 600ஆவது ஆண்டு முதல் மேற்கூறிய அளவிலான கோயில்கள் ஏற்படுத்தத் தெய்வ வழிபாட்டு முறைகள் வகுக்கப்பட்டன.

இந்தச் சந்தர்ப்பத்தில், கோயில்கள் எத்தனை விதம், எங்கெங்கே யாரால், எப்படியெப்படி கட்டப்படவேண்டும் என்று ஆகமங்களில், மற்றும் வாஸ்து, சிற்பசாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளன என்பதைச் சிறிதளவு இங்குப் பார்ப்போம். கோயில்களை யார்கட்டுவிக்கிறுர்களோ அவர்கள் யஜமானர் எனப்படுவர். இவர்கள் பழைய காலத்து வர்ணமுறைப்படி, அரசர், அந்தணர், வைஸ்யர், மற்றும் உழைப்போர் யாராகவும் இருக்கலாம். இவர்களால் கட்டுவிக்கப்பட்ட கோயில்கள் அளவில் அவரவர் பொருளாதார வசதிக்குட்பட்டதாக இருக்கும். இருப்பினும் கோயில் அமைப்பின் எல்லாவித லக்ஷணங்களையும் கொண்டதாக இவை இருக்கும். ரிஷிகள், மற்றும் சிறு தேவதைகளால், மலை உச்சி, நதிக்கரை, சமுத்திரக்கரை, மற்றும் புனிதமான இடங்களில் கட்டப்பட்ட கோயில்கள் சித்தாலயங்கள் என்றும், மனிதர்களால், கிராமம் நகரம் முதலியவற்றில் கட்டப்பட்ட கோயில்கள் அசித்தாலயங்கள் என்றும் கூறப்படும். கோயில்களைக் கட்டுவிக்க வேண்டிய ஆகம, சாஸ்திரங்களை அறிந்தவரும், சாந்தம், நேர்மை உடையவரும், பாபம், கர்வம், வியாதி முதலியவை இல்லாத்தன்மையுடையவரும் ஆசார்யராவார். இதே போன்ற தகுதிகளும், நிர்மாணம் செய்வதில் நிபுணரும், வாஸ்து, சிற்ப சாஸ்த்திரங்களை நன்கு அறிந்தவருமான ஸ்தபதி, ஆசார்யருக்கு உதவியாக இருக்கவேண்டும். ஸ்தபதி,

அல்லது சூத்ரதாரர் தக்ஷன், வர்ணகன் போன்றவர்களை உதவிக்காக வைத்துக்கொள்வார். இந்த செயல்பாட்டு முறையையும், ஆசார்யர் அறிந்திருக்கவேண்டும். ஏனெனில் கோயில் வழிபாட்டு முறையில் பிரதான மான ஸ்தானத்தைப் பெற்ற ஆசார்யர் கோயில் நிர்மாணத்திலும் தவறுகள் இல்லாதிருக்குமாறு பார்த்துக் கொள்வார். கோயில் சம்பந்தப்பட்ட எல்லா விஷயங்களிலும் தேர்ச்சி பெற்றவரே ஆசார்யர் ஆக முடியும். இவ்விஷயங்களில் முக்கியமானவை, பூபரீக்ஷா, வாஸ்து பூஜா, பிரவேச பலி, கர்ஷணவிதி, பாலாலயகல்பதம், விமான பேதம், கர்ப்ப விந்யாஸம், உபபீடாதிஷ்ட்டானவிதி, சிகரநிர்மாண பிரகாரம், பிரதமேஷ்டகாஸ்தாபனவிதி, மூர்த்தேஷ்டகாஸ்தாபனவிதி, விமானதேவதா கல்பனவிதி, பிரதிமாலக்ஷணம், பிராகார விதானவிதி, பரிவாரதேவதா கல்பனவிதி, பிரதிஷ்ட்டா விதி, ஆகியவையாகும். அமைக்கப்பட்ட கோயிலில் தெய்வசாந்நித்யத்தை ஏற்படுத்தக்கூடிய மந்திர தந்திரங்களை ஆசார்யர்கள் அறிவர். இதைத்தவிர மேலே கூறப்பட்ட அத்தனை விஷயங்களிலும் ஸ்தபதி தேர்ச்சியும் அனுபவமும் பெற்றிருக்கவேண்டும் என்று மேலே கூறப்பட்ட நூல்களில் விதிக்கப்பட்டுள்ளது. விதிகளைப்பின்பற்றி நிர்மாணிக்கப்பட்ட கோயில்களில் வழிபடுவதால்தான் மக்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் நல்ல பயன்கள் கிடைக்கும்.

இது தவிர கோயில்கள் அமைக்க உபயோகப்படுத்தும் பொருள்களைப் பொறுத்து அவற்றின் குணமும், அவற்ருல் ஏற்படும் பயனும் மாறுபடும் என்றும் கூறப்பட்டுள்ளன. கற்களால் கட்டப்பட்டவை உத்தமவகையாகும், செங்கல் மற்றும் காரையால் ஆக்கப்பட்டவை மத்தியமம் ஆகும். கல், செங்கல், மரம், உலோகம் முதலியவற்றால் அமைக்கப்பட்டவை அதம வகையைச் சேர்ந்தவை. அமைப்பைப் பொறுத்து கோயில்கள் பலவகைப்படும். உதாரணமாக மண்டபக் கோயில், மாடக் கோயில் (தூங்கானை மாடம்), ஆலக் கோயில் போன்றவை இவை. நம் நாட்டில் கோயில்களின் கர்ப்பக்கிருஹத்தின் மேல் எழுதப்பட்ட கட்டிடத்தை விமானம் என்பர். உபானாதி ஸ்தூபிபர்யந்தம் விமானமித்யுச்யதே). இந்த விமானங்கள் பொதுவாக ஆறு பாகங்கள் கொண்டவை. ஆனுல் மாமல்லபுரத்துப் பஞ்சபாண்டவர் கோயில்களில் திரௌபதி கோயில் நான்கு பாகங்கள் கொண்டதால் சதுரங்க விமானம் என்றும், அதே இடத்தில் உள்ள தர்மராஜரதம், கர்ப்பக்கிருஹத்தின் மேல் இரண்டு அதிகமான தளங்களைப் பெற்றுள்ளதால் இதை அஷ்டாங்க விமானம் என்றும் அழைப்பர். இதுதவிர, ஒரு கூரை கொண்ட கோயில்கள் ஏகதள விமானம் என்றும், அதிகமான தளங்கள் கொண்டவற்றை, த்விதள, த்ரிதளம் கொண்ட கோயில்கள் என்றும் அழைக்கப்படுகின்றன. பதின்மூன்று தளங்கள் கொண்ட தஞ்சைப் பெருவுடையார் (பிரஹதீசுவரர்) கோயில் மேரு என்றழைக்கப்படுகிறது. கிபி. சுமார் 1000ஆவது ஆண்டு வரை தமிழகத்தில் கட்டப்பட்ட கோயில்கள் ஒரு பிராகாரம் கொண்டவை. இவற்றில் பொதுவாக ஒரு பிரதான வாயிலும், இதன் மேல் ஒரு சிறிய அளவிலான கோபுரமும் கட்டப்பட்டுள்ளன. இக்கோயில்களில் விமானம் உயரமாகவும் கோபுரம் சிறியதாகவும் இருக்கும். இக்காலத்திற்குப் பிறகு கோயில்களைச் சுற்றி 3, 5, 7 என்ற எண்ணிக்கையில் பிரகாரங்களும் அவற்றின் வாயில்களின் மேல் பல கோபுரங்களும் கட்டப்பட்டன. இவை 3 ஆவரண, பஞ்சாவரண, சப்தாவரணக் கோயில்கள் எனப்படும். உதாரணமாக, சிதம்பரம், திருவண்ணுமலை, ஸ்ரீரங்கம் போன்ற இடங்களில் உள்ள கோயில்களைக் கூறலாம். இக்கோயில்களில் மூல ஸ்தானத்து விமானம் சிறியதாகவும்,

பிரகாரங்களின் வாயிலின் மேல் கட்டப்பட்ட கோபுரங்கள் பெரிய அளவில் உயரமாகவும் கட்டப்பட்டுள்ளன. உதாரணமாக, திருவண்ணுமலை, திருவானைக்கா, மதுரை, ஸ்ரீவில்லிப்புத்தூர் போன்ற ஊர்களில் உள்ள கோபுரங்களைக் கூறலாம். இவை காலப்போக்கில் 13ஆவது நூற்றுண்டுக்குப்பின் அமைக்கப்பட்டவை. இந்த பல பிராகாரங்கள் கொண்ட கோயில்களில் முக்கியமான அர்த்தமண்டபம் மஹாமண்டபம் போன்றவற்றைத் தவிர, ஸ்நபந மண்டபம் நிருத்தமண்டபம், நூற்றுக்கால் மண்டபம், ஆயிரக்கால் மண்டபம் போன்றகட்டிடங்களும் கட்டப்பட்டன. பிராகாரங்களை கிபி 17ஆவது நூற்றுண்டுவாக்கில் மூடலாயினர். இதற்கு ஒரு அசாதாரண உதாரணமாக இராமேஸ்வரம் கோயிலின் மூன்றும் பிராகாரம் திகழ்கிறது.

மேல் குறிப்பிட்ட கோயில் கட்டும் முறை மற்றும் இதர விஷயங்களைப் பற்றிய விவரங்களை பல சைவ ஆகமங்கள் முக்கியமாக காரணம் காமிகம், போன்றவற்றிலும், வைணவ ஆகமங்களில் வைகானஸமரீசிஸஹிதை, பாஞ்சராத்ர பாத்மஸம்ஹிதை ஆகியவற்றில் காணலாம். ஆனுல் இந்நூல்களில் கோயில் ஆராதனை பற்றிய விஷயங்களே வெகுவாகக் கூறப்பட்டுள்ளன. கட்டிடக்கலை, சிற்பம், ஓவியம் போன்றவற்றைப் பற்றி மிகக் குறைவாகக் கூறப்பட்டுள்ளது. கோயிலில் பிரதிஷ்டை செய்யப்படும் தெய்வங்களின் இலக்கணங்களைக் கொண்ட த்யானஸ்லோகங்கள் இங்குக் கொடுக்கப்பட்டுள்ளன.

கட்டிடம் கட்டும் விதம், அதை அலங்கரிக்கும் வேலைகள், அதற்கு வேண்டிய பொருட்கள் போன்ற சகலமான விஷயங்களைப் பற்றியும் மானசார சில்பசாஸ்த்திரம், மயமதம், காஸ்யபசில்பம், விமானார்ச்சன கல்பம், சில்ப ரத்னம், மற்றும் தந்திரசமுச்சயம் போன்ற பல நூல்களில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

தமிழ்நாட்டில் உள்ள ஆயிரக்கணக்கான கோயில்களில், சுமார் 250 கோயில்கள் நாயன்மார்களால் பாடப்பட்டவையாகும். அதாவது திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர் போன்ற நாயன்மார்கள் அந்தக் கோயிலுக்குச் சென்று வழிபட்டோ, அல்லது அவற்றைப்பற்றித் தம் பாடல்களில் கூறியோ இருத்தல் வேண்டும். இவற்றில் பாண்டியநாட்டில் பதினான்கு ஊர்களில் உள்ள கோயில்கள் அடங்கும். தவிர, இம்மாதிரிக் கோயில்களில் சில, ஓரிரு தொகுப்புகளாகக் குறிக்கப்பட்டுள்ளன. உதாரணமாக சப்த விடங்கஸ்தலங்கள், சப்தஸ்தான க்ஷேத்திரங்கள் பஞ்சபூத க்ஷேத்திரங்கள் என்பனவற்றைக் கூறலாம். பொதுவாக ஒவ்வொரு கோயிலும் ஒரு தனித்தன்மையும், பெருமையும் ஐதீகமும் பெற்றதாகும். தொகுப்புகளில் சேர்க்கப்பட்டுள்ள ஒவ்வொரு கோயிலும் சில தெய்வீக நுட்பங்களைத் தன்னகத்தே கொண்டதாகும்.

மேலே கூறியதைத்தவிர, எந்தத் தெய்வத்தின் கோயில் ஊரில் எந்தத் திசையில் இருக்கவேண்டும் என்றும் மேலே கூறப்பட்ட நூல்களில் சொல்லப் பட்டுள்ளன. பொதுவாக விஷ்ணு கோயில் ஊர்மத்தியிலும், சிவன்கோயில் ஊரின் வடகிழக்கு அதாவது ஈசான்யதிக்கிலும், சப்தமாதாக்கள் கோயில் ஊரின் வடக்கிலும், சாஸ்தா கோயில் ஊரின் வெளிப்புறத்திலும் கட்டப்பட வேண்டும்.

இப்படிப்பட்ட கோயில்களில் சிதம்பரம் நடராஜர் கோயில் போன்றவை. சோழவம்ச அரசர்கள் போன்றவர்கள் தாம் பட்டம் கட்டிக் கொள்வதற்கு உபயோகப்படுத்தப் பட்டன.

கி.பி. சுமார் 8ஆவது நூற்ருண்டிலிருந்து கோயில்களின் பலபாகங்களில்; முக்கியமாக அவற்றின் மேல் அந்தந்த ஊர் அல்லது நாட்டில் நடைபெற்ற பல அரிய விஷயங்களை உள்ளடக்கிய கல்வெட்டுக்கள் பொறிக்கப் பட்டன. இவற்றிலிருந்து அந்தப் பிராந்தியத்தின் பல காலகட்டங்களில் ஏற்பட்ட அரசியல் மாற்றம், பொருளாதார வளர்ச்சி, சமுதாய விவகாரங்கள் போன்ற விஷயங்கள் அறியப்படுகின்றன. பல நூற்ருண்டுகள் ஒரு ஊரில் உள்ள கோயிலே அந்த ஊரின் நிர்வாகத்தையும் பொறுப்பேற்று நடத்தி வந்ததாக இக்கல்வெட்டுக்கள் மூலம் அறிய முடிகிறது. இந்த நிர்வாகத்தை ஊர்மக்கள் அடங்கிய "ஊர்" என்ற அமைப்போ, அல்லது சிறந்த அறிஞர்கள் அடங்கிய "ஸபை" என்ற அமைப்போ நல்ல முறையில் நீண்டகாலம் நடத்தி வந்ததாகவும் தெரிய வருகிறது. பலவிவகாரங்கள் ஒரு கோயிலில் பிரதிஷ்டை செய்யப்பட்ட தெய்வத்தின் பெயரிலேயே நடைபெற்றதாகவும் சில கல் வெட்டுக்களின் மூலம் அறிகிருேம்.

இப்படியாகத் தமிழகத்தின் கோயில்கள் சமயத்தை வளர்க்கவும், சமுதாயத்தின் மேம்பாட்டுக்கும் தொன்று தொட்டு உபயோகமாக இருந்துவந்துள்ளன. இவற்றைப் பல தொகுப்புகளாக அமைத்து கி.பி. 12வது 13வது நூற்ருண்டுகள் முதல், சில சைவ, வைணவ மடங்களின் பொறுப்பில் விடப்பட்டு, அத்தொகுப்பிலுள்ள கோயில்கள் பராமரிக்கப்பட்டு வந்துள்ளன. உதாரணமாக திருப்பனந்தாள், தருமபுரம், திருவாவடுதுறை, திருவண்ணுமலை, மதுரை, குன்றக்குடி திருப்பாதிரிப் புலியூர் போன்ற ஊர்களில் உள்ள சைவ ஆதீனங்களையும், ஸ்ரீரங்கத்தில் உள்ள ஆண்டவன் மடம் போன்ற வைணவ ஆதீனங்களையும் கூறலாம். இவற்றின் அதிஷ்டானாதிபதிகள், வெகுசிரத்தையுடனும், பக்தியுடனும் அவர்கள் ஆதீனத்திலுள்ள கோயில்களைப் பராமரித்து வந்துள்ளதோடு அக்கோயில்கள் உள்ள ஊர்களைச் சுற்றி இருக்கும் பிராந்தியத்தில் உள்ள சமுதாயத்தில் தெய்வவழிபாட்டையும், நற்பண்பையும் இன்று வரை காத்து போஷித்துள்ளனர். இப்படிப் பட்ட அரிய தெய்வீகச் செயல்களில் ஈடுபட்டுப் போந்த முற்கால மஹான்களுக்கும் தற்சமயம் பரிபாலித்துவரும் மஹான்களுக்கும் நாம் வணங்கி நன்றி கூறக்கடமைப் பட்டுள்ளோம். இனிமேலும் இம்மஹான்கள் இவ்விதமே தெய்வசிந்தனையும், வழிபாட் டையும் சமுதாயத்தில் மேலும் மேலும் அபிவிருத்தி செய்வார்கள் என்பதில் கொஞ்சமும் ஐயமில்லை.

இந்த சந்தர்ப்பத்தில் சமீப காலத்தில் தமிழ்ச் சமுதாயத்தில் ஏற்பட்ட சிந்தனை மாறுதல்களால் தெய்வத்தைப்பற்றியும், தெய்வழிபாட்டைப்பற்றியும் மக்களில் பெரும்பாலோர், முக்கியமாக பல இளைஞர்கள் – மத்தியில் ஏற்பட்டுள்ள ஐயப்பாட்டினுல், கோயில்களின் மதிப்பும், சிறப்பும், பெருமையும், ஒரளவு பாதிக்கப்பட்டிருப்பதை நினைவுகூர வேண்டியுள்ளது. பொருளாதாரம், அரசியல், ஆகிய இவற்றில் மக்கள் பெரும்பாலும் ஈடுபடுத்தப்பட்டதால், தெய்வசம்பந்தத்தால் ஏற்படும் நற்சிந்தனைகள், அறவழிநடத்தல், அமைதி, போன்ற பண்புகள் குறைந்து போயிருப்பதாகத் தெரிகிறது. இதனுல், பழம்பெரும் கோயில்கள் வியாபாரஸ்தலம் போல ஆக்கப்பட்டு, அங்குப் பல வேண்டத்தகாத, ஏன் பார்க்கக் கூச்சம் ஏற்படுத்தும் செயல்கள் செய்ய அனுமதி வழங்கப்பட்டுள்ளது. மக்களின் நலத்திலும் தெய்வ நம்பிக்கை வளர்ச்சியிலும் அக்கறை கொண்ட பெரியோர்கள் மனதைப்

பெரிதும் பாதிக்கிறது. இந்த விஷயத்தை இங்கு கூடி அமர்ந்து திருக்கோயிலைப்பற்றிய விஷயங்களை ஆராய்ந்து வரும் அறிஞர்கள் கவனித்து, கோயில் சம்பந்தப்பட்ட இந்தச் சூழ்நிலையை மாற்ற ஆவன செய்யவேண்டியது அவசியம், மற்றும் அவசரமும் கூட. இது தவிர, நம் நாட்டில் உள்ள பல பெரிய கோயில்களின் பல பகுதிகள், முதலில் அவை எதற்காக ஏற்பட்டனவோ அவற்றிற் கல்லாமல் வேறு காரியங்களுக்கு உபயோகப்படுத்திவருவதும் கவலைக்குரியதாகிறது. உதாரணமாக திருவண்ணமலை கோயில் ஆயிரக்கால் மண்டபம் நெல்கிடங்காக இருப்பதைக் கூறலாம். தவிர, பிற்காலப்பாண்டியர்கள் காலத்தில் கட்டப்பட்ட பல கோயில்கள் மதுரை, பழைய இராமநாதபுரம், மற்றும் பழைய திருநெல்வேலி மாவட்டங்களில் இருக்கின்றன. இவை, அக்காலத்துக்கட்டிடக்கலை, சிற்பக்கலை, ஓவியம் போன்ற கலைகளுக்கு இருப்பிடமாக உள்ளன. இவற்றில் பல அழகிய நுட்பமான, கட்டிடவேலைப்பாடுகள், சிற்பச் சிறப்புகள் காணப்படுகின்றன. இக்கோயில்கள் தற்சமயம் கவனிப்பாரற்று இருக்கின்றன. இப்பிராந்தியத்திலுள்ள பல்கலைக்கழகங்களோ, அல்லது மற்ற தனியார் ஸ்தாபனங்களோ, இப்படிப்பட்ட கோயில்களைப்பற்றி ஆராய்ந்து விஞ்ஞான, வரலாறு பூர்வமான முழுமையான நூல் வடிவில் பிரசுரம் செய்யவேண்டுமெனக் கூறிக்கொள்ள விரும்புகிறேன். தவிர, இக்கோயில்கள் பழுதடைந்திருந்தால் அதையும் சரிசெய்வதற்காக வேண்டியதையும் அரசு மூலமோ, அல்லது பெரும் ஆதீனங்களின் உதவியாலோ செய்வது நல்லதாகும். பழுது பார்ப்பதின் மூலம் கோயில்கள் பாதுகாக்கப்படும். அவற்றைப் பற்றிய ஆராய்ச்சி நூல்கள் வெளியிடப்படுவதால் இப்பிராந்தியத்தில் அந்தப் பழைய காலத்தில் மக்களிடையே எவ்விதக் கலையுணர்வு இருந்தது அக்காலத்துக்கலைஞர்கள் எவ்விதம் தெய்வீகச் செயல்களில் ஈடுபட்டு வியப்புமிக்க கோயில்களை நிர்மாணித்தனர் என்பதை இத்துறையில் ஈடுபட்டுள்ள உலகில் உள்ள அறிஞர்கள் அறியப்படுத்த உதவும்.

கடைசியாக ஒரு முறை இந்தச் சிறந்தகருத்தரங்கில் என்னைப் பங்கேற்க வாய்ப்பு அமைத்துத் தந்த எல்லாப் பெரியோர்களுக்கும் எனது நன்றியைக் கூறி அமர்கிறேன்.



# ஆத்தியேஷ்டிகா விதி

## (திருக்கோயில் அடிக்கல் நாட்டுதல்)

சிவஸ்ரீ கே. இராசப்பா சிவாசாரியார், காஞ்சிபுரம் 2

சைவ உலகிற்கே பெருமை தேடித்தர இருக்கும் இக்கருத்தரங்கில் பல அறிஞர்கள் முன்னிலையில் சிவாகமத்திற்கும் சில்ப சாஸ்திரத்திற்கும் புத்துயிர் அளிக்க அடிக்கல் நாட்டியதாக இருக்கும் என எண்ணி இறைவனை வேண்டி எனக்களிக்கப் பட்ட இப்பணியை என் சிற்றறிவுக்கு எட்டிய நிலையில் சிவாகமங்களை ஆராய்ந்து கூற முயலுகிறேன்.

வாழ்க்கைக்குத் தேவையான எல்லா விஷயங்களும் நிறைந்துள்ள சிவாகமங்களில், மனிதன் வசிப்பதற்கும் ஆலயங்களில் இறைவன் பூரண ஸாந்நித்யத்துடன் விளங்குவதற்குமாக ஆலயம், பவனம், வீடுகள் கட்டும் நிலையில், 'அடிக்கல்' போடும் முறையும் காலமும், அளவும் கூடி அந்த இடத்தை உலகம் உள்ளவும் ஜீவன் உள்ளதாகச் செய்யும் என்பதில் ஐயமில்லை. காலத்தின் கோலத்தினுல் யார்யாரையோ கொண்டு சாஸ்திரத்தின் அடிப்படையற்ற முறையில் செய்யும் காரியங்கள் பெருகி விட்டன. அதன் விளைவுகளை நாம் பார்த்துக் கொண்டுதானிருக்கிறோம். நான் பார்த்த ஆகமங்களில், காமிகம், காரணம், சுப்ரபேதம், குமாரதந்திரம், மற்றும் ரௌரவம், அஜிதம், தீப்தம் முதலியவைகளிலும் இந்த 'ஆத்யேஷ்டிகாவிதி' ஏறக்குறைய ஒரே முறையில் இருப்பினும் பூர்வ காரணாகமத்தில் உள்ள ஆத்யேஷ்டிகா விதிப்படலம் 'சிவாஸங்கிரஹணம்', 'பூபரிக்ரஹவிதி' 'வாஸ்து பதவிந்யாசம்; "மண்பரிசோதனை" முதலிய யாவுமே கூறிப் பிறகு ஆத்யேஷ்டிகா விதியின் முக்கியமான பகுதியைக் கூறுகிறது.

மற்றைய ஆகமங்களில் ஆத்யேஷ்டிகாவிதி படலத்தில் அதை மாத்திரமே கூறியுள்ளது. பொதுவாக எங்குமே செங்கற்களை வைத்துத்தான் இந்தப் பூஜை செய்து அடிக்கல் நாட்டுகிறுர்கள். ஆனுல் விமானம் அல்லது கட்டடம் கருங்கற்களாக இருப்பின் இந்த அஸ்திவாரக் கல்லும் கருங்கல்லாகவே இருக்க வேண்டும் என்றும் கோபுரம், மாளிகை செங்கற்களாயின் செங்கற்களையே வைத்துப் பூஜித்து ஆரம்பிக்க வேண்டும் என்றும் கூறுகிறது. இதற்கு உபயோகப்படும் கருங்கல்லிற்கும் செங்கலுக்கும் அளவில் கூட உத்தம, மத்யம, அதம அளவுகள் வித்தியாசமாகக் கூறப்பட்டுள்ளன. எந்த இடத்தில் ஆலயம் அல்லது மாளிகை கட்டவேண்டுமோ அந்த இடத்தில் ஒரு முழும் ஆழம் மண்ணைத் தோண்டி அதே மண்ணுல் அப்பள்ளத்தை நிரப்பும்போது, அம்மண் மிகுதிப்பட்டால் உத்தமம் என்றும், சமமாயின் மத்யமம் என்றும், குறைந்தால் அதமம் என்றும் அந்தப் பூமியின் லக்ஷணம் கூறப்படுகிறது.

'கபில' நிறமுள்ள எருதுகளால் யாகங்களுக்கு உபயோகப்படக்கூடிய புனித மரங்களாலான ஏர்க்கால்களைப்பூட்டி, ஆச்சாரியர் புண்யாஹவாசநம் செய்த பூமியை உழச் செய்தல் வேண்டும். ஆச்சாரியர் நேத்ர மந்திரத்தைக் கூறிக்கொண்டு அப்பூமியில் எள், கடுகு இவைகளை விதைத்தல் வேண்டும். மூன்று இரவில் இவை முளை விட்டால் உத்தம பூமி எனவும், ஐந்து ராத்ரியில் முளைத்தால் மத்யமம் என்றும், ஏழு

ராத்திரியில் முளைத்தால் அதமம் என்றும் கூறப்பட்டுள்ளது. பிறகு அந்த இடம் ஆலயம் நிர்ணயிக்க என்றால், அதன் மையத்தில் இருந்து பூர்வமோ, உத்தரமோ, ஈசாநமோ ஆத்யபாலாலயம் கட்டிப் பூஜித்துப், பிறகு மூலாலயம் கட்டவேண்டும் என்ற விதிகள் எல்லாம் இந்த ஆத்யேஷ்டிகா விதியிலேயே கூறப்பட்டுள்ளன.

செங்கல்லின் லக்ஷணம்:– புள்ளிகள் நிறைந்தது, குறுக்குக் கோடுகள் விழுந்தது, கருமைபடிந்தது, யானைக்கண் உள்ளது, சிலந்திக்கூடு போன்ற அடையாளம் உள்ளது இவையாவும் வர்ஜிக்கத் தகுந்தவை. சிறிது வளைந்தது நுனியாகவும், சிறிது உயர்ந்தது அடியாகவும் கருதுக. நான்கு கன்னிகைள் செங்கற்களை அலங்கரித்து அவர்களால் தொடப்பட்ட பாகம் நுனியாகவும், இதர பாகம் அடியாகவும் கொள்ளவேண்டும். கருங்கல்லோ, செங்கல்லோ இவற்றைப் பஞ்சகவியத்தால் அபிஷேகித்துப் பொன், பட்டு, பருத்தி நூல்களால் ரக்ஷாபந்தனம் செய்க, இவையாவும் முன்னிரவில் செய்க.

ஸ்தண்டிலம் அமைத்து அந்தந்த திக்குகளின் அடையாளத்திற்காகப் பூர்வ பாகத்தில் வைக்கும் கல்லின் மேல் 'அ' காரமும், தெற்கில் 'ஆ' காரமும், மேற்கில் 'இ' காரமும், உத்தரத்தில் 'ரா' காரமும் எழுத வேண்டும். இக்கல்லின்மேல் ருக், யஜுர், ஸாம, அதர்வண வேதங்களையும் அதன் அதிதேவதைகளையும் பூஜிக்க வேண்டும். பிறகு நவகலசத்தில் மத்தியில் சிவனையும், எட்டுக் கலசங்களில் லோக பாலர்களையும் பூஜிக்க, முறைப்படி சிவயாக அதிவாஸம் செய்து மறுநாள் காலை மறுபடியும் பூஜை, ஹோமம் செய்து, 'ஜயாதி' முதலிய மந்திரங்களுடன் பூர்ணாஹுதி செய்க. சுபோதோய வேளை பார்த்து அடிக்கல் ஸதாபிக்க வேண்டும்.

கோபுர துவாரத்திலானால் அதன் தக்ஷிணை மூல பாகத்தில் (தெற்கு பாதம்) ஆத்யேஷ்டிகா செய்க. சுவரின் இடைவெளியில் அதனை ஸ்தாபிக்க. ஈசானத்தில் வைக்கும் கற்கள் ஒன்றையொன்று நுனிகளைத் தொட்டுக் கொண்டும், நிருதியில் வைக்கும் கற்கள் ஒன்றையொன்று அடிப்பாகத்தைத் தொட்டுக் கொள்வதாகவும், அக்னிமூலையிலும், வாயு மூலையிலும் அடி, நுனி சம்பந்தம் உள்ளவையாகவும் வைக்கவேண்டும். இதன் மத்தியில் ரத்னங்களையும், ஐந்துவித மண்களையும் நிரப்புக. (யானை குத்திய மண், புற்றுமண், நண்டுவளை மண், காளை குத்திய மண், மடு, நதி புனித தீர்த்தத்தின் மண், மலை, சமுத்திர மண்) ரத்னங்கள் கிடைக்காதபோது பொன்னையோ, இவ்வித மண்கள் கிடைக்காதபோது நதி மண்ணையாவது உபயோகிக்கச் சொல்லியிருக்கிறது. இவற்றைப் பார்க்கும்போது '9' செங்கற்கள் இருக்கவேண்டும் எனத் தெரிகிறது. மத்தியில் பள்ளத்தில் பூஜித்த கும்ப ஜலங்களை அபிஷேகிக்கும்போது அந்த ஜலம் வலமாகச் சுற்றினால் சுபம் என்றும், இடமாகச் சுற்றினால் அசுபம் என்றும் கொண்டு, அசுபத்திற்குப் பரிகாரமாகச் சாந்தி ஹோமம் செய்து சமன் செய்யவும்.

குமார தந்திரத்தில் கர்பஸ்தாபனத்தின் மேலாவது அல்லது அடிப்பாகத்திலாவது இந்த அடிக்கல்லை வைக்கவும் பயறு முதலிய தானியங்களுடன் உலோகங்கள், தாதுக்கள், மூலிகைகள், சந்தனம் விதவிதமான விதைகள் இவற்றை வைக்கவும் கூறியுள்ளது. 'ய' காரம் முதல் 'வ' காரம் வரை (ய, ர, ல, வ) என்ற பீஜங்களைப் பிரவணத்துடன் செங்கற்களின் மேல் அரிசி மாவினால் எழுதுக. கர்ப மத்தியல் ஒன்று, திக்குகளில் '4' செங்கற்களும் ஆக 5 எனக் கூறப்பட்டுள்ளது.

சுப்ரபேதம் கூறுவதாவது: – 4 கல் ப்ரதமேஷ்டிகா, எனவும், கல்லின் உயரம் 3 தாலம் (36") ஆகவும் இரு மடங்கு அகலமாகவும் உள்ளது. இது உத்தமம். இதில் பாதி மத்யம். அதில் பாதி அதமம். 9 வகைப்பேதங்கள் அளவில் உள்ளதாகவும், எது விருப்பமானதோ அதைக் கைக்கொள்ளவும் கூறுகிறது. மூலம் பெருத்திருப்பின் ஸ்திரீ சிலை என்றும், அக்ரம் பெருத்திருப்பின் அலிக்கல் என்றும், சமமாக இருப்பின் ஆண் கல் என்றும் உள்ளது. ஆண் கல்லில் புருஷ சிலைகளும் பெண் கல்லில் ஸ்திரீ சிலைகளும் செய்யக் கூறப்பட்டுள்ளது. பாடல புஷ்பத்தின் நிறமுள்ள செங்கற்கள் சிறந்தன. மந்திரம் நிறைந்த ஆத்யேஷ்டிகா பூஜை, நவகலச பூஜை, அதன் சம்பந்தமான பூஜை, ஹோமம் யாவும் ஆச்சாரியாரும், மந்தரங்களல்லாத கிரியை யாவும் (அதாவது சிலை வைத்தல், பூசுதல், அளவு பார்த்தல் முதலியவற்றைச்) சில்பிகளும் செய்யவேண்டும். மந்திரமுள்ள கிரியைகளையும் ஸ்தபதியே செய்தால் தோஷமாகும் என்றும் கூறப்பட்டுள்ளது. (ஸுப்ரபேதம் பக்கம் 134) அஜிதத்தில் 5 செங்கல்கள்; அவற்றின் பெயர்கள் நந்தா, பத்ரா, ஜயா, ரிக்தா, பூர்ணா என்பன; கோபுரத்திலானுல் தெற்குப் பாகத்தில் சுவரின் கீழேயும், பிரகாரங்கள் கட்டுவதானுல் ஈசானத்திலும் அடிக்கல் நாட்டவேண்டும்.

இவ்வாறு விஸ்தாரமாக உள்ள இந்த ஆத்யேஷ்டிகா விதிப்ரகாரம் கட்டும் எந்த ஆலயமும், கட்டடங்களும், வீடுகளும் நீண்டகாலம் லக்ஷ்மீகரம் பொருந்தியதாகவும், ஜீவன் உள்ளதாகவும் இருந்து கொண்டு, ஆலயமானுல் மூர்த்தி ஸாந்நித்யமும் மாளிகை முதலியவையானுல் வசிப்பவர்களுக்கு நன்மைகளான பலனையே கொடுக்கக்கூடியதாகவும் விளங்கும். எனவே மக்களும் வீடுகள் கட்டும் போது முறைப்படி செய்யின் சகல மங்களமும் பெறுவர் எனக்கூறி இறைவன் ஏகாம்பரநாதன் தாளிணைப் பணிந்து இக்கட்டுரையை நிறைவு செய்கிறேன்.



# அஷ்டாதச க்ரியாவளி

## (பதினெண் பூசை விளக்கம்)

சிவத்திரு எஸ். அருணசுந்தரம் சிவாச்சாரியார் – சென்னை

---

சிவபெருமானைப் பரமாகவைத்துப் பேசும் நூல்களே சிவாகமங்ள் ஆகும். சிவாகமங்கள் இருபத்தெட்டிலும் இறைவனை வழிபடும் முறையை விளக்கும் பகுதியே க்ரியாபாதம் எனப்படும்.

க்ரியாபாதத்தில் க்ரியைகளுக்குத் தான் (சடங்குகளுக்கு தான்) முதலிடம் அளிக்கப்படும். அப்பகுதியில் பரார்த்த ஆலயங்களில் (திருக்கோயில்களில்) அனுஷ்டிக்கவேண்டிய க்ரியைகள் மூன்று பாகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவை:

1. கர்ஷணாதி ப்ரதிஷ்டாந்தம்
2. ப்ரதிஷ்டாதி உத்ஸவாந்தம்
3. உத்ஸவாதி ப்ராயஸ்சித்தாந்தம்

என்று கூறப்படுகின்றன.

கர்ஷணாதி ப்ரதிஷ்டாந்தம்

கர்ஷணம் என்றால் உழுதல் என்று பொருள். ப்ரதிஷ்டா என்றால் (இறைவனை) சிறப்புற விளங்கச் செய்தல்' என்று பொருள். எனவே "உழுதல் முதற்கொண்டு, இறைவனைச் சிறப்புற விளங்கச் செய்தல் வரையிலான சடங்குகளை விளக்கும் பகுதி கர்ஷணாதி ப்ரதிஷ்டாந்தம்" என்று கூறப்படுகிறது.

புதியதாகத் திருக்கோயில் அமைப்பதன் பொருட்டுப் பூமியை உழுது, பரீக்ஷை செய்து அடிக்கல் நாட்டுதல் முதலியவற்றைச் செய்யவேண்டும். அதையே இங்கு கர்ஷணம் என்று கூறினர்.

கர்ஷணம் என்னும் சொல்லிற்கு ஆகர்ஷித்தல் என்ற பொருளும் உண்டு. எனவே இறைவனை ஆகர்ஷணம் செய்வது முதற்கொண்டு, ப்ரதிஷ்டை செய்வது வரையிலான க்ரியைகளுக்கும் கர்ஷணாதி ப்ரதிஷ்டாந்தம் என்ற சொல் பொருள் பொருந்தும். அதாவது திருக்கோயில் அமைப்பதற்கு இறைவனைச் சிலையில் வடிக்கவேண்டும். அவ்வாறு வடிப்பதற்குச் சிலை (கருங்கல்) தேவை. எனவே ஆசார்யர், ஸ்தபதி, அரசன் ஆகியோர் மலையை நோக்கிச்சென்று மலையைச் சிவ வடிவாகத் தியானித்துச் சிலைவடிப்பதற்குத் தகுந்த கற்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

---

"ப்ரகர்ஷண திஷ்டதி அநயா (ப்ரக்ரியா) சிவ:
இதி ப்ரதிஷ்டா" என்று ப்ரதிஷ்டா என்னும் சொல்லிற்கு விளக்கம் அளிப்பர். அதாவது எங்கும் நீக்கமற நிறைந்து, கடந்தும் உள்ளும் இருப்பவர் கடவுளாகிய சிவபெருமான். எனவே ப்ரதிஷ்டாவிற்கு முன்பே இறைவன் ஆலயங்களிலும் சிலைகளிலும் நிறைந்து இருப்பினும், எந்தச் சடங்கினுல் சிறப்புற விளங்குகிறாரோ அதற்கு ப்ரதிஷ்டா எனப் பெயர்.

பின்பு ஸ்வப்னத்தில் இறைவனின் உத்தரவின்படி அவற்றுள் ஒன்றினைத் தேர்ந்தெடுத்து, அந்தக்கல்லில் இறைவனை மந்திரவடிவாக வெகு விமர்சையாகப் பூஜிக்க வேண்டும். பின்பு அந்தக் கல்லில் உள்ள மந்திரவடிவான இறைவனை ஒரு கலசத்தில் ஆகர்ஷிக்கவேண்டும். பின்பு மேற்கொண்டு கல்லினைக் கூறுசெய்தல் போன்றவற்றைச் செய்ய வேண்டும்.

இங்கு நாம் கவனிக்கவேண்டியது என்னவென்றால் "அங்கு உள்ளார், இங்கு உள்ளார்" என்று இல்லாமல் எங்கும் பரவிக் கருங்கல்லிலும் உள்ள இறைவனை மந்திர வடிவினனான மந்த்ராத்மாவாக மாற்றி, அக்கல்லிருந்து கலசத்திற்கு இழுத்தல் (ஆகர்ஷணம் செய்தல்) என்பது "இறைத்தன்மையை எவரும் உண்டாக்குவதில்லை. சடங்குகளின் மூலம் அவை வெளிப்படுத்தப்படுகின்றன", என்ற தத்துவம்.

எனவே திருக்கோயில் அமைப்பதற்கு "இறைவனை ஆகர்ஷித்தல்" என்னும் சடங்கே முதலில் நடைபெறுவதால், கர்ஷணாதி ப்ரதிஷ்டாந்தம் என்னும் சொல்லிற்கு, "இறைவனை ஆகர்ஷிப்பது முதற்கொண்டு ப்ரதிஷ்டை செய்வது வரை' என்ற பொருளும் பொருந்தும். வாமதேவபத்ததி என்ற நூலிலிருந்து இதனை நாம் அறியலாம்.

கர்ஷணாதி ப்ரதிஷ்டாந்தம் என்ற க்ரியைகள் ஆகமங்களில் பலவிதமாகக் கூறப்பட்டுள்ளன. க்ரியைகளுக்கு அந்த அளவிற்கு முக்கியத்துவம் உள்ளதோ அதைவிட க்ரியைகளின் க்ரமத்திற்கு – வரிசைக்கு – முறைமைக்கு முக்கியத்துவம் அதிகம்.

ஏனெனில் பக்தியை மட்டுமே முதலாகக் கொண்டு இறைவனை வழிபடுபவர்களும், (கண்ணப்பர் போன்றவர்) இறைவனுக்கு அபிஷேகம் செய்தல் மலர் அணிவித்தல் போன்ற அனைத்துக் க்ரியைகளையும், இறைவன்பால் உள்ள தூய அன்பின் காரணமாகச் செய்யலாம். ஆனுல் அவர்கள் செய்யும் க்ரியைகளுக்கு முன் பின் முறை கிடையாது. கர்ம மார்க்கத்தில் நின்று வழிபடுபவர்களுக்கோ க்ரியைகளை விட க்ரியைகளின் வரிசை – முறைமை மிக மிக முக்கியமானது.

மூல ஆகமங்களில் பெரும்பாலும் க்ரியைகள் தான் விளக்கப்பட்டுள்ளனவே தவிர, க்ரியைகளின் வரிசை ஐயமற விளக்கப்படவில்லை. எனவே அதனை விளக்குவதற்காகவே பதினெண் பத்ததி ஆசிரியர்கள் அரும்பாடுபட்டுப் பத்ததிகளை இயற்றினார்கள். "க்ரியா க்ரம த்யோதிகா க்ரியா காண்ட க்ரம ஆவளி:" போன்ற பத்ததிகளின் பெயர்களே இதனை நன்கு விளக்கும்.

திருக்கோயில் அமைத்துப் பின்பு இறைவனை ப்ரதிஷ்டை செய்வதற்கான க்ரியைகளை, பல பத்ததி ஆசிரியர்கள் பலவிதமாகப் பிரித்தும், பலவிதமாக வரிசைப்படுத்தியும் உள்ளனர். அவை ஒவ்வொன்றிற்கும் எந்தெந்த ஆகமங்கள் ப்ரமாணம் என்பதை நாம் கண்டறிவது என்பது மிக மிகக் கடினமாகும்.

வாமதேவ பத்ததி என்ற நூலின் ஆசிரியர் இந்தப் புதிய கும்பாபிஷேக க்ரியைகளை சதுஷ் ஷஷ்டி க்ரியா மாலா, எனப் பெயரிட்டு அறுபத்து நான்கு க்ரியைகளாகப் பிரித்துள்ளார். மற்றும் ஒரு நூலில் ப்ரதிஷ்டா அனுக்ரமனி என்னும் பெயரில் முப்பது க்ரியைகளாகவும், அதே நூலில் ப்ரதிஷ்டா அனுக்ரமணி என்னும் பெயரிலேயே சுமார் 42 க்ரியைகளாகவும் பிரித்துள்ளார். தவிரவும் அதே நூலில் ப்ரதிஷ்டா அனுக்ரமணி என்னும் பெயரிலேயே சுமார் 130 க்ரியைகளைக் குறிப்பிட்டுள்ளார்.

அஷ்டாதச க்ரியாவளி: (பதினெண் பூசை வரிசை)

இவை அனைத்தையும் சுருக்கி அஷ்டாதச க்ரியாவளி: என்னும் பெயரில் பதினெட்டுக் க்ரியைகளாகப் பிரித்துள்ளனர். இந்த அஷ்டாதச க்ரியாவளியும் இருவிதமாகக் கிடைக்கின்றன. ஆனால் இவ்விரண்டு அஷ்டாதச க்ரியாவளி களுக்கும் க்ரமத்தில் தான் வேறுபாடு உள்ளதே தவிர க்ரியைகள் பெரும்பாலும் ஒன்றாகவே உள்ளன. அதிலும் ஒரு அடிப்படைக் கருத்தினை மையமாகக் கொண்டே இரண்டு க்ரமங்களிலும் வேறுபாடு காணப்படுகிறது.

அதாவது, முதலில் புதிய பிம்பங்களுக்குரிய சடங்குகளைச் செய்துவிட்டுப் பிறகு யாகசாலை பூஜை, ஹோமம் போன்றவற்றைச் செய்வது என்னும் அடிப்படையில் ஒரு அஷ்டாதச க்ரியாவளி உள்ளது. முதலில் யாகசாலை பூஜைகள் ஹோமங்கள் ஆகியவற்றைத் தொடங்கி, பின்பு புதிய பிம்பங்களுக்குரிய ஸம்ஸ்காரங்களைச் செய்தல் என்னும் அடிப்படையில் மற்றொரு அஷ்டாதச க்ரியாவளி அமைந்துள்ளது. அவை இரண்டினையும் இனி காண்போம்

சிவ ப்ரதிஷ்டா விதி: என்னும் நூலில் உள்ள அஷ்டாதச (18) க்ரியைகள்-

அத வக்ஷ்யே விசேஷேண லிங்க ஸ்தாபனம் உத்தமம்  
அஷ்டாதச க்ரியாவள்யா ம்ருதஸங்க்ரஹண பூர்வகம்!  
ம்ருத்ஸங்க்ரஹணகம் வாஸ்து பூஜனஞ்ச அங்குரார்ப்பணம்  
..................................................................  
..................................................................  
..................................................................  
ஜலஸ்நானம் நாமக்ருதி: விவாஹோஷ்டாதசஸ்ம்ருதா:  
அஷ்டாத்ச விதானேன ம்ருத்ஸங்க்ரஹண பூர்விகா!  
சிவ ப்ரதிஷ்டா விஹிதா சிவாகம ஸமீரிதா!

சிவலிங்க ப்ரதிஷ்டாவிதி என்ற நூலில் உள்ள அஷ்டாத்ச க்ரியாவளி

அத வக்ஷ்யே விசேஷேண லிங்கஸ்தாபனம் உத்தமம்  
அஷ்டாத்ச விதானேன ப்ரதிஷ்டா விதி: உச்யதே!  
ம்ருத்ஸங்க்ரஹண மாரப்ய த்விதீயம் அங்குரார்ப்பணம்  
ரத்னந்யாஸம் த்ருதீயம்து நயநோன்மீளனம் சது:  
பஞ்சமம் ப்ரதிமாசுத்தி: ஷஷ்டம் க்ராமப்ரதக்ஷிணம்  
ஜலாதி வாஸனம் ஸப்த ரக்ஷாப்ந்தனம் அஷ்டமம்!  
நவமம் வாஸ்து பூஜாச தசமம் பஞ்சகவ்யகம்!  
ருத்ர மண்டப ஸம்ஸ்காரம் த்வாதசம் ஸயனந்துவா!  
ஹோம கர்ம த்ரயோதஸ்யம் ஸ்தாபனஞ்ச சதுர்தச  
திதி ஸங்க்யம் ஸபந்தஞ்ச ஷோடசம் மந்த்ர பூஜனம்  
ஸ்ப்ததசம் ததா நாம விவாஹோஷ்டா தசம் பவேத்  
அஷ்டாதச விதானேன ம்ருத்ஸங்க்ர ஹண பூர்வகம்!



# கணபதியும் பல்வேறு வடிவங்களும்

முனைவர்: ஆ. வேலுச்சாமி சுதந்திரன்

கணபதி என்ற பெயர், சிவகணங்களுக்குத் தலைவர் என்ற பொருள்பட அமையும் என்பர். விக்னேசுவரர், விநாயகர், பிள்ளையார் என்றும் அழைக்கப்படுகிறார். கணபதியின் பிறப்புக்குறித்து, இலிங்கபுராணம், பிரம்மவைவர்த்தபுராணம், சிவபுராணம், வராகபுராணம், மட்சயபுராணம், ஸ்காந்த புராணம் போன்ற நூல்களில் விரிவான செய்தியைப் பார்க்கலாம். பாவிசியத்புராணம், பாத்ம புராணம், சிவமகாபுராணம், ரூபமந்தனம், போன்ற நூல்களில், கணபதியைக் குறித்து உருவ விளக்கம் இடம் பெறுகிறது.

ஆகமங்களில், பால கணபதி, தருண கணபதி, பக்தி விக்னேசுவரர், வீர விக்னேசர், சக்தி விக்னேசுவரர், இலக்குமி கணபதி, ஊர்த்துவ கணபதி, உச்சிஷ்ட கணபதி, மகா கணபதி, பிங்கல கணபதி, ஹேரம்ப கணபதி, பிரசன்ன கணபதி, துவாஜ கணபதி, உன்மத்த உச்சிஷ்டகணபதி, விக்னராஜா கணபதி, ஹரித்தரா கணபதி, பாலச்சந்திரா, சூர்ப்பகர்ணா, ஏக தந்தர் போன்ற வடிவங்கள் விரிவாக விளக்கப்பட்டிருக்கின்றன.

**1. பால கணபதி**

குழந்தை வடிவம் கொண்டது. நான்கு திருக்கரங்களில், மாம்பழம், வாழைப்பழம், பலாப்பழம், கரும்பு இடம் பெறும்.

**2. தருண கணபதி**

இளமையான தோற்றத்தோடு, ஆறு திருக்கரங்களை உடையதாகும். பாசம், அங்குசம், விளாம்பழம் **(Wood-apple)**, ஜம்பு பழம் **(Jambu Fruit)**, எள்ளுவிதை **(Sesamum)**, மூங்கில் குச்சி கைகளில் இடம்பெறும்.

**3. பக்தி விக்னேசுவரர்**

நான்கு கைகளில் தேங்காய், மாம்பழம், சர்க்கரை, பாத்திரத்தில் பாயாசம் இடம் பெறுகிறது.

**4. வீர விக்னேசர்**

பதினாறு திருக்கரங்களையுடையது. வேதாளம், சக்தி, அம்பு, வில், வாள், கேடயம், சுத்தியல், கெதை, அங்குசம், சூலாயுதம், பரசு, கொ்டி, குண்டம் கைகளில் இடம் பெறும்.

**5. இலக்குமி கணபதி**

எட்டுத்திருக்கரங்கள் உடையது. கைகளில், கிளி, மாதுளம்பழம், தாமரை மலர், தண்ணீர்ப்பாத்திரம், அங்குசம், பாசக்கயிறு, கல்பகலதா, மலர் அம்பு இடம் பெறுகிறது. துதிக்கையிலிருந்து தண்ணீர் வெளிவரவேண்டுமென்று, அகோர சிவாச்சாரியாரின் கிரியாகிரமட்யோதி குறிப்பிடுகிறது.[1] ஆனால் மந்திரமகோததி, கணபதியின் இரு கைகளில், தந்தமும், சக்கரமும் இருக்கவேண்டுமென்று குறிப்பிடுகிறது. மற்றொரு கை அபயமுத்திரை காட்டும். நான்காவது கையைப்பற்றிய குறிப்பு இல்லை. ஒரு கையால் தேவி, விநாயகரை அணைத்தும், மற்றொரு கை மலர் தாங்கும்.

**6. உச்சிஷ்ட கணபதி**

கைகளில், தாமரைப்பூ, மாதுளம்பழம், வீணை, நெல், அக்கமாலை இடம் பெறுமென்று கிரியாகிரமத்யோதி குறிப்பிடுகிறார். ஆனால் மந்திர – மகார்ணவா, பாணம், வில், பாசம், அங்குசம் இடம் பெறுமென்று குறிப்பிடுகிறது. பத்மாசனத்தில் தேவியுடன் அமர்ந்திருக்க வேண்டும். உத்தர – காமிகாகமத்தில், நான்கு திருக்கரங்களில், மூன்றில் பாசம், அங்குசம், கரும்பு இடம் பெற வேண்டுமென்றும், நான்காவது கை, அவரது மடியில் உட்கார்ந்திருக்கும், தேவியின் மறைவிடத்தைத் தொட்டவண்ணம் இருக்கவேண்டுமென்றும் குறிப்புள்ளது.

**7. மகா கணபதி**

பத்து திருக்கரங்களையுடையது. தாமரைப் பூ, மாதுளம்பழம், தண்ணீர்ப் பாத்திரம், கெதை, உடைந்த கொம்பு, கரும்பு, நெல், பாசம் இடம் பெறுகிறது. தேவி மடியில் இருக்கிறாள், கையில் மலர்.

**8. ஊர்த்தவ கணபதி**

ஆறு திருக்கரங்கள், ஐந்து கைகளில், கல்ஹராபூ, நெல், கரும்பு வில், பாணம், தந்தம் இடம் பெறும். ஆறாவது கை, தேவியை அணைத்திருக்கும்.

**9. பிங்கல கணபதி**

ஆறு திருக்கரங்களையுடையது. கைகளில், மாம்பழம், கல்பகா மரத்தின் பூக்கள், கரும்பு, விளாம்பழம், மோதகம், பரசு இடம்பெறும். இலக்குமி அருகில் இடம் பெறுகிறாள்.

மேற்குறிப்பிட்ட ஐந்து வடிவங்கள், சக்தி கணேசர் பிரிவில் அடங்கும். சக்தி கணபதி வடிவங்களை விக்னேசுவர பிரதிஷ்ட விதியென்ற நூலும் குறிப்பிடுகிறது. பத்மாசனத்தில் உட்கார்ந்திருக்கும் கணேசரின் அருகில் தேவி அமர்ந்திருப்பாள். தேவியின் இடுப்பை அணைத்த தோற்றம். பாசம், வஜ்ரம், தாங்கி, கணேசன் பயமுறுத்தும் தோற்றம் காட்டுவார். மந்திரமகார்ணவ என்ற நூல், கைகளில் தந்தம்

அங்குசம், பாசம், அக்கமாலை இருக்கவேண்டுமென்றும், துதிக்கையில் மோதகமும் இடம்பெறுமென்றும் குறிப்பிடுகிறது. தேவி அருகில் உட்கார்ந்த நிலை.

10. ஹேரம்ப கணபதி

ஐந்து தலைகளைக் கொண்டது. நான்கு தலைகள், நான்கு திசைகளை நோக்கியும், ஐந்தாவது தலை, மேல் நோக்கியும் இருக்கிறது. சிங்கத்தின் மீது அமர்ந்த நிலை. பத்துக்கைகளில் இரண்டு, அபய, வரத முத்திரை காட்டுகின்றன. பிறகைகளில் பாசம், தந்தம், அக்கமாலை, அங்குசம், கோடரி, முட்கரா, மோதகம், ஒரு பழம் இடம்பெறுமென்று ஸ்ரீதத்துவநிதி குறிப்பிடுகிறது. சில்பரெத்தினமென்ற நூல் கொழுக்கட்டை தாங்கிய பாத்திரம், தந்தம், கமண்டலம், அக்கமாலை, உளி, உலக்கை, பாசம், அங்குசம் இடம்பெறுமென்றும், இரண்டு கைகள் அபய, வரத முத்திரை காட்டுமென்றும் குறிக்கிறது. முட்கல புராணமும், இக்கணபதியைக் குறிப்பிடுகிறது.

11. பிரசன்ன கணபதி

நான்கு கைளில் இரண்டில் பாசமும் அங்குசமும் இடம் பெறும். மற்ற இரண்டு கைகள், அபய, வரத முத்திரை காட்டும்.

12. துவாஜ கணபதி

நான்கு கைகளில் புத்தகம், அக்கமாலை, தந்தம், கமண்டலம் இடம்பெறும்.

13. உன்மித்த உச்சிஷ்ட கணபதி

கைகளில் பாசம், அங்குசம், மோதகம் தாங்கிய பாத்திரம். பத்மாசனத்தில் அமர்ந்த நிலை.

14. விக்னராஜா கணபதி

வாகனத்தில் உட்கார்ந்த நிலை, கைகளில் பாசம், அங்குசம், மாம்பழத்தைச் சுவைப்பதுபோல் தோற்றம்.

15. யுவனேச கணபதி

எட்டுத்திருக்கரங்கள், சங்கு, கரும்புவில், பூ, அம்பு, தந்தம், பாசம், அங்குசம், நெல்செடி, கைகளில் இடம்பெறுகிறது.

16. நிருத்த கணபதி

எட்டுக்கைகள், ஏழு கைகளில், பாசம், அங்குசம், இனிப்பு, கோடரி, தந்தம், வலையா, வளையம் இடம்பெறுகிறது. எட்டாவது கை தொங்கிய நிலை.

17. அரித்ரா கணபதி

ராத்ரி கணபதியென்றும் அழைக்கப்படும் கைகளில், பாசம், அங்குசம், மோதகம், தந்தம்.

18. பாலச்சந்திரா கணபதி

தலையில் சந்திரனைத் தாங்கிப வடிவம். இவ்வடிவத்தைப் பிரமாண்ட புராணம் விவரிக்கிறது.

19. சூர்ப்ப கர்ண கணபதி

பதர்நீக்கும் கூடை போன்ற அமைப்பைக் கொண்டவர்.

20. ஏகதந்த கணபதி

ஒரு தந்தம் உடையவர். பிரமானந்தபுராணம், இடது தந்தம் முறிந்ததாகக் குறிப்பிடுகிறது.

மேலே குறிப்பிட்ட வடிவங்கள், ஆலயங்களில், இடம்பெறுகிறதா என்பது ஆராய்ச்சிக்குப் பிறகே தெரியமுடியும்.

விநாயகர் வழிபாடு:

விநாயகர் வழிபாடுகுறித்துப் பல கருத்துக்களுண்டு. வேத காலத்தில், கணங்களின் தலைவராகக் குறிக்கப்படுகிறார்.[2] சதுக்கப்பூதத்திலிருந்து வழிபாடு தோன்றியதென்ற கருத்துமுண்டு[3] விநாயகர் வழிபாடு புத்த மதத்திலிருந்து தோன்றியதென்றும், தமிழக உழவர்களின் தெய்வமென்றும்,[4] புத்தருக்குக் கட்டப்பட்ட பள்ளிகள் அனைத்தும், விநாயகர் கோயில்களாக மாறின என்றும்,[5] தமிழகத்தில், விலங்கின வழிபாட்டின் அடிப்படையில் கணேசர் வழிபாடு தோன்றியதென்றும் கருதுவர்.[6] ஓம் என்ற பிரணவ ஒலிக்கு இறைவடிவம் கொடுத்துத் தமிழர் விநாயகரை வணங்கினரென்றும் இவ்வழிபாடு தமிழருக்கேயுரியதென்றும் கருதுவர்.[7]

க்லை வரலாற்று அடிப்படையில் விநாயகர் வடிவங்கள்

தமிழகத்தில், பல்லவர்காலக் குடைவரைக் கோயில்களிலும், ஒற்றைக்கற் கோயில்களிலும் கணேசர் சிற்பம் இடம்பெறவில்லை.[8] மகாபலிபுர இராமானுஜ மண்டபத்தில், கொடுங்கை பூதகண வரிசையில் மனித உடலும், யானைமுகமும் கொண்டு தோற்றம் காட்டுகிறார்.[9] இராஜசிம்மனால் கட்டப்பட்ட, காஞ்சிபுரம் கைலாசநாதர் கோயிலில், சப்த கன்னியர்களுடன் காட்சி தருகிறார்.[10] சப்த கன்னியர்களுடன் கூடிய வழிபாடு சாளுக்கியரின் தாக்கமெனக் கருதுவர். சாளுக்கிய கோயில்களில், சப்த கன்னியர்கள் இடது பக்கம் தோற்றம் காட்டுவர்.[11] காஞ்சி மாதங்கேசுவரர், இறவாதேசுவரர், திரிபுராந்தகேசுவரர் ஆலயங்களில் அர்த்த மண்டப தென் சுவரில் கணபதி இடம் பெறுகிறார். பல்லவர் காலச் சிற்பங்களில் பொதுவாக இருந்த கோலத்தில், கணபதி, நான்கு திருக்கரங்களில் பரசும், பாசமும், தந்தமும், மோதகமும் தாங்குகிறார். நின்ற வடிவத்தில் கணபதிச் சிற்பங்கள், பல்லவர் காலத்தில் எந்தக் கோயில்களிலும் இடம்பெறவில்லையெனலாம். திருத்தணி வீரட்டானேசுவரர். சிற்பங்கள் தனி அழகு காட்டுகின்றன.

அர்த்த மண்டபச் சிற்பத்தில் (படம் 1), வலது மேல் கையில் தந்தமும், வலது கீழ்க்கையில் மோதகமும், இடது கீழ்க்கை, தொடைமீதுமிருக்கிறது. இடது மேற்கரத்திலிருக்கும் பொருள் நெற்கதிராக இருக்குமோவென எண்ணத் தோன்றுகிறது. ஏழு கன்னியர்களோடு காட்சிதரும் விநாயகர் சிற்பம் தனிச்சிறப்புடையது (படம்–2). வலது மேல் கையில் உடைந்த தந்தமும், வலது கீழ்க் கையில் மோதகமும், இடது மேல் கையில் ஒரு பறவையும், இடது கீழ்க் கையில் சுவடியும் இருக்கிறது. கரண்டமகுடம் துதிக்கை இடதுபுறமாகச் சுழன்றிருக்கிறது. பத்ம பீடத்தில் இருந்த நிலை.

சோழர் கால வடிவங்கள்:

சோழர் காலத்தில் கல், உலோகச் சிற்பங்கள் அதிக அளவில் தோன்றின. இருந்த, நின்ற, நடன நிலையில் உருவங்கள் தோன்றின. தக்கோலம் திருவூறல் மகாதேவர் கோயில் (படம் 3), கணபதி சிற்பத்தில், வலது கீழ்க் கையில் மோதகமும், இடதுகீழ்க் கை தொடைமீதுமிருக்கிறது. மேலிரு கைகளில் பரசும் கோடரியும் காட்சி தருகின்றன. இரட்டைஇதழ் பத்மபீடத்தின் மீது, வலது காலைப் பீடத்தில் மடக்கி, இடதுகால் உட்குடி ஆசனமுறையில் அமர்ந்திருக்கிறது. கழுத்தணிகளும், உதரபந்தமும், புரிநூலும், ஒரே கலை வேலைப்பாடு காட்டுவது இச்சிற்பத்தின் தனிச்சிறப்பாகும். திருக்கண்டியூர், வீரட்டானேசுவரர் ஆலயத்தில் (படம் 4) இரண்டு கீழ்க் கைகளும், வரத முத்திரை காட்டுகின்றன. பெரும்பாலும், வலது கீழ்க்கை கடக முத்திரைக் காட்டி, தந்தத்தைப் பிடித்திருக்கும். கீழப்பழுவூர், திரு ஆலந்துறை மஹாதேவர் ஆலயச் சிற்பம் (படம் –5) சோழர் கலைக்கு மிகச் சிறந்த எடுத்துக் காட்டாகும். மேலிரு கைகளில் அங்குசமும், பாசமும், கீழிரு கைகளில், உடைந்த தந்தமும் மோதகமும் இடம் பெறும். புள்ளமங்கை பிரமபுரீசுவரர் ஆலயத்தில், கரண்ட மகுடத்தின்மீது குடை இருப்பது தனிக்கலையாகும்.[11] வலதுகீழ்க்கை வரத முத்திரையிலும், இடது கீழ்க்கை தொடைமீதும் அமர்ந்திருக்கின்றன. மேலிரு கைகளில் பரசும், பாசமும் இடம் பெறுகிறது. (படம்–6). இரண்டு பக்கமும் பூதகணங்கள் இடம் பெறுகின்றன. மேல்பகுதியில் மூஞ்சிறும் காட்சி தருகிறது. திருக்கருகாவூர், முல்லைவனேசுவரர் ஆலயச் சிறபத்திலும் (படம் 7) குடையும், பூதகணங்களும் இடம்பெறுகிறது. ஆனால் மூஞ்சிறு இடம் பெறவில்லை. கிராமம், சிவலோக நாதர், ஆலயச் சிற்பம் (படம் 8) வலம்புரி விநாயகராகும். வலது மேல் கையில் பரசு இடம் பெறவில்லை. மாறாக விசிறி போன்ற அமைப்புள்ள பொருள் இடம் பெறுகிறது. கிரீடமகுடம். புரிநூல் தொப்புளுக்குக் கீழே செல்கிறது. புஞ்சை, நல்துணை ஈசுவரர் ஆலயச் சிற்பத்தில், வலது மேற்கரத்தில் மலர் இடம் பெறுகிறது (படம் 9). இடது மேற்கரத்திலிருக்கும் பொருளை அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. கீழிரு கைகளிலும், தந்தமும், மோதகமும் இடம் பெறுகின்றன. முடிச்சுடன் காணப்படும் புரிநூல், கலைநயம் கொண்டதாகும். திருக்கருகாவூர், வெள்ளிடை ஈசுவரம் ஆலயத்தில், தலைக்கு மேல் குடையும், சாமரமும் இடம் பெறுகின்றன. (படம் 10), வலது மேற்கரத்தில் பரசும், இடது மேற்கரத்தில் அக்கமாலையும் இடம்பெறும். வலது கீழ்க்கையில் தந்தமும், இடது கீழ்க்கையில், மோதகமும் இடம்பெறுகிறது. திருமணஞ்சேரி, உத்வஹனேசுவரர் ஆலய, உலோகத் திருமேனியில் கைகளில், பரசும், பாசமும், தந்தமும், மோதகமும் இடம் பெறுகின்றன. இரட்டை இதழ்ப் பத்மத்தின் மீது நின்ற நிலை (படம் 11). பரமேசுவர மங்கலம், செண்பகேசுவரர்

ஆலயத்தில், இரண்டு கால்களும் சமமாக மடக்கியிருக்கின்றன. கீழிருகைகளும், வரத முத்திரையிலிருக்கின்றன (படம் 12). வடதிருமுல்லைவாயில் மாசிலாமணீசுவரர் ஆலயச் சிற்பத்தில் கரண்ட மகுடம் இல்லை. வலம்புரி (படம் 13). கோயில் தேவராயன் பேட்டை மட்சயபுரீசுவரர் ஆலயத்தில் தலைக்குமேல் குடையும், கந்தர்வ சிற்பங்களும் காட்சி தருகின்றன. (படம் 14).

அர்தமண்டபச் சுவர்களில், தெற்குப்பக்கம் இடம் பெற்றது போன்று, சோழர்காலக் கோயில்களில், மகரத்தோரணத்தின் நடுவிலும், நின்ற நிலையிலும், இருந்தநிலையிலும் புடைப்புச் சிற்பங்களைப் பார்க்கலாம். சொக்கேசுவரர் ஆலயத்தில், தோரணத்தின் நடுவில் நடனமாடும் விநாயகர் இடம் பெறுகிறார் (படம் 15). அருகில் பூதகணம் தோன்றுகிறது. நான்கு கரங்களிலும் பரசு, தந்தம், பாசம், மோதகம் இடம் பெறுகின்றன. இடது கால் ஊன்றி, வலதுகால் தூக்கிய நிலை. வலது பக்கத்தில் உமாமகேசுவரர் புடைப்புச் சிற்பம் இடம் பெறுகிறது. மற்றொரு பக்கம் பெண்ணொருத்தி இலிங்கத்தை வழிபடுகிறாள்.

இடைக்காலச் சோழர் சிற்பங்களிலும் பல வடிவங்களைக் கண்ணுறலாம். தஞ்சைப் பெரியகோயில் திருச்சுற்றில் இடம்பெறும் சிற்பம் நான்கு திருக்கரங்களில், பரசு, பாசம், தந்தம், மோதகம் தாங்குகிறது (படம் 16). ஆனால் அர்த்த மண்டபச்சுவரில் இடம் பெறும் சிற்பம் வலம்புரி விநாயகராகும். தலைக்கு மேல், குடையும், சாமரங்களும் இடம்பெறுகின்றன. குடைக்குமேல் மரமொன்று காட்டப்பட்டிருக்கிறது. இரண்டு பக்கங்களிலும் பூத கணங்கள் காட்சி தருகின்றன. (படம் 17).

திருநெடுங்களம், திருநெடுங்களநாதர் ஆலயத்தில், தியான நிலையில் தோற்றம் காட்டுவது, ஒரு புது அமைப்பு முறையாகும் (படம் 18). இரண்டு கால்களும் சமமாக மடிக்கப்பட்டிருக்கிறது. இத்தகு அமைப்பு முறையைப் புத்தர் சிற்பங்களில் கண்ணுறலாம். வலம்புரி, மோதகம், துதிக்கையில் இடம் பெறுகிறது. வலது மேற்கரத்தில் தந்தம், வலது கீழ்க்கரத்தில் மோதகமும், இடது கீழ்க்கரம் எவ்விதப் பொருளுமின்றித் தொடைமீது அமர்த்தப்பட்டுள்ளது. மதகடிப்பட்டு, கண்டங்குலி மகாதேவர் ஆலயச் சிற்பத்தில், மகுடம் கிடையாது.[14] நின்ற நிலை, வலது கீழ்க்கரம் ஒடிந்திருக்கிறது (படம் 19). எசலம், திரவலீசுவரர் சிற்பத்தில் குடை இடம் பெறுகிறது (படம் 20). நான்கு திருக்கரங்களிலும், பரசு, பாசம், தந்தம், மோதகம், கங்கை கொண்ட சோழபுரம், கங்கை கொண்ட சோழீசுவரராலயச் சிற்பம் நடனத் தோற்றம் காட்டுகிறது. மகுடம் இல்லை (படம் 21). இடது கால் ஊன்றி, வலது கால் தூக்கிய நிலை. உதரபந்தத்தில் நாகம் காணப்படும். காலடியிலும், இரு மருங்கும் பூதகணங்கள் இடம்பெறுகின்றன. இது ஒரு புதுமைச் சிற்பமெனலாம். உத்தத்தூர் சித்தரெத்னேசுவரர் ஆலய சிற்பத்திலும், மகுடம் இல்லை. இடது கீழ்க்கரம் தொடையின் மீது அமர்ந்த நிலை (படம் 22). திருநள்ளாறு, தர்பாரேண்யசுவரர் ஆலயச் செப்புத் திருமேனியில் நின்ற கோலம் காட்டுகிறார் (படம் 23). உதரபந்தத்தில் நாகம் இடம் பெறுகிறது. கைகளில் பரசு, பாசம், மோகம், தந்தம் இடம் பெறுகின்றன. திருவைகாவூர் சிவன் கோவில் நர்த்தன

விநாயகர் கற்சிலையில், இடது கால் தூக்கி வலதுகால் ஊன்றிய நிலையிலிருக்கிறது. கரண்ட மகுடம், வீசிய கையில் பொருளேதுமில்லை. மற்ற கைகளில் பரசு, பாசம், உடைந்த மோதகம் இருக்கிறது. துதிக்கையில் மோதகம் இருக்கிறது (படம் 23 A). உறையூர் ஸ்ரீபஞ்சவர்னேசுவரர் ஆலய உலோகத்திருமேனியில் இடதுகால் ஊன்றி, வலதுகால் தூக்கிய நிலை, கைகளில் பரசு, பாசம், தந்தம், மோதகம் இருக்கின்றன. (படம் 23B).

பிற்காலச் சோழர் சிற்பங்கள் பலவுண்டு. தஞ்சாவூர், வேதாரண்யக் கோயில், நடனமாடும் உலோகத் திருமேனியில் நான்கு கைகளில் பரசு, பாசம், தந்தம், மோதகம் இடம் பெறுகின்றன. பத்ம பீடத்தின்மீது இடதுகால் ஊன்றி வலது கால் தூக்கிய நிலை (படம் 24). திருக்கருகாவிலுள்ள மற்றொரு உலோகத் திருமேனியில் நின்ற நிலையில் தோற்றம் காட்டுகிறார். கைகளில், பரசு, பாசம், தந்தம், மோதகம், இடம் பெறுகின்றன. (படம் 25). மேலக்கடம்பூர், அமிர்தகடேசுவரர் ஆலயத்தில், வலம்புரி விநாயகர் இடம் பெறுகிறார். வலது கீழ்க்கரத்தில் தந்தம் இருக்கிறது. துதிக்கையில் மோதகம் (படம் 26).

சீர்காழி பிரமபுரீசுவரர் ஆலய கற்றிருமேனி பத்மபீடத்தின் மீது நின்ற நிலையிலிருக்கிறது. மேற் கரங்களில், பரசும், நாகமும் இடம் பெறுகின்றன. கீழிரு கைகளிலும் உடைந்த தந்தமும், மோதகமும் தோற்றம் காட்டும். கரண்ட மகுடம் (படம் 26 A) நீடூர், சோமநாதசுவாமி ஆலயத்திருமேனி பத்மபீடத்தின் மீது நின்ற நிலையிலிருக்கிறது. கைகளில் பரசு, பாசம், தந்தம், மோதகம் இடம் பெறுகிறது. துதிக்கை வயிற்றோடு சுற்றியிருக்கிறது. அதில் மோதகமும் இடம் பெறுகிறது (படம் 26 B)

பாண்டியர் காலச் சிற்பங்கள்

குகைக் கோயில்களில், விநாயகர் புடைப்புச் சிற்பங்கள் இடம் பெறுகின்றன. பிள்ளையார்பட்டி, வீரசிகாமணி, அரிட்டாப்பட்டி, திருக்கோளக்குடி, திருக்கோகர்ணம், குடுமியாமலை, மகிபாலன்பட்டி, திருச்சி, திருமலைபுரம், சிறந்த உதாரணங்களாகும். திருச்சி குகைக்கோயில் சிற்பம் நின்ற கோலம் காட்டுகிறது. காணாபதிய மதத்தின் தாக்கமாக எழுந்துள்ளது. அறுவகைச் சமயத்தில் காணாபத்யம் ஒன்றாகும். சைவம், வைணவம், கௌமாரம், சாக்தம், சௌரம், ஏனைய மதங்களாகும். இம்மதங்களுக்குரிய கடவுட் சிற்பங்களும் இக்குகையில் இடம்பெறுகின்றன. வலம்புரி இவ்வமைப்பு, குப்த களச்சூரி கலையில் முதன் முதலாக இடம் பெறுகிறதென்பர்.[15] பிள்ளையார்பட்டிச் சிற்பம், இரண்டு கைகளையுடையது. இக்குகைக் கல்வெட்டில் தேசி விநாயகர் என்று இவர் குறிக்கப்படுகிறார்.[15] வலம்புரி வடிவம் கொண்டது. இடது கை இடுப்பைப் பிடித்துள்ளது. வலது கையிலிருக்கும் பொருளை அடையாளம் காட்ட முடியவில்லை (படம் 27). இலிங்கமாக இருக்குமோவெனக் கருத இடமிருக்கிறது. இராவணன் கொண்டுவந்த இலிங்கத்தை விநாயகர் பெற்றுக் கொண்டதாக விநாயகபுராணம் கூறும்

செய்தியை இது நினைவுபடுத்துகிறதோ எனக் கருத இடமிருக்கிறது. திருப்பரங்குன்றக் கோயிலில், கணபதியின் பின் கைகளில் கரும்பு இடம்பெறுகிறது. வலது கீழ்க்கை மோதகத்தையும், இடது கீழ்க்கை தொடையின் மீதுமிருக்கிறது. மேலே கந்தர்வர்களும், கீழே கணங்களும் இடம்பெறுகின்றனர்.[17] மலையடிப்பட்டிக் குகைக் கோயிலில் சப்த மாதர்களுடன் காட்சி தருகிறார். முதலில் வீரபத்திரரும், இடையில் சப்த மாதர்களும், கடைசியில் விநாயகரும் இடம் பெறுகின்றனர்.[18] குடுமியாமலை விநாயகர் நான்கு திருக்கரங்களுடன் காட்சி தருகிறார். வலது மேற்கரத்தில் உடைந்த தந்தமும், இடது மேற்கரத்தில், இலை போன்ற வடிவில் ஒரு பொருள் இருக்கிறது. வலது கீழ்க்கரம் மோதகத்தைத் தாங்கியும், இடது கீழ்க்கரம் தொடைமீது அமர்ந்துமிருக்கிறது (படம் 28) கரண்டமகுடம் முத்தரையர் காலத்திலெழுந்த குகைக் கோயில்களிலும், கணபதி, புடைப்புச் சிற்பமாகத் தோற்றம் காட்டுகிறார். இச்சிற்பங்கள் வலம்புரியாகத்தோன்றும்.[19] மார்பில் புரிநூல் கிடையாது. வயிறு அதிகமாகப் பருத்து இருக்காது.

பாண்டியர்காலத்துக் கட்டுமானக் கோயில்களிலும், கணபதி சிற்பங்கள் இடம் பெறும். தென்காசி, விசுவநாதசுவாமி ஆலயத்திலிருக்கும் இலக்குமி கணபதி சிறந்த உதாரணமாகும். இக்கோயில் அரிகேசரி பராக்கிரம பாண்டியனால் கி.பி. 1446ல் கட்டப்பட்டதாகும். பத்துத் திருக்கரங்களைக் கொண்ட இச்சிற்பம், துதிக்கையில் தண்ணீர்க்கலசத்தைத் தாங்குகிறது. ஆறுகைகளில், சக்கரம், சங்கு, சூலம், பரசு, தந்தம், பரசம் இடம் பெறுகின்றன. பிற கைகளிலிருக்கும் பொருட்களை அடையாளம் காட்ட முடியவில்லை.[20] கும்பகோணம், நாகேசுரசுவாமி ஆலயத்திலிருக்கும் கணபதி உச்சிஷ்ட கணபதியாகும். நான்கு கைகளில், மூன்றில், பரசு, பாசம், மோதகம் இடம்பெறுகின்றன. ஒரு கை, தேவியின் பெண்குறியைத் தொடுகிறது. தேவியின் இடதுகை மலரைத் தாங்கியும், வலது கை கணபதியின் ஆண்குறியையும் பிடித்திருக்கிறது.[21] இச்சிற்பம், பிற்காலத்தைச் சார்ந்ததாகவிருக்கலாம். பல்லவர், சோழர் காலங்களில் இத்தகு சிற்பங்கள் இடம் பெறவில்லையெனலாம். நாகப்பட்டினம், நீலாயதாட்சியம்மன் ஆலய ஹேரம்ப கணபதியான உலோகத் திருமேனி கலை அம்சம் காட்டுகிறது. பத்துத் திருக்கரங்களில் இரண்டு அபய, வரத முத்திரைகள் காட்டுகின்றன. மற்ற நான்கு கைளில் பரசு, பாசம், தந்தம் அங்குசம் இடம் பெறுகின்றன. பிற நான்கு கைகளிலிருக்கும் பொருட்களை அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. நிற்கும் சிங்கத்தின் மீது அமர்ந்த நிலை. இச்சிற்பமும் காலத்தால் பிற்பட்டதாகும்.

விசயநகர, நாயக்கர் காலச் சிற்பங்கள் பெரிய அளவில் தோற்றம் காட்டுமெனலாம். மதுரை மீனாட்சியம்மன், ஆலய முக்குறுணிப்பிள்ளையார், சிதம்பரம் நடராசர் கோயில் வெளிச்சுற்று விநாயகர் கற்சிற்பங்கள் சிறந்த உதாரணங்களாகும். திருவாரூர்க் கோயில் திருச்சுற்றில் இடம்பெறும் இலக்குமி கணபதி கற்சிற்பம், விசயநகர காலத்தைச் சார்ந்ததாகும். திருக்கரங்களில், சங்கு, சக்கரம், பரசு, பாசம் போன்ற பொருட்கள் இடம் பெறுகின்றன. ஒரு கையில் அமிர்தகலசமிருக்கிறது. மற்றொரு கை, மடிமீதிருக்கும் தேவியை அணைக்கிறது. தேவியின் இடதுகரத்தில் மலர். வலது கரம், விநாயகரை அணைக்கிறது. துதிக்கையில் அமிர்த கலசமிருக்கிறது. கணபதியின் வலது கால்,

மூஞ்சிறு வாகனத்தின் முதுகிலிருக்கிறது. கணபதி பத்ர பீடத்தின் மீது உட்கார்ந்திருக்கிறார். (படம் 29). திருவொற்றியூர், ஆதிபுரீசுவரர் ஆலய பஞ்சமுககணபதி, கலைவனப்புக் காட்டுகிறது. பத்ரபீடத்தில் அமர்ந்த நிலை. முன்பக்கம், சிங்கம் இடம் பெறுகிறது. இருபது கைகள், இரண்டு கைகள் அபய, வரத முத்திரை காட்டுகின்றன. பிற கைகளில் தந்தம், கமண்டலம், அக்கமாலை, உளி, உலக்கை, பாசக்கயிறு, அங்குசம் போன்ற பொருட்கள் இடம் பெறுகின்றன. இக்கற்சிலையும் விசயநகர காலத்தைச் சார்ந்ததாகவிருக்கலாம் (படம் 29 A). எளவாநகர், அர்தநாரீசுவரர் ஆலய, வல்லபை கணபதி பத்ரபீடத்தின் மீது அமர்ந்த நிலையிலிருக்கிறார். இடது கால் மடக்கி, வலதுகால் தொங்குகிறது. பத்துத் திருக்கரங்கள். இடது தொடையில் தேவி, இரண்டு கால்களை நீட்டிய வண்ணம், அமர்ந்திருக்கிறாள். அவளது இடது கை மலரையும், வலது கை கணபதியையும் அணைக்கிறது. கணபதியின் பத்துத் திருக்கரங்களில் பல்வேறு ஆயுதங்கள் இடம்பெறுகின்றன. (படம் 29 B). எளவாநகர், அர்தநாரீசுவரர் ஆலய உச்சிஷ்டகணபதி பத்ரபீடத்தின்மீது இருந்த நிலையில், கணபதி இரு கரங்களுடன் காட்சி தருகிறார். தேவி, கணபதியின் இடது மடியில் அமர்ந்துள்ளார். இடது கையில் மலர், வலது கை தொங்கிய நிலையில் கணபதியின் ஆண்குறியைத் தொட்டிருக்கிறது. கணபதியின் இடது கை, தேவியை அணைக்கிறது. வலது கை உடைந்திருக்கிறது (படம் 29 c) விசய நகர கால மண்டபங்களில், தூண்களில் கணபதி சிற்பங்கள் இடம்பெறுவதுண்டு. சிறந்த உதாரணமாகத் திருவெண்கொடு, சுவேதாரண்ய சுவாமி ஆலய அகோரமூர்த்தி முன்மண்டபத்தூணை எடுத்துக்காட்டலாம். இருந்த, நடனநிலைகளில், நான்கு திருக்கரங்களோடு தோற்றம் காட்டுகிறார். கரங்களில், பரசு, அங்குசம், மோதகம், தந்தம் இடம்பெறும்.

சுதை, மரச் சிற்பங்கள்

சோழர், பாண்டிய விசயநகர, நாயக்கர் காலக் கோபுரங்களில், கணபதியின் சுதைத் திருவுருவங்கள் இடம் பெறுகின்றன. இருந்த, நின்ற, நடனநிலைகளில் உருவங்களுண்டு.

மரத்தேர்களில், பலவிதமான கணபதி உருவங்கள் இடம்பெறுகின்றன. மூஞ்சிறு வாகனத்தில், உட்கார்ந்த நிலையில் அதிக உருவங்கள் இடம் பெறுகின்றன.[22] கைகளில் பாசம், அங்குசம், உடைந்த தந்தம், மாம்பழம் இடம் பெறும். இவ்வித அமைப்பு முறையைக் கொண்ட கணபதியை ஸ்ரீ தத்துவநிதி நூல், விஜய கணபதியென்றும் குறிப்பிடுகிறது. பன்னிரண்டு கைகளுடைய மகாகணபதி, நான்கு கைகளுடைய நடன கணபதி (வாகனம் இல்லாமல் தோற்றம் காட்டுகிற) சக்தி கணபதி, ஹேரம்ப கணபதி, உச்சிஷ்ட கணபதி சிற்பங்கள் தேரில் இடம்பெறுகின்றன.[23] தஞ்சைப்பெரிய கோயில் கல்வெட்டுக்களில் ஆலயத்துப் பிள்ளையார், பரிவாராலயத்துப் பிள்ளையார்[24] என்ற பெயர்கள் கணபதியைக் குறிக்கின்றன. பிற சோழர் காலக் கல்வெட்டுகளில் கணபதி, கணபதி பிச்சன், சாந்தங் கணபதி, நாரண கணபதி, கண்வதியார், கணபதி, கணபதிமால்[24a] கணபுரத்தேவன் என்ற பெயர்கள் இடம் பெறுவது கணபதி வழிபாடு சிறப்புப்பெற்றிருந்ததை நினைவூட்டுகிறது.

### இருபதாம் நூற்றாண்டைச் சார்ந்த சிற்பங்கள்

திருச்சி மாவட்டம் கோயில்பாளையம் கோயிலிலமைந்த உலோகத் திருமேனியில், தாமரை பீடத்தின் மீது நின்றநிலையிலிருக்கிறார். வலதுகால் ஊன்றி, இடதுகால் தூக்கிய நிலை. மேல் கைகளில் பரசும், பாசமும், வலது கீழ்க்கை அபயமுத்திரையும், இடது கீழ்க்கை, மோதகத்தையும் தாங்குகிறது. நீண்ட துதிக்கை, இடது கீழ்க்கரத்தைத் தொட்டிருக்கிறது. (படம் 29D) காவிரிப்பூம்பட்டினம் பல்லவனீசுவரர் கோயில், உலோகத் திருமேனியில் கணபதி பத்மபீடத்தின்மீது நின்ற நிலையிலிருக்கிறார். மேலிரு கைகளில் பரசும், பாசமும் இடம் பெறுகின்றன. இடது கீழ்க்கை கடகமுத்திரையில் தந்தந்தைத் தாங்குகிறது. வலது கீழ்க்கையில் மோதகம் இடம் பெறும். (படம் 29E).

### வரலாற்றுப் பின்னணிக்காட்டும் சிற்பங்கள்

1. திருச்செங்காட்டங்குடி, கணபதீசுவரர் ஆலய கணபதி (படம் 30)

பத்ம பீடத்தின்மீது அமர்ந்த நிலை. நான்கு திருக்கரங்கள். மேலிரு கைகளில், பரசும், பாசமும் இடம்பெறுகிறது. வலதுகீழ்க்கையில் தந்தமும், இடது கீழ்க்கரத்தில் மோதகமும் இடம்பெறுகிறது. துதிக்கை இடதுபுறமாக வளைந்திருக்கிறது. துதிக்கையில் மோதகமும் இடம்பெறுகிறது. தலையணி, கரண்ட மகுடம் போன்று தெரியவில்லை. துதிக்கை இருந்தாலும் மனிதமுகம் காட்டுகிறதென்பர்.[25] பல்லவர் காலத்தில் முதலாம் நரசிம்மவர்மனின் படைத்தலைவர் பரஞ்சோதியென்பார், சாளுக்கியர்களின் தலைநகரமான வாதாபி மீது போர் தொடுத்து, வெற்றிபெற்றதன் அடையாளமாக அங்கு வெற்றித்தூண் நிறுவி, பின் திரும்பும்போது, ஓர் விநாயகர் சிலையைக்கொண்டு வந்தாரென்றும், பின்பு அச்சிலையைத் திருச்செங்காட்டங்குடி ஆலயத்தில், திருச்சுற்றில் அமைத்தாரென்ற செய்தியுமுண்டு.[26] இன்றும் இவ்வூர் மக்கள் வாதாபி கணபதியென்றே அழைக்கின்றனர். பாண்டிய மன்னன் மாறவர்மன் சுந்தரபாண்டியன், சோழநாட்டை வெற்றிகொண்டு, பட்டினப்பாலை பாடிய புலவருக்குச் சோழ மன்னன் அளித்த மண்டபத்தைத் தவிர மற்றக்கோயில்களையும், பிற நினைவுச் சின்னங்களையும் தரை மட்டம் ஆக்கினான் என்பது போல், பரஞ்சோதியாரும், வாதாபியை வெற்றி கொண்டபின், எரியூட்டி, கணபதி சிலையை மட்டும் நினைவுச் சின்னமாகக் கொண்டுவந்து, திருச்செங் காட்டங்குடி ஆலயத்தில் நிறுவினான் என்பர்.[27] கர்நாடக இசையின் மும்மூர்த்திகளுள் ஒருவரான முத்துசுவாமி தீட்சதர் என்பார், தமது கீர்த்தனையில், வாதாபி கணபதியைக் குறிப்பிடுகிறார். மேற்குறித்த கருத்துக்களால், சாளுக்கிய நாட்டிலிருந்து, இச்சிலை கொண்டுவரப்பட்டிருக்கலாமென எண்ணத் தோன்றுகிறது. ஆனால் கல்வெட்டு ஆதாரம் கிடையாது. வாதாபியிலிருந்து கொண்டுவந்த பொருட்களை, சேக்கிழார் குறிப்பிடுகிறார். அதில் கணபதி சிலை இடம்பெறவில்லை.[28] இன்னும் சில ஆராய்ச்சிகளுக்குப் பிறகே உண்மை கிடைக்குமெனலாம்.

கும்பகோணம் நாகேசுவரசுவாமி ஆலய விநாயகரும், வடஇந்திய வெற்றியின் நினைவாக, சோழ மன்னன் இராஜேந்திரன் கொண்டு வந்திருக்கலாமென எண்ணத் தோன்றுகிறது. (படம் 31) பத்திரபீடத்தின் மீது, பத்ம பீடத்தில் நின்ற கோலம் காட்டுகிறார். நான்கு கைகள், கைகளில் தந்தம், பாத்திரத்துடன் கூடிய பழங்கள், அக்கமாலை, கெதை இடம் பெறுகிறது. உதரபந்தத்தில் நாகம் இடம் பெறுகிறது.

திருவாசியின் மேற்பகுதியில், கந்தர்வச் சிற்பங்கள் இடம் பெறுகிறது. பல்வேறு அடையாளம் தெரியாத சின்னங்களும் இடம் பெறுகின்றன. இக்கலையழகு, தமிழகக் கலையிலிருந்து வேறுபட்டதாகும்.[29] இச்சிலை, சோழ மன்னன் இராஜேந்திரன் வெற்றியின் நினைவாக, கிழக்கு கங்கைப்பகுதியிலிருந்து கொண்டுவரப்பட்டிருக்கலாம். இதன் காலம், பத்தாம்நூற்றாண்டெனக்கருத இடமிருக்கிறது.[30] இராஜேந்திரன் கங்கை வெற்றியைத் தமிழ் இலக்கியங்களான, கலிங்கத்துப்பரணி,[31] விக்கிரம சோழனுலா[32] குலோத்துங்க சோழனுலா[33] நூல்கள் விவரிக்கின்றன. கிழக்கு வங்காளத்தில், பாலவம்ச ஆட்சியில் பால கலைப்பாணியில் மேற்குறிப்பிட்ட கலைவேலைப்பாடு கொண்ட சிற்பங்கள் இடம் பெறுகின்றனதென்பது குறிப்பிடத்தகுந்த செய்தியாகும்.[34] தஞ்சைக் கலைக்கூடத்திலிருக்கும் உலோகத் திருமேனியில், உதரபந்தத்தில் நாகம் இடம் பெறுகிறது. ஹொய்சல சிற்பங்களிலும் நாகம் இடம்பெறும்.[36] மேற்குறித்த கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு, இச்சிற்பம் கங்கைப் பகுதியிலிருந்து கொண்டுவரப்பட்டதெனக் கருதலாம். திருவானைக்கா – ஜம்புகேசுவரர் உலோகத்திருமேனியிலும் கைகளில் கெதையும், பழத்துடன்கூடிய பாத்திரமும் இருக்கிறது (படம் 32). இவ்வமைப்பு முறையும் வட இந்தியத் தாக்கமெனலாம். புதுக்கோட்டை அரசு அருங்காட்சியகத்திலிருக்கும், பாம்பின்மீது நடனமாடும் விநாயகர் உலோகத் திருமேனியைக் கண்ணுறலாம் (படம் 33). இடது கால், பாம்பின் ஐந்துதலையில் ஊன்றியிருக்கிறது. வலது கால் தூக்கிய நிலை. ஆறு திருக்கரங்களில் நான்கில் பரசு, பாசம், சக்கரம், மோதகம் இடம் பெறுகிறது. ஒரு கை பாம்பின் வாலைப்பிடித்திருக்கிறது. ஒரு கையிலிருக்கும் பொருள் தெரியவில்லை. இப்புது விநாயகர் எதனால் வடிக்கப்பட்டதெனத் தெரியவில்லை.[37] பிரம்ம வைவர்த்த புராணத்தில், கணேசர், முதலில் கிருஷ்ணனாக, மனித வடிவத்தில் இருந்தாரென்றும், சனியின் தொடர்பால், தலைபிரிக்கப்பட்டதென்றும், பிறகு யானையின் தலைபொருத்தப்பட்டதென்றும் கூறுகிறது.[38] இப்புராணப் பின்னணியில் இச்சிற்பம் அமைந்திருக்கிறதென்று கருதினும் பொருந்துமெனலாம். வைணவ மதத்தில், கிருஷ்ணனைப் பாம்பின் மீது நடனமாடும், காளிய நர்த்தன கிருஷ்ணராகக் காட்டியிருப்பது போன்று, இந்து மதத்தில் காட்ட, விநாயகரைப் பாம்பின்மீது நடனமாடவைத்துச் சிற்பம் அமைத்தார்களோவெனக் கருதவும் இடமிருக்கிறது. கலைஅழகைக்கொண்டு, இதன் காலத்தை கிபி. பதினைந்தாம் நூற்றாண்டெனக் கருத இடமிருக்கிறது.

மேற்குறிப்பிடப்பட்ட விநாயகர் வடிவங்களுக்குத் தத்துவப் பின்னணி இருந்தாலும், அவை காட்டும் கலையழகு பாராட்டுதற்குரியதாகும். ஒரு நாட்டின் கருவாக அமையும், கலைச் செல்வங்களை என்றென்றும் காப்போம்.

---

அடிக்குறிப்புகள்

1 Gopinatha Rao, T.A., **Elements of Hindu Iconography**, Volume I, Part I (Madras 1985), p. 53.

2. ஜெயா, பி., விநாயகர் வழிபாடு, (நாகர்கோயில், 1972) ப.18.

3. Subrahmanyam, N., **Sangam Polity** (Madras, 1966), pp. 306 - 61.

4. வானமாமலை, நா., தமிழர் நாட்டுப் பாடல்கள், (சென்னை, 1964), ப.19.

5. வேங்கடசாமி, சீனி, பௌத்தமும், தமிழும் (சென்னை, 1972), ப.70.

6. பிள்ளை, கா. சு., தமிழர் சமயம் (சென்னை, 1969), ப.18
7. மறைமலை அடிகள், தமிழர் மதம் (சென்னை, 1958), ப.169.
8. ஏகாம்பர நாதன், ஏ., கோயிலும் இறைவழிபாடும் (சென்னை, 1986), ப.5.
9. (a) Srinivasan K.R., "Some aspects of Religion as revealed by the monuments and literature of the South" **Journal of the Madras University**, (Madras, 1960), p.165.
(b) Srinivasan, K.R., **Cave Temples of the Pallavas**. (New Delhi, 1964), p.64.
10. Srinivasan, K.R., **Temples of South India**, (Delhi. 1972), p.117.
11 Alice Getty, **Ganesa**, (Delhi, 1971), p.27.
12. பாலசுப்பிரமணியம், எஸ்.ஆர். சோழர் கலைப்பாணி, (சென்னை, 1966), படம் எண் 44.
13. Balasubrahmanyam, **Early Chola Temples**, (Madras, 1971), Plate No. 33.
14. Balasubramanyam, **Middle Chola Temples**, (Haryana 1975), Plate.102.
15. Odile Divakaran, "Early Brahmanical Caves in the Pandyan Country", **Kusumanjali** Ed. Nagaraja Rao, (Delhi, 1987), p.176.
16. Nagaswamy, R., "Some contributions of the Pandya to South Indian Art", **Artibus Asiae**, Vol. XXVII.
17. Kalidoss, Raju, "Structure and Organisation of the Tirupparankunram Cave", **Annali**, Vol. 51, (Napoli, 1991), p. 272.
18. Kalidoss, Raju, "The Malaiyadippatti Cave Temple", **South Asian Studies**, (1988), p.60.
19. இராசமாணிக்கம், தி., இந்துசமயக் கடவுள்களின் திருவுருவங்கள், (திருநெல்வேலி, 1924), ப.4
20. Gopinatha Rao, **Elements of Hindu Iconography**, Part I, Vol. I, (Delhi, 1985), plate XI, Fig. 1.
21. Ibid., Fig. 2.
22. Kalidoss, Raju., **Temple Cars of Medieval Tamilaham**, (Madurai, 1989), p.115.
23. **Ibid.**, pp. 115-121.
24. Krishnasastri, H., **South Indian Images of Gods and Goddesses**, (Madras, 1916), p. 176.
24(a) இராகவையங்கார், மு., பெருந்தொகை, மதுரை, 1935), எண். 1775.
25. Srinivasan, T.N., **A Hand Book of South Indian Images**, (Tirupati, 1954), p.89.
26. சுப்பிரமணியன், ந., தமிழக வரலாறு (தமிழ்நாடு 1952), ப.94.
27. Arunachalam., M., "Purananuru and Rethinking on Ganapati worship in Tamil Nadu" **South Indian Studies**, ed., Nagaswamy, R., Madras, 1979), pp. 31-46.
28. பன்மணியும் நிதிக்குவையும் பகட்டினமும் பரித் தொகையும் இன்னன எண் ணிலகவர்ந்தே இகலரசன் முன் கொணர்ந்தார்.

29. Mahalingam, T.V., **Nageswaraswamy Temple, Kumbakonam,** (Madras, 1967), p.61.
30. Sivaramamurti, C., **Royal Conquests and Cultural Migration in South India and the Deccan,** (Calcutta, 1955).
31. களி கங்கை நீருண்ண மண்ணையில்
காய்சினத் தொடே கலவு செம்பியன்
குளிறு தெண்டிரைக் குரை கடாரமுங்
கொண்டு மண்டலங்குடையுள் வைத்ததும்
– கலிங்கத்துப்பரணி, பா. 189
32. கங்கா நதியுங் கடாரங் கைக்கொண்டு
கங்கா புரிபுரந்த கற்பகம்
– விக்கிரமசோழனுலா – வரிகள் 34–36
33. கங்கா நதியுங் கடாரமும் கைக்கொண்டு
சிங்கா தனத்திருந்த செம்பியர் கோன்
– குலோத்துங்கன் சோழனுலா–வரிகள்– 49–50.
34. கோவிந்தசாமி, எஸ்.கே., "பாலகண பதியைப் பற்றிய ஓர் குறிப்பு: கும்பகோணம்" இந்தியக் கலை வரலாறு – சஞ்சிகை, தொகுதி 13, ப. 26.
35. Craven Roy, C., **Indian art** (London, 1986), plate. 120.
36. Sivaramamurti, C., **Early Eastern Chalakya Sculptures,** Culcutta, 1962, plate XXI.
37. வேலுச்சாமி சுதந்திரன், ஆ., "பாம்பின் தலைமீது ஆடும் விநாயகர்", ஆவணம், இதழ் – 6, 1995.
38. Gopinatha Rao, T.A., **Elements of Hindu Iconography,** Vol. I, Part I Delhi, 1985), p. 46.

# கந்தனின் கவின்மிகு கோலங்கள்

வலையப்பேட்டை ரா. கிருஷ்ணன்
திருவல்லிக்கேணி, சென்னை 5

---

ஒருநாமம் ஒருருவம் ஒன்றுமிலார்க்கு ஆயிரம் திருநாமம் பாடிப் பரவுவது வழிபாடு. வழிபாட்டிற்குரிய முதல் அங்கமாகத் திகழ்வது இறைவன் திருவுருவம். இப்படியன், இந்நிறத்தன் என்று எழுதிக் காட்டொணு இறைவனை நம் முன்னேர் எப்படியெல்லாம் கண்டு மகிழ்ந்து வணங்கி நமக்கும் காட்டிச் சென்றுள்ளனர் என்பதை நினைக்கும் போது வியப்பாகவே உள்ளது. இறைவன் தனது பெருங்கருணையால் வேண்டுவார்க்கு வேண்டும் வடிவங்களில் திருக்காட்சி தந்தருளியதோடு, அக்கோலங்களில் தன்னை வழிபடுவோர்க்கும் என்றும் அருளைச் சொரிகின்ருன். இதுவே இந்து சமயத்தின் தனிச் சிறப்பும் மாண்பும் ஆகும்.

இவ்வுலகுக்கு எந்நாளும் அருள்புரிவதற்காக வெளிப்பட்ட ஒரு மின்னல் சக்தியே முருகன். "ஸ்கந்த" என்ற வடமொழிச் சொல்லுக்கு "வெளிப்படுதல்" என்று பொருள்: மேகத்திலிருந்து மின்னல் வெளிப்படுதல் போன்று சிவஜோதியிலிருந்து வெளிப்பட்ட ஆறு பொறிகள், ஆறுமுக சுவாமியாகி ஸ்கந்தன் எனப் பெயர் கொண்டது. ஆகவே சிவசக்தி ஜோதியில் ஜனித்த பேரொளிப் பிழம்பாக முருகன் திகழ்கின்ருன். அவன் பரமபராக்ரமசாலி; பேரருட் சக்தி வடிவினனின் ஞான பலமும் முருகனுக்கே அதிகம் என்று காட்டவே சிவபெருமானும் முருகவேளிடம் உபதேசம் பெற்றுக் கொண்டார்.

தீப்பொறியாகத் தோன்றி, வானிலிருந்து வாயுவால் சுமந்து வரப்பெற்று கங்கையில் விடப்பெற்று, சரவணப் பொய்கையில் வளர்ந்த முருகன் தீ, வான், வாயு, நீர், பூமி என்னும் ஐம்பூதத் தொடர்புடையவனுகத் திகழ்கிருன். நெருப்பையும் எரிக்கும் ஞானுக்கினியாக முருகன் விளங்குகிருன்.

தந்தை–நெருப்பு; தாய்–நீர் (கங்கை); மகனே ஜோதி வடிவினன். தந்தை–ஸ்தாணு (மரம்); தாய்–அபர்ணு (கொடி); மகனே விசாகன் (கீழ்க்கன்று) என்ற நயமும் முருகன் தத்துவத்தில் காணப்படுகிறது.

சிவபெருமானின் ஐந்து முகத்தோடு சக்தியின்முகமும் (சித்சக்தியாகிய ஆருவதறிவுக்குப் பொருளாவது அதோமுகம்) சேர்ந்து ஆறுமுகமாயிற்று. முருகனிடத்தில் மூன்று சக்திகள் உள்ளன. அவை

1. இச்சா சக்தி – (விழைவாற்றல்) வள்ளி – இகம்
2. கிரியா சக்தி – (செயலாற்றல்) தேவயானை – பரம்
3. ஞானசக்தி – (அறிவாற்றல்) வேல் – வீடு

இச்சா சக்தியின் வடிவமே வள்ளியம்மை. இவள் கரிய நிறம் உடையவள்; முருகனின் வலப்பக்கத்தில் வீற்றிருப்பார்; கையில் தாமரை ஏந்தியிருப்பார். போகியாய் இருந்து உயிர்க்குப்போகத்தைப் புரிதல் இறைவன் தன்மையாதலின், உலகில் இல்வாழ்க்கை நடத்தற் பொருட்டு முருகன் வள்ளியம்மையாரொடு தன் ஒரு திருமுகத்தாற் பேசி, மகிழ்ந்து நகையமர்ந்திருக்கின்ருன்.

முருகனின் மற்றெரு சக்தி தெய்வயானை. இவ்வம்மையை "மறுஇல் கற்பின் வாணுதல்" என்று நக்கீரர் போற்றுவார். கிரியா சக்தியாகிய தெய்வானையம்மை செந்நிறம் வாய்ந்தவர்; முருகனின் இடப்பால் விளங்குபவர்: கருங்குவளை மலரைக் கையில் ஏந்தியிருப்பவர்.

முருகனிடம் அமைந்த மூன்ருவது சக்தி ஞானசக்தி. அதுவே வேலாயுதமாக விளங்குகின்றது. வெல்லும் தன்மையுடையது வேல். எல்லாவற்றையும் வெல்வது அறிவாற்றல். அறிவு ஆழமும், அகலமும், கூர்மையும் உடையது. "சக்திதன் வடிவே தென்னில் தடையிலா ஞானமாகும்" என்பது சிவஞான சித்தியார் வாக்கு. ஞானமே, அஞ்ஞானத்தை வெல்ல வல்லது.

முருகன் என்றவுடன் அவனது மயிலும் சேவலும் நம் கண் முன் நிற்கின்றன. முருகனுக்கு மூன்று மயில்கள் உண்டு. சூரபதுமனை அழிக்கும் முன்னரே முருகனுக்கு மயில் வாகனம் இருந்தது. இந்திரனும் மயிலாக முருகனைத் தாங்கினுன். சூரன் அழிந்தபின் அவனது ஒரு பாதி மயிலாகியது. மயில் தனது அழகால் யாவரையும் மயக்கவல்லது. எனவே அதனை மாயை என்பர். கோழி ஊர்த்துவ மாயை; மயில் அதோமாயை. கோழி நாதத்துவம் எனில் மயில் விந்து தத்துவம். நாதம் ஒலி வடிவினது; விந்து ஒளி வடிவினது. விந்து தத்துவம் ஆகிய மயில் கண் கவரும் ஒளியுடையதாய்ப் பலவகை நிறங்களைக் கொண்டு திகழ்தல் காணலாம். தோகையை விரித்து ஆடும் மயிலின் தோற்றம் ஓங்காரம் போல் ஒளிர்தல் பற்றியே "ஓங்காரத்துள்ளே முருகன் உருவங்கண்டு தூங்குதல் வேண்டும்" என்று கந்தபுராணம் கூறுகின்றது. சேவலாகிய கோழி ஒளியை விரும்புவது. எனவே அது அறியாமை இருளைப்போக்கி மெய்யறிவாகிய ஒளியைப் பரப்பும் முருகனின் கொடியாக விளங்குவது பொருத்தமே. வைகறையில் கோழி கூவுதல், ஓங்கார மந்திரத்தை ஒலி வடிவால் உலகுக்கு உணர்த்துவதாகும். முருகப் பெருமான் கோழிக் கொடி ஏந்தி நம்மையெல்லாம் சிவஞானப் பேரொளியைத் துய்க்கச் செய்தருளுகின்ருர்.

முருகனுடைய பல்வேறு வடிவங்கள் பற்றியும் கோயில்கள் பற்றியும் பண்டைய வடமொழிப் புராண நூல்களிலும் ஆகமங்களிலும் விரிவாகக் காட்டப் பெற்றுள்ளன. ஊரின் வடபுறத்தில் தான் முருகனுக்குக் கோயில் கட்டவேண்டும் என்று அக்கினி புராணம் கூறும். (தச்சூர் வடக்காகும் மார்க்கத்தமர்ந்த பெருமாளே என்று திருப்புகழில் அருணகிரிநாதசுவாமிகள் கூறுவது இதனை உறுதிப்படுத்தும். தற்காலத்தில் இத்தலம் ஆண்டார்குப்பம் என வழங்கப்படுகிறது. ஊருக்குக் கிழக்குத் திசை நீங்கலாக ஏனைய திசைகளில் முருகனுக்குக் கோயில் கட்டலாம்).

குப்தர் காலத்தைச் சேர்ந்த "பிரஹத் ஸம்ஹிதை" என்னும் நூல் (கி.பி. 5ஆம் நூற்ருண்டு) முருகனை இளைஞனுக மயில் மீது அமர்ந்த கோலத்தில் கையில் வேலுடன் விளங்குமாறு அமைக்க வேண்டும் என்று குறிப்பிடுகிறது.

"விஷ்ணு தருமோத்தரம்" என்ற நூலில் முருகவேள் ஆறு முகங்களுடனும் நான்கு கைகளுடனும் எழில்மிக்க மயில்மீது அமர்ந்தவனுகவும், தலையில் குடுமியும், வலக்கைகளில் கோழியும் மணியும், இடக்கைகளில் வெற்றிக் கொடியும் வேலும் கொண்டவனுகவும் காட்டப்படுகிறது.

"சமரங்கன சூத்திரதாரம்" என்ற நூலில் முருகன் அழகிய இளம் பிள்ளையாக ஒரு முகம் அல்லது ஆறு முகங்கள் கொண்டவனாகக் காட்டப்படுகின்றது. நகரங்களில் வைக்கப்பெறும் வடிவங்களில் 12 கரங்களும், கிராமங்களில் வைக்கப்பெறும் வடிவங்களில் இரண்டு கரங்களும், ஏனைய இடங்களில் ஆறு கரங்களிலும் இருக்கலாம் எனக் கூறப்படுகிறது.

"சிவபுராணத்தில்" முருகவேள் நான்கு கரங்கள் கொண்டவராகக் காட்டப் பெறுகிறார். "குமார தந்திரம்" என்ற நூலில் முருகப்பெருமான் திருக்கோயில் அமைக்கும் விதம் பற்றி விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

"தியானரத்னாவளி" என்ற நூலில் முருகன் வடிவங்களை மூன்று வகையாகக் காணலாம். அவர் சாத்துவிக வடிவம் ஏற்கும் போது ஒரு முகமும், இரு கரங்களும் கொண்டு திகழ்கின்றார். அவரது கரங்களில் சக்தி ஆயுதமும் தாமரையும் திகழ்கின்றன. அவரது இராஜஸ வடிவத்தில் ஒரு முகமும், நான்கு கரங்களும் முறையே வஜ்ரம், சக்தி, அபய, வரதம் என்ற நிலையில் அமைகின்றன. தாமஸ வடிவத்தில் ஆறு முகமும் பன்னிரு கரங்களும் கொண்டு காட்சியளிக்கின்றார். சக்தி, வஜ்ரம், வாள், திரிசூலம், பாசம், தனுசு, சக்கரம், கேடயம், குக்குடம், அங்குசம் ஆகிய ஆயுதங்களுடன் இரு கரங்கள் அபய வரதமாகத் திகழ்கின்றன.

"சனத்குமார பிரச்ன குமார தந்திரம்" என்ற நூலில் முருகனது பதினாறு வடிவங்கள் கீழ்க்கண்டவாறு காட்டப்படுகின்றன.

1. ஞானசக்திதரன், 2. ஸ்கந்தன், 3. அக்னிஜாதா, 4. சௌரபேயன், 5. காங்கேயன், 6. சரவணபவன், 7. கார்த்திகேயன், 8. குமாரன், 9. சண்முகன், 10. தாரகாரி, 11. சேனாபதி, 12. குகன், 13. பிரம்மசாரி, 14. சிவதேசிகன், 15. கிரௌஞ்சதாரி, 16. சிகிவாகனர்.

பேரறிஞர் டி.ஏ. கோபிநாதராவ் அவர்கள் குமார தந்திரம் என்ற நூலில் மற்றொரு வகையான 16 வடிவங்களைக் காட்டுகிறார்.

1. சக்திதரன், 2. ஸ்கந்தன், 3. தேவசேனாபதி, 4. சுப்ரமணியன், 5. கஜவாகனன், 6. சரவணபவன், 7. கார்த்திகேயன், 8. குமாரன், 9. சண்முகன், 10. தாரகாரி, 11. சேனானி, 12. பிரம்ம சாஸ்தா, 13. வள்ளி கல்யாணசுந்தரர், 14. பாலசுவாமி, 15. கிரௌஞ்ச பேதனர், 16. சிகிவாகனர்.

மைசூர் கிருஷ்ணராஜா என்பவர் தொகுத்த "ஸ்ரீதத்வநிதி" என்ற நூலில் 17 வடிவங்கள் கூறப்பட்டுள்ளன. அதில் சனத்குமார ப்ரச்ன குமாரதந்திரம் என்ற சிற்ப நூலில் கூறப்பட்ட 16 வடிவங்களுடன் வேலாயுத சுப்ரமண்யர் என்ற வடிவமும் சேர்ந்துள்ளது. (இந்நூலைத் தஞ்சை சரஸ்வதிமஹால் நூல்நிலையம் பதிப்பித்துள்ளது).

அருணகிரிநாத சுவாமிகள் முருகப்பெருமானைப் பாடியுள்ள பாங்கில் காணும் போது, முருகவேளின் வடிவங்களைக் கீழ்க்கண்டவாறு பிரித்துக் குறிப்பிடலாம்.

குழந்தை வடிவங்கள்: 1. பாலசுப்பிரமண்யன், 2. காங்கேயன், 3. கார்த்திகேயன், 4. குழந்தைவேலன், 5. சரவணபவன், 6. ஸ்கந்தன்.

பிரமசாரி வடிவங்கள்: 1. தேசிக சுப்ரமண்யன், 2. குருபரன், 3. ஞானசக்திதரன்

தவ வடிவம்: யோகாசார்ய மூர்த்தி

பராக்ரம வடிவம்: 1. அஜாரூடர், 2. பிரம்மசாஸ்தா, 3. வில்லேந்திய வேலன் 4. கஜாரூடர், 5. சேனுபதி, 6. சிகிவாகனர், 7. தாரகாரி, 8. கிரௌஞ்சபேதனர், 9. சகலகலா வல்லப மூர்த்தி, 10. வராஹோன்மத்த பங்கமூர்த்தி

தேவியருடன் கூடிய வடிவங்கள்: 1. தேவசேனுபதி, 2. வள்ளி கல்யாணமூர்த்தி 3. சண்முகர், 4. குமாரர்

பிற வடிவங்கள்: 1. குகன், 2. ஹ்ருதயகமல மூர்த்தி, (இதயத் தாமரையில் விளங்குபவர்) 3. சிவனை வழிபடும் முருகன், 4. சதாசிவ மூர்த்தி, 5. யாகரட்சக மூர்த்தி (யாகம் வேள்வியைக் காப்பவர்) 6. விசுவரூப மூர்த்தி, 7. நடனமூர்த்தி, 8. அகத்தியருக்கு உபதேசம்.

தலமூர்த்திகள்: 1. சிதம்பரம் வடிவங்கள், 2. காஞ்சி குமர வடிவங்கள், 3. சீர்காழி திருஞானசம்பந்த முருகன், 4. திருச்செந்தூர் வடிவங்கள் (அலைவாயுகந்த பெருமாள்; குமரவிடங்கர்) 5. திருத்தணிகை வடிவங்கள், 6. திருப்பழநி வடிவங்கள், 7. திருவருணை வடிவங்கள், என்று இவ்வாருகத் திருப்புகழில் அருணகிரிநாதர் முருகனது வடிவங்களைப் போற்றுகிருர்.

1. ஞானசக்திதரன்

ஞானசக்தியைத் தரித்தவன் என்று பொருள்தரும். இத்திருப் பெயருடன் விளங்கும் முருகவேள் ஞானசக்தியாகிய வேலினைத் தமது வலக்கையில் ஏந்தி, இடக்கையைக் கட்யவலம்பித (இடுப்பில் வைத்த) முத்திரையுடன் காட்சியளிக்கும் இவ்வடிவம் குமார தந்திரத்தில் ஒரு முகமும் இரு கரங்களும் கொண்ட கோலமாகக் காட்டப்படுகிறது.

திருத்தணிகை மூலவர் ஞானசக்திதரர் வடிவம். திருச்சி மாவட்டம் பழுவூரிலும் தஞ்சை மாவட்டம் திருவையாறு அருகில் உள்ள திருக்கண்டியூரிலும் (அஷ்ட வீரட் டதலம்) ஞானசக்திதரர்வடிவம் வலக்கையில் ஜபமாலையும் இடக்கரத்தில் வஜ்ர சக்தியும் கொண்டு திகழ்கிருர். இவரை 'ஞானஸ்கந்தர்' என்று அழைக்கிருர்கள். ஞானசக்திதரர் வடிவ அமைப்பை (குமார தந்திரத்தில் உள்ளது போல்) தணிகைப் புராணம் கீழ்வருமாறு காட்டுகின்றது.

"இச்சா ஞானக் கிரியை எனும் இவை மூன்றிலையாய்க் கிளைத்தெழுந்திட்(டு)
அச்சான் ஆழி யறச்சுவற்றும் அயில்வேல் ஒருகை வலத்தமைத்து
நச்சா தவரைத் தெறும்ஒருகை நளினக் குறங்கின் அமைத்திமையோர்
விச்சா தரர்சூழ் ஞானசக்தி தரனது உருவம் விதிப்போரும்"

– அகத்தியன் அருள்பெறு படலம் – 64

(கவிராட்சசக் கச்சியப்பமுனிவர் இயற்றிய தணிகைப் புராணம்)

வெற்றியைத்தரும் வேலைக் கையிலேந்தியவன் ஆதலின் இம் மூர்த்தியை வழிபட எடுத்த காரியம் யாவிலும் வெற்றிகிட்டும்.

2. கந்தசுவாமி

'ஸ்கந்தன்' என்று வடமொழியிலும், 'கந்தன்' என்று தமிழிலும் போற்றப் பெறுகின்ருன் முருகன். ஸ்கந்தன் என்ற சொல்லுக்கு வெளிப்படுவன் என்று

பொருள். கந்து – நடுதறி; யாவர்க்கும் பற்றுக் கோடாய்த் திகழ்பவன். ஆன்மாவைக் கட்டும் நடுதறி. 'கந்து' என்ற சொல்லுக்குத் தண்டாயுதம் என்று பொருள் கொண்டால் தண்டாயுதம் கொண்டவன் என்ற பொருளும் வரும். சுவாமிமலையில் சுவாமிநாதப் பெருமான் கந்தசுவாமி வடிவமே.

நின்ற கோலத்தில் ஒரு முகமும் இரு கரங்களும் கொண்டவர் கந்தசுவாமி. வலக்கரத்தில் தண்டாயுதமும் இடக்கரம் குளங்கத்திலும் (இடுப்பில் ஊன்றியவாறு) உருத்திராக்கம், மணிவடம் அணிந்து கோவணிதாரியாக விளங்குகிருர் என்று குமாரதந்திரம் காட்டுகிறது.

ஸ்ரீதத்வ நிதியில் 'ஒரு முகமும் நான்கு கரங்களும் முறையே அபயம், வரதம் கோழி, வஜ்ரசக்தி கொண்டு திகழ்கின்றன. தாமரைமீது அமர்ந்து கரண்ட மகுடமுடன் விளங்குகிருர் கந்தன்.' தணிகைப் புராணத்தில் கூறப்படும் கந்தன் திருவுருவம் பழநி தண்டாயுதபாணியையே உறுதிப்படுத்தும்.

"வைவாய்க் கணிச்சிப் படையென்ன வதிவித் திடுங்கோ வணத்தண்டு
கைவாய் வலத்தின் அமைத்தருளி கடியில் இடக்கை பதித்தருளி
ஐவாய் வழங்கும் பொறிபுலனை யவித்த வுறுவர் இமையவர்கள்
உய்வான் இறைஞ்ச அருள்வழங்கும் கந்தன் உருவம் உகுற்றுநரும்"

– அகத்தியன் அருள்பெறு படலம் 65

கந்தன் எனும் சொல் அரும்பெரும் சொல். கந்தரனுபூதி கந்தரலங்காரம் கந்தரந்தாதி, கந்தர்கலிவெண்பா, கந்தபுராணம், கந்தசஷ்டி என்பவை இதனை வலியுறுத்தும்.

கொங்குநாட்டில் பல திருக்கோயில்களில் கந்தசுவாமி திருவுருவமே காணப்படுகிறது என்பது குறிப்பிடத்தக்கது. சர்வ காரியங்களும் சித்திபெற ஸ்கந்த மூர்த்தியை வழிபடுதல் வேண்டும்.

### 3. தேவசேனுபதி

தேவயானையின் கணவன் என்ற பொருள்படும். இப்பெயர் தேவசேனையுடன் விளங்கும் முருகனைக் காட்டுகிறது. தேவேந்திரன் மகளாக ஐராவதத்தில் வளர்க்கப் பெற்ற தேவயானையைத் திருப்பரங்குன்றத்தில் முருகவேள் திருமணம் செய்து கொண்டதைக் கந்தபுராணம் விரித்துக் கூறுகிறது.

தேவசேனுபதி வடிவத்தில் முருகவேள் ஆறுமுகங்களும் பன்னிரு கரங்களும் கொண்டவராய்த் தேவயானையம்மையைத் தனது இடப்பாகத்தில் ஒரு கையால் அணைத்த நிலையிலும் மற்ருெரு கரம் 'அஞ்சேல்' என்று அடியார்களுக்கு அபயம் அளிக்கவும் ஏனைய 10 கரங்களிலும் முறையே சக்தி, சூலம், அம்பு, வாள், தண்டு, வஜ்ரசக்தி, கோழிக்கொடி, வில், கேடயம், தாமரை மலர் ஆகியவற்றைத் தாங்கி விளங்குகின்ருர்.

ஸ்ரீதத்துவநிதியில் 'ஒரு முகமும், நான்கு கரங்களையும் கொண்டு சங்கம், சக்ரம், அபயவரதமுத்திரையுடன் விளங்குகிருர்' என்று கூறும் இவ்வரிய அமைப்பைச் சென்னிமலையில் கண்டு இன்புறலாம்.

தணிகைப் புராணத்தில் தேவசேனுபதி வடிவம் தெய்வ யானையைத் தழுவிய கோலமாகவே காட்டப்பெறுகின்றது.

"ஒருகை தனது வலக்குறங்கின் அணங்கைத் தழுவி யுகளமுலை
மருவ அபயம் ஒன்ருக வளர்தோல் வாள்சூ லம்குலிசம்
பொருவேல் வாள்வில் கதைபுள்ளம் புயங்கோல் பத்தும் கரம்பத்தின்
இருவும் ஆறு முகத்தேவ சேனு பதிசீ ரிழைப்போரும்"

– அகத்தியன் அருள்பெறு படலம்

மங்களமான மணவாழ்வு பெறத் தேவசேனுபதி மூர்த்தியை வழிபடவேண்டும்.

**4. சுப்பிரமணியர்**

வேதத்துக்கும் வேதியர்களுக்கும் முதல்வர் என்னும் பொருள் கொண்ட முருகவேள் திருப்பெயரே சுப்பரமணியர் என்பதாகும். பாம்பன் சுவாமிகள் கருத்தின்படி இன்பத்தினையே இயல்பாகவுடைய சிவபரம் பொருளினின்றும் தோன்றி, அதனின் வேறல்லதாய் விளங்குபவன் (சு–பிரமஂ, ந்யம் (ணியம்) சு–சுகம்; ஆனந்தம். பிரம்ம–சிவபரம் பொருள். ந்யம் (ண்யம்) – அதனின்றும் தோன்றி ஒளிர்வது. சிவபிரானும் முருகனும் தம்முள் ஒருவரேயன்றித் தமக்குள் பேதம் இல்லாதவர் என்பதும் பெறப்படும்.

ஒரு முகமும் இரு கரங்களும் கொண்ட இவ்வடிவத்தில் முருகவேள் தனது வலக்கையால் அபயமுத்திரை காட்டி, இடக்கையை இடுப்பில் வைத்தவராய்த் திகழ்கிருர். மற்ருெரு குறிப்பில், ஒரு முகமும், நான்கு கைகளும் முறையே கோழி, தாமரை, அபய வரத முத்திரையுடன் தோள்களில் கேயூரமும் மார்பில் மாலைகளும் கொண்டு திகழ்கிருர். தணிகைப்புராணம் காட்டும் சுப்ரமணியர் திருவுருவம் ஒரு முகமும், இரு கரங்களும் கொண்டு அமைகிறது.

"இருள்கால் சீக்கும் மணிக்கடக இடக்கை கடியிற் கொளவிருவி
வெருள்கா லுளத்தோர்க்கு அஞ்சலென விரவும் பயஞ்சா டபயமெனத்
தெருள்கா லொருகை வலத்தமைத்துத் திகழ்ந்து பணிவோர் தமக்கெல்லாம்
அருள்கால் விழிச்சுப் பிரமணிய அண்ணல் உருவம் அமைப்போரும்"

– அகத்தியன் அருள்பெறு படலம் 67

அஷ்டவீரட்டத் தலங்களில் ஒன்ருன திருக்கடவூர் அருகிலுள்ள திருவிடைக்கழி சுப்பிரமண்யர் இத் திருக்கோலத்திலேயே திகழ்கிருர். அவரது புன்முறுவல் பூத்தலர்ந்த பூங்குமுதச் செவ்வாயின் அழகொன்றே போதும்! அந்தத் திருக்கை வடிவேலழகிய பெருமானையே பார்த்துக்கொண்டே நிற்கலாம் எவ்வளவு நேரம் வேண்டுமானுலும்!

ஆனந்தத்தையே சொரூப லட்சணமாக உடைய சுப்பிரமணிய மூர்த்தியை வழிபட, வினைகள் நீங்கி ஆனந்தப் பேறு பெறலாம்.

**5. களிற்றூர்திப் பெருமான் (கஜ வாகனர்)**

முருகவேள் யானையை வாகனமாகக் கொண்டு எழுந்தருளிய கோலம் இது. கஜாருடர், கஜவாகனர் என்றும் அழைக்கப்பெறுவார். மிகப் பழைமையான கோயில்கள் பலவற்றில் முருகன் சந்நிதியின் முன்பாக யானை வாகனமே இருக்கக் காணலாம். (திருத்தணிகை, சுவாமிமலை, உத்தரமேரூர்). ஐராவதம் முருகவேளுக்கு வாகனமாக இருந்ததைக் கந்தபுராணம் காட்டுகிறது.

சங்க இலக்கியங்களில் யானை வாகனத்தில் முருகன் வருவதைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. அருள் செய்வதற்கும் போர் புரிவதற்கும் எழுந்தருளும் போது, முருகவேள் "பிணிமுகம்" என்னும் யானை மேற்செல்வார். அடியார் துயர்தீர்க்க முருகவேள் யானை வாகனமேறிவருவதைச் சிதம்பரம் திருப்புகழில் அருணகிரியார் குறிப்பிடுவார்.

ஆண் யானை மீது முருகவேள் ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு எழுந்தருளும் இக்கோலத்தில், குக்குடம், சக்தி ஏந்தியும் அபயவரதமாக இரு கரங்களுமாகக் குமாரதந்திரம் காட்டுகிறது. மற்ருெரு குறிப்பில் வேல், வாள், கோழிக்கொடி, வரமுத்திரை கொண்டதாக விளங்குகிருர்.

சிதம்பரம் கீழ்க்கோபுர வாயிலில் உள்ள கஜாரூடர் திருவுருவத்தை அருணகிரிநாதர் கீழ்க்கோபுர வாயில் முருகனைப் பாடும்போது குறிப்பிடுகிருர். திருமருகல், வள்ளிமலை அருகில் உள்ள மேல்பாடி ஆகிய கோயில்களில் கஜவாகன வடிவங்கள் உள்ளன.

களிற்றூர்திப் பெருமானின் திருவுருவ அமைப்பினைத் தணிகைப் புராணம், குக்குடம் (கோழி), வாள், வேல் ஆகியவற்றுடன் ஒரு கரம் வரமுத்திரையிலும் உள்ளதாகக் காட்டுகின்றது.

"ஒற்றை முகமும் இணைவிழியும் உம்மைப் பயனும் ஒருங்களிக்கும்
கொற்ற வரத மூன்றலைக்குக் குடமோர் இரண்டும் இடங்கதிர்ப்ப
மற்றை வலப்பான் மணிவேலும் வாளுங் கதிர்ப்பக் கரநான்கும்
பெற்ற மதவெங் களிற்றூர்திப் பெருமான் உருவம் சமைப்போரும்"

– அகத்தியன் அருள்பெறுபடலம் 68

கஜவாகனப் பெருமானை வழிபடத் துன்பங்கள் நீங்கி மன நிம்மதி உண்டாகும்.

6. சரவணபவன்

சிவபெருமான் நெற்றிக் கண்ணிலிருந்து வெளிப்பட்ட ஆறு தீப் பொறிகள் ஆறு குழந்தைகளாகி நாணற்புல் நிறைந்த சரவணப்பொய்கையில் தாமரை மலர்களில் வீற்றிருந்தன. (சரம்–நாணல்) சரவணன் என்பது சிவபிரானையும் திருமாலையும் குறிக்கும் பெயர் என்றும், முருகனுக்குச் சரவணபவன் எனப் பெயர் வழங்குவதால் அவன் அவ்விருவர் தம் இயல்புகளையும் பொருந்தி நிற்பவன் என்றும் திருச்செந்தூர்ப் புராணம் கூறும்.

குமார தந்திரம் 'ஆறுமுகங்களும் பன்னிரு கரங்களும் கொண்டு, சக்தி, மணி கோழிக்கொடி, தாமரைமலர், கோழி, பாசம், தண்டம், உளி, அம்பு, வில் ஆகியவற்றுடன் அபய வரதமாகவும் மஞ்சள் வர்ண மேனியாய்த் திகழ்கிருர் என்றுரைக்கும்.

ஸ்ரீதத்வ நிதி, 'ஒரு முகமும், ஆறு கரங்களும் கொண்ட சரவணபவன் சிங்கத்தின் மீது எழுந்தருளியுள்ளதாகக் குறிப்பிடுகிறது. ஆறு கரங்களில் முறையே மலர் அம்புகள், கரும்பு வில், கத்தி, கேடயம், வஜ்ரம், கோழி ஆகியவை ஏந்தியுள்ள இவ்வரிய அமைப்பைச் சென்னிமலையில் கண்டுகளிக்கலாம். திருப்போரூரில் சரவணபவன் ஒரு முகம் நான்கு கரங்களுடன் சிம்ம வாகனத்தில் காட்சியளிக்கிருர்.

ஆறுமுகம் பன்னிரு கரங்கள் கொண்ட சரவணபவன் வடிவைத் தணிகைப்புராண ஆசிரியர் காட்டும் விதம் இதோ:

"ஞாங்கர்ப் படைகே டகம்கண்டை நளினம் சேவல் கதை யிடங்கம்
ஒங்கும் பகழி வாள்வரதம் ஒளிரும் அபயம் சிலையவைதாம்
தாங்கும் கரங்கள் ஈராறும் தயங்கும் வதனம் ஒராறும்
ஆங்க விளங்க அருட் சரவ ணபவன் உருவம் ஆக்குநரும்" (69)

மங்கலம், ஒளி, கொடை, சத்துவம், வீரம் ஆகிய பேறுகளை இம்மூர்த்தியை வழிபடப் பெற்று இன்புறலாம்.

**7. கார்த்திகேயன்**

கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப்பெற்றதால் கார்த்திகேயன் என்று போற்றப்பெறும் முருகன், வட இந்தியாவில் பெரும்பாலும் இப்பெயரிலேயே அழைக்கப்பெறுகிறுன்.

ஆறு முகங்களும் ஆறு கரங்களும் கொண்ட கார்த்திகேயன் வடிவத்தில் சக்தி, வாள், குலிசம் (வச்சிரம்), கேடயம், ஆகிய ஆயுதங்களுடன் இரு கரங்கள் அபய வரதமாகவும், ஏழு ஞாயிறு வண்ணமுடன் விளங்குவதாகவும் குமாரதந்திரம் கூறுகிறது. தணிகைப்புராணமும் இவ்வடிவத்தையே கார்த்திகேயனுகக் காட்டுகிறது.

"சீர்த்த குலிசம் கேடகமே செழித்த வரதம் இடப்பாலும்
கூர்த்த மணிவேல் வாள்அபயம் குலாவு வலப்பா லும்கவின
ஏர்த்த ஆறு மலர்க்கரமும் இலங்கும் வதனம் ஒராறும்
சூர்த்த பிணிகள் தபுங்கார்த்தி கேயன் உருவம் தொகுப்போரும்" (70)

கும்பகோணம் ஆதிகும்பேச்வர சுவாமி கோயிலில் விளங்கும் கார்த்திகேயன் ஆறுமுகமும், ஆறு கரங்களும் கொண்டு கரங்களில் முறையே ஜபமாலை, கட்கம் (கத்தி) வஜ்ரம், கேடயம் ஆகியவற்றுடன் வலது கரம் அபய முத்திரையுடனும் இடக்கை மடித்துள்ள அமைப்பிலும் உள்ளான்.

தாராசுரம் ஐராவதேச்வரர் கோயிலில் கார்த்திகேய வடிவம் ஆறு முகத்துடன் ஒரு கரம் அபய முத்திரையும், மற்றவைகளில் ஜபமாலை, கத்தி, வாள், கேடயம், கோழி ஆகியவை ஏந்தியும் மயில் வாகனத்துடன் விளங்குகிறுர். மணிமகுடம் தரித்த ஆறுமுகங்கள் மிகவும் அற்புதமாக உள்ளன.

ஸ்ரீதத்வநிதியில் 'கார்த்திகேயன் வடிவம் ஒரு முகமும் பத்துக்கரங்களும் கொண்டதாகவும் அவைகளில் சூலம், சக்கரம், அங்குசம், சக்தி, தோமரம் (உலக்கை) பாசம், சங்கம், வஜ்ரம் ஆகியவைகளுடன் இரு கரங்கள் அபய வரதமாகவும் உள்ளன. அவரருகே மயில் நிற்கின்றது. அவர், தலையில் வில்வ பத்ரம் அல்லது பழம் சூடியுள்ளார்' என்று கூறுகிறது. கார்த்திகேயனைக் கார்த்திகை நாளில் பூஜிப்போர் இகபர சௌபாக்யங்களைப் பெறுவர்.

**8. குமாரசுவாமி**

சுவாமி என்ற சொல்லும் குமரன் என்ற சொல்லும் முருகனையே குறிப்பன. சிவபிரான் தமது நெற்றிக் கண்ணினுல் மாரனை எரித்தார்—அது நிக்கிரகம். அவர்

தமது நெற்றிக் கண்ணிலிருந்து குமாரனை அளித்தார் – அது அநுக்கிரகம்.

குமாரன் என்ற சொல்லுக்கு மலப்பிணியை அழிப்பவன் என்று பொருள். குமார தந்திரத்தில் குமாரர் வடிவம் ஒரு முகமும் நான்கு கரங்களில் சக்தி, வாள், கோழிக்கொடி, கேடகம் ஆகியவை ஏந்தியும் காட்டப்பெறுகிறூர். இவ்வமைப்பைக் கங்கைகொண்ட சோழபுரம் – ராஜேந்திர சோழன் கட்டிய பெருங்கோயிலில் பஞ்சலோகப் படிமத்தில் கண்டு மகிழலாம்.

தணிகைப் புராணத்தில் குறிப்பிடப்பெறும் குமாரர் வடிவம் ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு அருகே வள்ளி நிற்கக் காட்சியளிக்கிறூர்.

"வைத்த சுடர்வேல் வாள்இரண்டும் வலப்பால் இடப்பால் வாரணப்புள்
பைத்த மணித்தோள் ஒரிரண்டும் பயில அலர்ந்த நாற்கரமும்
முத்த முறுவற் குறமாது விளங்க முன்வந் தடுத்துமலக்
கொத்து விளியக் கடைக்கணிக்கும் குமாரன் உருவம் குயிற்றுநரும்" (71)

குற்றாலத்துக்கருகிலுள்ள குமாரர் கோயிலில் குமாரர் வள்ளியுடன் திகழ்கிறூர். இவரது இரண்டு கரங்கள் ஒன்று அபயமாகவும் மற்றென்று வரதமாகவும் உள்ளது. ஸ்ரீதத்வ நிதியில் குமாரசுவாமி ஒரு முகமும் இரண்டு கரங்களில் கத்தி, கேடயம் ஆகியவைகளுடன் மற்ற இரண்டு கரங்கள் அபய, வரமுத்திரைகளுடன் குறிப்பிடப்பெறுகிறது. ஆணவ மலநீக்கம் பெற இப்பெருமானை வணங்குதல்வேண்டும்.

9. சண்முகர்/ஆறுமுகசுவாமி

முருகவேள் அடியார்களுக்கு அஞ்சுமுகம் (இடுக்கண்) தோன்றும் போதெல்லாம் தமது ஆறுமுகம் கொண்டு ஆறுதல் தந்தருள் புரிகின்றூன். இறைமைக் குணங்கள் ஆறு. ஞானம், ஐசுவரியம், திரு, வீரியம், வைராக்யம், புகழ் என்ற ஆறும் அவரது முகங்களாகத் திகழ்கின்றன. ஆறுமுகப் பெருமான் தமது வலப் பக்கத்தில் வள்ளியம்மையாரையும், இடப்பக்கத்தில் தெய்வானையம்மையாரையும் மயில்மீது இவர்ந்தோ உடனிருக்கவோ அமைந்த கோலம் இவ்வடிவம். இப்பெருமான் தனது வலக்கைகளில் வேல்(சக்தி), அம்பு, வாள், கோழிக்கொடி, திகிரி (கதை) ஆகியவைகளுடன் ஒரு கரம் அபயமாகவும், இடக்கைகள் ஒன்று வரதமாகவும் மற்றவைகளில் வச்சிரம், வில், கேடயம், தாமரைமலர், சூலம் ஆகியவை ஏந்தியும் விளங்குகிறூர். ஆறுமுகப்பெருமான் பன்னிரு கரங்களிலும் கொண்ட ஆயுதங்கள் ஆறு வகைகளில் வேறுபடுகின்றன.

திருச்செந்தூரில் ஆறுமுகப் பெருமான், மயிலாப்பூர், குன்றக்குடி, பொரவச்சேரி திண்ணியம் ஆகிய தலங்களில் அமைந்துள்ள சண்முகப்பெருமான் திருவுருவ அமைப்புகள் சிறப்பானவை. நக்கீரர் திருமுருகாற்றுப்படையிலும், குமரகுருபர சுவாமிகள் கந்தர் கலிவெண்பாவிலும், அருணகிரிநாதர் திருப்புகழிலும் ஆறுமுகச் சிறப்பு அருமையாகக் கூறப்பட்டு உள்ளது.

குமார தந்திரத்திலும், ஸ்ரீதத்வ நிதியிலும் ஆறுமுகப் பெருமான் பன்னிரு கரங்களுடன் விளங்குவதாகவே கூறப்பட்டுள்ளது. சண்முகனுக்கு இரு மருங்கிலும் ஜயை, விஜயை, என்னும் இருதேவியர் விளங்குகின்றனர் என்று ஸ்ரீதத்வநிதி குறிப்பிடுகிறது.

"படைவேல் பகழி வாள்திகிரி பாசம் அபயம் வலத்திடத்துச்
சுடர்வார் குலிசம் சிலைதோல்புள் தோட்டி வரதம்இவை பரித்த
தடவான் கரமும் முகம்ஆறும் தனிமா மயிலும் இருமாதர்
உடனாம் எழிலும் தரும்ஆறு முகன் உருவம் உஞற்றுநரும்" (72)

என்று தணிகைப் புராணத்தில் ஆறுமுகப் பெருமான் வடிவ அமைப்பு கூறப்படுகிறது. சிறுவாபுரியில் சண்முகர் உற்சவ மூர்த்தி சிறப்பாக உள்ளது. ஆறுமுகனை வழிபடுவோர் சிவனையும் சக்தியையும் ஒருங்கே வழிபட்ட பலனை அடைவார் என்று சாத்திரங்கள் கூறுகின்றன.

**10. தாரகாரி (தாரகாந்தகர்)**

சூரபன்மனின் இளையதம்பி தாரகாசுரன் மாயையில் வல்லவன். கிரவுஞ்சம் என்னும் தனது மலையுள் புகுமாறு செய்து முருகனின் நவவீரர்களுள் முதன்மையான வீரவாகுதேவர் முதலியோரை மயக்கமுறச் செய்தான். தமது ஞானவேலால் முருகவேள் தாரகனை அழித்து, மாயையை வென்று அருள்புரிந்த கோலமே தாரகாரி.

குமார தந்திரம் இவ்வடிவை ஆறுமுகம், பன்னிரு கரங்களுடன் காட்டுகிறது. இரு கரங்கள் அபய, வரதமாகவும், ஏனையவைகளில் சக்தி, உலக்கை, வாள், சக்கரம், பாசம், வஜ்ரம் (குலிசம்) வில், கேடயம், கொடி (வல்லி) அங்குசம் ஆகியவை தரித்தும் விளங்குகிறார் என்று கூறும். விராலிமலையில் விளங்கும் பெருமான் தாரகாரி வடிவமே என்பது குறிப்பிடத்தக்கது. தணிகைப் புராணம் காட்டும் தாரகாரி வடிவமும் குமார தந்திரத்தை ஒத்திருக்கின்றது. இவ்வடிவ அமைப்பை உத்தரமேரூர் கந்தப் பெருமான் ஆலயத்தில் கண்டு இன்புறலாம்.

"வரதம் கொடிகே டகம்தோட்டி வார்ந்த வெறுழ்ப்பா சங்குலிசம்
பரவும் அபயம் வாள்சூலம் பரிதி முசலம் வேல்முந்நாற்
கரமும் விளங்க அறுமுகமும் அதிர்ப்ப விழிகள் கருணைமழை
தரவென் றருளும் தாரகாந் தகன்சீர் உருவம் சமைப்போரும்" (73)

ஸ்ரீதத்வநிதியில் தாரகாந்தகர் வடிவம் ஒரு முகம் ஆறு கரங்களுடன் யானை மீது அமர்ந்த கோலமாகக் காட்டப்படுகிறது. இம்மூர்த்தியை வழிபட்டு உலக மாயையிலிருந்து விடுபடலாம்.

**11. சேனானி (சேனாபதி)**

"வீரர்களுள் யான் சேனானியாகத் (முருகனாகத்) திகழ்கிறேன்" என்று கண்ணபிரான் கீதையில் கூறுகிறார். வீரர்களுள் பெருவீரன் – மாவீரன் முருகன். வீரம் பெற விரும்புவோர் முருகனை வழிபடுவர். மௌரியப் பேரரசில் கோட்டையில் சேனானியின் வடிவம் அமைத்த செய்தியைச் சாணக்கியரின் அர்த்த சாஸ்திரம் பேசுகின்றது.

சூரபதுமனை வெற்றிகொள்ளத் தேவர் படைகளுக்குத் தலைமையேற்ற முருகன், சேனாதிபதியான இக்கோலத்தில் ஆறுமுகமும் பன்னிருகரங்களுடனும் திகழ்கிறார். குமாரதந்திரம் இரு கரங்கள் அபயவரதமாகவும், சக்தி, வாள், சூலம், சக்கரம் அங்குசம்,

வஜ்ரம், தாமரைமலர், பாசம், தண்டாயுதம், கதை ஆகியவை ஏனைய கரங்களிலும் உள்ளன என்றுரைக்கும், வானவர் தலைவனான சேனானியின் வடிவத்தைத் தேவிகாபுரம் பெரிய நாயகி அம்மன் கோயிலில் தரிசித்து இன்புறலாம். தணிகைப் புராணத்தில் முசலம், அம்பு, வில் ஆகியவை இருக்குமென்று குமாரதந்திரத்திலிருந்து மாறுபட்டு உள்ளது.

"அபயம் முசலம் வாள்சூலம், அயில்வேல் தோட்டி வலம் வரதம்
தபுதீர் குலிசம், சிலைபதுமம் தண்டம் கதைமாற் றிடமாக
உபய விராறு கரதலமும் ஒளிர்வித் தாறு முகந்தோற்றிச்
சுபநன் சுருளி யிடர்துமிக்கும் சேனாபதிசீர் தொகுப்போரும்" (74)

போரிலும் பந்தயங்களிலும் வெற்றிபெற இம்மூர்த்தியை வழிபடுதல் அவசியம்.

12. பிரம்மசாஸ்தா

படைப்புத் தொழில் செய்யும் நான்முகன் (பிரமன்) கொண்ட செருக்கை அடக்கித்தானே பிரமனது படைப்புத் தொழிலை மேற்கொண்ட கோலமே பிரம்மசாஸ்தா (பிரம்மனைத் தண்டித்தவர்) எனப்படும். குமாரதந்திரம் இக்கோலம் ஒரு முகம் நான்கு கரங்கள் கொண்டதாகக் குறிப்பிடுகிறது. முன் இரு கரங்கள் அபயம். குறங்கத்திலும், பின் இருகரங்கள் அட்சமாலை, கமண்டலமுடன் திகழ்கின்றன.

தொண்டை நாட்டில் பெரும்பாலான திருக்கோயில்களில், பிரம்மசாஸ்தா வடிவத்தையே காண்கிறோம். காஞ்சிபுரம், குமரகோட்டம், சிறுவாபுரி பாகசாலை போன்றவை குறிப்பிடலாம். சென்னையில் வலசரவாக்கத்தில் மாபெரும் பிரம்மசாஸ்தா வடிவம் உள்ளது. பூவிருந்தவல்லி அருகில் உள்ள வாயிலாநல்லூரிலும் சோழர் காலத்துப் பிரம்மசாஸ்தா வடிவம் உள்ளது.

தணிகைப்புராணம் குறிப்பிடும் பிரமசாத்தான் வடிவம் வருமாறு

"வரத மணிக்குண் டிகைஇரண்டும் வாமத் திருக்கைத் தலமாக்கிப்
புரவு புரியும் அபயமொடு புரைதீர் அக்க வடம்வலப்பால்
இரவை இரிக்கும் வலத்தமைத்திட் டெல்லா உலகும் இனிதளித்துப்
பிரமசாத்தன் எனப் பொலிந்த பெருமான் உருவம் பிறக்குநரும் (75)

செங்கல்பட்டு அருகிலுள்ள ஆனூரில் பிரமசாத்தா, முன் வலக்கையில் தாமரை மலர் கொண்டு விளங்குகிறார். இவரைப் பாலசுவாமியும் பிரமசாஸ்தாவும் இணைந்த கோலமான 'பாலபிரமசாஸ்தா' என அழைக்கலாம். பிரமசாஸ்தா வடிவத்தை வழிபாடு செய்வோர் பிரமவித்தைகள் கைவரப்பெற்றுச் சகலகலா வல்லவனாக 'புந்தி நிறை அறிவாளனாகத்' திகழலாம்.

13. வள்ளிகல்யாணசுந்தரர்

முருகப்பெருமானது திருப்பெயர்களுள் "வள்ளிக் கணவன்", "வள்ளி மணாளன்", "வள்ளிக்காந்தன்" ஆகியவை மிகச் சிறப்பானவை. உலகில் இல்வாழ்க்கை இனிது நடத்தற் பொருட்டே, முருகன் வள்ளியம்மையை மணந்துகொண்டு அவளுடன் இனிதுறப் பேசி நகையமர்ந்தருள்கின்ருன் என்று ஞானநூல்கள் கூறும். இவ்வடிவை

வள்ளி கல்யாண சுந்தரர், வள்ளிமணாளர் என்று குமாரதந்திரம் குறிப்பிடுகிறது. பிரமசாஸ்தா கோலத்தில் வலப்புறம் வள்ளியுடன் காட்சியளிக்கும் அமைப்பே இவ்வடிவமாகும். அருகில் திருமால் தாரைவார்த்துக் கொடுப்பார்.

"அல்யாப் பவிழ்க்கும் வலக்கரங்கள் அபயம் அக்க வடந்தாங்க
வெல்யாப் புறுத்த மணிக்கடமும் கடியும் இடக்கைத் தலஞ்சேரச்
சொல்யாழ் அனைய வள்ளிவலம் துன்ன மணிநீர் அரிவாக்கக்
கல்யா ணத்தின் எழில்வாய்ந்த கடவுள் உருவம் காண்போரும்" (76)

சிறுவாபுரி முருகன் திருக்கோயிலில், முருகன் வள்ளியின் கரம் பற்றியுள்ள 'வள்ளி மணவாளக் கோலம்' பஞ்சலோகப் படிமத்தில் உலகில் எங்கும் காண இயலாத அற்புதப் படைப்பு. திருப்போரூரில் தூண் சிற்பமாக இவ்வடிவம் காணக்கிடைக்கிறது. வள்ளி கல்யாண மூர்த்தியை வழிபடத் திருமணங்கள் உரிய காலத்தில் நடைபெறும். தடைப்பட்ட திருமணங்கள் முதலான தொல்லைகள் நீங்கி இன்ப மயமான இல்வாழ்வுப் பேறு கிட்டும்.

**14. பாலசுவாமி**

அழகும் இளமையும் கொண்ட அற்புதமான வடிவமே பாலசுவாமி. இவ்வடிவில் ஒரு முகமும் இரு கரங்களும் கொண்டு, வலக்கையில் தாமரை மலரும் இடக்கை குறங்கத்திலும் (இடுப்பிலும்) உள்ளன. திருவடிகளில் தண்டைகள் அணிந்து காட்சி யளிக்கும் இக்கோலத்தைத் தணிகைப்புராணமும், குமாரதந்திரமும் எடுத்துரைக் கின்றன.

"கடியில் இடக்கைத் தலமிருவிக் கமலம் வலக்கைத் தலமேந்தி
அடியின் மணிக்கிண் கிணிகவைஇ யமரும் பால உருத்தோற்றி
முடிகள் உரகு எதிர்வணங்கும் முகுந்தன் முதலோர்க் கருள்சுரக்கும்
படியில் எழிற்சுப் பிரமணிய பகவன் உருவம் பயிற்றுநரும்" (77)

சென்னை அருகே போரூரில் உள்ள பாலமுருகன், வலக்கரத்தில் சக்தி ஆயுதமும் இடக்கரத்தில் நீலோத்பல மலரும் கொண்டு அழகாகக் காட்சியளிக்கிறார். இம்மூர்த்தி ஞானசக்திதரனும் பாலசுவாமியும் இணைந்த கோலமாக "ஞானசக்தி பாலன்" என்றழைக்கலாம். திருவையாறு அருகில் உள்ள திருக்கண்டியூரில் இவ்வடிவை 'வீரஸ்கந்தர்' என்றழைக்கிறார்கள். பொன்னேரி அருகில் உள்ள ஆண்டார்குப்பம் கோயிலில் இருகரங்களும் இடுப்பில் வைத்த அபூர்வ அமைப்பாகும். பாலசுவாமியை வழிபட உடற்குறைகள் நீங்கி அழகான உடலமைப்பும், வனப்பும், தேக சௌக்யமும் ஏற்படும்.

**15. கிரௌஞ்சபேதனர்**

கிரௌஞ்சம் – அன்றிற்பறவை. அதன் வடிவாகிய மாய மலையாகத் திகழ்ந்த தாரகாசுரனை அழித்த வடிவம் இது. இவ்வடிவைக் குமாரதந்திரம் ஆறுமுகமும் எட்டுக்கரங்களும் கொண்டவராகக் காட்டுகின்றது. சக்தி வேல், வாள், அம்பு, வஜ்ரசக்தி, கேடயம், வில் ஆகியவற்றுடன் அபயவரதமாக இருகரங்களும் உள்ள இவ்வடிவைத்

தணிகைப்புராணமும் காட்டுகின்றது.

"அழலு நெடுவேல் வாள்பகழி அபயம் வலநாற் கரத்தமைத்துத்
தழல் வச்சிரங்கே டகம்வரதம் சாபம் இடநாற் கரந்தாங்கி
எழில்மிக் கொழுகும் முகம் ஆறும் இலங்கத் தோற்றிக் கிரவுஞ்சம்
புழைபட் டழியப் படைவிடுத்த புத்தேள் உருவம் பொறிப்போரும்" (78)

ஸ்ரீதத்வநிதி, இக்கோலத்தை ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டதாகக் காட்டுகின்றது. கரங்கள் முறையே அபயவரதமாகவும், மலரம்பு, கரும்பு வில், தாங்கியும் உள்ளன. அருகே மயில் நிற்கின்றது. மற்றொரு வகையில் மயில் வாகனத்தில் அமர்ந்து இருகைகளிலும் வேல் கொண்டு கிரௌஞ்ச மலையைத் துளைக்கும் தோற்றமுடன் விளங்குகிறார். இவ்வமைப்பை நான்குநேரி அடுத்த திருக்குறுங்குடி திருமால் கோயில், மயிலாடுதுறை அருகில் உள்ள புஞ்சை (திருநனிபள்ளி) கோயிலிலும் கண்டு வணங்கலாம். மனத்தில் சஞ்சலங்கள், துன்பங்கள் நீங்கவும் இடர்களை வெல்லவும் இம்மூர்த்தியை வழிபடவேண்டும்.

16. சிகிவாகனர் (மயில் ஊர்திப் பெருமாள்)

மயில் மீது வந்து நமது மையல் நீக்கி அருளும் மாமுருகன் திருக்கோலமே சிகிவாகனர் வடிவமாகும். ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு மயில்மீது அமர்ந்து திகழ்கிறார். அபயவரதமாகவும் சத்திவேலும், வஜ்ரமும் கொண்டுள்ள இவ்வடிவைக் குமாரதந்திரம் ஆறுவிதமாகக் காட்டுகின்றது. தமிழ்நாட்டில் பெரும்பாலும் கோயில்களில் உற்சவமூர்த்தி வடிவம் இவ்வமைப்பிலேயே உள்ளது. தணிகைப்புராணமும் இவ்வடிவைப் பாங்குறக் காட்டுகிறது.

"புலிங்கங் கதிப்பத் தீத்தும்மும் பொருவேல் அபயம் வலத்திருகைத்
தலங்கொண் டிடப்பால் இருகரத்தும் தக்க வரதம் வச்சிரமும்
இலங்க அணிந்து திரைக்கடலும் எழுபல் வரையும் உலகனைத்தும்
குலுங்கக் கடவு மயிலூர்திக் கோமான் உருவம் இயற்றுநரும்" (79)

மயிலூர்திப் பெருமானை மறவாமல் வணங்குவோர் இச்சையில் உற்ற அனைத்தையும் பெற்று இன்ப வாழ்வு பெறுவர்.

17. ஞானசக்தி சுப்ரமண்யர்

ஒரு கரமும் நான்கு கரங்களும் கொண்டு ஒன்று அபய முத்திரையாகவும் ஏனையவை சக்தி, குக்குடம் (கோழி), வஜ்ரம், முதலியன கொண்டு ஜடாமகுடம், கடப்பமாலை அணிந்து இவ்வடிவில் காட்சியளிப்பதாக ஸ்ரீதத்வநிதி குறிப்பிடுகிறது. திருச்சி மாவட்டம் பழுவூரில் இவ்வடிவத்தைக் காணலாம். இம்மூர்த்தியை வழிபட, எடுத்த காரியம் யாவிலும் வெற்றிகிட்டும்.

18. அக்னி ஞாதா சுப்ரமண்யர்

"ஒருமுகம் மந்திரவிதியின் மரபுளி வழாஅ அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே" என்று திருமுருகாற்றுப் படையில் நக்கீரர் போற்றியவாறு தெய்வீக யாகாக்கினியை

வளர்ப்பதற்கு அக்னியைப் போன்று இரண்டு முகங்களும், எட்டுக் கரங்களும் கொண்டுள்ள இவ்வடிவமே அக்னிஜாதர் என்றழைக்கப்படுகிறது. வஜ்ரம், குக்குடம், கேடயம், ஆஜ்ய (நெய்) பாத்திரம், சுருவம் (யாகத்தீயில் நெய்யிடப் பயன்படும் கரண்டி), அட்சமாலை, கத்தி, ஸ்வஸ்திகம் ஆகியவை கொண்டு வேள்வி செய்யும் கோலமாக ஸ்ரீதத்வநிதி காட்டுகிறது. இத்தகைய அற்புதமான வடிவமைப்பைச் சென்னிமலை முருகன் கோயிலில் காண இயலும்.

19. சௌரபேய சுப்ரமண்யர்

ஸ்ரீதத்வநிதியில் குறிக்கப்பெறும் இவ்வடிவம், நான்கு முகங்களும், எட்டுத் திருக்கரங்களும் கொண்டு கரங்களில் முறையே சக்தி, தாமரை மலர், மலரம்பு, வஜ்ரம், கரும்பு வில், சூலம் ஆகியவை ஏந்தியும் இரு கரங்கள் அபயவரதமாகவும், வலக்கால் பூமியிலும், இடக்கால் சிறிது வளைந்தும் காணப்படுகிறது. இவ்வரிய அமைப்பைச் சென்னிமலை முருகன் கோயிலில் கண்டு இன்புறலாம்.

20. காங்கேய சுப்ரமண்யர்

மகர (மீன்) வாகனத்தின் மீது காட்சியளிக்கும் இவ்வரிய அமைப்பில் ஒரு முகமும், நான்கு கரங்களில் முறையே கோழிக்கொடி, அரணிக்கட்டை, பரசு (கோடாரி), பூர்ணகும்பம் ஆகியவை ஏந்தியும் கரண்ட மகுடமும், நீலோத்பல மாலையும் அணிந்து திகழ்வதாக ஸ்ரீதத்வநிதி குறிப்பிடுகிறது. எங்குமே காணஇயலாத அபூர்வ வடிவம். சிவானந்தப்பேறு பெறலாம்.

21. குக சுப்ரமணியர்

அடியார்களில் இதயக் குகையில் விளங்கும் முருகன் இவ்வடிவில் ஒரு முகமும் வஜ்ரம், சூலம் இருகரங்களிலும் அபயவரதமாக இரு கரங்களும் இரத்னகிரீடம் அணிந்து இடதுபுறம் தேவியுடன் கல்யாணக் கோலத்தில், வெள்ளையாடை உடுத்திக் காட்சி யளிப்பதாக ஸ்ரீதத்வநிதி குறிப்பிடுகிறது. தகராகாச வித்தைபெற இம்மூர்த்தியை வழிபாடு செய்தல் வேண்டும்.

22. பிரமசாரி

இவ்வடிவில் முருகவேள் ஒரு முகமும், வலக்கையில் தண்டாயுதமும், இடக்கையில் வஜ்ரசக்தியும், தலையில் குடுமியும் இடையில் முஞ்சிப்புல்லாலான அரைஞாணும் கொண்டு தாமரை மலர் மீது எழுந்தருளுவதாக ஸ்ரீதத்வநிதி குறிப்பிடுகிறது.

23. தேசிக சுப்ரமண்யர்

சிவகுருவாகத் திகழும் இவ்வடிவில் ஒரு முகமும் ஆறு கரங்களும் கொண்டு இரு கரங்களில் சக்தி ஆயுதமும், அட்சமாலை சின் முத்திரை மற்றும் அபய வரதமாகவும் காட்சியளிக்க, எதிரில் சிவபிரான் மாணவராக நிற்க, அவருக்குப் பிரணவ உபதேசம் செய்வார். மானசாரம் என்னும் நூலில் இவ்வடிவம் முருகவேளுக்கு எதிரே சிவபெருமான்

இடக்கையை மார்போடு அணைத்து வலக்கையால் வாயைப்புதைத்து, ஏனைய இரு கரங்களில் உடுக்கையும் மானும் விளங்க, தலையில் பிறைச் சந்திரன் பொலிய, நிறைமதி போன்ற நிறத்துடன் நின்று, இடப்பாகத்தில் பார்வதிதேவி நிற்க உபதேசம் பெற்றுக்கொள்வதாகக் காட்டப்படுகிறது. திருப்போரூர் கந்தசாமிக் கோயிலில் தேசிகர் வடிவம் பஞ்சலோகத் திருமேனியாக அற்புதமாக அமைந்துள்ளது. சிவபிரான் இடது மடியில் முருகன் அமர்ந்து, அவருக்கு உபதேசம் செய்யும் அமைப்பில் உள்ளது. இம் மூர்த்தியை வழிபடச் சிவஞானம் பெருகும்.

24. வில்லேந்திய வேலன்

இராமிரானுக்கு "கோதண்டம்" போல முருகப்பெருமானும் வில்லேந்திய வடிவை "சம்ஹாரமூர்த்தி" என்று சிற்ப நூல்கள் குறிப்பிடுகின்றன. சூரபத்மன் மகன் இரண்யாசுரனை அழிப்பதற்கு முருகன் கொண்டகோலம் "இரண்யாசுர சம்ஹாரமூர்த்தி" என்ற இவ்வடிவைத் திருவிடைக்கழி முருகன் கோயிலில் கண்டு தரிசிக்கலாம். சம்ஹாரமூர்த்தி சில தலங்களில் தனித்தும், சில தலங்களில் தேவியருடனும் காணப்படுகின்றது.

பஞ்சலோகப் படிமங்களில் அமைந்துள்ள வில்லேந்திய கோலம், பெரும்பாலும் வலது காலை மயில் மீது வைத்தும் வலது முன்கையில் அம்பும், இடது முன்கையில் வில்லும் கொண்டு, பின் இரு கரங்களில் சக்தியும், வஜ்ரம் உடையவராகக் காட் டப்படுகிறது. இவ்வடிவங்களைத் திருப்போரூர், திருவேற்காடு, சேயூர்,. சிவபுரம், ஸ்ரீமுஷ்ணம் ஆகிய தலங்களில் தரிசிக்கலாம். புகழ்பெற்ற வில்லேந்திய வடிவம் சாயாவனம் கோயிலில் உள்ளது. திருச்செந்தூர்க்கோயிலிலிருந்து போர்த்துகீசியர்கள் கொள்ளையடித்து வந்தபோது கப்பல் புயலில் சிக்கித் தடுமாறவே அவர்கள் சாயாவனம் கடற்கரையில் போட்டதாக வரலாறு உள்ளது.

மூலஸ்தானத்தில் வில்லேந்திய வடிவத்துடன் வள்ளி தேவசேனை சமேதராக ஒரே கல்லில் அமைந்த அற்புத வடிவத்தை நெய்வேலியில் உள்ள வில்லுடையான் பட் டிக் கோயிலில் காணமுடியும்.

திருவண்ணுமலை, பட்டீச்சரம் ஆகிய கோயில்களிலும் அற்புதமான வில்லேந்திய வடிவம் கண்டு இன்புறத்தக்கது.

25. முருகவேடன்

சுவாமிமலைத் திருக்கோயிலில் பங்குனி மாதத்தில் நடைபெறும் "வேட ரூபக் காட்சி" விழாவில் வேடனுகத் தோன்றி வள்ளியை மணக்கும் வேடன் வடிவம் அற்புதமான வடிவமாகும். சேலம்மாவட்டம் பேளுக்குறிச்சி பழநியாண்டவர் கோயில் மூலவடிவம் வேட வடிவமே. தலையில் கொண்டையுடன் வலக்கையில் வேலும் கொண்டு இடக்கையில் கோழியும் கொண்ட அழகான வடிவம் இது.

26. ஆட்டுவாகனர்

அஜாரூடர் என்றழைக்கப்படும் இவ்வடிவில், முருகன் ஆட்டு வாகனத்தில் காட்சியளிப்பார். கந்தபுராணத்தில் கூறப்படும் செய்தியின்படி, இவ்வடிவைத் திருப்போரூர் கந்தசாமிக் கோயிலில் அபூர்வமாகக் காணலாம். திருச்செந்தூர்த் திருக்கோயில்

கந்தசஷ்டிப் பெருவிழாவில் ஆட்டு வாகனத்தில் முருகவேள் பவனி வருவதைக் கண்டு இன்புறலாம்.

**27. அமிர்தகர சுப்ரமண்யர்**

தன்னை நாடி வரும் அடியார்களுக்கு அருளமுதை வழங்கக் கையில் அமுத கலசத்தை ஏந்தியிருக்கும் அற்புதக் கோலம் கோடிக்கரை குழகர்கோயிலில் காணக்கிடைக்கிறது. ஒரு முகமும் ஆறு கரங்களும் கொண்ட இவ்வரிய அமைப்பல் மயில்மீது அமர்ந்து இரு புறமும் தேவியர் புடைசூழக் காட்சி தருகிறுர். வலக்கரம் ஒன்று அபயமாகவும், ஒரு இடக்கரம் அமுதகலசம் ஏந்தியிருக்கவும் ஏனைய கரங்களில் சக்திவேல், நீலோத்பலம், வஜ்ரம், தாமரை மலர் ஆகியவை ஏந்தியிருக்கும் எழில் வடிவம். நீலோத்பல மலர், தாமரை மலர், அமுதகலசம் இம்மூன்றையும் கரங்களில் கொண்ட வடிவம் வேறெங்கும் காண இயலாது.

**கந்தனின் கவின் மிகு கோலங்ள்**

கோவை மாவட்டம் அவிநாசியிலிருந்து மேட்டுப்பாளையம் செல்லும் வழியில் இரும்பறை என்ற ஊரின் அருகில் நெடிதுயர்ந்த மலையின் மேல் முருகன் ஐந்து முகம் எட்டுக்கரங்கள் கொண்டு அற்புதமாகக் காட்சியளிக்கிறுர். இம்மலைக் கோயில் ஒதிமலை என்ற பெயரில் 1800 படிகளுக்கு மேல் உள்ளது. இவ்வடிவை கிரெஞ்சபேதனா் என்ற வடிவமாகக் கொள்ளலாம்.

சிதம்பரம் சபாநாயகர் கோயில் மேலக் கோபுரவாயிலில் உள்ள வெற்றிவேற் பெருமாள் ஆறுமுகங்களும் பத்துக்கரங்களும் கொண்டு ஓர் கரத்தால் வேலினை ஏவிய நிலையில் காண்போரைப் பிரமிக்கச் செய்யும் கோலம். சூர்மாதடிந்த சுடர் வேலோனுகிய இவ்வடிவம் அற்புதமான வடிவமைப்பாகும்.

திருப்பரங்குன்றத்தில் தூண் சிற்பமாக அமைந்துள்ள தேவசேனைத் திருமேனிக் கோலம் கண்டு இன்புறத்தக்கது. முருகன் தேவயானையின் வலக்கரம் பற்றியிருக்க அருகில் தேவேந்திரன் பெருமையுடன் தாரைவார்க்க, இன்பத்தை அளிக்கும் இனிய காட்சியில் தெய்வானையம்மை தலையைச் சற்றுச் சாய்த்து ஒரக்கண்ணுல் கந்தனைக் கண்டு களிப்பதை நாமும் கண்டு இன்புற முடியும்.

ஆலம்பூர்க் காட்சிசாலையில் தேவசேனையை அணைத்த நிலையில் காணப்படும் அரிய கலைப்படைப்பை அவசியம் கண்டு இன்புறவேண்டும்.

வழுவூரில் கவுரி, கந்தனைக் கையில் ஏந்தி மகிழும் அழகு! குஹாம்பிகை என்றழைக்கப்படும் அபூர்வமான கலைப்படைப்பு இது.

திருக்கடவூரில் பரிவுடன் கவுரி கொஞ்சும் கடம்பனைக் கண்டு அதிசயிக்கலாம். பல்லவனீச்சரம் கோயிலில் தாயின் அருகில் அமர்ந்து தண் கழல் சிலம்புடன் கொஞ்சவே வரும் முருகன் அழகைப் பார்த்துக் கொண்டேயிருக்கலாம். திருவாரூரில் நீலோத்பலாம்பிகை திருக்கோயிலில் அம்பிகைக்கு அருகில் சேடி, முருகனை அழைத்துவர அவன் நடந்து வரும் அழகைச் சிற்பி கண்முன் கொண்டு நிறுத்திவிட்டார்.

கழுகுமலையில் ஒரு முகமும் ஆறு கரங்களும் கொண்ட மயிலில் காட்சியளிக்கும் மாட்சியை எழுத்துக்களில் எழுத இயலாது.

குன்றக்குடி, திண்ணியம் கோயில்களில் முருகன், வள்ளி, தேவயானை தனித்தனியே மயில் வாகனத்தில் காட்சியளிப்பதும் அரிய கலைப்படைப்பாகும்.

சென்னையில் திருமயிலையில் மிக மிக அதிசயமான வடிவத்தைக் கண்டு இன்புறலாம். முருகன் மயில் வாகனத்திலும் வள்ளி, தேவயானை இருவரும் தனித்தனியே யானை வாகனத்திலும் அமர்ந்துள்ள அதிசயமான கோலத்தை இதுவரை நாம் கண்டுகளித்த கவின்மிகு கோலங்களில் ஒப்பற்றதாகச் சொன்னுல் மிகையாகாது. ஆகமத்திலோ, சிற்ப நூல்களிலோ காணப்பெறாத இவ்வதிசயக் கோலம் மயிலைச் சிற்பியின் கற்பனையின் எல்லை என்று சொல்லலாம் அல்லவா?

முழுதும் அழகிய குமரனைப் பலவித கவின்மிகு கோலங்களில் கண்டு வழிபட்டு இன்புறுவோமாக!

---

அருச்சனை

அம்புயம் நீலங் கழுநீர் அணிநெய்தல்
வம்பவிழ் பூகமும் மாதவி மந்தாரந்
தும்பை வகுளம் சுரபுன்னை மல்லிகை
செண்பகம் பாதிரி செவ்வந்தி சாத்திடே.

சாங்கம தாகவே சந்தொடு சந்தனந்
தேங்கமழ் குங்குமங் கர்ப்பூரங் காரகிற்
பாங்கு படப்பனி நீராற் குழைத்துவைத்து
ஆங்கே அணிந்துநீ ரர்ச்சியும் அன்பொடே.

அன்புட னேநின் றுஅமுதமும் ஏற்றியே
பொன்செய் விளக்கும் புகைதீபம் திசைதொறும்
துன்பம் அகற்றி தொழுவோர் நினையுங்கால்
இன்ப முடனேவந்து எய்திடும் முத்தியே.

எய்தி வழிப்படி லெய்தா தனவில்லை
எய்தி வழிப்படி லிந்திரன் செல்வமும்
எய்தி வழிப்படில் எண்சித்தி உண்டாகும்
எய்தி வழிப்படில் எய்திடும் முத்தியே.

— திருமந்திரம்.

# உற்வச மூர்த்திகள்

S. தேவசேனுபதிஸ்தபதி
சிற்பக் கலைஞர்

மண்ணும் மரமும், கல்லும் காகிதமும், உருகும் உலோகமும் மனிதனின் கை வண்ணத்தால் பல்வேறு உருவங்களை அடைகின்றன. திருக்கோவிலில் எழுந்தருளியிருக்கும் தெய்வச் சிலைகளாகவும் அவை உருவாகின்றன. பல பாரம்பரியமிக்க கலைகளை உலகிற்கு அளித்த மாவட்டமான தஞ்சையில் உள்ள சுவாமிமலை, உலோக சிற்பக் கலைக்குத் தாயகமாக விளங்குகின்றது. உலகில் நாகரிகங்கள் வளர்ந்தது நதியின் கரையில் தான் என்பது வரலாற்று உண்மையாகும். இந்திய மண்ணில் பாரம்பரிய, உலோக சிற்பக்கலை அதிக அளவு வளர்ந்து வருவது இந்தியாவிலேயே சுவாமிமலையில் தான். இத்திருத்தலத்தில்தான் 40 குடும்பங்கள் பாரம்பரியச் சிற்பிகளாக இன்றளவும் இக்கலையை வளர்த்து வருகின்றனர்.

கோவில்களில் கர்பக்கிரஹத்தில் நிலையாக ஸ்தாபிக்கப்படும் படிமங்கள், மூலப்படிமம் அல்லது மூல விக்ரகம் எனப்படும். இந்த மூல விக்ரகத்திற்கு மூல பிம்பம், மூல பேரம், துருவ பேரம் என்று பல பெயர்.

நாம் வழிபடும் தெய்வங்கள் எல்லாமே பெரிய கருணாமூர்த்திகள். எப்படி என்றால் தேகத்தில் பலமுள்ளவர்கள், எப்பொழுது வேண்டுமானாலும் திருக்கோவில்களுக்குச் சென்று ஆண்டவனைத் தரிசிக்க இயலும். அப்படி ஆலயம் செல்ல இயலாதவர்களுக்காகவே, தானே அப்பக்தன் இருக்கும் இடத்திற்கு உற்சவ மூர்த்தியாக எழுந்தருளித் தரிசனம் கொடுக்கிறார். இவையே உற்சவ விக்ரகங்களாகும். இப்படி, திருவிழாக்காலங்களில் திருவுலாக் கொள்வதற்குரியதாக விக்ரகங்கள் வழங்கப் படுகின்றன. இப்படி வடிக்கப்படும் விக்ரகம் மூலவருக்கு (கற்சிலை) இயல்பு உடைய தாகவும், மூல விக்ரகத்தின் உயர அளவோடு தொடர்பு கொண்டதாகவும் (உற்சவ விக்ரகம்) அமைப்பது வழக்கம்.

பொதுவாக மூல விக்ரகத்தில் உயரத்திற்குச் சமம். முக்கால் அல்லது பாதியளவு செம்புத் திருமேனி இருத்தல் வேண்டும். அல்லது மூலவிக்ரகத்தின் உயர அளவை 9 சம பாகங்களாகப் பிரித்து, அதில் ஒரு பாகம் முதல் ஒன்பது பாகம் வரை கிடைக்கும் அளவில் ஏதேனும் ஒன்றைக் கொள்ளலாம். அல்லது மூல விக்ரகத்தின், கேசாந்தம், புருவ மட்டம், கண் மட்டம், மூக்கு மட்டம், மோவாய் மட்டம், ஸ்தான மட்டம், மார்பு மட்டம், அல்லது நாபி மட்டம் ஆகிய இந்த ஏதேனும் ஒரு மட்டத்திற்கு உற்சவ விக்ரகங்களை அமைக்கலாம்.

இவ்வுயரம், விக்ரகத்தின் பாதம் முதல் லலாடம் வரை (நெற்றி வரை) அமைத்த உயரமாகும். பீடமும், கிரீடமும் சிற்பியின் எண்ணத்திற்கு ஏற்ப அமைத்துக்கொள்ளலாம். உற்சவ விக்ரகங்களை மானாங்குலத்தினாலும், பேராங்குலத்தினாலும், ஆத்மார்த்த வழிபாட்டிற்குரிய செப்பு விக்ரகங்களை மாத்ராங்குலத்தினாலும் கொள்ளலாம். இப்படி உயரத்தை நிர்ணயிக்கும்பொழுது ஆயாதி பொருத்தம் பார்த்து நல்ல அளவினைக் கொள்ளுதல் வேண்டும்.

**ஆயாதி கணிதம்:**

ஆயாதி கணிதம் என்பது, மக்கள் எல்லா நன்மைகளும் அடையும் பொருட்டுக் கூறப்பட்டுக் கடைபிடித்துக் கையாளப்படும் விதிமுறையாகும். இந்தக் கணிதப்படி அமைத்து வழிபடும் விக்ரகங்கள், நிறைந்த செல்வத்தையும், மிகுந்த சிறப்பையும் நல்குமென்று சிற்ப சாஸ்திரம் கூறுகின்றது. ஆகவே, ஆயாதி இலக்கண விதியைப் பயன்படுத்தி விக்ரகங்கள் அமைப்பது மிக்க நன்று. ஒரு கிராமத்திற்கோ ஊருக்கோ விக்ரகங்கள் அமைக்க வேண்டும் என்றால் அவ்வூரின் பெயர் நாமத்திற்கு நட்சத்திரம் எடுத்து ஆயாதி கணிதமான சோடஷப் பொருத்தம் பார்த்து அமைக்க வேண்டும். தனி ஒருவர் வீட்டுப் பூஜைக்கு விக்ரகம் அமைக்க வேண்டும் என்றால் அந்தத் தனி ஒருவரின் நட்சத்திரம் மற்றும் அவர் மனைவி நட்சத்திரம் மற்றும் இருவரின் பெயர் நாமங்களை வைத்து மேற்குறிப்பிட்ட பொருத்தம் பார்த்து உயரம் நிர்ணயித்துக்கொள்ள வேண்டும்.

இப்படியான விக்ரக உயரத்தை நிர்ணயித்துக்கொண்டு, விக்ரகத்தின் பல்வேறு உறுப்புக்களின் நீள, அகலங்களையும் ஒன்றுக்கொன்று ஒப்புநோக்கி, தொடர்புபடுத்தி, அவ்விக்ரகங்களை அழகுறச் செய்ய வேண்டும். அவ்விக்ரகத்தின் முக நீளமே மூல அளவாகக் கையாளப்படுகின்றது.

முக அளவினாலேயே பிற உறுப்புக்களின் உயர நீளம் நிர்ணயிக்கப்படுகிறது. இதில் நெற்றி முதல் முகவாய் வரை உள்ள அளவு 'முகம்' என்று சொல்லப்படுகிறது. இதைச் சிற்ப இலக்கண நூல்கள் "தாளம்" என்றும் கூறுகின்றன. முக அளவை மூல அளவாகக் கொண்டு, விக்ரகத்தின் உடல், கால், கை, தோள், தொடை, முதலிய பெரிய உறுப்புகளின் அளவுகளும், சிரசு, கழுத்து, முழங்கால், பாதம் ஆகிய உறுப்புகளின் அளவுகளும் கீழ்க்கண்டவாறு நிர்ணயிக்கப்படுகின்றன.

| | | | |
|---|---|---|---|
| தலை | : | 1/4 | முகம் |
| முகம் | : | 1 | முகம் |
| கழுத்து | : | 1/4 | முகம் |
| மார்பு | : | 1 | முகம் |
| நாபி | : | 1 | முகம் |
| அரை (குய்யம்) | : | 1 | முகம் |
| தொடை | : | 2 | முகம் |
| முழங்கால் | : | 1/4 | முகம் |
| கால் | : | 2 | முகம் |
| பாதம் | : | 1/4 | முகம் |
| விக்ரகத்தின் மொத்த உயரம் | | 9 | முழுமுகம் |

இப்படியாகப் பாதம் முதல் தலை (சிரசு) வரையில் உள்ள உயரம் ஒன்பது முக உயரம் ஆகும். இது நவதான விக்ரகத்தின் உயர விகிதமாகும். மேற்படி விக்ரகத்தின் கண், காது, மூக்கு, வாய், விரல் போன்ற சிறு உறுப்புகள் "முகம்' அளவின் பல உட்பிரிவுகளைக் கொண்டு நிர்ணியிக்கப்படுகின்றன. நவதாளமானத்தை நடுவாகக்

கொண்டு அதற்குப் பெரிதாக "பத்துத்தாளமும்" சிறிதாக எட்டுத்தாளமும் கொள்வர். இவை மிகவும் முக்கியமான 3 தாள வகையாகும். மேலும் ஏழுதாளம், ஆறுதாளம், ஐந்து தாளம், நான்கு தாளம், 3, 2, 1, தாளம் ஆகிய வகைகளும் உண்டு.

ஏழு தாள உயரத்தை "வாமனம்" என்றும் எட்டுத்தாள உயரத்தை "மானுடம்" என்றும் 9 தாள உயர விக்ரகத்தைத் "தெய்வீகம்" என்றும் சிற்ப சாஸ்திரம் கூறுகிறது. குழந்தை உருவங்கள் ஐந்து தாள அளவினதாகும். குமரப் பருவத்தைச் சேர்ந்த விக்ரகங்கள் ஆறு தாள அளவினதாகவும் அமைக்கலாம்.

உலோக விக்ரகங்கள் பெரும்பாலும் உற்சவ விக்ரகங்களாகவே பயன்படுத்தப்படுகின்றன. உற்சவ விக்ரகங்கள் ஸ்திரப்பிரதிஷ்டை அதாவது மூலவிக்ரக உயரத்திற்குச் சிறிதே அமைக்கப்படுகிறது. உலோக விக்ரகங்கள் மிக அழகாகவும், நுட்பமாகவும் விக்ரக லட்சணங்கள் முற்றிலும் அமையுமாறும் செய்யலாம். பெரும்பாலும் விக்ரகங்கள் செம்பு, பித்தளை, ஈயம், தங்கம், வெள்ளி ஆகிய கலவையில் செய்யப்படுகின்றன. சிறிய விக்ரகங்கள் வெள்ளியிலேயும் மிகச் சிறிய விக்ரகங்கள் தங்கத்திலேயும் கோவிலில் வழிபாட்டிற்கும், வீட்டு வழிபாட்டிற்கும் செய்வதுண்டு. உலோக விக்ரகங்கள் இரண்டு வகையானவை. ஒன்று கெட்டியானது, மற்றது உள்ளீடற்றது (ஹாலோ). வழிபாட்டு விக்ரகங்களை கெட்டியாகவே செய்தல் வேண்டும். உள்ளீடற்றது (ஹாலோ) காட்சிப் பொருளாக வைக்கப்படுகின்றது. இதற்குக் கண் திறப்பது இல்லை. பூஜைக்குரிய விக்ரகத்திற்குத்தான் கண் திறக்கப்பட வேண்டும்.

உலோக விக்ரகங்களின் செய்முறை:

மெழுகினால் விக்ரகத்தைச் செய்து, உருவாக்குவதே இத்தொழிலில் முதன்மையாகும். மெழுகு விக்ரகம் எப்படி அமைகிறதோ அங்ஙனமே உலோக விக்ரகமும் அமையும். ஆகையினால் சிற்பியின் திறமை முழுவதும் மெழுகு விக்ரகத்திலேயே வெளிப்பட்டுவிடும்.

மெழுகினால் விக்ரகங்கள் உருவாக்குவதற்குத் தேன்மெழுகு, குங்கிலியம், எண்ணெய் ஆகிய மூன்று மூலப்பொருள்கள் தேவைப்படுகின்றன. இக்கலவையை ஓர் குறிப்பிட்ட பக்குவத்தில் காய்ச்சினால் ஓர் திடப்பொருள் கிடைக்கும். இக்கலவை சூடு செய்தால் மென்மைத் தன்மையும், தண்ணீரில் இட்டுக் குளிரச் செய்தால் கெட்டித் தன்மையையும் அடையக்கூடியது. இந்த மெழுகைக்கொண்டு சிற்பி, தேவையான விக்ரகத்தை உருவாக்குகிறார். பிறகு அவ்விக்ரகத்திற்கான கை, கால், மூக்கு, காது மற்ற எல்லா அங்கங்களையும் மேலே கூறியபடி உயர அளவை நிர்ணயித்தபடி உற்சவ விக்ரகத்திற்கான மெழுகு மாடலைத் தயாராக்குகிறார்.

பிறகு இதன்மேல், மிகவும் மெல்லியதாக வண்டல் மண்ணினால் பூச்சுக் கட்டி, உலர்த்தி அதனை நெருப்பிலிட்டுக் சுட்டு, அதற்குள் அமைந்த மெழுகு விக்ரகத்தை உருக்கி வெளியேற்றிய பின் உள்ள கூடு "கரு" எனப்படும்.

உலோக விக்ரகங்களில் செம்பு, பித்தளை, ஈயம், வெள்ளி, தங்கம், என்கிற இந்தப் பஞ்சலோகம் அல்லது பஞ்ச தாது சேர்க்கப்படுகின்றன. இதில் வெள்ளியும், தங்கமும் மிகவும் குறைவாகவே சேர்க்கப்படும். ஆண்டவன் பஞ்ச பூத ஸ்வரூபமாக

உள்ளார் என்பதால் இவ்வாறு செய்யப்படுகிறது. பஞ்சலோகங்கள் பஞ்ச பூதங்களை உணர்த்துவன என்று அறிய வருகிறது.

குறிப்பிட்ட எடையில் செம்பு, பித்தளை, ஈயம் முறையே 82%, 15%, 3% என்ற விகிதத்தில் (பூஜைக்குரிய விக்ரகங்களுக்கு சாஸ்திரத்திற்காகச் சிறிதளவு தங்கமும், வெள்ளியும் சேர்க்கப்படுகின்றன). சேர்க்கப்பட்ட இக்கலவையைக் குவளையில் வைத்துச் சூடு செய்வதால், (1,200 டிகிரி சிசி. வெப்ப நிலையில்) இவ்வுலோகக் கலவை நன்றாக உருகி நீர் போல் மாறுபடுகிறது. அதே சமயத்தில் மேலே கூறிய கருவையும் நன்றாகப் பழுக்கக் காய்த்து வைத்துக்கொண்டு, கருவில் முன்பே அமைத் துள்ள தாள்வாய் எனப்படும் புனலின் வழியாக உலோகத் திரவத்தை ஊற்ற வேண்டும். நன்றாகக் கருவும், உலோகமும் குளிர்ந்த உடன் கருவை உடைத்து விக்ரகத்தைப் பெற்றுப் பிறகு அதைச் செதுக்கி ராவி, நகாசு வேலைகள் செய்து மெருகேற்றி அவ்விக்ரகத்தைத் தீர்மானம் செய்தல் வேண்டும். விக்ரகத்திற்கு ஏற்ற பீடத்தையும் அளவிட்டு, மெழுகினால் பிடித்துக் கருக்கட்டி, வார்த்துச் சுத்தம் செய்து விக்ரகத்தின் "ஜடி" யோடு பிணைத்தல் வேண்டும். இதற்கு "ஜடிபந்தனம்" என்று பெயர். இதுவே பஞ்சலோக உற்சவ விக்ரகங்களை உருவாக்கும் முறையாகும்.

சோழர் காலத்தில் சிற்பிகள் மிகவும் போற்றிப் பாராட்டப்பட்டதாகவும், மன்னர்கள் சிற்பிகளுக்கு மானியம் கொடுத்துச் சிறப்பித்ததாகவும் கல்வெட்டுகள் கூறுகின்றன. இன்று விடுதலைக்குப் பின் இந்தச் சிற்பக்கலையை மத்திய மாநில அரசுகள் ஊக்கம் கொடுத்து வளர்த்து வருகின்றன.

இப்பொழுது, இச்சிற்பக்கலை இந்தியாவில் மட்டும் அல்லாது வெளி நாடுகளுக்கும் பரவுகின்றது. இலண்டன், அமெரிக்கா, பிரான்ஸ், ஆஸ்திரேலியா, மொரிஷியஸ், சிங்கப்பூர், மலேசியா, இலங்கை ஆகிய நாடுகளில் அமைந்துள்ள இந்துக் கோவில்களுக்கும் இங்கிருந்துதான் விக்ரகங்கள் அனுப்பப்படுகின்றன.

செஞ்சியிலிருந்து தஞ்சைப் பெரிய கோவிலைக் கட்டுவதற்காக ராஜராஜ சோழனால் அழைத்து வரப்பட்ட எங்களுடைய முன்னோர்கள், தஞ்சைப் பெரிய கோவிலின் திருப்பணியை முடித்தபின் தாராசுரம் கோவிலைக் கட்டுவதற்காக அங்குச் சென்றனர். அங்குத் திருப்பணி முடிந்ததும், காவிரி வடகரையில் உள்ள சுவாமிமலை திருக்கோவில் திருப்பணியில் ஈடுபட்டார்கள். பிறகு, அவர்கள் அங்கேயே தங்கி விட்டார்கள்.



# சைவகால விவேகம்

பேராசியரியர் இரகு

சைவகால விவேக என்னும் நூலினை ஆதாரமாகக் கொண்டு சிவால யங்களில் உத்ஸவங்கள் முதலாவனவற்றை எவ்வாறு என்றும் எந்தக் காலத்தில் செய்யவேண்டும் என்றும் குறிப்பிடுவதே இக்கட்டுரை.

இங்குக் குறிப்பிடும் அத்தனை க்ரியைகளும் குறிப்பிடப்படும் காலங்களும் "சைவகால விவேகம்" என்னும் நூலின் அடிப்படையில் தான் கூறப்படுகின்றன. ஆகமம் என்ற சொல்லுக்கு வேதம் என்று பொருள். இந்த நூலானது சிவாலயங்களில் அனுஷ்டிக்கப்படும் முறையை உடையதாகும். ஆகமம் என்பது ஈஸ்வரனின் மூச்சுக்காற்றினுல் உண்டானது. ஆகமம் என்ற சொல்லுக்கு வேதம் என்று பொருள். ஆகமங்கள் இரண்டு வகையாகவும் உள்ளன. ஒன்று வைணவ ஆகமம்; மற்றொன்று சிவாகமம். நாம் மனிதர்களாகிய நமக்கு எவ்வாறு நம்முடைய நித்தியானுஷ்டானங்களை வழிவகுத்து வைத்துக்கொண்டுள்ளோமோ அவ்வாறே பகவானுக்கு நித்ய க்ரியை களுக்கும் வழிமுறைகள் வகுக்கப்பட்டுள்ளன. அவற்றைக் கூறுவது தான் சைவகால விவேகம் என்ற இந்தப் புத்தகம்.

இந்தக் காலங்களை நிர்ணயிப்பதென்பது ஜோதிஷ சாஸ்த்ரம் தான். ஜோதிட சாஸ்திரத்தின் அடிப்படை ஞானமில்லாமல் எந்த ஒரு காலத்தையும் நாம் தெரிந்து கொண்டிருக்க முடியாது. நம்முடைய அன்றாட வாழ்க்கையில் எந்த ஒரு வேலையைக் குறிப்பிடுவதாக இருந்தாலும் அந்த செயல்கள் அனைத்திலும் ஜோதிட சாஸ்திரத்தின் சொற்களில்லாமல் தன்னிச்சையாக வேறு பதங்களை உபயோகிக்க இயலாது. (உதா) நான் வந்தேன் நான் ஆலயத்திற்கு சென்றேன், நாளை வருவேன் என இவ்வாறாக கூறும் அனைத்து நடைமுறை வார்த்தைகளில் இருப்பதென்பது சோதிடத்தின் வார்த்தைகள் தான். முதன் முதலில் காலம் என்ற சொல் அறிந்ததே சோதிடத்தின் வழியாகத்தான். ஆதலால் நம்முடைய அன்றாட வாழ்க்கையில் சோதிடம் ஒவ்வொரு பகுதியிலும் முக்கியமான அம்சமாக இருக்கிறது. நம்முடைய பொதுவான எல்லாக் காரியங்களும் சோதிடத்தின் வழியாகத்தான் செய்த கொண்டிருக்கிறோம். இது நம்பாரதத்தின் மகிமை ஆகும். சைவாகமத்திற்கும் சோதிடத்திற்கும் உள்ள றேுபாடு.

விரோத யத்ர த்ருஸ்யேத ஜோதி ஷோக்தாக மோகீத்யோ:
ஜோதிஷோக்தம் விஹாயைவ ஹ்யாகமோக்தம் ஸமாசரேத்.
இதி போதாயன ஸ்ம்ருதெள.

நம் சோதிட சாஸ்திரத்தில் கூறப்பட்ட காலத்திற்கும் சிவாகமத்தில் கூறப் பட்டுள்ள காலத்திற்கும் வேறுபாடு காணப்படுகிறது. எல்லா வகைகளிலும் சோதிட சாஸ்திரம் பொதுவானதாக இருந்தாலும் அவற்றில் கூறியவற்றை நாம் எல்லா காரியங்களுக்கு எடுத்துக்கொண்டாலும் இந்த ஆகமங்களுக்கு மட்டும் விதிவிலக்காக இருக்கிறது. இதற்கு அவர்கள் கூறுவது என்னவென்றால் போதாயனஸ்ம்ருதியில் மேல் குறிப் பிட்டுள்ள ஸ்லோகத்தைக் கூறுகிறார்கள். அதன் பொருள் எந்த இடத்தில் ஜோதிடமும்

ஆகமமும் வேறுபாடுகள் உடையனவாக இருக்கின்றதோ அவ்விடத்தில் ஆகமத்திற்கு முக்கியத்தை கொடுத்து சோதிடத்தை விடவேண்டும் எனப் பொருள். இதற்கு யுக்தி இவ்வாறாக இருக்கலாம். ஆகமங்கள் என்பது பகவானிடத்திடமிருந்து நேரடியாக வந்ததாலும், சோதிடமும் பகவானிடத்திடமிருந்து வந்தபோதும், சோதிடத்திற்கு உரை எழுதியவர்கள் அதிகப்படியாக இருக்கிறார்கள். மேலும் அதை நிர்ணயித்து எழுதியவர்களும் ரிஷிகளாகவே இருக்கிறார்கள்.

ஆதலால் ஆகமத்திற்கு முக்கியத்துவம் தந்து சோதிட வாக்கியத்தை விட்டு இருக்கவேண்டும் என்பதே யுக்தியாகும்.

மேலும் சைவகால விவேகத்தில் எல்லாவிதமான வ்ரதங்கள், உத்ஸவங்கள், ப்ரதிஷ்டைகள் ஆகிய எல்லாவற்றையும் எழுதப்பட்டிருந்தபோதும் நான் இங்கு எடுத்துக்கொண்ட தலைப்புகள் ஒரு சிலவே. எது முக்கியமாக இருக்கிறதோ அதைச் சைவகால விவேகத்தின் ஆதாரமாகக் கொண்டு எழுதியுள்ளேன்.

1. சிலாதாரு ஸங்க்ரஹணகால:

அதாவது ஆலயத்தில் ப்ரதிஷ்டா கும்பாபிஷேகம் செய்வதற்கு முன்பு அந்த ப்ரதிஷ்டை செய்யும் தேவதையின் உருவத்தைக் கற்களிலும் மரத்திலும் ஸங்க்ரஹணம் செய்து எடுத்துவரவேண்டும். ஒரு கோயிலில் உள்ள அனைத்துத் தேவதைகளையும் ஆவாஹணம் செய்த பிறகு கும்பாபிஷேகம் முடிந்தவுடன் அவற்றை மறுபடியும் உருவகப்படுத்தியுள்ள சிலைகளில் ஸமர்ப்பித்துவிடவேண்டும். அதற்குரிய காலங்கள் சைவகால விவேகத்தில் 5ஆவது ஸ்லோகத்தில் கூறப்பட்டு இருக்கின்றன. சித்திரை, மிருகசீரிஷம், சுவாதி சரவணம், உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி, ரேவதி, அனுஷம், மகம், ஹஸ்தம், ரோகிணி இந்த 12 நக்ஷத்திரங்களில் சிலாஸங்க்ரஹங்கள் செய்யவேண்டும்.

மாதங்கள்

வ்ருஷபக – வ்ருஷபம், மீனம், மேஷம், கும்பம், மிதுனம், மகரம் ஆகிய 6 மாதங்கள் அதாவது உத்தராயனத்தில் சுபயோக சுபதினத்தில் செய்யவேண்டும் என்று பொருள்.

2. வாஸ்து பூஜாகாலம்:

”ஸத்ரே” (6) சைவகால விவேகம்.

வாஸ்து பூஜை என்பது எவைகளுக்குச் செய்யலாம் என்று சைவகால விவேகத்தில் 6ஆவது ஸ்லோகத்தில் கூறப்பட்டுள்ளது. யாகங்கள் பாலஸ்தாபனம் செய்யும் பொழுதும் ஆஸ்தான மண்டபங்கள், அரசர்களின் மண்டபங்கள் அரண்மனையின் அடிக்கல் நாட்டுதல் யாகசாலைகள் அமைக்கும் பொழுதும் தேஹங்கள் அசுத்தமற்றபோதும் ரத்ன மண்டபங்கள் ப்ரதிஷ்டை செய்யும்போதும் கோபுரங்களில் கர்பன்யாசம் செய்யும்போதும் சகல தேவதைகளையும் ப்ரதிஷ்டை செய்யும்போதும் நாட்டிய அரங்கம் கட்டும்போதும் வீடுகள் மாளிகைகள் மண்டபங்கள் கட்டும் போதும் சிவாகமமுறைப்படி வாஸ்துபூஜை இரவிலோ அல்லது பகலிலோ செய்யவேண்டும். அவ்வாறு செய்தால் வாஸ்து தேவதை சந்தோஷமடைவாள் என்று பொருள்.

**3. அங்குரார்ப்பணம்**

"குர்யாத் சியோத்ஸவ" (7) ஸ்லோகா. அங்குரார்ப்பணங்கள் எவைகளுக்குச் செய்யவேண்டும் என்பதை விளக்குகிறது. சிவாலய உத்ஸவங்களிலும் ப்ரதிஷ்டா முதலாக க்ரியைகளிலும் சம்ப்ரோஷணம் முதலிய காலங்களிலும் சாந்தி முதலான க்ரியைகளிலும் விசேஷமான பூஜைகளிலும் மாத பூஜைகளிலும் அங்குரார்ப்பணம் செய்யப்படவேண்டும். உத்ஸவம் என்பவை 1 3 7 5 9 12 15 என்று இந்த நாட்களில் கோயில்களின் முறைகளுக்கேற்ப நடைபெறுகின்றன. இதில் எத்தனை நாட்கள் உத்ஸவமானாலும் 1 நாள் அல்லது 12, 15 நாட்களாக இருந்தாலும் அங்குரார்ப்பணம் செய்யப்படவேண்டியவை.

**4. ப்ரதிஷ்டா காலம்**

இந்த வேதா: என்னும் (11) ஸ்லோகத்தின் அடிப்படையில் ரோகிணி, ரேவதி, புனர்வஸு, மிருகசீரிஷம், ஆருத்ரா, பூசம், அனுஷம், அசுவினி, திருவோணம், சுவாதி, ஹஸ்தம், உத்திரம், உத்திராடம், உத்திராட்டாதி ஆகிய இந்த நட்சத்திரங்களில் ப்ரதிஷ்டை செய்யவேண்டும்.

சரலக்னங்கள் அல்லாத மற்ற ஸ்திர த்விஸ்வபாவ லக்னங்களில் ப்ரதிஷ்டை செய்யவேண்டும். ஆனால் த்விஸ்வபாக லக்னங்களில் தனுர் லக்னத்தை எடுத்துக் கொள்ளக் கூடாது. லக்னத்திற்கு 8வது இடம் சுத்தமாக இருக்கவேண்டும். லக்னத்திற்கு சுபகிரகங்களின் த்ருஷ்டிகள் (குரு, சுக்கிரன், புதன் சுக்லபக்ஷ சந்திரன் ஆகியோரின் பார்வை) இருக்கவேண்டும்.

**5. விக்னேஷ்வர ப்ரதிஷ்டை**

<u>நட்சத்திரங்கள்</u>

ரோகிணி, புனர்வஸு, ஹஸ்தம், உத்திரம், உத்திராடம், உத்திராட்டாதி, பூசம், ரேவதி இந்த நக்ஷத்திரங்களில் ப்ரதிஷ்டை செய்யவேண்டும். முன்பு கூறியது போல் அஷ்டமஸ்தானசுத்தி, சர ராசி அல்லாத மற்ற இரு ராசிகளில் ப்ரதிஷ்டை செய்யலாம்.

**6. சுப்பிரமண்ய ப்ரதிஷ்டை**

<u>நட்சத்திரங்கள் – செய்யக்கூடாதவை</u>

கேட்டை, பூரம், பூராடம், பூராட்டாதி, பரணி, மூலம், ஆயில்யம், ஆருத்ரா விசாகம், சதயம், திருவோணம், க்ருத்திகா, இந்த 12 நட்சத்திரங்களைத் தவிர மற்ற நட்சத்திரங்கள் செய்யலாம். தனுர் லக்னத்தையும் சர லக்னத்தையும் தவிர மற்றலக்னங்களிலும் சுபகிரகங்களின் பார்வையிலும் செய்யலாம்.

**7. சிவலிங்கப் ப்ரதிஷ்டை**

<u>கார்யா (10) ஸ்லோகா</u>

முதலில் அயனம் மாதம் இவைகளை நிர்ணயிக்கிறது. உத்தராயனத்தில் மாக மாதத்தைத் தவிர மற்ற மாதங்களில் செய்யலாம். இதன் பொருள் தக்ஷிணாயனத்தில் செய்யக்கூடாதென்பதே ஆகும்.

மேலும் சுக்ல பக்ஷத்தில் சதுர்த்தி, நவமி, சதுர்த்தசி, அஷ்டமி, ப்ரதமை, பௌர்ணமி, அமாவாசை இத்திதிகளைத் தவிர மற்ற திதிகளில் செய்யலாம்.

திங்கள், புதன், வியாழன், வெள்ளி இந்தக் கிழமைகளில் தான் சிவ ப்ரதிஷ்டை செய்யவேண்டும். மேலும் முன்பு கூறியது போல் சுபக்ரஹங்களின் பார்வை இருக்கும் போது சரமல்லாத தனுர் ராசியுமல்லாத மற்ற லக்னத்தில் செய்யவேண்டும்.

தவிர்க்கவேண்டிய காலம்

அந்த நக்ஷத்திரம், கான நக்ஷத்திரம், வ்யதீபாத அவலோக ம்ருத நக்ஷத்திரம் முதலிய துஷ்டகாலங்களைத் தவிர்க்கவேண்டும்.

அந்த நக்ஷத்திரம் ஆர்யாதி வாரங்களை மூன்றில் பெருக்கி அஸ்வின்யாதி நக்ஷத்திரங்களுடன் பொருத்தியதும், அடுத்துவரும் 9 நக்ஷத்திரங்கள் காண நட்சத்திரம், அடுத்து வரும் 12 நட்சத்திரங்கள் இரண்டு அல்லாத அதாவது காண நட்சத்திரம் எனப் பெயர். அடுத்து வரும் 6 நட்சத்திரங்கள் அந்த நட்சத்திரங்கள் ஆகும்.

வியாழக்கிழமை எடுத்துக்கொண்டால், கிழமைகளில் வியாழன் 5வது கிழமையாக வருவதால், அதை 3ஆல் பெருக்கி அசுவினி முதலிய நட்சத்திரங்கள் முதற்கொண்டு எண்ணவேண்டும். அசுவினியின் 15வது நட்சத்திரம் ஸ்வாதி, ஸ்வாதியில் இருந்து சதயம் வரை 1 கண் இல்லாத 1 காண நட்சத்திரம் என்றும்,
சதயம் முதல் ஆயில்யம் வரை இருக்கக்கூடிய (12) நட்சத்திரங்கள் இரண்டு கண் அல்லாத காண நட்சத்திரம் என்றும், மற்ற 6 நட்சத்திரம் அந்த நட்சத்திரம் என்றும் கூறுகின்றனர்.

இவ்வாறு கூறிய முறையில் சிவப்ரதிஷ்டை செய்யவேண்டும்.

அந்த நக்ஷத்திரம், காண நட்சத்திரம் வ்யதீபாதம் அவயோகம் ம்ருத நக்ஷத்திரமாகிய துஷ்ட காலங்கள் தவிர்க்க வேண்டியவை.

8. பவித்ராரோபன காலம்

முறைப்படி ஆஷாட, ச்ராவன, பாத்ரபத மாதங்கள் உத்தமம் மத்யமம் அதமம் என்றும் கூறப்பட்டுள்ளது. ஐப்பசி, கார்த்திகை அதாவது அஷ்யயுஜ கார்த்திகை மாதங்களை எடுத்துக்கொள்ளவேண்டும்.

மேலும் ஆஷாட மாதமாக இருந்தால் அதாவது ச்ராவன, பாத்ரபத மாதங்களில் ஆஷ்வயுஜ கார்த்திகை ஆகிய இந்த நான்கு மாதங்களிலும் க்ருஷ்ணபக்ஷ, சுக்லபக்ஷத்திலுள்ள அஷ்டமி, சதுர்தசிகளிலும் செய்யலாம் எனக் கூறப்பட்டுள்ளது.

ஆனுல், க்ருத்திகா மாத உற்சவத்திற்குப் பிறகு பவித்ராரோபனம் செய்யக்கூடாது.

அதிமாதத்தில், பவித்ராரோபணம் செய்யக்கூடாது.

உத்தமம்

அனுராதா, திருவோணம் இந்த நக்ஷத்திரங்கள் இருக்கும்போது ஆஷாட சுக்லத்வாதசியில் செய்வது உத்தமமானது.

சஷ்டி முதலிய திதிகளில் செய்யலாம். அஷ்டமி சதுர்தசி ஆகிய திதிகளில் செய்யலாம். இங்கு கூறப்பட்ட அஷ்டமி, சதுர்தசி திதிகளில் திதி த்வயமிருந்தால் அதாவது இரண்டு நாட்களிலும் இந்தத் திதிகள் வந்தால் அப்போது எவ்வாறு நிர்ணயிப்பது என்பது பிரச்சனைக்குரிய இடமாகும்.

அதாவது சுக்லபக்ஷத்தில் இவ்வாறு இருந்தால் அவைகளில் அந்தத் திதிக்கு சூரியனின் ஸ்பர்சம் இருக்கும் திதியை எடுத்துக்கொள்ளவேண்டும்.

க்ருஷ்ணபக்ஷத்தில் திதிகளுக்கு சூரியனின் ஸ்பர்சமில்லையோ, அத்திதியை எடுத்துக்கொள்ள வேண்டும்.

போகிக்கும், யோகிக்கும் சுக்லபட்சம் உயர்ந்தது. யோகிகளுக்கு சுக்ல பக்ஷமானது அனுகூலமானதாக இல்லையெனில் க்ருஷ்ணபக்ஷம் எடுத்துக்கொள்ள வேண்டும் எனத் தெரிகிறது. போகிக்கு க்ருஷ்ணபக்ஷம் எடுத்துக்கொள்ளக்கூடாது.

9. திக்ஷா காலம்

தீக்ஷை என்பது, நான்கு வகையாகக் கூறப்பட்டுள்ளது இவைகளின் காலங்கள் மட்டும் இப்பொழுது கூறப்பட்டுள்ளது.

நல்ல, எந்த ஒரு மனிதனுக்கு பகவானிடத்தில் தன்னை அறியாத பக்தியும், தன்னை மறந்த நிலையும் ஏற்படுகிறதோ அவனுக்குப் பரமேஸ்வரனுக்குச் சமமாக இருக்கக்கூடிய தகுதி, வாய்ந்த குருவானவர் தீக்ஷை செய்து வைக்கவேண்டும். குரு சிஷ்யனிடத்தில் அன்பும் சிஷ்யன் குருவிடத்தில் நல்ல பக்தி, ச்ரத்தை வினயம் ஆகியவற்றை உடையவனாகவும் இருக்கவேண்டும்.

தீக்ஷை செய்யவேண்டிய உத்தம மாதங்கள்:

ஐப்பசி, கார்த்திகை, வைகாசி ஆகிய மாதங்கள் உத்தமம்.

மத்யம மாதங்கள்

பங்குனி, மார்கழி, ஆனி ஆகிய மாதங்கள் மத்யமம்.

அதம மாதங்கள்

ஆடி, மாசி, ஆகிய மாதங்கள் அதமம்.

அதமாதமம்

ஆவணி, சித்திரை, புஷ்ய, புரட்டாசி ஆகிய மாதங்கள் அதமாதமம் எனக் கூறப்படுகிறது.

நட்சத்திரங்கள்

ரோஹிணி, ம்ருகசிரீஷம், மகம், பூசம், புனர்பூசம், ஹஸ்தம், சுவாதி, அனுஷம், திருவோணம், ரேவதி, உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி, மூலம் இவைகள் ச்ரேஷ்டமானது என்று மற்ற நட்சத்திரங்கள் சுபயோக கரணங்களோடு கூடியதாக இருந்தால் எடுத்துக்கொள்ளலாம் என்றும் உள்ளன.

லக்னங்கள்

ஸ்திரலக்னம், உபயலக்னமும் எடுத்துகொள்ளலாம். தனுர்லக்னம், சரலக்னம் ஆகிய இரண்டையும் எடுத்துக்கொள்ளக்கூடாது. 8ஆம் இடம் சுத்தமானதாக இருக்கவேண்டும்.

இந்த காலவிசாரம் என்பது போகிகளுக்கு மட்டுமே. யோகிகளுக்குக் கால நிர்ணயம் கிடையாது. ஆகையால் அவர்கள் எந்தக் காலங்களிலும் அவற்றைச் செய்து கொள்ளலாம் என்பதே ஆகும்.

முடிவுரை:

இங்குக் கூறப்பட்ட அனைத்து க்ரியைகளுக்கும் சைவகாலவிவேகத்தில் ஒரு குறிப்பிட்ட அதாவது ரோகிணி, மிருகசீரிஷம் முதலிய 14 நட்சத்திரங்கள் எல்லாவிதமான ப்ரதிஷ்டா முதலிய க்ரியைகளுக்கு எடுத்துக்கொள்ளலாம் எனக் கூறியுள்ளார். அதுபோலவே லக்னமும், ஸ்திர உபய லக்னம் எடுத்துக் கொள்ளலாம் என்றும் சரலக்னம், தனுர்லக்னம் ஆகிய 2 லக்னத்தை எடுத்துக்கொள்ளக்கூடாது. அதாவது எந்தச் சூழ்நிலையிலும் எடுத்துக்கொள்ளக்கூடாது எனக் கூறியுள்ளார். மேலும் அஷ்டமஸ்தான (8) சுத்தி அவசியம் என்றும் சுபகிரஹங்களின் பார்வை அவசியம் தேவை என்றும் கூறியுள்ளார்.

அதிகமான விசாரம் இருந்தபோதும் எடுத்துக்கொண்டவை ஒரு சில பகுதி மட்டும் தான்–

1. சிலாதாருசங்க்ரஹன காலம்
2. வாஸ்து பூஜா காலம்
3. அங்குரார்பணம்
4. ப்ரதிஷ்டாகாலம்
5. விக்னேஷ்வர ப்ரதிஷ்டை
6. சுப்பிரமண்ய ப்ரதிஷ்டை
7. சிவலிங்க ப்ரதிஷ்டை
8. பவித்ராரோபன காலம்
9. தீக்ஷா காலம்.

பூஜாகால:

காலமானது ஒன்றே ஆதலால் பேதமில்லாமல் உச்வாஸாதி பேதத்தால் இரவு பகல் ரூபமான காலபேதத்தை சொல்லலாம். ஆகையால் காமிகாகமத்தில் 60 உச்வாஸங்களுக்க ஒரு ப்ராணம் என்றும் ஆறு ப்ராணத்திற்கு ஒரு கடிகை என்றும் 60 கடிகைகளுக்கு ஒரு அஹோராத்ரம் என்றும் ஏழரை கடிகைகளுடைய யாமம் என்கிற பெயருடைய 8 சந்திகள் இருக்கும் என்று கூறுகின்றது. ஆகையால் எல்லா சந்திகளில் பூஜை செய்வது உத்தமோத்தமம் என்று அறிந்து கொள்ளவும். இவைகளின் ஒவ்வொரு சந்தியில் பூஜை இல்லை என்றால் க்ரமாக அதமபாவத்தை அடைந்து 9 பேதமாக ஆகிறது. இவ்விஷயமானது காமிகாகமத்தில் 8 7 6 5 4 3 2 1 என பாதி யாமங்களில் பூஜையைச் செய்வதால் ஒன்பது விதமாக ஆகுவது எனக் கூறுகின்றது.

அஜிதாகமம்

அஜிதாகமத்தில் 8 யாமங்களில் பூஜிப்பதாகக் கூறி எட்டு விதத்தில் மூன்று உத்தமம் என்றும் மூன்று மத்யமம் என்றும் இரண்டு அதமம் என்றும் கூறுகிறது. எப்படி எனில் சாஸ்திரீயமாக இரவு 4 யாமங்கள் பகல் 4 யாமங்கள் பூஜையைச் செய்தால் உத்தமோத்தமம் என்றும் பகல் 4 யாமம் இரவு 3 யாமம் செய்கின்ற பூஜையானது உத்தமமத்யமம் என்றும், பகல் 4 யாமம் இரவு 2 யாமங்களில் செய்யும் பூஜையானது உத்தமாதமம் என்று காலை, மதியம், சாயங்காலம், இரவு 2வது யாமத்தினுடைய (பாதி) அர்த்த யாம அர்ச்சனையில் பூஜையானது மத்யமோத்தமம் எனவும், காலை மாலை சாயங்காலங்களில் இரவினுடைய அர்தயாமார்ச்சனை அல்லாத இரவில் மட்டும் ஒரு தடவை செய்கின்ற பூஜையானது மத்யமத்யமம் என்றும், காலை மதியம், சாயங்காலங்களில் செய்யும் பூஜையானது மத்யமாதமம் என்றும், காலை மாலைகளில் செய்கிற பூஜை அதமோத்தமம் என்றும், ஒரு நாளில் ஒரு தடவை மட்டும் செய்யும் பூஜை அதமமத்யமம் என்றும், என 8 விதமாகப் பிரிக்கலாமே தவிர அதமாதமம் என்று அலங்காரபூஜையானது லிங்கார்ச்சணங்களில் கூறவில்லை. இவைகளில் ஹவிர்நிவேதனாந்தமான பூஜை (சுத்தம்) என்றும் நித்யோத்ஸவமான பூஜை மிஸ்ரம் என்றும் நர்தனாந்தமான பூஜை ஸங்கீர்ணம் எனக் கூறி மூன்று பிரிவுகளாகப் பண்ணலாம்.

காலை, மதியம் சாயங்காலங்களில் மிஸ்ரம் அல்லது சங்கீர்ண பூஜையைச் செய்யவேண்டும். ஆனுல் உபசந்த்யா பூஜையை சாந்த்யம் இருந்தால் மிஷ்ரஸங்கீர்ணங்களை செய்யாமல் சுத்த பூஜையை மட்டுமே செய்யவேண்டும். சூர்யோதயத்திற்குப் பிறகு ஒரு யாமகாலத்தில் செய்யும் பூஜைக்கு பூர்வசந்தயா என்று பெயர். இதை மஹாசந்த்யா என்றும் கூறலாம். பிறகு அர்தயாமகாலத்தில் செய்கிற பூஜை உபசந்த்யா என்று மத்யான்னத்தில் ஒரு யாமகாலத்தில் செய்கிற பூஜை மஹாசந்த்யா. பிறகு அர்தயாமகாலத்தில் செய்கிற பூஜை உபசந்த்யா. இவ்வாறாகப் பகலில் 2 மஹாசந்த்யா 2 உபசந்த்யாக்களும் இரவில் சூர்யாஸ்த்தத்திலிருந்து ஒரு யாமகாலத்தில் செய்கிற பூஜை மஹாசந்த்யா. பிறகு அர்தயாமகாலத்திலிருந்து செய்கிற அர்தயாமார்ச்சனை உபசந்த்யா. பிறகும் அர்தயாமகாலத்தில் செய்கிற பூஜை உபசந்த்யா எனவும், பின் சூர்யோதயத்திற்கு முன்பு 5 கடிகாகாலத்திலிருந்து செய்யும் பூஜை உபசந்த்யா எனவும் இவ்வாறு இரவிலும் 1 மஹாசந்த்யா 3 உபசந்த்யா ஆகுவது. இவ்விதத்தில் அஹோராத்ரியில் 3 மஹாசந்த்யா 5 உபசந்த்யார்ச்சனைகளை செய்யவேண்டுமாவது ஆகும்.

காரணாகமம்

காரணாகமத்தில் மஹாசந்த்யையினுடைய ஏழரைக் கடிகாகாலத்தில் செய்ய வேண்டிய கர்மாக்களுடைய விளக்கத்தைக் கூறியிருக்கிறது. எவ்வாறெனில் ஸ்நானத்திற்கு 2 நாழிகை; அர்ச்சனைக்கு 1 நாழிகை; நிவேதனத்திற்கு 1/2 நாழிகை; பலி ப்ராதனத்திற்கும் 1/2 நாழிகை; நித்யாக்னிகார்யத்திற்கும் 1/2 நாழிகை; நித்யோத்ஸவத்திற்கு 2 நாழிகை; நர்த்தனத்திற்கு 1 நாழிகை; என்றாக மஹா ஸந்த்யா, மஹாசந்த்யார்ச்சனை விவரனை கூறியுள்ளது.

சூட்சுமாகம்

சூட்சுமாகமத்தில் பூஜையானது 5 விதமாகப் பிரிக்கப்பட்டு உள்ளது. ப்ரக்ருத காலமானது சூட்சுமஸ்தூல என இருவிதம் இருக்கிறது. லௌகிகத்தில் நாங்கள் உபயோகிக்கின்ற காலமானது ஸ்தூலம் என்றும் ஆத்யாத்ம விஷயகாலமானது சூட் சுமம் என்றும் அறிந்துகொள்ளலாம். ஆகையால் சூட்சுமாகாலத்தை வ்யவகாரத்தின் பொருட்டு விசாரம் செய்யலாம். எவ்வாறெனில் யோகிகள் நான்கு முறை கண் சிமிட் டுதல் ஒரு த்ருடி, இரு த்ருடி 1 லவம், இரு லவம் 1 நிமிடம், 15 நிமிடம் 1 காஷ்டா, 30 காஷ்டா 1கலை, 30 கலை 1 முகூர்த்தம், (2 நாழிகை) பாதியோடு கூடிய 7 கடிகை 1 யாமம் (சந்த்யா); 8 யாமம் ஒரு அஹோராத்ரம் இப்படி சொல்லப் பட்ட 8 யாமங்களிலும் அர்ச்சனை முதலியவைகளைச் செய்வது உத்தமபூஜை, நான்கு சந்திகளில் செய்வது மத்யமபூஜை, மூன்று சந்தியில் செய்கிற பூஜை அதமபூஜை உபசந்த்யா மஹாசந்த்யாக்களில் பூஜையை செய்தாலும் பூஜை அங்கமான உற்சவத்தை மூன்றே சந்த்யையில் செய்யவேண்டும். 3 மஹாஸந்த்யா, 1 உபஸந்த்யா என்று 4 சந்த்யையில் பூஜையைச் செய்தாலும் அதன் அங்கமான உற்சவம் மூன்றே ஸந்தியைகளில் செய்யவேண்டும். ஒரு உபஸந்த்யா, 1 மஹா ஸந்தியாக்களில் பலி ப்ரதானத்தை செய்யவேண்டும். இவ்வாறு இரு ஸந்த்யாக்களில் பலி ப்ரதானம் செய்ய இயலாது போனுல் 1 சந்த்யையிலாவது அவசியம் செய்யவேண்டும். இவ்வாறு செய்யும்போது உபஸந்த்யைகளில் பலிப்ரதானம் செய்ய வேண்டியதில்லை. உபசந்த் யையில் அபிஷேகம் நிவேதனாந்தம் அல்லது தீபநீராஞ்சனாந்தமாகவும் செய்யலாம்.

அஜிதாகமம்

அஜிதாகமத்தில் முன்பு நடந்துவந்த பூஜாக்ரமத்தில் வித்தியாசம் உண்டானுல் ப்ராயச்சித்தம் செய்யவேண்டும் எனக் கூறுகிறது. ஆகையாலே காமிகாமத்தில் பூர்வகாலத்தில் இடைவிடாமல் நடந்துவந்த விஷயத்திற்கும் சாஸ்திரத்திற்கும் விரோதம் தோன்றினுல் அப்போது சாஸ்த்ரானுஸாரமாக செய்யவேண்டுமானுல் அனுசான க்ரமத்திற்குக் குறையில்லாமல் செய்யவேண்டும். சாஸ்த்திரசித்த விஷயம் அனுசானக் ரமத்திற்கு அதிகமாகி நடந்தால் தோஷமில்லை.

ஏதாவது நிமித்தம் உண்டானால் – எவ்வாறெனில் க்ரஹன நிமித்தம், மாசபூஜாநிமித்தமாக செய்கின்ற பூஜாதிகள் நைமித்தகங்கள் எனப்படும். புத்ரன் முதலிய காமோதேசத்தால் செய்கின்ற விசேஷ பூஜைகள் காம்யம் எனக் கூறும். இந்த காம்யபூஜைகளுக்கு காலநியமம் இல்லை. எப்போது விருப்பம் நிறைவேறுமோ அவ்போது செய்யலாம். ஆனால் நித்யசந்த்யாபூஜை முதலியவையுடன் கூடிய நைமித்திக பூஜையை செய்யலாம்; காம்யபூஜைகளையும் நித்ய பூஜையோடு கூடிச் செய்யக்கூடாதென்று சூட் சமாகம் கூறுகிறது.

ஒரு வேளை நித்ய – நைமித்திக – காம்ய கர்மாக்கள் ஒரே காலத்தில் வந்தால் அவ்வேளையில் செய்யும் முறை எவ்வாறெனச் சந்தேகம் தோன்றுவது சகஜம். ஒரே ஆசார்யனுல் அநேக கார்யங்கள் ஒரே சமயத்தில் செய்வது அசாத்தியம். பல மக்கள் ஒரே ஆலயத்தினுடைய க்ரமத்தைச் செய்தால் சங்கரரூபமான தோஷமுண்டாகும். ஆகையால் ஒருவனே செய்யவேண்டும். ஆசார்ய சங்கரமானுல் (கலவை) அரசனுக்கும் ராஜ்யத்திற்கும் நாசம் வரும் எனக் கூறுகிறது. ஆகையால் இவ்வாறு சந்தேகமுடைய

ரிஷிகளின் கேள்விக்கு பதிலாக காமிகாகமத்தில் அர்ச்சனாங்கமாகி ஜலம் முதலியவைகளைக் கொண்டு வரும் கந்த–புஷ்ப–தூப–தீப நைவேத்யாதிகளைத் தயார் செய்வது, சந்திரசேகராதி பரிவாரார்ச்சனையைச் செய்து நித்யோத்ஸவ–கான–நர்தனம் முதலியவைகளைச் செய்வது மற்றும் மூல லிங்கத்தை பூஜிப்பது இவையெல்லாம் ஒரே மனிதனுல் செய்ய இயலாததால் ஆசார்யன் ஒருவனே எப்படிச் செய்வான் என்று சந்தேகத்தோடு கூடிய ரிஷிகளுக்குப் பரமேஸ்வரன் எவ்வாறு ராஜ்யகார்யத்தை மந்திரிகளோ மக்களோ அருகில் உள்ளவர்களோ செய்தால் அரசனே செய்த மாதிரி என்று சொல்வாரோ அவ்வாறு ஒரே ஆசார்யனுல் செய்ய இயலாமல் போனுலும் அவருடைய மகனோ சிஷ்யனோ, உறவினர்களோ அவரின் உத்தரவை மதித்து சைவகுலோத்பன்னரான ப்ராம்மனரோ ஆசார்யர்களால் தீக்ஷாபத்தனாக சஷத்ரிய, வைஸ்ய, சூத்ர, அனுலோம, கந்தர்வநர்த்தக, ருத்ரகன்யா தாசி இவர்கள் யோக்யமான கர்மத்தைச் செய்தாலும் ஆசார்யம் செய்வதுபோல் ஆகுவதால் ஆசார்ய சங்கரதோஷத்திற்கு அவகாசமில்லை மற்றும் இதற்கு வித்தியாசமாகச் செய்தால் உலகிற்கு தாழ்வுவருவதால் அச்சமயத்தில் ப்ராயச்சித்தம் செய்துகொண்டு மீண்டும் நியமிக்கப் பட்டவரே செய்யவேண்டும்.

அம்சுமதாகமம்

அம்சுமதாகமத்தில் நித்யம் மற்றும் நைமித்திகம் விசாரம் செய்யும்பொழுது நித்ய கர்மாவைச் செய்ய ஈடுபடும் பொழுது நைமித்திகத்தையும் செய்ய வேண்டும் என்றால் நித்ய பூஜை முதலியவைகளைச் செய்த பிறகு நைமித்திக கர்மாவைச் செய்யத் தொடங்கவேண்டும். சந்த்யையின் பூஜையானது நைவேத்யந்த பல்யந்த, தீபதானந்தமாகிய மூன்று விதமாக இருப்பதால் இந்த நித்யமான கர்மாவசானத்தில் நைமித்திகத்தைச் செய்யும்போது ஆசார்யன் மற்றும் அர்ச்சகர் எனக் கூறியிருப்பதால் நைமிகத்தை ஆசார்யனே செய்யவேண்டும். அர்ச்சகன் நித்ய பூஜையை மட்டுமே செய்ய வேண்டும். நைமித்திகத்தில் சாகல்ய, பாவன, சாந்திக, மாங்கல்யம் என நான்கு விதம் இருக்கிறது. துவார பூஜை தொடங்கி நிவேதனாந்தமானது -சாகல்யம் எனவும், ஹோமாதி பலி ப்ராதனமானது பாவனம் என்றும், தூபம் முதற்கொண்டு நர்த்தனாந்தமானது சாந்திகம் என்றும், துவார பூஜை முதற்கொண்டு தாண்டவம் ந்ருத்தாந்தம் வரை மாங்கல்யம் என்றும் அறிந்துகொள்ளவும். இவைகளின் முடிவில் நித்ய சந்த்யையை அடைந்தால் அதையும் ஆசார்யனே செய்யவேண்டும் மற்றும் நித்ய – நைமித்திக காம்யங்கள், நித்யம் ஆகந்துகநித்யம் என இருவகை – எவ்வாறென்றால் – தினமும் செய்யும்சந்த்யார்ச்சனை நித்யம், ஒவ்வொரு மாசமும் வரும் விசேஷ யக்ஞமான அஷ்டமி, ப்ரதோஷம், அமாவாசை, மேஷாதி, சங்க்ராந்தி முதலான பூஜைகள் ஆகந்துக நித்யம் எனவும் அறியவும். இதை அர்ச்சகரே செய்யவேண்டும். இவ்வாறு நைமித்திகத்திலும் – நைமித்திகம், ஆகந்துக நைமித்திகம் என இருவகை. இந்த நைமித்திகமானது தர்பனாதி ப்ரதிஷ்டான கர்மாக்களையும் கொண்டது. இதையும் ஆசார்யரே செய்யவேண்டும். காம்யமும், பாஷ்யம், ஆப்யந்தரம் என இரண்டு வகை ப்ரசித்தமானதும் பலனுக்காகச் செய்கிற கார்யமானது பாஹ்யகாம்யம் எனவும், மோக்ஷத்திற்காக சித்த சுத்தி அர்த்தமாகி செய்யப்படும் கார்யம் ஆபயந்தரம் என அறியவும். இவை ஆசார்யனுல் செய்யப்பட வேண்டியவை.

நித்யமும், நைமித்திகமும் ஒரே காலத்தில் வந்தால் இரண்டும் ஸ்நான நிவேதன ஹோமம் முதலியவைகளை ஒரே நேரத்தில் சேர்த்துச் செய்யலாம். ஆனுல் ஆசார்யனே செய்யவேண்டும். பூர்வோக்த சந்த்யாகாலத்தை மீறிச் செய்யப்படும் பூஜை அபிசார கர்மா எனத் தெரிந்துகொள்ளவும்.

---

## திருமந்திரம்

உள்ளம் பெருங்கோயி லூனுடம் பாலயம்
வள்ளற் பிரானார்க்குச் வாய்கோபு ரவாசற்
றெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கங்
கள்ளப் புலனைந்தும் காளாமணி விளக்கே.

நினைவதும் வாய்மை மொழிவது மல்லாற்
கனைகழ லீசனைக் காண வரிதாம்
கனைகழ லீசனைக் காண்குற வல்லார்
புனைமலர் நீர்கொண்டு போற்றவல் லாரே.

மஞ்சன மாலை நிலாவிய வானவர்
நெஞ்சினுள் ஈச நிலைபெறு காரண
மஞ்சமு தாமுப சாரமெட் டெட்டொடு
மஞ்சலி யோடுங் கலந்தர்ச்சித் தார்களே.

உழைக்கவல் லோர்நடு நீர்மல ரேந்திப்
பிழைப்பின்றி யீசன் பெருந்தவம் பேணி
யிழைக்கொண்ட பாதந் தினமலர் தூவி
மழைக்கொண்டல் போலவே மன்னி நில்லீரே.



# முகூர்த்த நிர்ணயம்

சிவத்திரு C. கீதாசங்கர் எம்.ஏ.,எம்.பில்.
பாண்டிச்சேரி

முன்னுரை:

கோயில்களில் செய்யப்படும் நித்ய பூஜை முதல் கும்பாபிஷேகம் வரையிலான செயல்களை விளக்கும் கிரந்தங்களுக்கு ஆகமங்கள் என்று பெயர். ஆகமங்கள் சிவனின் முகத்தில் தோன்றி அம்பிகையைச் சென்றடைந்து, சிவபக்தர்களுக்கு ஏற்றவையாக இருப்பதால் ஆகமங்கள் என்று அழைக்கப்படுகின்றன.

ஆகதம் சிவக்த்ரேப்ய: கதஞ்ச கிரிஜாமுகே!
மதஞ்ச சிவபக்தானாம் தஸ்மாக் ஆகமமுச்சதே!!

எந்த ஒரு காரியத்தைச் செய்தாலும் அதற்குரிய முகூர்த்தத்தை நிர்ணயித்து அதற்குப் பின் தான் காரியத்தைத் தொடங்கவேண்டும். எனவே ஆகமங்களில் கூறப்பட்டுள்ள உத்சவம், கும்பாபிஷேகம் முதலியவற்றைக் கடைப்பிடிக்க முகூர்த்த நிர்ணயமானது முக்கியமானதாகக் கருதப்படுகிறது.

### முகூர்த்த நிர்ணயம்

முகூர்த்த நிர்ணய விஷயத்தில் ஜோதிஷ கிரந்தங்கள் நமக்கு மிகவும் பயனுள்ளவையாக விளங்குகின்றன. காரணம், "காமிகம்", "சுப்ரபேதம்" என்ற மூலாகமங்களும், "சித்தாந்த சேகரம்", "சைவ கால விவேகம்", "சோம சம்பு பத்ததி" முதலிய ப்ரகரண கிரந்தங்களும் "ப்ருஹத் சம்ஹிதை", "ஜ்யோதிர் நிபந்தம்", "நாரத சம்ஹிதை", முதலிய ஜோதிட நூல்களும் கால நிர்ணய விஷயத்தில் பேருதவியாக விளங்குகின்றன.

பிரதிஷ்டை முதலிய காரியங்களை உத்தராயணத்தில் அனுஷ்டிக்க வேண்டும் என்று பூர்வ காரணம் கூறுகிறது.

"அயனே தக்ஷிணே நேஷ்டம் ப்ரபெஸ்த சோத்தராயணே"

தேவர்களுக்கு உத்தராயணம் பகல் பொழுதாக விளங்குவதால் பிரதிஷ்டை முதலிய காரியங்கள் உத்தராயணத்தில் அனுஷ்டிக்கப்பட வேண்டும் என்று கூறுகின்றது.

"தேவாநாம் ததஹுண ப்ரோக்தம் அயனஞ்சோத்தரம்விஹ"

### பிரதிஷ்டைக்குரிய மாதங்கள்

மாசி மாதம் தவிர்த்து உத்தராயணத்தில் தை, பங்குனி, சித்திரை, வைகாசி, ஆனி முதலிய ஐந்து மாதங்களில் பிரதிஷ்டை செய்யப்பட வேண்டும் என்று பூர்வ காமிகம் கூறுகிறது.

"மாக மாஸம் விநா சஸ்தம் பாநோரயண முத்தமம்"

சோமசம்புபத்ததியிலோ, சித்திரை தவிர்த்து மாசி முதலிய ஐந்து மாதங்களில், பிரதிஷ்டை செய்யப்படவேண்டும் என்று கூறப்பட்டுள்ளது.

"விநா சைத்ரேண மாகாதௌ ப்ரதிஷ்டா மாஸ பஞ்சகே"

நாரதசம்ஹிதையிலும்

"விசை சைத்ரேஷ்வேவ மாஸேஷு மகாதிஷு சபஞ்சஸு"

என்று கூறப்படுகிறது பூர்வ காமிகம் மூலாகமமாக விளங்குவதால் சோம சம்பு பத்ததி, ப்ரகரண கிரந்தமாக இருப்பதால், பூர்வ காமிகமே அனுஷ்டிக்கத்தக்கதாகும்.

தக்ஷிணாயன காலத்தில் அவசரமேற்படின் ஆவணி, ஐப்பசி, கார்த்திகை மாதங்களில் கும்பாபிஷேகம் செய்யலாம் என்று பூர்வ காமிகம் கூறுகின்றது.

"தக்ஷிணே த்வரிதே மாஸௌ கார்த்திகா ஆஸ்ஸுஜாவபி
ச்ராவணஸ்ச்ச விதியந்தே ததன்யேச்ச விநின்னிதா:"

பக்ஷம்:—

சுக்ல பக்ஷமே பிரதிஷ்டைக்கு உகந்த பக்ஷமாகும்.

சுக்ல பக்ஷ:ஸுப: என்று பூர்வகாமிகமும்,
சுக்ல பக்ஷே விஸேஷேண என்று சோமசம்பு பத்ததியும் கூறுகின்றன.

கிருஷ்ணபக்ஷத்தில் சப்தமி வரையில் செய்யலாம் என்று பூர்வகாமிகம் கூறுகிறது.

ஸப்தம்யந்தோ ஸிதேமத:

சோம சம்பு பத்ததியிலோ, பஞ்சமி வரையில்தான் கிருஷ்ண பக்ஷத்தில் செய்யலாம் என்று கூறப்பட்டுள்ளது.

"க்ருஷ்ணே அஷ்டம்யா பஞ்சமீதிநம்"

பூர்வகாரணத்தில், சுக்ல பக்ஷத்தில், அஷ்டமி, சதுர்த்தி, சதுர்தசி, நவமி, பிரதமை முதலிய சுக்லபக்ஷத்தில் விலக்கத்தக்கவை என்று கூறப்பட்டுள்ளது.

சுக்ல பக்ஷே சதுர்த்தீச அஷ்டமீச சதுர்த்தசீ
நவமீ ப்ரதிபத்ச்சைவ பஞ்ச தித்ய சுப: ஸ்ம்ருதா:

சோமசம்பபத்ததியில்,

சதுர்த்தீம் நவமீம் ஷஷ்டீம் வர்ஜயித்வா சதுர்த்தசீம்

என்று கூறப்பட்டள்ளது.

சுக்ல பக்ஷத்தில் முதல் பாகத்தையும், க்ருஷ்ண பக்ஷத்தில் கடைசி பாகத்தையும் விடலாம் என்று பூர்வ காமிகத்தில் கூறப்பட்டுள்ளது.

"சுக்லே வாத்ய த்நதீயாம்ஸம் க்ருஷ்ணே சாந்த்யந்து வாத்யஜேத்"

கிருஷ்ண பக்ஷத்தில் தசமி வரை எடுத்துக் கொள்ளலாம் என்பது மேற்கூறிய சுலோகத்தால் கிடைக்கிறது.

பிரதிஷ்டைக்குரிய நக்ஷத்திரங்கள்

ரோகிணி, உத்திரம், உத்திராடம், உத்திராட்டாதி, ஹஸ்தம், சுவாதி, புனர்பூசம், அனுஷம், அசுவினி, மிருகசீர்ஷம், திருவோணம், சதயம், மகம், சித்திரை, அவிட்டம் முதலியவை பிரதிஷ்டைக்குரிய நக்ஷத்திரங்கள் என்று பூர்வ காமிகம் கூறுகிறது.

ரோஹிணி சோத்ராஸ்திஸ்ர: ஹஸ்தம் சுவாதி புனர்வசு
அனுராதாஸ்வஸுக் ஸௌம்யம் வைஷ்ணவம் வாருணம் மகா!
சித்ரச்விஷ்டா பௌஷ்டாஸ்ச்ச மநுஜேஷு ப்ரஸம்ஸிதா:

திவ்ய விக்ரஹங்களுக்குத் திருவாதிரை நக்ஷத்திரம் சிறந்தது என்று பூர்வகாமிகம் கூறுகின்றது.

"தேவேஷு கார்த்தீம் ரௌத்ரம்"
"சதாபிஷக் தனிஷ்டாத்ரா"

என்று சோம சம்பு பத்ததியிலும் கூறப்பட்டுள்ளது.

பரிவார தேவதா, முக்கிய தேவதா பிரதிஷ்டைக்குரிய நக்ஷத்திரங்கள்:

பூச நக்ஷத்திரத்தில் சிவனையும், திருவோண அபிஜித் நக்ஷத்திரத்தில் ப்ரஹ்மாவையும், குபேரனையும், முருகனையும், அனுஷ நக்ஷத்திரத்திலும், துர்கை முதலிய பரிவார தேவதைகளை மூல நக்ஷத்திரத்திலும் பிரதிஷ்டை செய்யவேண்டும், என்று ரத்ன மாலை கூறுகின்றது.

புஷ்ய ஸ்ருத்யாபிஜித் ஸுரேஸ்வரகயோ: வித்ராதியஸ்கந்தயோ!
மைத்ரே திக்மருசே: கரே நிருதிபே  துர்காதி காம் ஸ்ம்ருதம்!!

கணபதி, யக்ஷர்கள், அஷ்ட நாகங்கள் முதலியவற்றை ரேவதியில் பிரதிஷ்டை செய்யவேண்டும் என்று முகூர்த்த சிந்தாமணி கூறுகின்றது.

"விக்ன ஸர்ப்ப யக்ஷ பூதா கய: அந்தீயே,"

பூச நக்ஷத்திரத்தில் நவக்கிரஹங்களைப் பிரதிஷ்டை செய்யலாம் என்றும் கூறுகின்றது.

"புஷ்யே க்ரஹா:"

பிரதிஷ்டைக்கு நிந்தித நக்ஷத்திரங்கள்

பரணி, ஆயில்யம், கிருத்திகை, விசாகம், அவிட்டம், சதயம், கேட்டை, பூரம், பூராடம், பூரட்டாதி, மூலம் முதலியவை பிரதிஷ்டைக்கு ஏற்றவையல்ல என்று பூர்வ காரணம் கூறுகிறது.

"யமா ஆஷ்ஸ்லேஷாக்னி ஸர்ப்பானி ச்ரவிஷ்டா ஸார்ப்ப வாருணம்
ஜேஷ்டாச த்ருணி பூர்வாணி நைத்ருதஞ்ச வர்ஜயேத்"

பிரதிஷ்டைக்கேற்ற கிழமைகள்

சுக்ரன், புதன், குரு, சந்திரன், இவர்களின் நாட்களான வெள்ளிக்கிழமை, புதன் கிழமை, வியாழக்கிழமை, திங்கள் கிழமை முதலியன பிரதிஷ்டைக்கு ஏற்றவை என்று பூர்வ காரணம் கூறுகின்றது.

"ஸித ஸௌம்யயுக நிந்தோஸ்ச்ச வாரா: ஸ்ரேஷ்டத: மாமதா:" |

பூர்வ காமிகத்தில்,

"தேவவார: ப்ரஸம்ஸ்தி:"

என்று வியாழக்கிழமை கூறப்பட்டுள்ளது.

விலக்கத்தக்க கிழமைகள்

செவ்வாய், சனி, ஞாயிறு மூன்றும் விலக்கத்தக்கவை என்று பூர்வ காரணம் கூறுகின்றது.

"அசுபா ரவி ஸௌர்யாரா:"

பூர்வ காமிகத்திலோ, "வாரௌ குஜார்க்கௌச ஹித்வாச" செவ்வாயும் சனியுமே விலக்கப்பட்டுள்ளன.

"க்ரூர வார விவர்ஜித" என்று சோமசம்பு பத்ததியிலும், "விக்ருஜே தினே" என்று ப்ருஹத் சம்ஹிதையிலும் கூறப்பட்டுள்ளது.

சூரியன் முக்கால் பாபியாக இருந்தாலும் கால் சுபனாக இருப்பதால் ஞாயிற்றுக்கிழமையில் செய்யலாம் என்றும் சனி, செவ்வாய் இருவரும் முழு பாபியாக இருப்பதால் சனியும் செவ்வாயும் விலக்கப்பட்டுள்ளன என்றும் எண்ணத்தோன்றுகிறது.

"ரிக்த வார வர்ஜே" என்று முகூர்த்த சிந்தாமணியிலும் கூறப்பட்டுள்ளது. "வஸிஷ்ட ஸம்ஹிதா" வில் ஒவ்வொரு வாரத்திற்கும் பலன்கள் தரப்பட்டுள்ளன.

ஞாயிறு புகழையும்,
திங்கள் சுகத்தையும்,
செவ்வாய் நெருப்பில் பயத்தையும்,
புதன் வளர்ச்சியையும்,
வியாழன் திட நிலையையும்,
வெள்ளி செல்வ வளர்ச்சியையும்
சனி நிலையான பலனையும் அளிப்பவை

என்று கூறப்பட்டுள்ளது.

"கீர்த்தப்ரதம் க்ஷேமகரம் க்ருஸாது அபயப்ரதம் வ்ருத்திகரம் த்ருடஞ்ச
லக்ஷ்மீகரம் ஸுஸ்திரதம் த்விநாதி வாரேஷு ஸம்ஸ்தாபனமா மநந்தி"

இங்கு மற்றொரு விசேஷம் என்னவெனில் சனிக்கிழமையில் பிரதிஷ்டை செய்தால் நிலையான (தன்மை) நிலை ஏற்படும் என்று கூறப்பட்டுள்ளது. எனவே தான் செவ்வாய்க்கிழமை அனைத்து இடங்களிலும் நீக்கப்பட்டுள்ளது என்று நினைக்கத் தோன்றகிறது.

ஆனால் பூர்வ காரணத்தில், ரோஹிணி, சுவாதியுடன் கூடிய சனிக்கிழமை, பிரதிஷ்டைக்கேற்றதென்றும், ரேவதி ஹஸ்தத்துடன் கூடிய ஞாயிற்றுக்கிழமையிலும், உத்திராடம், அசுவினியுடன் கூடிய செவ்வாய்க்கிழமையிலும் பிரதிஷ்டை செய்யலாம் என்று கூறப்பட்டுள்ளது.

"அசுபா: ரவிஸெளர்யாரா: சுபயோயே சுபப்ரதா:
ரோஹிண்ய நில ஸம்யுக்த: சனி வாரஸ்து சோபந:
பூஷா ஸாவித்ர ஸம்யுக்த: சூர்ய வாரோவர: ஸ்ம்ருத:
விஸ்வ வேதேஸ்வனியுக்த: குஜ வாரோ வர: ஸ்ம்ருத:"|

தக்த வாரங்கள்:

ஞாயிற்றுக்கிழமை துவாதசியும், திங்கள் கிழமை ஏகாதசியும், செவ்வாய் பஞ்சமியும், புதன் கிழமையில் துவிதீயையும், வியாழக்கிழமையில் ஷஷ்டியும், வெள்ளிக் கிழமையில் அஷ்டமியும், சனிக்கிழமையில் நவமியும் வந்தால் அதற்குத் தக்த வாரம் என்று பெயர். அது அனைத்துச் சுபகாரியங்களுக்கும் விலக்கத்தக்கதாகும், என்று பூர்வ காரணம் கூறுகின்றது.

"த்வாதஸ்யா ஏகாதசீ சைவ பஞ்சமீ ச த்விதீயகா|
ஷஷ்டீசஷ்டமீச நவமீ சூர்யாதிபிஃ க்ரமாந்விதா:" ||

லக்னம்

பிரதிஷ்டைக்கு (ஸதிரங்கள்) ஸ்திரலக்னங்கள் மிகவும் உகந்தவை என்றும், உபய லக்னங்கள் மத்யமமான பலனை அளிக்கும் என்றும் கர லக்னங்கள் கூடாது என்றும் பூர்வ காமிகம் கூறுகிறது.

"உத்தமஃ ஸ்திர ராசி ஸ்யாத் மத்யமஸ்த பயாத்மக:
விவர்ஜ்யா சரராசிஸ்து ஸஜீவத் சுபே ப்ரத:"

ஜ்யோதிர் நிபந்த கிரந்தத்தில்,

"சரோதயே லக்னகதே நகார்யம்
ஸம்ஸ்தாபனம் நைவ சராம்ஸகேபி"

என்று கூறப்பட்டுள்ளது. சோமசம்பபத்ததியில்,

"லக்னேச கும்ப ஸிம்ஹாதி துலா வ்ருஷப தன்வினாம்"|

என்று கூறப்பட்டுள்ளது. இங்கு சர லக்னமான துலாமும் சேர்க்கப்பட்டுள்ளது. இதற்குப் பலம் சேர்ப்பதாய் ஜ்யோதிர் நிபந்தம் என்ற கிரந்தத்தில்

"சரோபி முக்ய ஸுர ஸன்னிவேசே
ஸதா ம்ருதுத்வாத் ஸீரஸன்னிவஸே" ||

என்று சொல்லப்படுவதாலும் துலாம் சுக்கிரனுடைய வீடாக இருப்பதாலும், சுபராக சுக்கிரன் இருப்பதாலும் துலாத்தை ப்ரதிஷ்டைக்கு எடுத்துக் கொள்ளலாம் என்று ஆகிறது.

சரராசியாக இருந்தாலும் அதில் குரு இருந்தால் அந்த இராசியில் ப்ரதிஷ்டை செய்யலாம் என்று பூர்வகாமிகம் கூறுகிறது.

"விவர்ஜ்ய சர ராஸிஸ்து ஸஜீவச்சேத் சுபப் ரத:"

சர இராசிகள் 4. மேஷம், கடகம், துலாம், மகரம். இவற்றுள், மேஷமும், மகரமும் பாபிகளான செவ்வாய், சனியின் வீடாக இருப்பதால் அவை விலக்கத்தக்கவை. மீதமுள்ளவை கடகமும், துலாமும் ஆகும். சந்திரன் சுக்ல பக்ஷத்தில் சுபராகவும், க்ருஷ்ண பக்ஷத்தில் அசுபராகவும் கருதப்படுகிறான். மேலும் பூர்வ காரணகமத்தில் "சுபாநாந்தாதய: ஸஸ்த தத்ர ஸஸ்யுதயம் விநா" என்று சந்திரனின் வீடான கடக லக்னம் விலக்கப்பட்டுள்ளது. எனவே பூர்வ காமிக வாக்கியத்தில் கூறப்பட்டுள்ளபடி சர ராசியாக இருந்தாலும், லக்னத்தில் குரு இருந்தால் அந்த லக்னத்தை எடுத்தக் கொள்ளலாம். அது தான் துலா லக்னம் என்று ஆகிறது.

பூர்வ காரணாகமத்தில், சர ராசிகளுடன், தனுர் லக்னமும், பிரதிஷ்டைக்கு விலக்கப்பட்டுள்ளது.

"ராஸிஷ்வபி தனுஸ்ச்சைவ சத்வாரச்சரராஸய:
அப்ரஸஸ்தா இதி க்யாதா: சேஷ ஸ்து சுபப்ரதா: ஸ்ம்ருதா:"

சோமசம்பு பத்ததி,

"லக்னஞ்ச கும்ப ஸிம்ஹாதி துலா வ்ருஷப தன்விதாம்"

என்று கூறும். தனுர் லக்னம் ப்ரதிஷ்டைக்கு உகந்ததென்று கூறப்பட்டுள்ளது.

எங்கு மூலாகமங்களுடன் பிரகரண கிரந்தங்களுக்கு விரோதம் ஏற்படுகின்றதோ அங்கு மூலாகமங்களையே எடுத்துக் கொள்ளவேண்டும். எனவே தனுர்லக்னம் பிரதிஷ்டைக்கு ஏற்றதல்ல என்று கூறலாம். ஆனால் ஆகமங்களின் எண்ணிக்கை 28 ஆக இருப்பதால், வேறு ஆகமங்களில் மூலக்கூறுகள் இருக்க வாய்ப்புள்ளதால் எடுத்தவுடன் எதையும் மறுப்பது நல்லதல்ல.

ஸ்திரராசிகள் பிரதிஷ்டைக்கு உகந்தவை என்று ஆகமங்களில் கூறப்பட்டாலும் சிவன், விஷ்ணு, அம்மன் முதலிய தெய்வங்களுக்கு உபய ராசியே சிறந்தது என்று "ஜ்யோதிர் நிர்பந்தத்தில்" கூறப்பட்டுள்ளது.

"ஸிம்மாதயே தினகர: மிதுனே மஹேச:
நாராயணஸ்ச்ச யுவதௌ கடபே விதாதா,
க்ஷுத்ராச்சரே ஸ்திரக்ரஹேச நிகிலாஸ்ச்ச தேவா:"

சூரியனைச் சிம்ம லக்னத்திலும், மிதுனத்தில் சிவனையும், கன்னியில் விஷ்ணுவையும், கும்பத்தில் ப்ரம்மாவையும், தேவிகளை உபய லக்னத்திலும், க்ஷுத்ர தெய்வங்கள் சர ராசியிலும் பிரதிஷ்டை செய்யவேண்டும் என்று கூறப்பட்டுள்ளது.

திருவாதிரையில் சிவனை ப்ரதிஷ்டை செய்யலாம் என்று கூறியதால் அதன் ராசியான மிதுனம் சிவனுக்குப் ப்ரதீஷ்டையில் ஏற்றதாக கூறப்பட்டுள்ளது என்று ஊகிக்கத் தோன்றுகிறது. -

மேலும் லக்னத்தில் குரு, சுக்கிரன், புதன் இம்மூவரில் ஒருவர் பலம் பெற்றிருந்தாலும் அந்த லக்னம் பிரதிஷ்டைக்கு உகந்தாகும். லக்னத்தில் சந்திரன் இருப்பது விசேஷமல்ல.

"குரு பார்க்கவ சாந்திரீணாம் உதயம் ஸம்ப்ரஸ்யதே"

—பூர்வகாமிகம்

"ஏகோபி ஜீவ; பலவாதனுஸ்த:
ஸிதோ பிஸௌம்யோப்யதவா பலிசேத்
தோஷோ நஷேன் விநிஹந்தி ஸத்ய:
ஸ்கந்தோ யதா தாரக தைத்யவர்க்கம்".

பிரதிஷ்டைக்குரிய இட சுத்தி

பிரதிஷ்டைக்கு லக்னத்திற்கு '8' ஆம் இடத்தில் பாபிகள், சுபர்கள் யாரும் இருக்கக்கூடாது. எனவேதான் பூர்வ காரணாகமம்,

"லக்னஸ்த நைதகஸ்தானே க்ரஹான் ஸர்வாஞ்ச வர்ஜயேத்"

என்று கூறுகிறது. இதையே வஸிஷ்ட ஸம்ஹிதையும்,

ஸர்வே க்ரஹா: நைதன தாஸ்த்வஜஸ்தம் ஸௌம்யா:
அஸௌம்யா: கலு ம்ருத்யு ஸம்ஸ்தா:

என்று கூறுகிறது.

லக்னத்திற்கு 3,6,11 ஆம் இடங்களில் பாபிகள் இருந்தால் நற்பலன்களை அளிப்பார் என்று பூர்வ காமிகம் கூறுகின்றது.

த்ரிஷடேகா தசஸ்தானே பாபஸ்து நிசி சோபனா:

லக்னம் முதலான ஒவ்வொரு இடத்திலும், சுபர்களும், பாபிகளும், கர்த்தாவிற்கு என்னென்ன பலன்களை அளிப்பார்கள் என்று நாரத சம்ஹிதை விரிவாகக் கூறுகின்றது. லக்னத்தில் உள்ள சூரியன், சந்திரன், செவ்வாய், சனி, ராகு, கேது, இவை ஐந்தும் கர்த்தாவிற்கு மரணத்தை அளிக்கும். குரு, சுக்ரன், புதன், தனதான்ய பலனை அளிப்பார்கள். இரண்டாமிடத்தில் பாபிகள் நற்பலன்களை அளிப்பதில்லை. சுபர்களும், சந்திரனும், செல்வச் செழுமையை அளிப்பார்கள். மூன்றாம் இடத்தில் அனைத்து கிரஹங்களும் பிள்ளை, பேரன் முதலிய அனைத்துச் செல்வங்களையும் அளிப்பார்கள்.

நான்காமிடத்தில் சுபர்கள் நற்பலன்களையும், அசுபர்கள் தீமையையும் விளைவிப்பர். ஐந்தாமிடத்தில் பாபிகள் கஷ்டத்தையும், சுபர்கள் நற்பலன்களையும் அளிப்பர். பூர்ணசந்திரன் நற்பலனையும், க்ஷீண சந்திரன் கெடுதலையும் விளைவிப்பான். ஆறாமிடத்தில் சுபர்கள் எதிரிகளை அளிப்பர். பாபிகள் எதிரிகளை அழிப்பர். சுபனோ, அசுபனோ சந்திரன் நற்பலனை அளிப்பான். ஏழாமிடத்தில் பாபிகள் கர்த்தாவிற்கு நோய் நொடிகளை அளிப்பர். சுபர்கள் நற்பலன்களை அளிப்பர். எட்டாமிடத்தில் அனைத்து கிரஹங்களும் கர்த்தாவுக்குக் கெடுதலை விளைவிக்கும். ஒன்பதாமிடத்தில் சுபர்கள் நல்ல பலன்களையும் பாபிகள் தீய பலன்களையும் அளிப்பர். பத்தாமிடத்திலும், பதினொன்றாமிடத்திலும், அனைவரும் நற்பலனை அளிப்பர். பன்னிரண்டாம் இடத்தில் அனைவரும் விலக்கத் தக்கவர்கள் ஆவர்.

லக்னஸ்தா: ஸூர்ய சந்த்ரா ராஹூ கேத்வர்க்க சூனவ: |
கர்த்து ம்ருதீயு ப்ராதச்சான்யே தனதாண்ய ஸுகப்ரதா:
த்விதீயே கேஷ்டதா: பாபா: சுபா: சந்த்ரச்ச விபதா:
த்ருதியே நிகிலா: கேடா: புத்ர பௌத்ர ஸுகப்ரதா:
சதுர்த்தே ஸுகதா: ஸௌம்யா: க்ரூரா சந்த்ரச்ச துக்கதா:
க்லானிதா: பஞ்சமே க்ரூரா: ஸௌம்யா: புத்ர ஸுகப்ரதா:
பூர்ண: க்ஷீண: சசி தந்ர புத்ரத: புத்ர நாசத:
ஷஷ்டே சுபா: சத்ருதா: ஸ்யு: பாபா: சத்ருக்ஷயப்ரதா:
பூர்ண க்ஷீணோ பிவா சந்த்ர: ஷஷ்டே உகில ரிபுக்ஷயம்
கரோதி ததீரு சிராத் ஆயுஷ்ய புத்ர தனப்ரதப்:
வ்யாதிதா: ஸப்தமே பாபா: ஸௌம்யா: ஸௌம்யா பலப்ரதா:
அஷ்டமஸ்தாநகா; ஸர்வே கத்ரும்ருத்யுப்ரதா: க்ரஹா:
தர்மே பாபாக்னந்தி ஸௌம்யா: சுபதா: சசி
பந்தா: கர்மதா: பாபா: ஸெம்யா சந்த்ரச்ச கீர்த்திதா:
லாபஸ்தானகதா: ஸர்வே பூரிலாபப்ரதா க்ரஹா:
வ்யயஸ்தானகதா: ஸஸ்வத் பஹூயயதரா க்ரஹா:

ஷடசீதிமுகம், கர்தரிதோஷம் முதலியன கும்பாபிஷேகத்தில் விலக்கத்தக்கவையாகும்.

ஷடசீதிமுகம்:

ஸ்திரபேஷ்வர்க்க ஸம்கதி: க்ஞ்யோ விஷ்ணு பதத்வயா
ஷடசீதி மூகிக்ஞேயா திஸ்வ பாவேஷு ராசிஷு

சூரியன் உதய ராசியில் பிரவேசிக்கும் காலம் ஷடசீதி முகம் என்று கூறப் பட்டது. எனவே உபயராசிகளான ஆனி, புரட்டாசி, மார்கழி, பங்குனி இவை நான்கும் பிரதிஷ்டைக்கு விலக்கத்தக்கவையாகும்.

லக்னத்திற்கு இருபக்கமும் பாபக்ரஹங்கள் இருந்தால் அதற்கு கர்தரீதோஷம் என்று பெயர். அந்த லக்னத்தை விலக்க வேண்டும்.

லக்னாரிப்ப முகயோ: பாபக்ரஹயோரு பயஸ்தேயோ: |
ஸகர்த்தரீதி விக்ஞேயா தம்பத்யோ ம்ருத்யுகர்த்தரீ ||

குரு, சுக்ரன் அஸ்தமனம் பிரதிஷ்டையில் கவனிக்கத்தக்கது. இதையே,
"ப்ரதிஷ்டாம் வர்ஜபேத் ஜுவகுரு சுக்ராஸ்தா மனேபிச"
என்று பூர்வ காரணமும் கூறுகிறது.

மேலும் யோகங்களில் வ்யதீபாதம், வஜ்ரம், சூலம் விஷ்கம்பம், பரிகம், கண்டம் வைதிருதி, ஹர்ஷணம் முதலியன பிரதிஷ்டைக்கு விலக்கத்தக்கவையாகும்.

மேலும், பூகம்பம், கிரஹணம், முதலியன ஏற்பட்ட நாட்களிலிருந்து ஒரு வாரம் வரையில் பிரதிஷ்டை செய்யக் கூடாது. கரண சங்கிரமமும் பிரதிஷ்டைக்குதவாது. எனவே யஜமானன் நக்ஷத்திரத்திற்கு தாராபலம், சந்திரபலம், கூடியதாகவும், சந்த்ராஷ்டம் அற்றதும், பஞ்சக சுத்தியுடன் கூடியதும் ஆன சுபமுகூர்த்தத்தைச் ஜோதிடன் தேர்ந்தெடுக்கவேண்டும்.

முடிவுரை:

முகூர்த்தத்தைத் தேர்ந்தெடுக்கும்பொழுது அனைத்தும் சுபமாக இருக்கும் முகூர்த்தம் தேவர்க்கும் அரிதாகும். ஆகவே குணங்கள் அதிகமாகவும், தோஷங்கள் குறைவானதாகவும் உள்ள முகூர்த்தத்தைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்பதை பூர்வ காமிகம்

"ஸ்வல்ப தோஷ குணாதிகே"

என்று கூறுகிறது.

*****

# திரு உந்தியார்

(மெய்கண்ட செல்வம் சி.சு. மணி, பாளையங்கோட்டை)

---

திருவியலூர் உய்ய வந்த தேவ நாயனுர் அருளிய திருஉந்தியார், மெய்கண்ட சாத்திரங்கள் பதினான்கினுள்ளும் முதலாவதாக வைத்து எண்ணப்படுகின்ற சிறப்பினை உடையது. திருவுந்தியாரும் அதனை அடியொற்றி எழுந்த திருக்களிற்றுப்படியாரும் மெய்கண்ட தேவ நாயனாரின் சிவஞான போதத்திற்குக் காலத்தால் முற்பட்டவை. எனவே அவை இரண்டையும் முதலில் கூறி, அதன் பிறகே சிவஞான போதத்தைக் கூறுவது என்ற மரபு தோன்றியுள்ளது.

பதினான்கு மெய்கண்ட சாத்திரங்களையும் தொகுத்துக் குறிப்பிடும் வெண்பா "உந்திகளிறு உயர்போதம் சித்தியார்" என்றே தொடங்குகிறது. வாகீசமுனிவரின் ஞானாமிர்தம், திருஉந்தியாருக்குக் காலத்தால் முற்பட்டது. ஆயினும் ஞானாமிர்தம் மெய்கண்ட நூல்கள் பதினான்கு என்ற தொகுப்பிற்குள் சேர்க்கப்படுவதில்லை. இதற்கு ஒரு காரணம், ஞானாமிர்தம் நூல் முழுமையாகக் கிடைக்கவில்லை என்பதாக இருக்கலாம். மற்றொன்று சித்தாந்தக் கொள்கைகளை எடுத்துரைக்கும் சந்தான பரம்பரையில் ஞானாமிர்தம்வந்த மரபு வேறானதாக இருக்கலாம்.

யாப்பிலக்கண அடிப்படையில் பார்க்கும்போது, உமாபதிசிவாச்சாரியாரின் திருவருட்பயன், குறள் வெண்பாக்களால் அமைந்த நூல். அதுவே மிகச் சிறிய யாப்பு வடிவமாகும். திருஉந்தியார் 45 கலித்தாழிசைகளைக் கொண்ட நூல். ஒவ்வொரு தாழிசையிலும் இரண்டாவது மூன்றாவது அடிகள் 'உந்தீபற' என்ற சொற்களைக் கொண்டு முடிவுறுகின்றன. இவற்றைக் கழித்துவிட்டுக் கணக்கிட்டால், திருஉந்தியாரின் ஒவ்வொரு பாடலும் எட்டுச்சீர்களைக் கொண்டுள்ளது. எனவே திருவருட்பயனை ஒப்பிடும்போது திருஉந்தியார் ஒருசீர் மட்டிலுமே மிகுதியாகக் கொண்டுள்ளது. ஒவ்வொரு பாடலும் எட்டே சீர்கள். கருத்து நிறைவுற அருளப் பட்டிருப்பதால் இவை மிகச் செறிவாக விளங்குகின்றன.

இச்செறிவினை நோக்கித்தான் போலும் திருஉந்தியாரில் கூறப்பட்ட கருத்துக்களைச் சற்றே விரிவுபடுத்தி ஒருநூறு திருவெண்பாக்களால் திருக்கடவூர் உய்யவந்ததேவ நாயனார் திருக்களிற்றுப்படியாரை அருளிச் செய்தார்.

திருஉந்தியார் யோகநெறியையும் ஞானநெறியையும் விளக்குகின்ற நூலாக அமைந்துள்ளது. சித்தாந்தச் செந்நெறியிலே நின்று உய்யவந்ததேவ நாயனார் எய்திய பேரின்ப அனுபவத்தை இந்நூல் இயம்புகின்றது. சொல்லுக்கு அடங்காத இன்பத்தைச் சொல்ல வருகிற ஆசிரியர், தமது பாடல்கள் பலவற்றிலும் குறியீட்டுச் சொற்களாலேயே உணர்த்துகிறார். இதன் விளைவாகப் பல பாடல்கள் பிசிச் செய்யுள்களைப் போலவே அமைந்துள்ளன.

"கிடந்த கிழவியைக் கிள்ளி எழுப்பி
உடந்தை யுடனே நின்று உந்தீபற
உன்னையே கண்டது என்று உந்தீபற"

"பொற்கொழுக் கொண்டு வரகுக்கு உழுவதுஎன்
அக்கொழுநீ அறிந்து உந்தீபற
அறிந்து அறியா வண்ணம் உந்தீபற"

"முத்தி முதலுக்கே மோகக் கொடிபடர்ந்து
அத்தி பழுத்ததுஎன்று உந்தீபற
அப்பழம் உண்ணாதே உந்தீபற"

என்பன போன்ற பல பாடல்கள் இதற்கு எடுத்துக்காட்டாக அமைகின்றன. திருமூல தேவ நாயனார் திருமந்திரத்தில் இத்தகைய பாடல்கள் பல இடமபெற்றுள்ளன என்பதை இங்கு நினைவு கூருதல் வேண்டும்.

இலக்கியங்களைப் படிப்பதுபோலத் திருஉந்தியாரையோ, திருமந்திரத்தையோ படித்துப்புரிந்து கொள்வது என்பது இயலாத காரியம். ஆசிரியர் வாய்க்கேட்டே அவற்றின் உட்பொருளை அறிந்து கொள்ளுதல் இயலும்.

திருஉந்தியாரில் முதல்பாடல்:

"அகளமாய் யாரும் அறிவு அரிது, அப்பொருள்
சகளமாய் வந்தது என்று உந்தீபற
தானாகத் தந்தது என்று உந்தீபற"

என்பதாகும். உயிர் பதிப்பொருளிலிருந்தும் வேறுபட்டது. எனவே பரம்பொருளை 'அப்பொருள்' என்று சுட்டுச் சொல்லால் ஆசிரியரும் குறித்தார். பரம்பொருள் அங்கிங்கு எனாதபடி எங்கும் நிறைந்திருப்பதே ஆயினும், கட்டுநிலையில் உள்ள உயிருக்கு அது எட்டாப் பொருளாகவே உள்ளது. இதனையே ஆசிரியர் அப்பொருள் என்ற சேய்மைச் சுட்டினால் பெறவைத்தார்.

இறைவனாகிய பரம்பொருள் உயிரின் அறிவுக்கு அகப்படும் இயல்பினதா? யாராலும் அறிதற்கு அரியது; உயர் அறிவு கொண்டு அறிவதற்கு அரியது. அருமை இந்த இடத்தில் இன்மையைக் குறித்து நின்றது. இக்கருத்தையே சிவஞான சித்தியார் "பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரன்" (பாடல் 292) என்று விரிவாகக் கூறுகிறது.

இறைவனாகிய பரம்பொருள் உருவம் உடையவனா? என்ற வினாவுக்கு மற்றைச் சமயத்தார் வெவ்வேறு விடைகளைத் தருவர். பெரும்பான்மையான சமயங்கள், இறைவனை உருவம் உடையவனாகவே கொள்ளுகின்றன. அதிலும் அவனை மனிதவடிவம் உடையவனாகவும், ஆணாகவும் கொள்ளுகின்றன. அருவ வழி . பாட்டுக்கு முதன்மை தருகின்ற யூதசமயமும், கிறித்துவ சமயமும் இதற்கு விலக்கல்ல. விவிலியத்தின் பழைய ஏற்பாட்டில் "கடவுள் தன்சாயலில் மனிதனைப் படைத்தார்" (ஆதி:1–27) என்று கூறப்பட்டுள்ளது. எனவே, கடவுளின் சாயல் மனிதச் சாயலே என்றாகும். இது உருவ வழிபாட்டுக் கொள்கை.

வேறு சில சமயங்கள் பரம்பொருளுக்கு உருவமே இல்லை என்று சாதிக்கின்றன. மாயாவாதம் இக்கொள்கையை வலியுறுத்துகின்றது.

சைவசிந்தாந்தம் மிகத்தெளிவாக இறைவன் உருவம் உடையவனல்லன், அருஉருவம் உடையவனல்லன், அருவமானவனுமல்லன் என்று மூன்றையும் கூறி "நிறுத்துவன் நினைத்தமேனி நின்மலன் அருளினாலே" (சிவஞான சித்தியார் 65) என்றும் வரையறை செய்கிறது. அதாவது இறைவன் தன்னியல்பிலே உருவம் கடந்தவன். அவன் உயிர்கள்மீது கொண்ட பெருங்கருணையால் அருஉருவத் திருமேனியும் உருவத்திருமேனியும் தரித்துக் கொண்டு உயிர்களின் கருமேனியைக் கழிப்பதற்காகக் காட்சி தருகின்றான். இக்கருத்துக்கள் யாவும் சிவஞான போதம், சிவஞான சித்தியார் போன்ற நூல்களில் மிக விரிவாகவும் காரணகாரிய விளக்கங்களோடும் ஆசிரியப் பெருமக்களால் விளக்கப்பட்டுள்ளன. இவற்றையே 'அகளமாய் நின்றது' என்ற சொற்களாலும் "சகளமாய்த் தந்தது' என்ற சொற்களாலும் உய்ய வந்த தேவ நாயனார் இத்தாழிசையில் மிகச் சுருக்கமாக எடுத்துரைத்தார்.

உருமேனி தரித்துக்கொண்டது என்றலும் உருவு இறந்த
அருமேனி அதுவும் கண்டோம் அருஉரு ஆனபோது
திருமேனி உபயம் பெற்றோம் செப்பிய மூன்றும் நம்தம்
கருமேனிகழிக்க வந்த கருணையின் வடிவுகாணே-

(சிவஞானசித்தியார் 75)

இறைவன் பெருங்கருணையினால் திருமேனிதாங்கி உயிர்களுக்குக் காட்சி தருகிறான் என்ற கருத்திலும் சமயங்களுக்குள் மாறுபாடு உண்டு. வைணவக் கொள்கைப்படி இறைவன் பரம், வியூகம், விபவம், அர்ச்சை, அந்தர்யாமி என்ற ஐந்து நிலைகளிலே உயிர்களுக்கு அருள்பாலிப்பான் என்று கொள்ளுவர்.

இவற்றுள் பரம் என்பது வைகுண்டத்திலே திருமால் பரமபதநாயகனாக இருந்து நித்திய சூரிகளுக்கு அருளும் வடிவம், வியூகம் என்பது தனது திவ்விய கல்யாண குணங்களின் சேர்க்கை முறையினால் மேற்கொள்ளும் வடிவங்கள். விபவம் என்பது திருமால் மண்ணுலகில் வந்து ஒரு தாயின் வயிற்றில் பிறந்து காட்சிதரும் வடிவங்கள். அர்ச்சை என்பது திருக்கோவில்களிலும், அடியார் வழிபடும் மூர்த்திகளிலும் இடம் கொண்டிருந்து அருளுவது. அந்தர்யாமி என்பது உயிர்க்கு உயிராய் நிற்கின்ற தன்மை.

சைவசித்தாந்தம் சிவபெருமானைப் "பிறவாயாக்கைப் பெரியோன்' என்றும், 'தாயுமிலி தந்தையிலி தான் தமியன்' என்றும் கொள்ளுவதனால் இறைவன் அவதரிப்பான் என்ற கருத்தை முற்றாக மறுக்கிறது.

கிறித்துவ சமயத்தில் அவதாரத்தை ஏற்றுக் கொள்ளுவதில்லை எனினும், தேவன் தன்னுடைய ஒரே பேரான குமாரனை உலகம் உய்வடைவதன் பொருட்டு, இம்மண்ணுலகில் பிறக்கச் செய்தார் என்ற கருத்து ஏற்றுக்கொள்ளப்படுகிறது. இக்கருத்தும் சைவ சித்தாந்தத்திற்கு முற்றிலும் ஏலாது.

சிவபெருமானின் திருமேனி, அவனது கருணையே வடிவானது என்பது சைவசித்தாந்தத்தில் ஏற்றுக் கொள்ளப்படுகிற கொள்கை. அக்கருத்தினையே இத்தாழிசையில் நாயனார், 'தானாகத்தந்தது' என்ற சொற்களால் உணர்த்தினார்.

உருஅருள், குணங்களோடும் உணர்வுஅருள், உருவில் தோன்றும்
கருமமும் அருள், அரன்தன் கரசரணாதி சாங்கம்
தரும் அருள், உபாங்கள் எல்லாம் தான்அருள், தனக்கு ஒன்று இன்றி
அருள்உரு உயிருக்கு என்றே ஆக்கினன் அசிந்தன் அன்றே
(சிவஞானசித்தியார் 67)

என்கிறார் ஆசிரியர் அருள்நந்திசிவம். அவ்வாறே "நாடரிய கருணை திருஉருவமாகி" (பாடல் 14) என்று சிவப்பிரகாசத்திலும், "கருணை திருஉருவாய்க் காசினிக்கே தோன்றி" என்று கந்தர்கலிவெண்பா விலும் அருளாசிரியர்கள் குறித்துள்ளமையை இங்கு நினைவு கூர்தல் வேண்டும்.

திருஉந்தியாரின் இந்த ஒரு தாழிசையில் சைவ சித்தாந்தச் செறிவு கண்டோம். இதனைப் போலவே பல பாடல்களும் சைவ சித்தாந்தத் தேங்கனிச்சாறாக விளங்குவதைக் காணலாம்.

"முத்திமுதலுக்கே மோகக் கொடி படர்ந்து
அத்தி பழுத்தது என்று உந்தீபற
அப்பழம் உண்ணாதே உந்தீபற" என்பது திருஉந்தியாரின் 41வது பாடல்.

தொடக்கத்தில் கூறிய பிசிச்செய்யுள் வகைக்கு இப்பாடல் ஓர் எடுத்துக் காட்டு. இங்கே 'முத்திமுதல்' என்ற சொற்கள் ஆன்மாவைக் குறிப்பனவாக உரையாசிரியர்கள் எடுத்துக்காட்டுகின்றனர். இவ்வாறு அவர்கள் எடுத்துக் காட்டவில்லை எனில் இச்சொற்கள் எதனைக் குறித்தன என்ற ஐயம் நமக்கு எழும்.

ஏனெனில் திருஉந்தியாரின் 28ஆவது பாடலில் "வித்தினைத் தேடி முளையைக் கைவிட்டவர்' என்ற சொற்றொடர் இடம் பெறுகிறது. இப்பாடலுக்கு உரைஎழுதும் போது "இனி வித்து என்பது ஞானத்துக்கு முதலாகிய சிவபரம்பொருளே. முளை என்பது அதன்கண் நின்று வெளிப்பட்டு விரியும் திருவருள் ஞானத்தை எனக்கொண்டு, வெளிப்பட விரிந்த முளைப்பகுதியிலே அதற்குக் காரணமாகிய விதை வெளிப்படை காணாமை கொண்டு, ஞானத்துக்கு முதலாகிய சிவபரம்பொருளின் உண்மையினை உணரப்பெறாது கைவிடுவோரும்" என்று எழுதிச் செல்லுகிறார்கள். இப்பாடலில், வித்து என்பது சிவபெருமானைக் குறித்து நின்றது.

மேலே காட்டப்பட்ட 43வது பாடலில் முதல் என்ற சொல்லைக் கொண்டே அதுவே செடி முளைப்பதற்கு ஆதாரமாகிய வித்து எனக்கொண்டால் அச்சொல் சிவபரம்பொருளைக் குறிக்காது உயிரைக் குறித்து நின்றது என்பது தெளிவாக அறியப்படும்.

திருவுந்தியாரின் ஒவ்வொரு பாடலும் தனித்தனிப் பொருள் முடிவு கொண்டது. ஆதலால் இவ்விரண்டு பாடல்களிலும் வருகின்ற சொற்கள் எல்லாம் அவ்வப்பாடலின் பொருள் நிலைக்கு ஏற்பத் தனித்தனிக் குறியீட்டை உணர்த்தும்.

உலகம் அவன் அவள் அது எனும் தொகுதிகளால் ஆனது. உயிர் உள்பொருள்களும் உயிர் இல் பொருள்களுமாகிய இருபெரும் பிரிவுகளை உள்ளடக்கியது. உயிர்இல் பொருள்களாகிய அசேதனப் பிரபஞ்சம் முத்திப் பெரும் பேற்றுக்கு உரியதன்று. உயிர்த் தொகுதிகளுக்கே முக்திப்பேறு உரியதாகும்.

இந்தக் கருத்தை உள்ளடக்கித்தான் இறைவன் செய்யும் ஐந்தொழில்களில் படைத்தலும் காத்தலும் ஒடுக்குதலும் உலகை நோக்கியன, மறைத்தலும் அருளலும் உயிரை நோக்கியன என்றனா் நம் சான்றோர். எனவே முத்திப்பேற்றுக்கு முதல் தகுதி உயிராம் தன்மை. முதல் இலார்க்கு ஊதியம் இல்லை. (திருக்குறள் 449) என்றார் வள்ளுவப் பெருந்தகை. வீடுபேறாகிய ஒப்பற்ற ஊதியத்தைப் பெறுவதற்கு உயிர்நிலை என்ற முதல் இன்றியமையாதது.

தோற்றமில் காலத்திலேயே உயிரை ஆணவம் என்ற தளை பற்றியிருக்கிறது என்பது சைவசித்தாந்தத்தின் ஆணிவேரனைய கொள்கை. இதனை மாதவச் சிவஞான முனிவர் "எல்லாப் பெருங்கேட்டிற்கும் மூலமாகிய ஆணவ்மலம்" என்றே குறிப்பிடுகின்றார். எனவே உயிருக்கு வருகின்ற துன்பங்கள் அனைத்திற்கும் ஆணவ மலமே காரணம் என்பது சைவசித்தாந்தத்தின் ஊற்றமான கொள்கை.

மாதவச் சிவஞான முனிவர், மூலமலமாகி ஆணவமலம் எவ்வாறு காரியப் படுகிறது என்பதனைச் சிவஞானபோதம் இரண்டாம் நூற்பாவின் இரண்டாம் அதிகரணத்தில் விரிவாக எடுத்துரைக்கிறார்.

> "மூலமலம் காரியவேறுபட்டால் ஏழுவகைப்படும்.
> அவையாவன மோகம், மதம், அராகம், கவலை, தாபம்,
> வாட்டம், விசித்திரம் என்பனவாம். இவற்றுள் மோகம், மதம்
> முதலிய அறுவகைக் காரியங்கட்கும் ஏதுவாய்க்கெட்டு
> நீங்குங்காறும் ஆன்மாக்களோடு சகசமாய் உள்ளது. மோகம்
> இவ்வழி ஏனை மதம் முதலியன நிகழாமையின், அது முதன்மைத்
> தாதல் அறிக"

என்பது முனிவர் பேருரை. திருவுந்தியாரில், 'முத்திமுதலுக்கே மோகக் கொடிபடர்ந்து' என்ற சொற்கள் அநாதியே உயிரைப் பற்றியிருந்த ஆணவமலம், முதலில் மோகமாகக் காரியப்பட்டு அதன்பின்னர் மேலும் ஆறுவகையாகப் படர்ந்தும் அடர்ந்தும் உயிரைப் பிணிப்பதை எவ்வளவு செறிவாக எடுத்துக்காட்டுகிறது என்பது அறிந்து வியத்தற்குரியது.

மோகக்கொடி படர்ந்ததனால் முத்திக்கனி கனிவதற்குப் பதிலாக அக்கொடியில் அத்தி பழுத்தது என்கிறார் உய்யவந்த நாயனார். அத்தி என்பதை உரையாசிரியர்கள் சிலர், அருத்தி என்ற சொல்லின் திரிபாகக் கொண்டு அருத்தி

என்பது அவபி எனப் பொருள்தரும் என்று உரைத்தனர். இவ்வாறு வலிந்து பொருள் கொள்ளாமல் இப்பாடலை இருந்தவாறே வைத்துப் பொருள் காணுவது பொருத்த முடையது.

'அத்திப்பழந்தைப் பிட்டால் அத்தனையும் சொத்தை' என்று நாட்டுப்புற வழக்கில் ஒரு சொலவடை உண்டு. முக்கனிகளிலே ஒன்றாக வைத்து எண்ணப்படாத அத்திக்கனியைச் சுவைமிக்கதாகவும் சத்துடையதாகவும் கொள்ளமாட்டார்கள். அதனினும் சிறந்த கனிகள் பல இருக்க அக்கனியை உண்ணவேண்டாம் என்கிறார் நாயனார்.

"மனிதர்காள் இங்கேவம் ஒன்று சொல்லுகேன்
கனிதந்தால் கனிஉண்ணவும் வல்லிரே
புனிதன் பொற்கழல் ஈசன் எனும் கனி
இனிதுசாலவும் ஏசற்றவர்க்கே".

என்று தனிக்குறுந்தொகையில் அப்பர் பெருமான் அருளி உள்ளதுபோல், உயிர்களால் உண்ணப்படும் கனிகளில் ஒப்பற்ற சுவையுடைய கனி ஈசன் எனும் கனியே.
இதே கருத்து திருமந்திரத்தில்,

"ஒன்று கண்டீர் உலகுக்கு ஒரு தெய்வமும்
ஒன்று கண்டீர் உலகுக்கு உயிராவது
நன்று கண்டீர் நல்நமச்சிவா யப்பழந்
தின்று கண்டேற்கிது தித்தித்த வாறே" (பாடல் 2962)

என்று திருமூலநாயனாரால் அருளப்பட்டுள்ளது. எனவே சிவப்பேறு அடைந்து, கோதும் காழும் அற்ற கனியை உண்ணுவதற்கு உரிமையுடைய உயிர், மோகக்கொடி படர்ந்ததனால் அத்திப்பழம் உண்கிறது. அதனை விடுத்து ஈசன் எனும் கனியை, அது பழச்சுவையென அமுதுஎன அரிதென எளிதென அமரரும் அறியாப் பேரின்பத்தைப் பெறுதல் வேண்டும் என்பதை இத்தாழிசை விளக்கிற்று. இதனை,

"வழுதலை வித்தினேன் பாகல் முளைத்தது
புழுதியைத் தோண்டினேன் பூசணி பூத்தது
தொழுது கொண்டு ஓடினார் தோட்டக்குடிகள்
முழுதும் பழுத்தது வாழைக்கனியே" (2869)

என்றும் திருமந்திரப் பாடலோடு இணைத்து நோக்குவது நயம் பயப்பதாகும். திருஉந்தியார் எனும் சுரங்கத்தில் இத்தகைய வைரமணிகள் பலஉள.

# திருக்களிற்றுப் படியார்

முனைவர் ஆ. ஆனந்தராசன்
சைவ சித்தாந்தத் துறை
மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை 21

---

சைவ சித்தாந்த சாத்திர நூல்களின் வரிசையில் இரண்டாவது நிற்பது திருக்களிற்றுப்படியார். முதலில் உள்ளது திருவுந்தியார். இவ்விரு நூல்களும் அருளனுபவத்தின் நீர்மைகளை அழகிய முறையில் எடுத்துக் காட்டும் ஞான நூல்களாகும்.

முன்னே தோன்றிய திருவுந்தியார் முதல் நூலாய் அமைய, அதன் வழித் தோன்றிய திருக்களிற்றுப் படியார் வழிநூலாயிற்று. இவையிரண்டும் மூலமும் உரையும் போன்று விளங்குவன; பொருள் வகையால் ஒன்றே என்னும்படி நெருங்கிய தொடர்புடையன.

ஆசிரியர்:

திருவுந்தியாரின் ஆசிரியர் திருவியலூர் உய்யவந்ததேவர். இவர் தமது மாணுக்கராகிய ஆளுடைய தேவர் பொருட்டுத் திருவுந்தியாரைச் செய்து தந்தார். ஆளுடைய தேவருக்கு மாணுக்கராய் வாய்த்தவர் திருக்கடவூர் உய்யவந்த தேவர். நூறு வெண்பாக்களையுடைய திருக்களிற்றுப்படியார் என்னும் இந்நூலை அருளிச் செய்தவராவார். இவ்வருளாசிரியர்கள் மெய்கண்டாருக்கு முற்பட்டவர்கள்; பன்னிரண்டாம் நூற்ருண்டினர்.

திருக்களிற்றுப்படியாரில் உள்ள இரண்டு செய்யுட்கள் இதன் ஆசிரியர்க்குக் குரு பரம்பரையில் ஞான நூற் பொருள் கிடைத்த வரலாற்றைக் குறிப்பனவாய் அமைந்துள்ளன.

"தன் முனைப்புடன் கூடிய அறிவு கெட்டுத் திருவருளில் நிலைத்து நின்று யான் அறிந்த உண்மைகளை ஞானத்தில் வேட்கையுடையார் கேட்டுணர்க என்று கூறி அருட்குருவாய் எழுந்தருளிவந்த பெரியார் ஒருவர் எனக்கு உபதேசம் செய்தார். உய்யவந்த தேவராகிய அக்குருநாதர் சொல்லியவாறே யான் உனக்குச் சொல்லுகிறேன் என்று என்னை ஆட்கொண்ட குருவாகிய ஆளுடைய தேவர் எனக்கு அறிவுறுத்திஞர் ஆளுடைய தேவர் எனக்கு உணர்த்திய அப்பொருளை, மாணவனுகிய உனக்கு யான் இப்பொழுது உணர்த்தலுற்றேன்" என்று திருக்கடவூர் உய்யவந்த தேவர் நூலின் தொடக்கத்தில், முன் ஆசிரியர்களாகிய இருவரையும் குறிப்பிட்டுள்ளார்.

நூலின் இறுதியில் 96ஆம் செய்யுளில் தமது ஞாஞசிரியராகிய ஆளுடைய தேவரின் பெருமையையும், அவர் தம்மை ஆட்கொண்ட திறத்தையும் எடுத்துரைத்துப் போற்றியுள்ளார். அச்செய்யுள் பின்வருமாறு:

ஆளுடையான் எந்தரமும் ஆளுடையானே; அறியும்
தாளுடையான்; தொண்டர் தலைக்காவல்; – நாளும்
திருவிசலூர் ஆளும் சிவயோகி; இன்று என்
வருவிசையை மாற்றிஞன் வந்து.

இச்செய்யுளில், தம்மை ஆட்கொண்டருளிய குருநாதரின் பெயர் ஆளுடையதேவர் என்பதையும், அவர் திருவியலூரில் வாழ்ந்தவர் என்பதையும், தகுதி சிறிதும் இல்லாத தன்னையும் ஆட்கொண்டு "யான் எனது" என்று முனைந்து செயற்படும் வேகத்தை மாற்றினுர் என்பதையும் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளமை காணலாம்.

சிறப்பு நூல்:

சாத்திரங்களைப் பொது நூல் எனவும், சிறப்பு நூல் எனவும் இருவகைப் படுத்துவர். திருவுந்தியாரும், திருக்களிற்றுப்படியாரும் சிறப்பு நூல்கள் எனப்படும். இவ்வாறு வகைப்படுத்துதற்கு என்ன அடிப்படை என்பதை நோக்குவோம்.

சைவ சித்தாந்தத்தில் பொருள்களுக்கு இரண்டு இயல்புகள் சொல்லப்பெறும். அவை பொதுவியல்பு, சிறப்பியல்பு என்பன. ஒரு பொருளுக்கு இயற்கையாய், என்றும் உள்ள இயல்பு சிறப்பியல்பு. இயற்கையாய் இல்லாமல் செயற்கையாய் இடையில் வந்து சேரும் இயல்பு பொதுவியல்பு.

சிறப்பியல்பு இயற்கையாதலின் அது பொருளைவிட்டு எக்காலத்தும் நீங்காது நிற்கும். பொதுவியல்பு செயற்கையாய் இடையில் வந்து பற்றியது. ஆதலின் அது பொருளோடு சிறிது காலம் இருந்து பின்பு நீங்கிவிடும். எடுத்துக்காட்டுக் கூறினுல் இவை எளிதில் விளங்கும்.

உயிர் தோற்ற அழிவுகள் இல்லாதது. உடம்பு தோன்றி அழியக்கூடியது. உயிர் அறிவுப் பொருள். அது சித்து எனப்படும். உடம்பு அறிவில்லாதது. அது சடம் எனப்படும். எனவே சித்தாகிய உயிருக்குச் சடமாகிய உடம்பு வேற்றினம் என்பது விளங்கும்.

உயிர் தனக்கு வேற்றினமாகிய உடம்போடு கூடி வாழும் தன்மை உயிருக்கு இயற்கையன்று; இடையில் வந்த செயற்கையேயாகும். எனவே உயிர் உடம்போடு பிறப்பெடுத்து வாழும் நிலை அதற்குப் பொதுவியல்பு ஆகும். இவ்வாறு உடம்போடு சேர்ந்திருப்பதனுல் உயிருக்கு வேறு சில நிலைகளும் உண்டாகின்றன. விழிப்பு, உறக்கம், கனவு முதலிய பல நிலைகளை அடைவது உடம்பின் தொடர்பினுலேயாம். இவையெல்லாம் உயிருக்குப் பொதுவியல்பேயாகும்.

இனி, உயிருக்குச் சிறப்பியல்பாவது இறைவனைச் சேர்ந்திருக்கும் நிலையேயாகும். இங்கு ஓர் ஐயம் எழலாம். இறைவனைச் சேர்தல் என்பது இனிமேல் ஒரு காலத்தில் வருவது அல்லவா? பின்னே வரும் அவ்வியல்பு, என்றுமுள்ள சிறப்பியல்பாக எப்படி இருக்கமுடியும்? என்று கேட்கலாம்.

நாம் இப்பொழுது இறைவனைப் பிரிந்து வேருக இருக்கிறோம் என்ற எண்ணத்தில் கேட்கின்ற வினு இது. அவ்வெண்ணமே தவறு. உயிர்களாகிய நாம் எக்காலத்திலும் எந்நிலையிலும் இறைவனுக்கு வேருக நில்லாமல் அவனேடு சேர்ந்தேயிருக்கிறோம். அவனுக்கும் நமக்கும் உள்ள உறவு பிரிப்பறியாத உறவாகும்; அஃது என்றும் உள்ள உறவாகும். அவன் இமைப்பொழுதும் நம்மைவிட்டு நீங்காமல் இருக்கின்றுன். ஆயினும் அறியாமையாகிய தடையினுல் அவனைத் தெரிந்து கொள்ளாமல் இருக்கிறோம்; அவனைச் சேய்மையில் உள்ளவனுக எண்ணுகிறோம். பிறவியிலேயே விழியற்றவன் ஒருவன், மருத்துவ முறையினுல் கண் பார்வை பெறுகிறுன். அவனுக்குச் சூரியவொளி புதிதாகத் தோன்றுகிறது. ஆயினும் அவ்வொளி முன், முன்னரே இருந்ததுதானே. அந்த அந்தகனது நிலையில்

நாம் இருக்கிறேம்; அறியாமையாகிய மறைப்பினுல் நம்மிடத்தில் என்றும் உள்ள இறைவனுரிய ஒளியை உணரமாட்டாமல் இருக்கிறேம். ஞானமாகிய கண்ணைப் பெறும் போதுதான் அவன் நம்மிடத்தில் முன்னரே உள்ளவன் என்பதும், நாம் அவனேடு என்றும் உடனுக இருக்கிறேம் என்பதும் விளங்கும்.

இறைவனைப் பிரிந்திருத்தல் என்பது, அவன் நம்மிடத்தில் இருந்தும் அவனது இருப்பை அறியாதிருத்தல், இறைவனைச் சேர்தல் என்பது, அவனது இருப்பை உள்ளவாறு உணர்தல். அவ்வாறு உணர்ந்து அவனை விட்டுப் பிரியாதிருக்கும் நிலையே உயிருக்குச் சிறப்பியல்பாகும்.

சுருங்கச் சொன்னுல், உயிர்கட்கு நிலையில் நிற்கும் காலத்தில் உயிரைப் பற்றி அறியப்படுவன பொதுவியல்பு என்றும், முத்தி நிலையை எய்திய காலத்தில் உயிரைப் பற்றி அறியப்படுவன சிறப்பியல்பு என்றும் கூறலாம்.

பசுவாகிய உயிருக்குச் சொல்லியவாறே, பதியாகிய இறைவனுக்கும் இவ்விரண்டு இயல்புகள் சொல்லப்பெறும். பாசமாகிய மும்மலங்களுக்கும் இவை கூறப்பெறும். கட்டு நிலையில் உயிரோடு தொடர்புற்று நிற்கும் பதியைப் பற்றியும், பாசத்தைப் பற்றியும் அறியப்படுவன அவற்றிற்குப் பொதுவியல்பு ஆகும். முத்தி காலத்தில் பதி பற்றியும் பாசம் பற்றியும் அறியப்படுவன அவற்றிற்குச் சிறப்பியல்பு ஆகும்.

பொதுவியல்பு, சிறப்பியல்பு ஆகிய இவற்றின் அடிப்படையிலேயே நூல்கள் பொது என்றும் சிறப்பு என்றும் பாகுபடுத்தப்படுகின்றன. பொருள்களின் பொதுவி யல்பை எடுத்துரைக்கும் நூல்கள் பொது நூல்கள் ஆகும். பொருள்களின் சிறப்பியல்பை உணர்த்தும் நூல்கள் சிறப்பு நூல்கள் ஆகும்.

பொருள்களின் இயல்பு இரண்டாயினுற்போல அவற்றை அறிவதற்கு உரிய வழிமுறைகளும் இரண்டாயின. அவை ஆராய்ச்சி, அனுபவம் என்பன.

பொருளை நேரே பெருமல், சில கருவிகளைக் கொண்டு அவை வழியாக அதனை ஆராய்வது ஆராய்ச்சி முறையாகும். தொலைவில் உள்ள மலைமேல் புகை கிளம்புகிறது. அங்கேயுள்ள நெருப்பை நாம் நேரே காணவில்லை. கருதல் அளவை என்ற கருவியைக் கொண்டு அங்கே நெருப்பு இருப்பதை ஆராய்ந்து துணிகிறேம். இவ்வாறு ஆராய்ந்து பொருளை அறிவது ஆராய்ச்சி முறையாகும். இம் முறையில் அறியப்படுவது பொருளின் பொதுவியல்பாகவே இருக்கும்.

இனி, பொருளை நேரே பெற்று அதன் இயல்பை உணர்வது அனுபவம் ஆகும். இம் முறையில் அறியப்படுவதே பொருளின் உண்மையியல்பாகும்.

கட்டு நிலையில் உள்ள காலத்தில், உயிர் தனது பாச அறிவைக் கொண்டு தன்னையும் தன்னைச் செலுத்தும் தலைவனுகிய இறைவனையும் அறியப் புகுந்தால், அஃது இருவரையும் பொதுவாக அறியுமேயன்றி உண்மையாக அறியமாட்டாது. ஏனெனில் பாச அறிவு என்பது கருவிகளின் வழியாக வரும் அறிவே. ஆதலால் கருவிகளைக் கொண்டு அவை வழியாகத் தன்னையும் தலைவனையும் ஆராயும்போது அவ்வாராய்ச்சியால் இருவரது இருப்பாகிய பொதுவியல்பையே அறியவல்லதாகும்.

கட்டு நீங்கிய முத்தி காலத்தில் உயிர் கருவிகளை விட்டு நீங்கியிருக்கும். அப்பொழுது இறைவனது அறிவாகிய திருவருளே நேரே அறிவிக்கும். முன்பு கருவிகளைச் சார்ந்து கருவிகளின் வழி நின்று பிற பொருள்களை அறிந்துவந்த உயிர், இப்பொழுது

அவனறிவாகிய அருளைச் சார்ந்து அருள்வழி நிற்பின், அவனறிவாலே அது தன்னையும் தலைவனையும் உண்மையாக உணரும். எனவே இருவரது உண்மையியல்பையறிதல் பதியறிவாலே என்பது விளங்கும். பாச அறிவைக்கொண்டு கருதல் அளவையால் தன்னையும் தலைவனையும் பொதுவாக அறிதல் ஆராய்ச்சி அறிவாகும். பதியறிவால் தனது இயல்பையும் தலைவனது இயல்பையும் உண்மையாக உணர்தல் அனுபவ அறிவாகும்.

சித்தாந்த ஞானத்தைப் பெறும் அவாவுடைய மாணவர்க்கு எடுத்த எடுப்பி லேயே பொருளியல்புகளை அனுபவ முறையில் உணர்த்தினுல் விளங்கிக் கொள்ளமாட் டார். உயிரறிவுபடிமுறையில் விளங்கி வருவது; முதலில் பருமையாக உணர்ந்து பின் படிப்படியே நுண்மைகளை உணரவல்லது. ஆதலால் அதற்கேற்ப அருளாசிரியன்மார் முதலில் பொதுவியல்புகளையே அறிவுறுத்துவர். ஆராய்ச்சி முறையால் மாணவர் அவற்றை விளங்கிக் கொண்ட பின்னர், அவர் தம் பக்குவ நிலை நோக்கிப் பொருள்களின் சிறப்பியல்புகளை அனுபவ முறையில் உணர்த்துவர்.

மெய்கண்ட தேவர் இம்முறையையே பின்பற்றுகிறுர். சிவஞானபோத நூலின் முற்பகுதியில் பொதுவியல்பையும், பிற்பகுதியில் உண்மையியல்பையும் கூறியவாற்றைக் காணலாம். எனவே முற்பகுதி ஆராய்ச்சியால் அறிதற்குரியது என்பதும், பிற்பகுதி அனுபவத்தால் உணர்தற்குரியது என்பதும் விளங்கும்.

சிவஞானபோதம் இரண்டு இயல்புகளையும் முறைப்படுத்திக் கூறுவதால் அது முழுமை பெற்ற சித்தாந்த நூலாகத் திகழ்கிறது. இவ்வாறன்றி ஒரோர் இயல்பையே கூறிச் செல்லும் சித்தாந்த நூல்களும் உண்டு. சிவஞான போதத்திற்கு முற்பட்டதாகிய ஞானாமிர்தம் என்ற நூல் பெரும்பாலும் பொதுவியல்பையே கூறுவதாகும். அது பற்றி அது பொதுநூல் எனப்படும். திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் என்பன அனுபவ நிலைகளாகிய சிறப்பியல்புகளையே கூறுவதால் அவை சிறப்பு நூல்கள் எனப்பட்டன.

சிவஞான முனிவர் எடுத்தாளுதல்:

சிறப்பு நூலாகிய திருக்களிற்றுப்படியாரை சாத்திர உரையாசிரியர் அனைவருமே குறிப்பிட்டுள்ளனர் என்பது ஒன்றே இந்நூலின் பெருமைக்குப் போதிய சான்ருகும். உரை ஞாயிருக விளங்கும் சிவஞான முனிவர் தமது மாபாடியத்தில் ஏழு இடங்களில் இதன் செய்யுட்களை எடுத்தாண்டுள்ளார். அம் மேற்கோள் செய்யுட்களை அறிந்தோமாஞல் அந்நூலின் பொருள்நிலையை ஒருவாறு அறிந்து கொண்டவராவோம்.

ஞானாசிரியர்:

நூல்கள் மேற்கூறியவாறு பொதுவும், சிறப்புமாய் நிற்பதனுல், அவை பொருள்களைக் கூறும்முறை ஒன்ருய் இருப்பதில்லை. இதனை உணராமல் ஒருவர் தாமே மெய்ந்நூல்களைக் கற்கப் புகுந்தால் "ஒரு நூல் இவ்வாறு சொல்ல மற்றொரு நூல் வேறுவகையாகச் சொல்லுகிறதே" என்று எண்ணி மயக்கமும் குழப்பமுமே அடைவர். ஞானசிரியரின் உபதேசமே பொருள்களைத் தெளிவுபடுத்த வல்லது. இக்கருத்துப்படச் சிவஞான முனிவர் கூறித் திருக்களிற்றுப்படியாரிலிருந்து பின்வரும் செய்யுளை மேற்கோள் காட்டுகிறுர்.

சாத்திரத்தை ஓதினர்க்குச் சற்குருவின் தன்வசன
மாத்திரத்தே வாய்க்கு நலம் வந்துறுமோ – ஆர்த்த கடல்
தண்ணீர் குடித்தவர்க்குத் தாகந் தணிந்திடுமோ
தெண்ணீர்மை யாய், இதனைச் செப்பு

அருளாசிரியர் இன்றித், தாமே நூல்களை ஓதிஉணர்ந்து கொள்ளமுடியும் என்று எண்ணிக் கற்க முயல்வது கடல் நீரை நேரே பருகித் தாகத்தைத் தணித்துக்கொள்ள முயல்வது போன்றது என்று இச்செய்யுள் கூறுகிறது. குருமொழியின்றிச் சாத்திரம் பயன்தராது என்பது கருத்து.

பாலும் கண்ணீரும்:

உயிர்க்குயிராய் உள்ள இறைவனே ஞானகுருவாய் வருவான் என்று சைவ சித்தாந்தம் கூறும். ஞானம் என்பது பொருள்களது உண்மையியல்பை உள்ளவாறு அறிதல். இந்த மெய்யறிவை ஒருவர் பெறவேண்டுமாயின் அவர் உலகியலில் உவர்ப்பு உடையவராய், உண்மையை அறியும் அவாவுடையவராய், உள்ளம் தூயவராய் இருத்தல் வேண்டும். விருப்பு வெறுப்பு இல்லாத இந்த மனநிலையே "இருவினை யொப்ப" எனப்படும். இந்நிலையே ஞானத்தைப் பெறுதற்குரிய பக்குவ நிலையாகும்.

பக்குவம் என்பது உயிரறிவில் ஏற்படுவது. ஒருவர்க்குப் பக்குவம் வந்துற்றது என்பதை யார் அறிதல் கூடும்? உயிர்க்கு உயிராய் உள் நின்று உணர்த்தி வரும் இறைவனே அதனை அறிதல் கூடும். பிறர் அதனை அறியமாட்டார். அதனல், இருவினையொப்பு நிகழ்ந்த பக்குவ நிலையை அறிந்து வந்து, ஞானத்தை உணர்த்துபவன் இறைவனே என்று சைவசித்தாந்தம் கூறுகிறது. 'ஆசான் அருளால் அடிசேர் ஞானம் வந்திடும்; மற்றென்றலும் வாராதாகும்' என்று சிவஞானசித்தியார் வலியுறுத்திக் கூறுதல் காணலாம்.

பக்குவம் வந்தபொழுது இறைவன் ஞானசிரியனுய் வெளிப்படுவான்; பக்குவம் இல்லாத பொழுது அவன் வெளிப்படான் என்பதை உவமையால் விளக்குகிருர் மெய்கண்டார்.

தன் குழந்தை பசியால் அழுவதைக் காணும்பொழுது தாய், பால் சுரந்து ஊட்டுகிருள். அவள் தன் குழந்தைமேல் கொண்ட அன்பு, அக்குழந்தையைக் காண் பதற்கு முன்பு வெளிப்படாது அருவமாய் நின்றது. குழந்தையைக் கண்ட பொழுது அவ்வன்பே பாலாய் வெளிப்பட்டுத் தோன்றுகிறது. அவ்வாறே குழந்தை நோயால் வருந்தி அழுவதைக் காணும்பொழுது தாய் கண்ணீர் சிந்துகிருள். முன்பு புலப்படாமல் அருவமாய் இருந்த அன்பே இப்பொழுது கண்ணீராய் வெளிப்பட்டுத் தோன்றுகிறது.

தாயன்பே பாலும் கண்ணீருமாய் வெளிப்படுதல் போல, உயிருக்குப் பக்குவம் வாராத பொழுது நுண்ணியனுய் உள்ளே மறைந்து நின்ற இறைவனே, பக்குவம் வந்தபொழுது குருவடிவாய் வெளிப்பட்டுத் தோன்றுவான்.

இக்கருத்தமைந்த எடுத்துக்காட்டு வெண்பாவை விளக்குமிடத்தில் சிவஞான முனிவர் திருக்களிற்றுப்படியாரில் உள்ள ஒரு செய்யுளை நினைவு கூர்கிருர். மங்கையர்க்கரசியாரின் அன்பின் சிறப்பைக் குறிக்கின்ற செய்யுள் அது.

உமையம்மையார் தந்த சிவஞானமாகிய பாலை ஞானசம்பந்தராகிய பிள்ளையார் பருகியருளினர் என்பதைக் கேட்ட அளவிலேயே அவர்மீது கொண்டிருந்த தாயன்பால் பால்சுரந்த தனமுடையராயினர், தென்பாண்டி மாதேவியாகிய மங்கையர்க்கரசியார். அவரது அன்பிருந்தவாறு என்னே! என்று வியந்து கூறுகிறது அச்செய்யுள்.

சுரந்த திருமுலைக்கே துய்ய சிவஞானம்
கரந்துண்டார் பிள்ளையெனச் சொல்லச் – சுரந்த
தனமுடையாள் தென்பாண்டி மாதேவி தாழ்ந்த
மனமுடையாள் அன்பிருந்த வாறு

பாலும் கண்ணீரும் அன்பின் வடிவமே என்பதை வலியுறுத்துதற்குத் திருக்களிற்றுப் படியாரில் உள்ள இச்செய்யுளையும் திருக்குறளையும் மேற்கோள் காட்டிய சிவஞான முனிவர் "அவ்விரண்டும் அன்பின் வடிவே பிறவல்ல என்பது அன்பை வெளிப்படுத் தற்குரிய காரணம் உள்வழி வெளிப்பட்டு, அஃது இல்வழி வெளிப்படாத ஒற்றுமை நோக்கிக் கண்டு கொள்க" என்று குறிப்பினையும் தந்துள்ளார்.

செல்வகையே நின்ற சிவன்:

சிவன் என்பதற்குத் தூய தன்மையன் என்று ஒரு பொருள் கூறலாம். தூய தன்மையாவது உலகக் குற்றங்களால் பற்றப்படாமையும், சிறிதும் வேறுபாடு எய்தாமையும் ஆகும்.

மெய்கண்ட தேவர் ஐந்தாம் நூற்பாவில் இறைவன் தனது நிலையினின்றும் மாற்றம் எய்துதல் இல்லை என்பதை ஓர் உவமையால் உணர்த்துகிறர். காந்தக் கல் தனது ஆற்றலால் இரும்பை ஈர்த்து நிற்கும். ஆனல் அது சிறிதும் அசைவது இல்லை. அதனிடத்தில் எந்த மாற்றமும் இல்லை. இதுபோல இறைவனும் தனது சத்தியால் உயிர்களைச் செயற்படுத்தி நிற்பான். அதுபற்றி அவன் சிறிதும் வேறுபாடு எய்துதல் இல்லை.

இக்கருத்தை 'மன்னு சிவன்' என்னும் எடுத்துக்காட்டு வெண்பாவிலும் வலியுறுத்துகிறர்; அவ்வெண்பாவில் சிவன் அசத்துப் பொருளை எண்ணுதல் இல்லை என்கிறர். எண்ணுதலாவது அநுபவித்தல். இறைவன் உலகப் பொருளை அநுபவித்தல் இல்லையாகவே அவன் உலகப் பொருளில் சிறிதும் தோயான் என்பதும் பாசத்துட் படாத தூய தன்மையன் என்பதும் விளங்கும்.

சிவன் அசத்தை எண்ணன் என்ற கருத்தை விளக்குதற்குச் சிவஞான முனிவர் திருக்களிற்றுப்படியாரிலிருந்து பின்வரும் செய்யுளை மேற்கோள் காட்டுகிறர்.

உன்னுதரத்தே கிடந்த கீடம் உறுவதெல்லாம்
உன்னுடைய தென்னய் நீ உற்றனையோ – மன்னுயிர்கள்
அவ்வகையே காண் இங்கு அழிவதுவும் ஆவதுவும்
செவ்வகையே நின்றசிவன் பால்.

ஒருவனுடைய வயிற்றில் உள்ள புழு முதலிய சிற்றுயிர்கள் படும் இன்ப துன்பங்களை அவன் அடைவதில்லை. அதுபோல உலகம் சிவனது வியாபகத்துள் இருப்பினும் அதனது மாற்றங்கள் அவனைப் பற்றுதல் இல்லை என்பது இச் செய்யுளில் கூறப்பட்டது.

ஆசிரியர் உய்யவந்த தேவர் சிவன் என்னும் சொல்லின் பொருளை விரித்து விளக்குவார் போலச் 'செவ்வகையே நின்ற சிவன்' என்ற தொடரை அமைத்துள்ள அருமையைக் காணலாம்.

சிவத்தின் வசப்படுதல்:

மனம் மாயை கன்மங்களின் வசப்பட்டு ஐம்பொறிகளின் வழியே சென்ருல் துன்பமே என்றும், ஐம்பொறிகளின் வழிச் செல்லாது சிவத்தின் வசத்தனுய் அடங்கி யிருப்பின் இன்பமே என்றும் திருக்களிற்றுப்படியார் கூறும். அச் செய்யுள் வருமாறு:

துன்பமாம் எல்லாம் பரவசனுய்த் தான் துவளில்
இன்பமாம் தன் வசனுய்த் தானிருக்கின் – என்பதனுல்
நின் வசனு யேயிருக்கின் நின்னுடனும் நேரிழையாள்
தன் வசனு யேயிருப்பன் தான்

சிவ சம வாத சைவரில் ஒரு சாரார் முத்தி பெற்ற ஆன்மாக்கள் சுதந்திரம் உடையனவாய் சிவனேடு சமமாய் நிற்கும் எனக் கூறுவர். அக்கருத்தை மறுத்து, முத்தி நிலையிலும் ஆன்மாச் சிவனுக்கு அடிமையேயாகும் என்பதை வலியுறுத்துகிருர் சிவஞான முனிவர்.

'துன்பமாம் எல்லாம் பரவசனுய்த் தான் துவளில்' என்ற வரிக்குச் சிவசம வாத சைவர் 'முத்தியில் சிவத்தின் வசப்பட்டு நிற்றல் துன்ப நிலையே யாம்' எனத் தம் கருத்திற்கு இசைவாகப் பொருள் கூறுதல் கூடும். அவ்வாறு கூறுதல் பொருந்தாது எனவும், அதற்கு இன்னவாறு பொருள் காணுதல் வேண்டும் எனவும் குறிப்பாய் உணர்த்துகிருர் சிவஞான முனிவர்.

'ஆன்மா பரவனுய் நிற்றல்' என்பதற்குச் சிவம் அல்லாத ஏனைப் பாசங்களின் வசப்பட்டு நிற்றல் என்பதே பொருளாகும். அதற்கு இதுவே பொருள் என்பதற்குப் பின்வரும் 'துவளில்' என்ற சொல்லே சான்ருகும். துவளுதலாவது மெலிதல். சிவத்தின் வசப்பட்ட ஆன்மாவுக்கு மெலிவு என்பது இல்லை. பாசத்தின் வசப்படும் போதுதான் அதற்கு மெலிவு நலிவுகள் உண்டு. ஆகையால் அவர்கள் கூறுமாறு, சிவத்தின் வசப்பட்டு நிற்றல் துன்பமாம் எனப் பொருள் உரைத்தல் பொருந்தாது எனக் குறிப்பாய் மறுத்துள்ளார் சிவஞான முனிவர்.

சிவத்தை அணைந்தவர்:

திருக்களிற்றுப் படியாரில் வரும் ஒரு செய்யுள், சிவத்தை அணைந்தவர் நிலை பற்றிப் பின்வருமாறு கூறுகிறது. ஆற்று நீர் கடலிற் பாய்ந்து கடல் நீருடன் கலந்து, பின் மீண்டும் அதே ஆற்றின் வழியாக எதிர்த்து வருதல் உண்டு. அவ்வாறு வந்தாலும் அது பழைய ஆற்று நீராய் வருதல் இல்லை, கடல் நீராய் உவர்த்தன்மை பெற்று வரும். அதுபோலச் சிவத்தை அணைந்தவரது உணர்வு புறத்தே உலகை நோக்கித் திரும்பினுலும் புலன் வழிப்பட்ட உணர்வாக இருப்பதில்லை; அருளின் தன்மை உடையதாகவே விளங்கும்.

ஆற்ருல் அலைகடற்கே பாய்ந்தநீர் அந்நீர்மை
மாற்றி அவ்வாற்ருன் மறித்தாற்போல் – தோற்றிப்
புலன்களெனப் போதம் புறம்பொழியும் நந்தம்
மலங்களற மாற்றுவிக்கும் வந்து

இச்செய்யுளைக் காட்டி, சிவஞானத்தைப் பெற்றோர் மீண்டும் ஐம்புலன் வழியே வந்தாலும் அதனால் தீங்கு யாதும் இல்லை என்பர் சைவரில் ஒரு சாரார். அவர் கூற்றை மறுக்கின்றார் சிவஞான முனிவர்; உயிரினது அறிவு சிவத்தையடைந்து சிவஞானமாய் நின்ற போதும் அந்நிலையினின்றும் நீங்கிக் கருவிகளின் வழிச் செல்லுதல் குற்றமே என்று வலியுறுத்துகிறார். ஏனெனில், கருவிகளும் சிவக் கலப்பு உடையனவாயினும் அவை சுட்டுணர்வையின்றி வியாபக உணர்வைத் தரமாட்டா. அவ்வகையில் கருவிகள் தாழ்ந்தனவேயாகும். அதனால் சிவத்தை அணைந்தவர் மீண்டும் பாசத்திற்படுதல் குற்றம் என்கிறார்.

முத்தி நிலையில் அறிவு விழைவு செயல்கள்:

சிவஞான முனிவர் பதினோராம் நூற்பாவுக்குப் பாடியம் எழுதும்போது பின்வருமாறு தொடங்குகிறார்.

முந்திய பத்தாம் நூற்பாவில், ஆன்மா எந்த ஒன்றையும் அறிதல், விழைதல், செய்தல் இன்றி இறைவனது அருள்வழியே நிற்றல் வேண்டும் என்பது கூறப்பட்டது. அதனால் ஆன்மா அறிவு இச்சை செயல்கள் மூன்றும் அற்றதாகி விடுகிறது. திருக்களிற்றுப் படியாரிலும் இந்நிலையே கூறப்பட்டுள்ளது. அச் செய்யுள் வருமாறு:

சிவன் முதலே அன்றி முதலில்லே என்றும்
சிவனுடையது என்னறிவ தென்றும் – சிவனவனது
என் செயல தாகின்றது என்றும் இவையிற்றைத்
தன் செயலாக் கொள்ளாமை தான்.

ஆன்மாவின் அறிவு இச்சை செயல்கள் அற்ற நிலையே முத்தி – என்றால் அது பௌத்தர் கூறும் முத்தி போல் அல்லவா ஆகிறது? முத்தி நிலையாவது ஆன்மாவின் அறிவுயாதொன்றையும் பற்றாதிருப்பதே என்பது பௌத்தர் கொள்கை. அதனை அவர்கள் ஆலய விஞ்ஞானம் என்பர். அதுபோன்றதாக அல்லவா சைவசித்தாந்த முத்தியும் ஆகிறது என்ற ஐயம் பத்தாம் நூற்பாவின் கருத்துப் பற்றி எழுதல் கூடும். அங்ஙனம் ஆகாமை கூறி, அவ்வையத்தை நீக்குவதாக அமைகிறது இப்பதினோராம் சூத்திரம் என்று தோற்றுவாய் செய்கிறார் சிவஞான முனிவர்.

ஆன்மாவின் அறிவு இச்சை செயல்கள் அற்ற நிலையே முத்தி நிலை என்று சைவ சித்தாந்தம் கூறவில்லை. அறிவு முதலியவை எப்பொழுதும் உள்ளனவேயன்றிக் கெட்டொழியவில்லை. அவை பாசங்களை விடுத்துப் பதியின்பால் செயற்படுவனவேயாகும். சிவனை மறவாது உணர்தல் அறிவின் தொழில். அவனிடத்து அன்பு செய்தல் இச்சையின் தொழில். அவனிடத்து அழுந்தி நுகர்தல் செயலின் தொழில். ஆகவே மூவகை ஆற்றலும் முத்தியிலும் நிகழ்தல் அறியற்பாலது.

மேற்காட்டிய திருக்களிற்றுப்படியாரின் கருத்து அறிவு இச்சை செயல்கள் மூன்றும் அற்றுவிடும் என்பதன்று. தான் அறிவன செய்வன எல்லாவற்றையும் தன்னுடைய செயலாகக் கொள்ளாமல் இறைவனுடைய செயலாகக் கொள்ளவேண்டும் என்பதே இச் செய்யுளின் கருத்தாகும்.

**சிற்றின்பமும் சிவபோகமாய் விளைதல்:**

சிவத்தை அணைந்தவர் வீடு பேற்றின்பத்தினை இவ்வுலகில் உடம்புடன் கூடி நின்ற நிலையிலேயே பெற்று நுகரும் இயல்பினர். சுந்தரமூர்த்தி சுவாமிகள் போன்ற அருளாளர்களின் ஞான வாழ்விலிருந்து இவ்வுண்மையைப் பெறலாம்.

இவ்விறைநிலை அனுபவத்தைத் திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞானபோதம் ஆகிய நூல்கள் கோட்பாடாக்கித் தருகின்றன. அருளாளர் பெற்ற சிற்றின்பமும் பேரின்பமாய் முடியும் என்றும், அவர்க்கு மாயைப் பிணிப்பு இல்லை என்றும் திருவுந்தியார் கூறும். அக்கருத்தை மேலும் விளக்கும் முறையில் அமைந்தது திருக்களிற்றுப்படியாரில் உள்ள பின்வரும் செய்யுள்:

உடம்புடைய யோகிகள் தாம்உற்ற சிற்றின்பம்
அடங்கத்தம் பேரின்பத் தாக்கில் – தொடங்கி
முளைப்பது மொன்றில்லை முடிவதுமொன் றில்லை
இளைப்பது மொன்றில்லை இவர்.

சிவஞானபோதம் பதினோராம் நூற்பாவில் வரும் எடுத்துக்காட்டு வெண்பா "ஏகமாய் நின்றே இணையடிகள் ஒன்றுணரப் போகமாய்த் தான் விளைந்த பொற்பினன்" என்று கூறுகிறது. இதற்குச் சிவஞான முனிவர் பின்வருமாறு உரை கூறுகிறார். "முதல்வன் திருவடிகளில் நானென ஒன்றில்லென்று தானேயென ஏகமாகி நின்றுகொண்டே பிராரத்த வினைக்கீடாக வரும் விடயத்தை உணர்வாராயின், அது தான் அச் சிவன் முத்தர்க்கு வினைப்பயனுதலின்றிச் சிவபோகமாய் விளைகின்ற பொலிவானே" என்பது அவர் தரும் விளக்கம்.

முனிவர் கூறுவதைப் பின்வருமாறு எளிமைப் படுத்தித் தரலாம். 'நான் என ஒன்று இல்லை, எல்லாம் அவனே' என்று இறைவனது இணையடிகளில் நின்று எல்லாவற்றையும் திருவருளாகவே உணர்வர் சிவஞானிகள். பிராரத்த வினைக்கு ஈடாக வந்து பொருந்தும் புலன்களையும் அவ்வாறு உணர்வர். ஆகையால் அந்தப் புலனின்பங்களும் அவர்கட்குச் சிவானந்தமாய் விளையும். அதனுல் அதனை அனுபவிக் கின்ற அனுபவம் அவர்கட்கு உலக அனுபவம் ஆகாது. சிவானுபவமேயாகும்.

சிவஞான முனிவர் திருவுந்தியாரையும், மேற்காட்டிய திருக்களிற்றுப்படியார் செய்யுளையும் எடுத்துக்காட்டி விளக்கியிருப்பது குறிப்பிடத்தகுந்தது.

இதுகாறும் கூறியவற்றுல், திருக்களிற்றுப்படியார் வழிநூல் என்பதும், அருளனுபவங்களை எடுத்துரைக்கும் சிறப்பு நூல் என்பதும், உரையாசிரியர்கள் அனைவரும் போற்றி எடுத்தாண்ட பெருமையுடையது என்பதும், சிவஞான முனிவர் தமது மாபாடியத்தில் இதன் செய்யுட்களை ஏற்ற இடங்களில் எடுத்தாண்டு தம் உரையைச் செழுமைப்படுத்தியுள்ளார் என்பதும் இனிது விளங்கும்.



# கொடிக்கவி

டாக்டர் பழ. முத்தப்பன் எம்.ஏ., பிச்.டி,
முதல்வர்,
கணேசர் செந்தமிழ்க் கல்லூரி,
மேலைச்சிவபுரி.

---

இந்திய மெய்ப்பொருள் வரலாற்றில் சைவசமயம் தனியொரு இடத்தைப் பெற்றுள்ளது எனலாம். இத்தகைய சைவசமயத்தின் தோற்றம் கற்பனைக்கு எட்டாததாய் அமைந்துள்ளது என்பார் சித்தலிங்கையா[1]. தோற்றத்தின் கால எல்லையை வரையறுத்துக் கூற இயலாத சைவசமயம் தமிழகத்தில் – தொல்காப்பியத்திற்கு முற்பட்ட காலத்திலேயே பரவியிருந்தமை தெள்ளிது. நிலம் பகுக்கின்ற பொழுது குறிஞ்சிக்குரிய கடவுளாக முருகன் இடம் பெற்றிருப்பது அதற்குரிய சான்றுகளில் ஒன்று. சங்க காலத்தில் சிவன், திருமால் வழிபாடுகள் இருந்தமையைச் சங்க இலக்கியங்கள் உறுதியாக்குகின்றன. காப்பிய காலத்தில் பிறவா யாக்கைப் பெரியயோனாக[2], நுதல்விழி நாட்டத்து இறைவனாகச்[3] சிவபெருமான் குறிக்கப் பெற்றுள்ளான். பல்லவர் காலத்தில் எழுந்த திருமந்திரம் சைவமய இலக்கிய சாத்திரங்களுக்கு முன்னோடியாக விளங்குகிறது. இடைக்காலத்தில் திருமுறைகளின் தோற்றம் சைவசமய வளர்ச்சியைப் பெருமைப் படுத்துகிறது.

கி.பி.13 ஆம் நூற்றாண்டு இடைக்காலச் சைவசமய வளர்ச்சியில் குறிப்பிடத்தக்க நூற்றாண்டாகும். இந்நூற்றாண்டில்தான் சித்தாந்த சாத்திரம் மலர்ந்தது. சாத்திரம் என்பது சைவசித்தாந்தத் தோற்றத்தின் சரித்திரம் என்று அறிஞர்களால் போற்றப் பெறும்[4]. காலம் காலமாக வளர்ந்து வந்த சைவசமயக் கருத்துக்களை முழுவடிவாக்கி– சமயத்தின் அடிப்படைக் கருத்துக்களை வரையறுத்து – மாறுபாடுகளை நீக்கி –அரும் பணியைச் செய்த சாத்திர நூல்களில் தலையாயது சிவஞான போதம்.

கி.பி. எட்டாம் நூற்றாண்டின் காலக்கட்டத்தில் சங்கரருடைய கொள்கை அத்துவைதம் என்ற பெயரில் தோன்றி இந்து சமயத்தில் புரட்சி ஏற்படுத்தியது. கி.பி. 11இல் ராமானுசருடைய கொள்கை விசிஷ்டாத்துவைதம் என்ற பெயரில் தோன்றி வேதாந்த மரபு வளர்ந்தது. கி.பி. 13இல் மத்துவருடைய கொள்கை துவைத வேதாந்தம் என்ற பெயரில் தோன்றிச் சமய உணர்வை வளர்த்தது. இத்தகைய புரட்சிகள் அனைத்தும் தென்னாட்டில் நிகழ்ந்தவை என்பது குறிப்பிடத்தக்கது. இத்தகைய சூழலில்தான் புதிய மரபாக–சித்தாந்த மரபு–மெய்கண்டாரால் தோற்றுவிக்கப் பெற்றது. அத்துவைதம் என்ற சொல்லிற்குப் புதிய பொருள் காணப் பெற்றது. மேற்கூறிய மூன்று மரபுகளுக்கும் வேறாகப் புதிய பாதை வகுக்கப்பெற்றது. இப்புதிய பாதையின் தடம் கண்டு வந்த தத்துவ வித்தகர்களில் ஒருவர்தான் உமாபதி சிவாச்சாரியார்.

சந்தான குரவர்களில் நான்காமவராக விளங்குபவர் உமாபதி சிவம். தில்லைவாழ் அந்தணர் மரபைச் சார்ந்த உமாபதிசிவம் – தமிழ்நூல் புலமையிலும் வடநூல் அறிவிலும் சிறந்து விளங்கினார். "பட்டகட்டையில் பகற்குருடு ஏகுது பாரீர்" என்ற குருவருள் சொற்கள் திருச்செவியுற்றதால் ஞானம் கைவரப் பெற்றார். மறைஞான சம்பந்தரின்

குருவருள் பெற்று – கொற்றவன் குடியில் திருமடம் கொண்டு பெற்றான் சாம்பனுக்கு முத்தியளித்து, தில்லைத் திருக்கோவில் கொடியேற்றுவித்து, முள்ளிச் செடிக்கு உபதேசம் அருளிப் பெருவாழ்வு பெற்றார். இத்தகு வரலாற்றுச் செய்திகள் சந்தானாச்சாரியார் புராணம் உள்ளிட்ட நூல்களால் பெறப்படுபவை. ஆயின் இச்செய்திக் குறிப்புகட்கு ஆதாரமாக எவ்விதச் சான்றும் அவரின் நூல்களில் காணமுடியவில்லை. தனி ஒரு வரலாறும் அவரைப்பற்றி இல்லை. எனவே வரலாற்றுச் செய்திகளாகக் கிடைப்பனவற்றை உண்மை எனக் கொள்ள இயலவில்லை.

மெய்கண்டார் போதம் தர, அருணந்தியார் இருபஃது, சித்தியார் தந்திட, மறைஞானமுனிவர் தந்தவையாக ஏதும் கிடைத்தில. நான்காமவராகிய உமாபதி சிவனார் எட்டு நூல்களை அளித்துள்ளார். சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப்பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மைநெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம் என்பன அவை. இவற்றைச் சித்தாந்த அட்டகம் என்று போற்றுவர். இவற்றுள் முன்னவர்களின் வழியில் சித்தாந்தக் கருத்துக்களைத் தெளிவாகவும் சுருக்கமாகவும் தருவது சிவப்பிரகாசம் ஆகும். அதன்வழியே தான் பிற ஏழு நூல்களும் அமைந்துள்ளன.

கொடிக்கவி நூலின் அமைப்பு:

உமாபதி சிவனாரின் நூல்கள் எட்டில் மிகச்சிறிய நூல் கொடிக்கவியாகும். அவரின் எட்டு நூல்களில் சிவப்பிரகாசம் விருத்தப்பாக்களாலும், திருவருட்பயன் குறள் வெண்பாக்களாலும், வினாவெண்பா வெண்பாக்களாலும், போற்றிப் பஃறொடை–பஃறொடை வெண்பாவாலும், நெஞ்சு விடுதூது கலிவெண்பாவாலும், உண்மைநெறி விளக்கம் விருத்தப் பாக்களாலும், சங்கற்ப நிராகரணம் அகவற்பாவாலும் அமைந்திருக்கக் கொடிக்கவி மட்டுமே கட்டளைக் கலித்துறை, நேரிசை வெண்பா என்ற இரு பாவகைகளைக் கொண்டு விளங்குகிறது.

இரு பாவகைகளிலும் அமைந்த பாடல்களின் மொத்த எண்ணிக்கை நான்கே. நான்கில் முதற்பாடல் கட்டளைக் கலித்துறையிலும், மற்ற மூன்று பாடல்கள் நேரிசை வெண்பாவிலும் அமைந்துள்ளன. நான்கு பாடல்களிலும், "உயிர் அருள் கூடும்படி கொடி கட்டினேன்" (1). "நீ அறியக் கட்டினேன் கோபுர வாசற்கொடி" (2). "குறிக்குள் அருள் நல்கக் கொடி" (3). "பேசும் எழுத்துடனே பேசா எழுத்தினையும் கூறாமற் காட் டக்கொடி" (4) எனக் கொடி என்ற சொல் இடம் பெற்றுள்ளமையால் இச்சிறுநூல் கொடிக்கவி எனப் பெயர் பெற்றது.

உரைப்பதிப்புகள்:

இந்நூலிற்குப் பழையஉரை ஒன்று உள்ளது. 1940இல் சைவசித்தாந்த மகாசமாசம் வெளியிட்ட முழுமைப் பதிப்பில் அவ்வுரை பழைய உரை எனக் குறிக்கப் பெற்றுள்ளதேயன்றி உரையாசிரியர் பெயர் இல்லை. இவ்வுரை உரை, கருத்து, நுட்பம் என்ற முப்பிரிவுகளின் மிகச் சிறந்த உரையாக அமைந்துள்ளது. பின்னர் வந்த அனைத்து உரைகளும் இதனை ஒட்டியே அமைந்துள்ளன. இன்னும் குறிப் பிட்டுக் கூறினால் இவ்வுரையை விடப் புதிய கருத்துக்கள் எதுவும் வெளிவரவில்லை என்றே கூறலாம்.

1956இல் திருவாவடுதுறை ஆதீன வித்துவான் தே.ஆ.ஸ்ரீநிவாசாச்சாரியார் அவர்கள் குறிப்பு விளக்கக் கட்டுரையாகத் திருவாவடுதுறை 101 ஆவது வெளியீடாக வெளியிட்டுள்ளார்கள். உரையாசிரியர் தன் மரபுப்படி – தமக்குத் தெரிந்த அனைத்துச் சாத்திரக் கருத்துக்களையும் கட்டுரை பால் இணைத்துப் பாடல்களுக்கு விளக்கம் தந்துள்ளார். பொழிப்புரை, கருத்துரை, விளக்கஉரை என்று மூன்று பகுப்புகள் அவ்வுரையில் விரித்து எழுதப் பெற்றுள்ளது. இவ்வுரையாசிரியர் நான்காம் பாடலுக்க உரை எழுதும்போது,

"பஞ்சாக்கிர மந்திரம் ஓதுதல், நிற்றலாதிய முறைமைகள் நூலால் நுவலப்படும் பொருளல்ல. ஆதலால் இப்பாடலின் அநுபவம் குருமுகமாகக் கொள்ளவேண்டுவ தொன்றாகும். எனவே நூன்முகமாகக் கூறப்படும் அளவே இங்கு இனி விளக்கப்படுவதெனக் கொள்க"[5] எனக் குறிப்பு தந்து–உரை எழுதிச் சென்றிருக்கிறார். என்றாலும் இப்பாடல் உரையைப் பயில்வார்க்குச் சைவசித்தாந்த அடிப்படைக் குறிப்புகள் ஒருவாறு கிடைத்திடும். அந்த அளவிற்கு மற்றொன்று விரித்தல் அமைந்துள்ளது. இக்குறை யாரும் கூறுதல் வேண்டா என்பதற்காகத்தான் போதம் உரையாசிரியர் நூல் தலைப்பை 'விளக்கக் கட்டுரைகள்' எனக் குறித்துள்ளார் போலும்.

1962இல் கா.சுப்பிரமணியபிள்ளை அவர்கள் உரைநடையாக இந்நூற் கருத்துக்களைத் தருமை ஆதீன வெளியீடாகத் தந்துள்ளார்.

1993இல் காசிமடத்து வெளியீடாகப் பேராசிரியர் கு. சுந்தரமூர்த்தி அவர்கள் இந்நூலிற்குத் தெளிவுரை எழுதி வெளியிட்டுள்ளார்கள். ஆராய்ச்சி முன்னுரையில் பேராசிரியர் குறித்துள்ள,

"இச்சிறு நூலின் பாடல்கள் ஒருபடித்தாகக் காணப்படவில்லை. ஒரு படியில் இந்நூற்கண் காட்டப் பெற்றுள்ள எண்ணின்படி 3,2,1,4 என்ற வரிசையில் பாடல்கள் அமைந்துள்ளன. பிறிதொரு படியில் அஞ்செழுத்தும் எனத் தொடங்கும் நான்காவது பாடல் இல்லை. பிறிதொரு படியில் துகளறு போதத்தின் இறுதிச் செய்யுள் இந்நூற்கண் இரண்டாவதாக உள்ளது." என்ற குறிப்பு நினைவு கூரத்தக்கது.

இதே ஆண்டில் திருநெல்வேலி அருள்நந்திசிவம் அருட்பணி மன்றத்தின் சார்பில் சித்தாந்தச் செல்வர் சி.சு.மணி அவர்களின் உரை வெளிவந்தள்ளது.

இவ்வாறு இச்சிறு நூலிற்குப் பல உரைப்பதிப்புகள் வெளிவந்துள்ளமை போற்றுதற்குரியதாகும்.

**நூல் பற்றிய செவிவழிச் செய்தியில் உண்மைநிலை:**

இக்கொடிக்கவி பாடப்பெற்ற சூழல் பற்றிய ஒரு நிகழ்ச்சி பண்டு தொட்டு வழங்கப் பெற்று வருகிறது. கொற்றவன்குடியில் வாழ்ந்து வந்த உமாபதி சிவனாரின் முறைநாளில் தில்லைக் கூத்தரின் திருநாள்விழா அமைந்தது. ஆயின் தில்லைவாழ் அந்தணர்கள் சிவனாருக்குப் பதிலாக மற்றொருவரைக் கொண்டு கொடியேற்றம் செய்ய முற்பட்டனர். ஆயின் கொடி ஏறிற்றிலது. அசரீரியின் கூற்றுப்படி – தில்லை அந்தணர்கள் தம் தவறு உணர்ந்து கொற்றவன்குடி சென்று சிவனாரை அழைத்துவந்து கொடியேற்றம் செய்ய வேண்டிட – அவரும் இக் கொடிக்கவியைப் பாடிக் கொடியேற்றம் செய்தார் என்பது அந்நிகழ்ச்சியாகும். இந்நிகழ்ச்சிக்கு நூலில் அகச்சான்றுகள் இல்லை என்றாலும் தத்துவ அறிஞர்களால் ஏற்றுக் கொள்ளப்பெற்று வருகிறது.

ஆனால் கொடிக்கவி நான்கு பாடல்களின் பொருளைக் காணும்போது அவை தத்துவ விளக்கங்களாகத் தெரிகிறதே அன்றிக் கொடி ஏறுவதற்காகப் பாடிய தோத்திரப் பாடல்களாகத் தோன்றவில்லை. கொடிஏறப் பாடிய பாடல்கள் ஆயின் திருஞானசம்பந்தர் திருமறைக் காட்டின் திருக்கதவு திறக்கப் பாடியபதிகத்தைப் போலவோ, திருநாவுக்கரசர்விடம் தீர்க்கப் பாடிய பதிகம் போலவோ 10 பாடல்களைப் பெற்றுப் பதிக அமைப்பைப் பெற்றிருக்கவேண்டும். அவ்வாறு இல்லை. 4 பாடல்களே உள்ளன. அவ்வாறே அதிகப் பாடல்கள் அமைந்து அவை கிடைக்கப் பெறவில்லையோ என எண்ணவும் இடமில்லை. ஏனெனில் கொடியேற்றத் தத்துவம் நன்கு விளங்குமாறு நான்கு பாடல்களிலேயே பொருள் முடிவு அமைந்துவிட்டது.

மேலும் அற்புத நிகழ்ச்சிக்குரிய பாடல்களாக இந்நான்கும் அமைந்தன என்றால் தேவார ஆசிரியர்களின் பதிகங்களைப்போல ஒரே பா அமைப்பு இடம் பெற்றிருக்க வேண்டும். ஆயின் கொடிக்கவிப் பாடல்களில் ஒரு பாவமைப்பு அமைந்திருப்பது ஆய்வுக்குரியதாக அமைந்துள்ளது.

மேலும் கொடி ஏறுவதற்காகப் பாடப்பெற்றதாக இருந்தால் பாடல்களில் கொடி ஏற்றினேன் என்ற தொடர் அமைந்திருக்கலாம். அவ்வாறு இல்லாது நான்கு பாடல்களிலும் கொடி கட்டினேன் என்றும், கொடி என்றும், காட்டக்கொடி என்றுமே அமைந்துள்ளன.

கொடி ஏறுதல்தான் இன்றியமையாத நிலை என்றால் இறையை நோக்கிக் கூறிடும் விண்ணப்ப அமைப்புப் பாடல்களில் இருத்தல் வேண்டும். அதற்கு மாறாக அருளா நீ அறியக் கட்டினேன் (2) என்றதொடரை அமைத்துத் தான் கொடிகட்டி யதாகச் சிவனார் குறிப்பிடுகின்றார்.

எனவே இவ்வகைக் காரணங்களைக் கொண்டு பார்க்கும் பொழுது கொடியேற்றம் தடைப்பட்டுக் கொடிக்கவிபாடி உமாபதி சிவனார் கொடியேற்றினார் என்பதைவிடக் கொடியேற்றத்தின் மூலம் தத்துவத்தைக் கூறுவதையே அடிப்படையாகக் கொண்டு அவர் இப்பாடல்களைப் பாடினார் எனக் கொள்ளலாம். உமாபதி சிவனார் தன் பூசை முறையில் கொடியேற்றம் வந்தபொழுது தன் ஆசிரியர் மறைஞான சம்பந்தரால் தொடர்பு ஏற்பட்ட செங்குந்த மரபினருக்குக் கொடியேற்றத்தின் தத்துவங்களைக் கூறி அவர்களை அவ்விழாவை நடத்திடப் பணித்திட எண்ணியே கொடிக்கவி பாடியருளினார் எனக் கொள்வது சாலப் பொருந்தும். சிவனாரின் காலம் தொட்டே இம்மாவட்டத்தில் இன்றும் திருக்கோயில்களில் குடியேற்றத் திருநாள் செங்குந்த மரபினர்களின் திருவிழாவாகக் கொண்டாடப் பெறுகிறது என்பதை நினைவு கூரலாம்.

கொடியேற்றத் திருவிழாத் தத்துவம்:

சைவத் திருக்கோயில்களின் அமைப்பு முறையில் இராசகோபுரத்தை அடுத்து நந்தியம் பெருமானுக்கும், பலிபீடத்திற்கும் இடையில் கொடிமரம் அமைக்கப் பெற்றிருக்கும். அக்கொடி மரத்தில் சிறப்புத் திருவிழாக் காலத்தில் அதிலும் 10நாள் சேர்ந்தாற்போல் நடைபெறும் திருவிழாக் காலத்தில் முதல்நாளில் மங்கல நேரத்தில் நந்திக்கொடி ஏற்றுவிக்கப் பெறும். தத்துவ அடிப்படையில் அத்திருநாள் நடை பெறுகிறது.

"சிவாலயங்களில் ஏற்றும் கொடியில் உள்ள ரிஷபம் தர்ம உருவமாகவும், ஆத்மாவின் உருவமாகவும் மதிக்கப் பெறுகிறது. ஆத்மாக்களையும், தர்மத்தையும் கீழ் நிலையிலிருந்து உயர்நிலைக்குக் கொண்டு செல்லும் இறைவனின் கருணை இத்திரு விழாவால் விளக்கப் பெறுகிறது[6]" என்றும்,

"கொடியேற்றம் என்பது முக்கியமானதோர் செயலைத் தொடங்குவதைக் குறிக்கும். கொடியேற்றுதல் பொதுவாக ஒருவர் ஒரு பொருள் பற்றி முடிவு மேற்கொள்ளுதலையும், அதனை இறுதிவரை கொண்டு செலுத்தி முடிப்பது என்பதனையும் குறிப்பதாகும். கோயில்களில் கொடியேற்றுதல் திருவிழா தொடங்கவதைக் குறிப்பதாகும். எந்தச் சடங்காயினும் அது ஞானநெறியில் செல்வதற்குக் காரணமாக அமையும்.

'கிரியையென மருவுமனை யாவும் ஞானம்
கிடைத்தற்கு நிமித்தம்' (சிவப்பிரகாசம் – 10)

ஞானம், சத்திநிபாதத்தின் விளைவாகத் தோன்றுவது. ஆகவே கொடியேற்றம் என்பதை இறைவன் அருளுக்கு அடையாளமாகக் கொள்ளலாம்."[7] என்றும்,

"கொடியேற்று விழா"வானது உயிர் பாசப்பற்றினை இறக்கிவிட்டு நீங்கி அருள்வழிப்பட்டு ஆண்டவன் அடியை (ஆசான் துணையால் – ஆசான் நந்திதேவர்) அடைய உயர்வதைக் குறிக்கும் எனலாம் என்றும் கொடியேற்று விழாவின் தத்துவங்கள் கூறப்பெறுகின்றன. ஆன்றோர்களின் குறிப்பின்படி ஆன்மா, மலங்களிலிருந்து விடுபட்டு, தன்னை உயர்த்திக் கொண்டு இறையருளைப் பெறுவதையே கொடியேற்றுதல் குறிப்பிடுகிறது என்பது தெள்ளிது.

'கொடிஏற்றுதல்' என்ற தொடர் பொருள்நயம் கொண்டதாகும். நெருப்பானது தன்னிடம் இட்டபொருளை எரித்து – மேலே கொண்டுபோம். நீரானது தன்னிடம் இட்ட பொருளைப் பள்ளத்தே தள்ளும். இந்த இரு நிலையும் ஆன்மாவிற்கு வேண்டும். தன்னிடம் உள்ள பொருளை நீர் பள்ளத்தே தள்ளுவதுபோல் உயிரானது பாச ஞானத்தை இறக்கி, அருளான சிவஞானத்தை நெருப்புபோல் மேலே உயர்த்த வேண்டும். இத்தகையநிலை உயிருக்கு அமையுமானால் உயிர் அருள் நிலையை எய்தும். இதை உணர்த்தவே கொடியானது ஏற்றப் பெறுகிறது. இதனை உமாபதி சிவத்தின் "உயிர் அருள் கூடும்படி கொடி கட்டினேன்" என்ற முதற்பாடலின் இறுதி அடி கூறுகிறது.

இத்தகைய பொருள் பொதிந்துள்ள கொடியேற்றத்திருநாளின் தத்துவத்தைச சித்தாந்த அடிப்படையில் விளக்குவதே கொடிக்கவி நான்கு பாடல்களும் ஆம்.

பாடல்கள் நுவலும் பொருள்:

முதற்பாடல் ஆன்மா ஆணவத்திற்கும் ஞானத்திற்கும் இடமானது என்றும், ஒன்று மேலிடும்போது மற்றொன்று அடங்கி நிற்கும் என்றும், என்றாலும் ஆணவம் ஞானத்தை ஏதும் செய்திட இயலாது–அதே நேரத்தில் ஞானமும் மும்மல முயக்கத்தால் தெளிவுறாது என்றும், ஆதலால் ஆன்மா ஆசாரியனின் துணை பெற்று இறையருளாம் வீடு பேறடையும் என்றும் குறிப்பிடுகிறது. (முதற் பாடலில் மும்மலமுயக்கம் தீர ஆசாரியன் துணை வேண்டும் என்பது தெளிவுபடுத்தப் பெறுகிறது).

பாடல் 2இல் வையக முழுதுமான மலம் மாயை கன்மங்களிலே இறைவன் பொருந்தாமல், சுத்தமாயை, அசுத்தமாயை, ஆணவம், கன்மம், திரோதம் என்ற ஐந்தின் கட்டினை உடைய ஆன்மாவிடம் இறைவன் பொருந்தியுள்ளான். எனவே ஆன்மா, அம்மலங்களிலிருந்து நீங்கி – அம்மலங்களில் சற்றேனும் பொருந்தாத இறைவனிடம் திருவருள் பெற – ஆசாரியன் துணை கொள்ள வேண்டும் என்பது கூறப்பெற்றுள்ளது. (இப்பாடலில் ஆன்மாக்கள் ஐந்து கட்டுக்களையும் நீக்க வேண்டும் என்பதைப் புலப்படுத்தி ஆசாரியன் துணையை வலியுறுத்துகிறது).

பாடல் 3இல் வாக்காலும், மனத்தாலும் அறிய இயலவொண்ணா இறைவனை அடைய, அறிவே வடிவாக உள்ள ஆசாரியனை அடையவேண்டும். அவ்வாசாரியன் சீடரின் பக்குவத்திற்கேற்பத் தீக்கை முதலியவற்றால் மலமாயா கன்மங்களைப் போக்கி, சிவஞானம் பெறவைப்பான். அச்சிவஞானத்தால் திருவருள் பெறலாம் என்பது விளக்கப் பெற்றுள்ளது. (இப்பாடலில் ஆசாரியனின் திறம் கூறப்பெற்று அதன்மூலம் திருவருள்நிலை கூறப்பெற்றுள்ளது).

பாடல் 4இல் ஆசாரியனால் தரப்பெற்ற சிவஞான வழிநின்று பஞ்சாக்கர மந்திரங்களை முறைப்படி உச்சரித்து, பின் அம்மந்திரத்தை மனத்தில் இருத்தின் சிவத்துடன் இரண்டறக் கலக்கலாம் என்பது வலியுறுத்தப் பெறுகிறது. (எனவே இப்பாடலில் ஆசாரியன் திறத்தால், பெற்ற ஞானத்தால் இறையருளோடு கலத்தல் கூறப்பெறுகிறது.)

இவ்வாறு நான்கு பாடல்களில் கொடியேற்றத் தத்துவப்படி ஆன்மா மலங்களை விடுத்து – ஆசாரியனைத் துணை கொள்வதையும், அத்துணையால் ஆன்மா சிவனருளோடு இரண்டறக் கலத்தலையும் பொருள்களாக – அமைத்துள்ளார் உமாபதி சிவனார் என்பது நன்கு தெளிவுறுகிறது.

பாடல்கள் தந்திடும் முப்பொருள் நிலை:

கொடிக்கவிப் பாடல்கள் நான்கே என்றாலும் அப்பாடல்களில் சித்தாந்தம் கருத்துக்களின் முக்கிய கருத்துகளாகிய முப்பொருள் விளக்கங்கள் அமைந்திருப்பது சிறப்புடைத்தாம். பதி, பசு, பாச இலக்கணங்களைக் குறிப்பாகவும் – தெளிவாகவும் எடுத்துக் காட்டுகின்றன.

பதி நிலை பற்றிக் குறிப்பிடும்போது, "பொருளாம் பொருளேது" என்ற தொடரால் (பா.2) அழியாத பொருளாய், உயிர்க்குயிராய், ஆனந்த வடிவாய்ப் பதியாம் சிவம் அமைந்துள்ளது என்றும், "நீ புரவா வையம்"(பா.2) என்ற தொடரால் இறைவன் உலகமாம் கருவிகளைப் படைத்தவன் என்றாலும் அவற்றில் பதியாது உயிர்களிடத்தில் மட்டுமே பதிவான் என்றும், "வாக்காலும் மிக்க மனத்தாலும் எக்காலும் தாக்காது உணர்வரிய தன்மையானை" (பா.2) என்ற தொடரால் இறைவன் வாக்கு, மனங்களால்– ஒருகாலத்திலும் அறிதற்கு அரிதாக விளங்குபவன் என்றும் குறிப்பிடுகிறார்.

இறைவனைப் பற்றிய இத்தகைய செய்திகளைக் குறிக்கின்ற கொடிக்கவியில் சக்தியைப் 'போது' என்ற சொல்லால் ஆசிரியர் குறிப்பிடுவது மிகச் சிறப்புடையதாகும். பாடல் 2இல் 'போது ஏது' என்று குறிப்பிடுகின்றார். போது என்பதற்குக் கிரணம் என்ற பொருளையே உரையாசிரியர் அனைவரும் கையாளுகின்றனர். சிவபரம் பொருளை அறிவுப் பிழம்பாகிய கதிரவன் என்று கொண்டால் அக்கதிரவனை விட்டு எப்போதும்

நீங்காதிருக்கும் கிரணத்தை முதல்வனது சிற்சக்தி எனக் கொள்வது பொருத்தமுடையதே ஆகும். எப்போதும் நீங்காதிருக்கும் கிரணத்தை முதல்வனது சிற்சக்தி எனக் கொள்வது பொருத்தமுடையதே ஆகும்.

சூரியனின் கிரணம் இருக்கும் நேரத்தைப் பகற்போது எனவும், இல்லாத நேரத்தை இராப்போது எனவும் கூறுதல் வழக்கம். ஆதலால் சிவகிரணமான சக்தியை இவ்வாசிரியர் நமக்கு அதன் ஒன்றுபட்டிருத்தலைப் புலப்படுத்தல் கருதிப் போது எனச் செய்யுளில் குறிக்கலுற்றார்' என்பார் ஸ்ரீநிவாசாசாரியன். மேலும் சூரியனை வேறொரு விளக்குக் கொண்டு அறிவதில்லை. சூரிய ஒளி கொண்டே அறிகிறோம். இவ்வாறே சிவத்தினை, சிவஞானத்தினாலேதான் காணமுடியும் என்பதையும் அச் சொல்லால் அறிகிறோம். சூரியனை விட்டுச் சூரியனின் கிரணம் வேறாக இராது. கதிர் கதிரோனோடு ஒன்று பட்டே இருக்கிறது. அது போலவே சக்தியும் சிவத்தோடு ஒன்றுபட்டு உள்ளது என்பது அவரின் விளக்கமாகும். சக்தியைக் கிரண நிலையில் காண்பது இவ்வாசிரியருக்கு இயல்பாகும் என்பது சிவப்பிரகாசத்திலும் காணமுடிகிறது.

"சுத்தமாஞ் சக்தி ஞானச் சுடராகும்" என்பார் அங்கு. பாடல்களில் சில குறிப்புச் சொற்களால் சிவத் தத்துவத்தை உணரவைப்பது தத்துவ ஆசிரியர்களின் மரபாகும். எனவே அத்தகு சொற்களுக்கு விளக்கம் தருகின்றபோது ஆசாரியர்கள் ஞானாசிரியர்களின் கருத்தறிந்து விளக்கம் தருவதும் இயற்கை. மெய்கண்டாரின் சூத்திரத்திற்குச் சிவஞான முனிவரின் மாபாடியம் எழுந்ததும் இத்தகு முறையில்தான். அந்த அடிப்படையில் முதற்பாடலில் உமாபதி சிவனார், "உயிர்க்கு உயிராய்த் தெளிக்கும் அறிவு திகழ்ந்து" என்ற தொடரை இடம்பெறச் செய்துள்ளார். இதன் குறிப்புப் பொருள் உயிர்க்கு உயிராக நிற்கும் இறைவன் உயிரைவிட்டு நீங்காது இருந்தும் உயிர் எவ்வாறு இருளில் அழுந்திற்று என்ற வினா எழுகிறது. மும்மலத்தினால்தான் தோன்றாத்துணையாக இறைவன் உயிரோடு கலந்திருந்தும் உயிரில் அறியாமை அமைந்துள்ளது என்ற குறிப்புப் பொருள் கிடைக்கிறது.

இத்தகைய ஆன்மா ஆசாரியனின் தொடர்பினால் – அவர்தம் தீட்சையினால் தம் மலத்தைப் போக்கிக் கொண்டு அருளைப் பெறவேண்டும். இதனைச் சிவஞான சித்தியாரும், "அடிசேர் ஞானம் ஆசான் அருளால் வந்திடும்" என்று குறிப்பிடும்.

இதுபோல மூன்றாம் பாடலில் "வாக்காலும் மிக்க மனத்தாலும் எக்காலும் தாக்காது உணர்வு அரிய தன்மையன்" என்று இறைவனின் பெருமை கூறப் பெற்றுள்ளது. அப்படியானால் மனத்தாலும் வாக்காலும் ஆன்ம போதத்தாலும எட்டப் படாத சிவனை எங்ஙனம் அடைவது? என்ற வினா குறிப்புப் பொருளாக எழுகிறது. இதற்கு விடை உரையாசிரியர்களால் உணர்த்தப்படுவது இயற்கை. காணப்படாத சிவத்தை அச்சிவத்தினது அருளுருவாகிய காணப்பட்ட ஆசிரியரைக் கொண்டே அடைதல்வேண்டும். ஆசிரியர் தன்னடி அடைந்த சீடனை அவன் பக்குவத்திற்கேற்பத் தீக்கை முதலியன செய்து அவனது மலமாயா கன்மங்களைப் போக்குவான். இதனை உமாபதி சிவனார் பிறிதொரு நூலாகிய நெஞ்சுவிடுதூதில்,

"எட்டும் அவர்க்கு எட்டா இயல்பினான் – மட்டவிழ்தார்
வானோன் பவனிவரக் கண்டு வல்வினையேன்
ஏனோரும் ஏத்துதல் கண்டு ஏத்தினேன் – தான் என்னைப்

பார்த்தான் பழைய வினைப் பஞ்சமலக் கொற்றை எல்லாம்
நீத்தான் நினைவு வேறாக் கினான்"

என்று குறிப்பிடுவதும் இங்கு உணரத் தக்கது. இவ்வாறு வெளிப்படையாகவும் குறிப்பாகவும் பதி பற்றிய கருத்துக்களை உமாபதி சிவனார் பாடல்களில் தருகின்றார்.

அடுத்து ஆன்மநிலையைப் பற்றிக் குறிப்பிடும்போது, "ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றே இடம்" (பா.1) என்ற தொடரால் ஆன்மா ஆணவத்திற்கும் ஞானத்திற்கும் இடமாக விளங்குகிறது என்றும், 'கண்ணேது' (பா.2) என்ற தொடரால் உயிர் சார்ந்ததன் தன்மையுடையது, இருள்போல் அறியாதது அன்று, ஒளிபோல் முற்றும் அறிவது அன்று, கண்போல் உண்மைப் பொருளை ஏகதேசமாய் அறியும் என்றும் குறிப்பிடுகிறார்.

உயிரைக் 'கண்' என்ற குறிப்புச் சொல்லால் உமாபதி சிவனார் குறிப்பிடுவது சிந்தனைக்குரியதாகும். கண் என்பதற்கு உயிர் என்ற பொருள் எஞ்ஞான்றும் இல்லை. ஆனால் கண் போன்றது உயிர் என்று ஒப்புமைப் பொருளில் தான் கண் உயிரை உணர்த்தும். இரண்டாம் பாடலில் இறைக்குரிய சொல்லாகப் பொருளையும், சக்திக்குரிய சொல்லாகப் போது என்பதையும், ஆணவத்திற்குரிய சொல்லாக இருளையும், ஞானத்திற்குரிய சொல்லாக ஒளியையும் குறிப்பிட்ட உமாபதி சிவனார் உயிருக்கு மட்டும் ஒப்புமைப் பொருளில் 'கண்' என்ற சொல்லைப பயன்படுத்தியிருப்பது ஆய்வுக்குரியதாகும். உயிரானது எதனையும் தானே அறியாது உணர்த்த உணரும். சேனாவரையரும் உயிர் எத்தன்மைத்து எனின் உணர்தல் தன்மைத்து என்பார். எனவே உயிருக்கு உணர்த்தும்போது உவமைகாட்டி உணர்த்த வேண்டுவது இயல் பாகிறது. எனவேதான் திருவள்ளுவரும் முதற்பாடலிலே அகர எழுத்தை எடுத்துக் காட்டு உவமையாகத் தந்து இறைவனை உணர்த்துகிறார். எனவே எதனையும் உவமையால் உணரவேண்டிய உயிரை உமாபதி சிவனார் 'கண்' என்ற ஒப்புமைச் சொல்லால் குறித்திருப்பது மிகப் பொருத்தமே ஆகும்.

முதற்பாடலில் "ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றே இடம்" என்ற தொடரால் ஞானத்திற்கும், ஆணவத்திற்கும் இடம் கொடுத்து ஆன்மா நிற்கிறது என்ற நேரிடைப் பொருளோடு குறிப்புப் பொருளாக விளக்கமான பொருளையும் அறிய முடிகிறது. உயிரின் இலக்கணம் முழுமையும் விரித்துரைப்பதற்கு இத்தொடர் இடம் தருகிறது. உலகில் உள்ள பொருள்கள் ஒளியும், இருளும். ஆனால் இவை இரண்டும் ஒன்றுக்கு ஒன்று முரண்பட்டவை. இரண்டும் ஒருசேர நில்லாது, ஒன்று விஞ்சி நிற்கும் நேரத்தில் மற்றொன்றை அறிய இயலவே இயலாது. ஆனால் உலகப் பொருள்களோ ஒளியைப் பற்றும் பொழுது ஒளியாகவும், இருளைப் பற்றும்போது இருளாகவும் விளங்கும். அதுபோலத்தான் உயிரானது பதியைச் சாரும்போது பதிஞானத்தையும் பாசத்தைச் சாரும்போது பாசப் பிணிப்பையும், பெற்று விளங்கிச் சார்ந்ததன் வண்ணமாக விளங்குகிறது. எனவேதான் உயிர் சதசத்தாகக் கூறப்பெறுகிறது.

முதற்பாடலில் "திரிமலத்தே குளிக்கும் உயிர்" என்ற தொடர் அமைந்து குறிப்புப் பொருள்களை உணரவைக்கிறது. திரிமலம் என்பது ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களைக் குறிக்கும். உயிர் நற்கதியைப் பெறவேண்டுமானால் பிறப்புக்களில் அழுந்தவேண்டும். "எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன் எம்பெருமான்"[10] என்பார் மணிவாசகர். உயிர் பிறப்புகளைப் பெறுவதற்குக் காரணமாக இருப்பன கன்மம், மாயை

இரண்டும் ஆகும். ஆனால் இவை தரமுயல்கின்ற அறிவுவிளக்கத்தை ஆணவமலம் தடுத்து அஞ்ஞானத்தைப் புகுவிக்கிறது. இவ்வாறு இவை மூன்றுக்குள் வேறுபாடு காணப்பெறுகிறது. இந்த வேறுபாடுகளைக் கொண்டுள்ள இம்மூன்றின் பிணிப்புகளையும் ஆன்மா பெற்றுத்தான் ஆகவேண்டும். இதனை உணர்த்தவே 'குளிக்கும்' என்ற சொல்லை ஆசிரியர் அமைத்துள்ளார் எனலாம். குளித்தல் என்ற சொல் மறைத்தல் என்ற பொருளையும், நீராடித் தூய்மை பெறும் பொருளையும் தரும். கதிரோன் மேற்றிசையில் குளித்தான் – இங்கு மறைத்தல் பொருள். இராமன் குளித்து உண்டான். இங்கு நீராடித் தூய்மை பெற்று உண்டான் என்ற பொருள். எனவே குளித்தல் இரு பொருளில் நிற்கிறது. உயிரில் மும்மலங்கள் இரு நிலையில் அதாவது ஆணவம் மறைத்தல் நிலையிலும், கன்மம் மாயை தூய்மை தரு நிலையிலும் உள்ளன என்பதை விளக்கக் குளித்தல் என்ற சொல் பயன்படுத்தப் பெற்றுள்ளது. இவ்வாறு பாடல்களில் உயிர் பற்றிய கருத்துக்கள் இடம்பெற்றுள்ளன.

பாசம் பற்றிய கருத்துக்களைக் குறிப்பிடும்போது "ஒளிக்கும் எனினும் இருள் அடராது" (பா.1) என்ற தொடரால் ஆணவம் ஞானத்தைப் பொருந்தாது என்று குறிப்பிடுவார். இங்கு ஆணவம் இருள் தொடரால் சாத்திர அமைப்பில் குறிக்கப் பெறுகிறது. உமாபதிசிவம் இருள்மல நிலை என்று திருவருட்பயனில் முழுமையாக ஆணவம் பற்றிய கருத்துக்களைத் தந்துள்ளார். அடராது என்பது பொருந்தாது என்ற பொருளில் கையாளப் பெற்றுள்ளது. அதாவது சூரியனுக்கு முன்னே இருள் எவ்வாறு பொருந்தி நிற்காதோ அதுபோல உயிரில் ஞானம் இருந்தாலும் உடன் இருக்கும் ஆணவத்தால் அந்த ஞானத்தைப் பொருந்திப் பயன்பெற இயலாது என்பதாகும்.

இரண்டாம் பாடலில் "இருளாம் வெளிஏது"? என்ற தொடரால் அஞ்ஞானமான சகல நிலை ஏது? கேவல நிலை ஏது? என்ற பொருளில் பாச நிலை விளக்கப் பெறுகிறது. உயிரின் அஞ்ஞான நிலையில் இரு நிலைமைகள் உள்ளன. ஒன்று கேவல நிலை, மற்றொன்று சகலநிலை. இவை பற்றிய விளக்கங்களை உரையாசிரியர்கள் விளக்க – விரிவுரை தர இத்தொடர் அமைந்துள்ளமை குறிப்பிடத் தக்கதாகும். (இவை விரிந்திடின் பெருகும் என்பதால் குறிப்பாகச் சுட்டப் பெறுகிறது.) இவ்வாறு இரு பாடல்களில் பாசம் பற்றிய குறிப்புக்களை உணரவைக்கிறார் உமாபதி சிவனார்.

நான்காம் பாடல் முழுமையும் சைவசமய மூலமந்திரத்தைப் பற்றிய செய்திகளாகும். பாடல்தரும் பொருளைச் சுருக்கமாக உரையாசிரியர்கள்" தந்துள்ளமையை இங்கு நினைவூட்டலாம்.

திருவைந்தெழுத்துக்கள் மூன்று திறப்படும். ஒன்று தூல பஞ்சாக்கரம், இது நமசிவாய என்பது. இரண்டாவது சூக்கும பஞ்சாக்கரம். இது சிவாயநம என்பது. மூன்றாவது அதிசூக்கும பஞ்சாக்கரம், இது சிவயசிவ என்பது. திருவைந்தெழுத்துக்களில் சிகரம் சிவத்தையும், வகரம் அருளையும், யகரம் உயிரையும், நகரம் மறைப்புச்சத்தியையும், வகரம் மலத்தையும் குறிக்கும். நகரத்தை முன் வைத்து ஒதின் இம்மைப்பயனும், சிகரத்தை முன்வைத்து ஒதின் வீட்டின்பமும் கிடைக்கும். ஒருமருங்கு ஞான நடனமும் (சிவ), பிறிதொருமருங்கு ஊன நடனமும் (நம) நிற்ப, இடையில் உயிர்(ய) நிற்கிறது. இவ்வுயிர் ஊன நடனத்தை விடுத்து ஞான நடனத்தில் திளைத்தல் வேண்டும் என்பதே

உட்கருத்தாகும். இதனை இவர் அருளிய திருவருட் பயனாலும் ஏனைய ஞானநூல்களாலும் நன்கறியலாம்.

சிவத்தை உணர்தற்குத் திருவருள் காரணமாயிருத்தலின் அத்திருவருட் சத்தியின் குறியீடாக விளங்கும் வகரத்தைப் பிஞ்செழுத்து என்றார். அதனால் அடையத் தக்கதும் அதனினூஉங்கு அடையத் தக்கதொன்று இல்லாததுமான சிவபரம் பொருளைக் குறிக்கும் குறியீடான சிகரத்தைப் மேலைப் பெருவெழுத்து என்றார். திருவைந்தெழுத்தை இடைவிடாது எண்ணுதலின் பயன் உயிர் திருவருளைப் பெற்றுச் சிவத்தை அடைவதாம். இப்பேற்றினைப் பெறவே கொடிகட்டுவதாக ஆசிரியர் அருளுகின்றார்.
திருவருள் சிவத்தோடு உயிரைக் கட்டுதலால் அதனைப் 'பேசும்எழுத்து' என்றார். தான் எவற்றிலும் தொடக்குண்ணாததும், தன்னின் மேலாக எதுவும் இல்லாததுமான விளங்கும் பரம்பொருள் சிவமாதலின் அதனைப் 'பேசாஎழுத்தென்றார்'.

இவ்வாறு முப்பொருள் பற்றிய நிலையே முத்திநெறிச் சாதனமான திருவைந்தெழுத்தைப் பற்றிய விளக்கத்தை இந்நூலை மிகச் சுருக்கமாகப் பாடியருளிய உமாபதி சிவனார் நம் ஞானாசிரியராகவே விளங்குகிறார்.

சமுதாயத்தில் நால்வர் சென்ற வழிச் செல்லுதல் வேண்டும் என்று கூறமாப் போல் – சைவ சித்தாந்தம் பற்றி அறிய வேண்டுவார் – இந்நான்கு பாடல்கள் வழி முதலில் சென்று அறியலாம். அத்தகைய அளவிற்குக் கொடிக்கனி நமக்குப் பேரருள் தருகிறது.



---

அடிக்குறிப்பு:

1. சைவசமயத் தோற்றமும் வளர்ச்சியும்; 1979;ப.9
2. சிலம்பு, கா.5; வரி:169.
3. மணிமேகலை; காதை, 1–வரி:54
4. அருணாசலம்.மு, தமிழ் இலக்கிய வரலாறு, 13ஆம் நூற்; ப.252.
5. கொடிக்கவி – உண்மைநெறி விளக்கம்; திருவாவடுதுறை ஆதினம்; 1956; ப.65
6. தே.ஆ. சீனிவாசாசாரியர்; கொடிக்கவி குறிப்பு விளக்கக்கட்டுரை; 1956, ப.26
7. சைவசமயத் தோற்றமும் வளர்ச்சியும்; ப.135.
8. பாடல்:75
9. சூத்திரம் 7; பாடல்:6
10. சிவபுராணம் – வரி:31
11. கு. சுந்தரமூர்த்தி உரை; ப.4.

# திருமுறைகளில் வாழ்வியல்

தமிழாகரர் தெ. முருகசாமி,
முதல்வர், இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி – 3

உயிரினங்களுள் மனித உயிர் மேம்பட்டது. அது வாழ்க்கை வாழ்வதற்கே என்ற அடிப்படைக் கோட்பாட்டை உடையது. வாழும் முறையில் பல கொள்கைகள் முரணித் தோன்றினாலும் ஆறறிவு பெற்ற மனிதன் "நான் யார், என்னைச் சுற்றியுள்ள பொருள்கள் யாவை, எனக்கும் அவைகளுக்கும் உள்ள தொடர்பு யாது" எனச் சிந்தித்துத் தெளிந்தபோது மானுட நெறி என்னும் அறிவு நெறிக் கோட்பாடு உருவானது. அதுவே மகத்துவம் உடைய தத்துவம் என்ற பெயர் தாங்கிற்று. அத்தத்துவந்தான் இருசிறகெழுப்ப எழும் உடலது போலச் சாத்திர தோத்திரங்கள் என்னும் இரண்டாய் மலர்ச்சி பெற்றது.

சாத்திர தோத்திரங்களை நாணயத்தின் இருபக்கங்களாகக் கருதலாம். சாத்திரத்திற்குத் தோத்திரம் விளக்கமாகவும் தோத்திரத்திற்குச் சாத்திரம் மூலமாகவும் கருதுவது சமய நெறி. இவற்றுள் தத்துவங்களே மையப் பொருள். இத்தத்துவ மலர்ச்சியில் மலர்ந்ததுதான் மானுடம். மானுடநெறி பூத்துக் குலுங்க தத்துவங்களின் பங்களிப்பு மகத்தானது என்பதை விளக்குவதே இக்கட்டுரையின் கருதுகோளாகும்.

தொடக்க காலத்தில் மானுட உலகில் 'சாவு' ஓர் அச்சப் பொருளாகக் கருதப்பட்டது. ஆனால் அதுவே நிரந்தரமானது என்ற உண்மை அறியப்பட்டதும் காற்றுள்ள போதே தூற்றிக்கொள் என்ற வாழ்வியல் வெளிச்சத்திற்கு வழி கோலியது. "வாழ்வாவது மாயம் இது மண்ணாவது திண்ணம் பாழ்போவது பிறவிக்கடல் பசிநோய் செய்த பறிதான்" என்ற சுந்தரர் கருத்துப்படி வாழ்வானது பிறவிக்கடலும் பசிநோயும் பறித்துக்கொள்ளும் கொள்ளை பொருள்தான் என்றாலும் அப்பரடிகள் கூறும், "வாய்த்தது நந்தமக்கீதோர் பிறவி மதித்திடுமின்" என்ற கருத்து, வாழும் வகைக்கு ஒருபுறம் நம்பிக்கையூட்டியதால் மானுடம் தலைநிமிர்ந்து வாழத் தலைப்பட்டது.

அடுத்து, வாழ்வியலுக்கு அடிப்படையாக உள்ள செல்வமும் ஓரிடத்தில் நிலைத்து நிற்காத காரணத்தால் அதைப்பெற்றிழந்த அனுபவங்கள் நிலையாமையின் நித்தியத்தை உணர்த்தின. வாழ்வியலின் ஒட்டுமொத்த அறைகூவல்களாக இருந்த இளமை, யாக்கை, செல்வம் போன்றவற்றை அர்த்தமுள்ளதாக்கி அவற்றை நேசிக்கும் பக்குவத்தின் மூலம் நீண்ட பெரிய உண்மையைக் கண்டு கொண்டது மனித இனம். அதனால்,

"மானுடப் பிறவி தானும் வகுத்தது மன வாக்குக்காயம்
ஆனிடத் தைந்தும் ஆடும் அரன்பணிக் காக அன்றோ"

என்ற உண்மையின் வெளிப்பாட்டைச் சிவஞான சித்தியார் கூற அதனை வழி மொழிவது போலத் திருமுறைகள் அனைத்தும் உயிர் உய்தியடைய வல்ல தரத்தைத் தோத்திரங்களாக வெளிப்படுத்தின.

சென்றடையாத் திருவான செம்பொருட்டுணிவுடைய திருமுறைகள் பன்னிரண்டு. அவற்றுள் சிவனை முன்னிலைப்படுத்தியவை ஒன்பது. பத்தாவதான திருமந்திரம் சாத்திரத் தோத்திரக் கலவையானது. பதினோராம் திருமுறையின் செம்பாகம் சிவனையும் சிவனொடு ஒட்டிய தெய்வத்தையும் உணர்த்தி, எஞ்சிய பாகம் மானுடத்தைத் தெய்வமாக முன்னிலைப்படுத்தும் நூல்களைக் கொண்டு திகழ்கின்றது. பன்னிரண்டாம் திருமுறையோ, மானுடத்தை முன்னிலைப்படுத்தி அதைத் தெய்வீகமாக மாற்றும் முழுரசவாதத் தன்மைமிக்கதாக அமைந்துள்ளது.

இப்படியாகத் தெய்வீகம் என்ற அடிப்படையில் திருமுறைகளில் ஒரு பொதுமை நெறி காணப்பட்டாலும் அவை இருவேறு நிலைகளில் வாழ்வியலின் உண்மைகளை விளக்குகின்றன. ஒன்று ஆன்மாவின் வாழ்வியல், மற்றொன்று மானுடச்சட்டை தாங்கிய ஆன்மாவின் மானுட வாழ்வியல்.

முதல் மூன்று திருமுறைகள் ஞானசம்பந்தருடையவை. முதல் திருமுறை கடவுளை "இவன்" என அண்மைச் சுட்டாகச் சுட்டி உணர்த்துகிறது. அவன் அவள் அது எனும் அவை மூன்றும் கலந்த கடவுள் தத்துவப் பிரமாணவியல் விளக்கத்தின் எளிமையை, ஆன்மாவுக்கு இவன் எனச்சுட்டி உணர்த்தப்படுவதன் மூலம் ஆண்டவன் வாழ்வியலுக்கு அந்நியப்பட்டவன் அல்லன், நம் அருகாமையிலே நின்று அருள்பாலிக்க வல்லவன் என்ற உண்மை வெளிப்படுகிறது.

ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்சோதிக்க வேண்டா நிலையைப் "பெம்மான் இவன்" எனக் கண்டுகொள்வதில் ஆன்மாவின் வாழ்க்கைப் பயணம் தொடங்குகிறது என ஆன்மாவுக்கு அறிவுறுத்துகிறது முதல் திருமுறை. மேலும் அவன் இவன் எனச் சேய்மையிலிருந்து அண்மைக்கு வாராமல் இவன் என அண்மையிலிருக்கும் அடையாளத்தைச் சுட்டுவதிலிருந்தே ஆன்மாவைத் தகுதியுடைய இடத்திற்குத் தக்கவாறு செல்லப் பயணப்படுத்துகிறார் திருஞானசம்பந்தர் எனத்தெரிகிறது. இதனால் ஈராண்டுக் குழந்தையாயிருந்த மெய்கண்டார் அருளிய சிவஞான போதமும் மூன்றாண்டுக் குழந்தையாயிருந்த திருஞான சம்பந்தர் அருளிய திருநெறியதமிழும் உய்திடைய வேண்டிய ஆன்மாவின் பயண ஏற்பாட்டைத் தொடங்கித்துணைபுரிய வல்ல சாத்திர தோத்திரங்கள் என்ற உண்மையும் வெளிப்படுகின்றன.

அனுமான அளவைகளால் சோதிக்க வேண்டாத ஆண்டவனை "இவன்" தான் என அடையாளம் கண்டு கொண்ட ஆன்மா சற்று மறுகுகிறது. உய்தியடைய வந்த ஆன்மாவிற்கு அடையாளம் காட்டப்பட்ட ஆண்டவன் "தனியானவன் இல்லையே அவன் தோடுடைய செவியனாக இருக்கின்றானே, குடும்பத் தொடர்புடைய இவன் வழிகாட்டினால் இல்லறத் தொல்லையில் தடுமாறி மேலும் மேலும் கன்மத்தை அல்லவா சேர்த்துக்கொள்ள இயலும்" என்றெல்லாம் ஆன்மா ஐயப்படுகிறது.

"வில்லடைந்த புருவ நல்லாள் மேனியில் வைத்தல் என்னை
கொல்லை முல்லை நகையினார் கூறது வன்றி யும்போய்
அல்லல் வாழ்க்கைப் பலிகொண் டுண்ணும் ஆதர வென்னைகொலாம்"

எனச் திருச்சிரபுரமாம் சீர்காழியிலும், "நேரிழை யானொருபால் கூறடைந்த தென்னே" எனச் சேய்ஞலூரிலும் என்னே என்னே என அலமந்த ஆன்மாவை அமைதிப்படுத்த முனையும் சம்பந்தர்

"என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே யிருங்கடல் வையத்து"

என ஆறுதல் கூறி ஆண்டவன் மங்கையொரு பாகனாயினும் அவன்,

"மெய்த் தொழில்புரி தொண்டரோ டினிதிருந் தமையாலே
விண்டொ ழிந்தன நம்முடை வல்வினை"

என்பதால் அவனை வழிபடல் கடனெனத் திருவலஞ்சுழியில் கூறும் முகத்தான் 2ஆம் திருமுறை தொடங்குகிறது.

மீண்டும் ஆன்மா பேதலிக்கிறது. இப்பூவுலகை நீத்து விரைவில் விடுதலை பெறத் துடிக்கிறது. இந்நிலையில் "வீடும் ஞானமும் வேண்டுதிரேல்" என ஆன்மாவை விளித்து "விரதங்களால் வாடிச் செந்தமிழ் தோத்திரம் பாடும்" எனக்கட்டளை பிறப்பித்துப் போக்குவரவுடைய ஆன்மாவின் பயணத்தை ஊக்குவித்துப் பிறவா நிலையாகிய ஒருவழிப்பாதையைக் காட்டுகிறது 2ஆம் திருமுறை.

'இவன்' என அண்மையில் சுட்டி உணரப்பட்ட ஆண்டவனை விரதங்களாலன்றி எளிமையாக அடைய முடியாதென உணர்ந்து கொண்ட ஆன்மா "என்று நீ அன்று நான்" என்றபடி ஆன்மாவிற்குத் தன்னைப் பற்றிய சுய சிந்தனை தோன்றுகிறது. ஆண்டவன் தனியன் அல்லன், அவன் பெண்ணின் நல்லாளுடன் இருந்தே அருளவல்லவன் என்பதால் அவனைப் போலவே ஆன்மாவும் மண்ணில் நல்லவண்ணம் வாழ உறுதி அளிக்கிறது, 3ஆந் திருமுறை. அதனால் தான் ஒருவராய் இருந்து பாடி உய்தியடைவதைப் போல் பலரும் கூடி வழிபடும் கூட்டு வழிபாட்டை வற்புறுத்தும் திருக்கண்டியூர் வீரட்ட வினாவுரைப் பதிகத்தில் "ஒருத்தராகிலும் பலர்களாகிலும் உரை செய்வார் உயர்ந்தார்களே" என்று குடும்பஇயல்பைப் "பலர்" என்ற சொல்லுக்குள் அடக்கிக் காட்டினார் ஞானசம்பந்தர். இதனால் ஐம்புல நுகர்ச்சிக்குரிய பெண்மையோடு ஆண்டவனை உணர்ந்து ஒடுங்க வேண்டியதன் இயல்பை ஆன்ம வாழ்வியலாக உணர்த்துகிறது, 3ஆம் திருமுறை எனலாம்.

இப்படியெல்லாம் ஆன்மாவிற்கு ஆண்டவனை அடையாளப்படுத்தினாலும் பக்குவப்படாத ஆன்மா "அல்லல் தீர்த்தெனை யஞ்சல் எனுங்கொலோ", "இளைக்கும் போதெனை யேன்று கொளுங்கொலோ" என்றெல்லாம் அலமருகிறது. இதற்குக் காரணம் ஆன்மா சகசமலத்தினால் அங்ஙனம் மயங்கல் இயல்பாதலின் பேதலித்த ஆன்மாவைப்பார்த்து "ஆண்டவனைப் பலனை எதிர்பாராமல் அனுபவிக்கக் கற்றுக்கொள்" என்று அப்பர் பெருமான் அடுத்த மூன்று திருமுறைகளால் ஆன்மாவின் வாழ்வியலை நெறிப்படுத்துகிறார்.

'தொண்டலால் துணையும் இல்லை' என்றும் 'தொண்டர் அகமலால் கோயிலில்லை' என்றும் ஆன்மாவிற்குத் தொண்டால் ஆண்டவனை அடையாளப்படுத்துகிறது நான்காந்திருமுறை.

தொண்டே தெய்வம் என உணாத்தியதும் தொண்டென்றால் என்ன என்பதை உணர்த்த முனைகிறது ஐந்தாந்திருமுறை. காமியம் செய்து காலத்தைக் கழிக்காதே எனக்கூறிய அப்பரடிகள் அந்த ஆன்மா இனிச்செய்ய வேண்டியதென்ன என உணர்த்த நினைக்குங்கால் தம்மையே முன்மாதிரியாக வைத்துக்காட்டுவார்போல "என்கடன் பணி செய்து கிடப்பதே" எனத்தன்னை இழக்கும் சுகத்தைத் தொண்டாக அறிமுகம் செய்கிறார்.

என்னை ஏதும் அறிந்திலன் எம்பிரான்
தன்னை நானுமுன் ஏதும் அறிந்திலேன்
என்னைத் தன்னடி யானென் றறிதலும்
தன்னை நானும் பிரானென் றறிந்தேனே.

என்ற அப்பரது பாடல் தொண்டால் தன்னை ஆண்டவன் அறிந்து கொண்ட குறிப்பைத் தருகிறது. "என்னை அவனும் அவனைநானும் அறிந்துகொள்ளாதவர்களாகவே இருந்தோம். ஆனால் அவன்தான் என்னை முதலில் அறிந்து கொண்டான்" எனக்கூறும் அப்பரடிகளின் கூற்றில் தொண்டின் முழுமை உணர்த்தப்படுகிறது. இதன் மூலமாகக் காந்தத்தைக் கண்ட இரும்பாகிறது ஆன்மா என்ற உண்மையை ஐந்தாந்திருமுறை விளக்கிற்று.

அடுத்து, தொடர்ந்த தொண்டால் ஆன்மா இளைத்துவிடாதபடி "தொண்டுபடு தொண்டர் துயர்தீர்ப்பான் தான்காண்" என்று ஆறாந்திருமுறை ஆன்மாவின் தொண்டை அங்கீகரிக்கும் வாழ்வியலை ஊக்கப்படுத்துகிறது. மேலும் சித்தாயும் அசத்தாயும் உள்ள சிவசத்தான ஆண்டவன் ஆன்மாவின் தொண்டைக்கண்டுகொள்வானோ என்ற ஐயம் ஏற்படாதவாறாக அப்பரடிகள் திருவிடைமருதூரில் "பேணுந் தொண்டர் இச்சை மிக அறிவர்" என்று ஆன்மாவுக்குத் தெளிவுபடுத்துகிறார்.

இவ்வாறாக ஆன்மா தொண்டு முதலியவற்றால் எப்போதும் இயங்கிக் கொண்டே இருக்க வேண்டும் என அறிவுறுத்திய ஆறாந்திருமுறையை அடுத்துள்ள ஏழாந்திருமுறை ஆன்மாவின் அந்த இயக்கம் சோர்வுபடாமல் இருக்க வேண்டும் எனத் தொடர்ந்து வற்புறுத்துவதாக அமைகிறது.

சோர்வுபடும் ஆன்மா சோபிக்காது. ஆனால் மலவாசனையுடைய ஆன்மாவுக்கு சோர்வும் சோம்பலும் இயல்பானவை. எப்படியோ ஒருவாறு அந்தத் தூக்கத்திலிருந்து விழித்தெழுந்து தொண்டு செய்த ஊதியத்தைப் பெற்றுவிடுமானாலும் மீண்டும் பழக்கவாசனையில் ஆணவம் தலை தூக்கிய எக்களிப்பில் நிலை தடுமாறுவது இயல்பு. ஏனெனில் பாரிசேட அளவையான் ஆன்மா சதசத்தானது என்பதால் பழக்க வாசனையைப் பற்றிக் கொள்வது இயல்பேயாகும்.

பழக்கவாசனையால் ஆன்மாவின் பயணம் உய்தியடைய முடியாதபடி தாமதம் ஏற்பட்டுவிடும் என்பதால் பழக்கம் தவிரப்பழகும் பயிற்சியை ஆன்மாவுக்கு ஊட்ட முனைகிறது சுந்தரரது 7ஆம் திருமுறை.

"நற்றவா உனை நான்மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே" என்ற 7ஆம் திருமுறையின் தொடர்தான் சுந்தரரின் வாழ்க்கை யோடொட்டி குறிப்பை ஆன்மாவுக்கு

அறிவுறுத்துகிறது. இத்தொடரில் நான் மறக்கினும் என்பதும் சொல்லும் நா என்பதும் சிந்தனைக்குரியவை. சுந்தரர் இருமாதரொடு வாழ்ந்ததால் ஆண்டவனை மறப்பதற்குரிய சூழல் ஏற்பட வாய்ப்புளதாயினும் பழக்கம் தவிரப் பழகிய பழக்கத்தால் ஒன்றைப் பற்ற முடியும் என்ற உண்மையை நாவைக் கொண்டு உணர்த்திக் காட்டுகிறார் சுந்தரர். எனவே ஆன்மாவின் இடையறாப் பயணம் 7ஆம் திருமுறையால் வேகப்படுத்தப்படுகிறது என்று கூறலாம்.

சுந்தரர் சுட்டிய நமச்சிவாய மந்திரமே ஆன்மா பெறும் ஊதியம் என உறுதிப்படுத்துகிறது எட்டாந்திருமுறையாகிய திருவாசகம். பழக்கம் தவிரப் பழகத் தனி ஆன்மாவால் இயலாதாகையால் அவ்வான்மாவை வழிநடத்த ஒருவர் துணை தேவைப்படுகிறது. அத்துணையே குரு. குரு உபதேசித்த அம்மந்திரமே ஆன்மாவுக்குப் பலத்தைத்தரும் என்பது மாணிக்கவாசகரின் 8ஆம் திருமுறைக் குறிப்பு.

எட்டாந்திருமுறையின் ஒரு நூலாகிய திருவாசகம் நமச்சிவாய எனத் தொடங்க அதன் மற்றொரு நூலாகிய திருக்கோவையார் ஊதியமே என முடிகிறது. இச்சொற்றொடர் அமைப்பைச் சேர்த்து உணர்ந்தால் "நமச்சிவாய ஊதியம்" என்ற தொடர் அமையும். அதை ஆன்மா பெறும் பலனை அறிவுறுத்தும் குறிப்பாக உணர வேண்டும். எனவே அலமரும் ஆன்மாவின் பயணத்தில் குருவாகி வந்த ஒருவர் வழிகாட்ட நடந்த ஆன்மா நமச்சிவாய மந்திரத்தைப் புகலிடமாகப் பெற்றது எனலாம்.

இம்மந்திரத்தால் பாசங்கழன்ற ஆன்மாவிற்கு அதனுள் ஒன்றாய்வேறாய் இருக்கும் உண்மையை உணர்த்த முனைகிறான் ஆண்டவன். அதாவது ஆண்டவனைத் தேடிய ஆன்மா கொஞ்சம் கொஞ்சமாகப் பக்குவப்பட்ட நிலையில், அவ்வான்மாவைத் தேட முயற்சிக்கும் ஆண்டவனின் முதற்படியை 9ஆம் திருமுறை ஆன்மாவுக்குக் கண்டுகாட்டுகிறது.

கண் ஒன்றைக் காணுங்கால் உயிரானது கண்ணுடன் கலந்து நின்று அவ்வுருவைக் கண்ணுக்குக் காட்டித் தானும் காணுமாறுபோல இறைவனும் உயிரோடு பிரிப்பின்றிக் கலந்து நின்று பொருளை உயிருக்கு அறிவித்துத் தானும் அவ்வுயிரோடு ஒருங்கிருந்து அறிகின்றான் என்பதால் "தொண்டனேன் நினையுமா நினையுமோ நினையே, விரும்புமா விரும்பே" என ஆன்மாவை ஆண்டவனிடம் முறையிடத் தூண்டுகிறது 9ஆம் திருமுறை.

இப்படியாக ஞானக்கண்ணால் ஆண்டவனை நாடிய ஆன்மா அயரா அன்பை ஆரத்துய்க்குங்கால் செம்பில்பட்ட களிம்பு போகாதவாறுபோல ஆசைவலைப்பட்டு அழியும்போது "ஈசனோடாயினும் ஆசை அறுமின்" என எச்சரிக்கிறது பத்தாந் திருமுறையாகிய திருமந்திரம்.

அது உலகின் விரிந்துபரந்த பல்வேறு வாழ்வியலை ஆன்மாவிற்குக் கண்டு காட்டும் களமாக உள்ளது. மேலும் "முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள் அகத்திற் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்" என அகண்டவெளிப்பார்வையைச் சுருக்கும் வித்தையைப் போதிக்கும் வித்தகத்தையுடையது. இதனால் ஆண்டவன் தன்னுள் இருக்கும் இருப்பை உணர்ந்த ஆன்மா, ஆசையை விட விட மலமாயையொடு கூடிய வல்வினைகள் இயல்பாகக் கழலப் பேரானந்தத்தைத் துய்க்கத்தலைப்படும் என்ற உண்மை வெளிப்படுகிறது.

இவ்வாறாக ஒருத்தி தன்மணாளனோடாடிய சொல்லொணா சுக்த்தை அனுபவிக்குமாறுபோல அக ஆனந்தத்தில் ஆன்மா அறிவிக்க அறிந்த உணர்ச்சியால் மூத்த இளைய பிள்ளைகளோடு அம்மையப்பராய் நின்றிலங்கி அருள்பாலிக்கும் ஆண்டவனும் அடியாரும் வேறல்லர் என்ற உண்மையைப் புரிந்துகொள்ளும் தரத்தைப் பதினோராந்திருமுறை விளக்குகிறது.

பதினோராம் திருமுறையின் மூலம் ஆண்டவனும் அடியாரும் சமம் எனக் கண்டுகொண்ட ஆன்மா, ஆண்டவன் அடியார் கூட்டத்துள் ஒருவனாக இருப்பதைக் காட்டிலும் அடியார்க்கு அடியானாக இருக்கும் தன்மையுடையவன் என்பதைப் பன்னிரண்டாம் திருமுறைமூலம் உணர்ந்துகொண்டதால்,

மாலற நேயமும் மலிந்தவர் வேடமும்
ஆலயம் தானும் அரனெனத் தொழுமே"

என்றபடி அடியாரை ஆண்டவனாக வழிபடத் துணிகிறது. இதனால் "இவன்" என ஆண்டவனை ஆன்மாவுக்கு அண்மையில் உணர்த்திய முதல் திருமுறைக்குப் பொருந்த" பன்னிரண்டாந்திருமுறையும் இப்பூவுலக அடியாரையே ஆண்டவனாக வழிபடத் தூண்டியதென்பது அலமந்த ஆன்மாவின் தற்போதத்தை விலக்கிச் சிவமாம் தன்மையை ஆக்கிக் காட்டிய ஆன்ம வாழ்வியலின் அற்புத விளக்கம் அன்றோ!

இப்படியாக ஆன்மா தான்மேற்கொண்ட ஆன்ம பயணத்தில் ஆண்டவனைக் கண்டுகொண்ட சிறப்பைப் படிப்படியாகத் தத்துவ விசாரணைப்படி நுட்பமாக உணர்த்திய திருமுறைகள் ஆன்மாவின் அடுத்த வாழ்வியலாக அது மானுடச் சட்டை தாங்கி வருங்கால் அதை எங்ஙனம் ஈடேற்றுகின்றன என்பதை இனிக்காண்போமாக!

பெண்ணின் நல்லாளொடும் பெருந்தகையிருக்கும் இருப்பதைத் திருமுறைகள் உணர்த்துகின்றன. மூலம் எப்படியோ அப்படியே நகலும் இருக்குமாப்போல ஆன்மாவும் மானுடச் சட்டைதாங்கி ஆண் பெண் உறவாகி வாழத்தலைப்பட்டது. தனிமனித வாழ்வியலின் ஆண் பெண் கூட்டமே சமூக அமைப்பாகி அச்சமூக அமைப்பே ஆற்றலுடைய நிலையில் பல்வேறு வாழ்வியலை உணர்த்தத் தலைப்படும்போது நன்மை தீமை என்ற பாகுபாடுகள் தோன்றும். அவற்றுள் நல்லது வாழ, தீயது அழியும். இதனால் நல்லதை வாழவைப்பதில் எடுத்துக்கொள்ளும் மனித முயற்சி மதிக்கத் தகுந்ததாகிறது. ஆனால் நல்லதை வாழவைப்பதில் எடுத்துக்கொள்ளும் இயல்பான அக்கறையைவிட அல்லதை வீழ்த்த எடுத்துக்கொள்ளும் முயற்சியே மறைமுகமாக நல்லதை வளரச் செய்வதற்குச் சமம் என்பதால் "நல்லது செய்யாவிட்டாலும் அல்லது செய்யாதிருப்பதே நல்லது" என்ற கோட்பாட்டைச் சம்பந்தரின் திருமுறை மானுட வாழ்வியலாக எடுத்துக்காட்டுகிறது. இக்கருத்து வாழ்க அந்தணர் என்ற திருப்பதிகத்தில் வேந்தனும் ஒங்குக என்று வாழ்த்திய பிறகு "ஆழ்க தீயதெல்லாம்" எனக் கூறுவதால் நன்கு விளங்குகின்றது.

கூடிவாழும் சமூக அமைப்பில் தனிமனிதனால் தீமையை முழுதுமாக ஒழிக்க முடியாது. சமூகத்தின் தலைவனால்தான் அதை முற்றிலுமாக ஒழிக்கமுடியும் என்ற

அடிப்படையில் வேந்தனை வாழ்த்தியபின் தீயதெல்லாம் ஆழ்க என்றது மிகமிகப் பராட்டுக்குரிய ஒன்றாகும்.

தானாக முளைக்கும் தீமை தானாக ஒழியாது. அது ஒழிக்க ஒழியும் இயல்புடையது. எனவே அதனை ஒழிக்க ஒருவர் தேவை என்பதால் முதலில் வேந்தன் முன்னிலைப்படுத்தப்பட்டான். இதனால் நல்லது வளராவிட்டாலும் தீயது வளர்ந்துவிடக் கூடாது என்பதும், ஒருபொருட்டு வளரநேர்ந்துவிட்டால் அதைவளரவிடாமல் ஒழிக்க வேண்டும் என்பதும் விளங்க மன்னனும் ஓங்குக ஆழ்க தீயதெல்லாம் என்ற அடுத்தடுத்த தொடரை வாழ்வியல் உண்மையாக உணர்த்தினார் ஞானசம்பந்தர்.

அரசவாழ்வென்பது சிலர்க்கு ஏகபோக சுகத்தைத் தரும் கற்பகத் தருவாக உள்ளது. அதில் சுவைகண்டார் அடுத்த சுவை காணத்தலைப்படார் என்னும் அளவிற்கு அதிகாரம், எடுபிடிகள், படை, பட்டாளம் முதலியன புடைசூழ அரியணையில்வீற்றிருக்கும் சுகம் தனி அலாதியானதுதான். ஆனால் அப்படிப்பட்ட சுவையை அளவோடு அனுபவிக்கமாட்டாதார்க்குக் கூறுவார்போல, "கனியினும் கட்டிபட்ட கரும்பினும்" என்ற பாடலில் "தனிமுடி கவித்தாளும் அரசினும் இனியன் ஆண்டவன்" என அரசியலின் வாழ்வியலை அழியா ஆன்மீகத்தோடு உணர்த்துகிறார் அப்பரடிகள். பூவுலகப் பொருளாட்சியைவிட அவ்வுலக அருளாட்சியே சிறந்தது என மானுடத்தை அறைகூவி அழைக்கிறார் அப்பரடிகள்.

அதிகாரவர்க்கத்தின் ஆர்ப்பரிப்பும் அதட்டல் மிரட்டல் போன்ற முனைப்புகளும் அரச வாழ்வில் தோன்றுவது இயல்பு. ஆனால் அவற்றை எல்லை மீறாதபடி நிதானப்படுத்தி ஓர் ஒழுங்குக்குக் கொண்டு வருவதில்தான் அரசியல் வாழ்வின் சதுரப்பாடு அடங்கிக் கிடக்கிறது என மனுநீதிச் சோழனின் வரலாற்றால் பெரியபுராணம் உணர்த்துகிறது.

அரசாட்சி என்பது நெருப்பாற்றின் மேல் போடப்பட்ட மயிர்ப் பாலத்தில் நடப்பது போன்றது என்று பேராசிரியர் சுந்தரம்பிள்ளை கூறுவார். இந்த அடிப்படையில்,

மாநிலங்கா வலனாவான் மன்னுயிர்காக் குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்
ஆனபயம் ஐந்தும்தீர்த் தறங்காப்பான்,

என்றபடி அரசியல் விழப்புணர்ச்சியின் புதுமையை மனுநீதிச் சோழனின் வரலாறு படைக்கிறது.

தேர்க்காலில்பட்டுக் கன்று இறந்ததால் ஏற்பட்ட பரபரப்பான அரசியல் சூழலில் மன்னன் நிதானமாகச் சிந்திக்கின்றான். அமைச்சர்கள் மன்னன் மீதுள்ள பரிவால் சிலவற்றைக் கூறினார்கள். :அவர்கள் கூறியது அரசநீதியைக் காக்குமாறில்லை என்பது "அறநெறியில் செவ்விய உண்மைத்திறம் நீர் சிந்தை செயா துரைக்கின்றீர்" என்று மன்னன் அமைச்சர்களைக் கடிந்து கூறுவதிலிருந்து தெரிகிறது. நீதி சொன்ன அமைச்சர்கள்,

அறிகொன் றறியா னெனினும் உறுதி
உழையிருந்தான் கூறல் கடன் – (குறள்)

என்பதறியாது மன்னன் மீதுள்ள அன்பாலோ அச்சத்தாலோ நீதியின் தடத்தை மாற்ற முனைந்துள்ளார்கள். ஆனால் மன்னனோ அமைச்சர்களுக்கு அரசியல் விவேகம் ஊட்டும் வகையில்,

"அன்னியன் ஒர் உயிர்கொன்றால் அவனைக்கொல் வேனானால்
தொன்மனுநூல் தொடைமனுவால் துடைப்புண்ட தெனும் வார்த்தை
மன்னுலகில் பெறமொழிந்தீர்"

எனக் கூறிப் பிறிதின் நோய் தன்நோய்போல் போற்றத் துணிந்து தன் ஒரே மகனை இழக்கத் துணிகிறான். "தருமம் தன் வழிச் செல்கை கடன்" என்று அரசியலுக்குப் புது விளக்கத்தைத் தருகிறான்.

ஈண்டுத் தருமம் தன் வழிச் செல்கை என்ற தொடர் அரசியலின் புதிய பரிமாணத்தைக் காட்டுகிறது. தருமத்தின் வழியில் செல்லுதல் என்ற பொருள் விளக்கம் இயல்பானது. ஆனால் தருமம் தன்வழிச் செல்கை எனத் தருமமானது அரசனின் பின் செல்லும் அளவிற்கு மன்னனின் நீதி உயர்ந்துவிட்டது என்ற புது விளக்கத்தால் "தன்னை இழக்கத் துணிந்த தியாகமே அரசியல் வாழ்வு" என்பதை மகனை இழக்கத் துணிந்த வரலாற்றால் உணர முடிகிறது. வரம்பு மீறிய சொத்துக்களைச் சேர்த்துக்கொண்டு அரசியல் துஷ்பிரயோகங்களால் அடாவடித்தனம் புரியும் இன்றைய போலியான அரசியல் வாழ்விற்கு மனுநீதியின் அரசியல் வாழ்வு மலைக்கும் மடுவுக்குமான இடைவெளியைப் பளிச்சென உணர்த்துகின்றது.

சமூகத் தலைமைக்குரிய வாழ்வியல் ஒருபுறமிருக்க மனசாட்சி கடந்த தனிமனித ஒழுக்கங்கள் மீறப்படும்போது வாழ்க்கை பாழாகிவிடும் என்பதையும் திருமுறைகள் சுட்டத் தவறவில்லை. எனவேதான் தனிமனித ஒழுக்கம் உயிரினும் மேம்பட்டதாகக் கருதப்பட்டது.

சங்கிலியாரைத் திருவொற்றியூரில் மணந்துகொண்ட சுந்தரர் பிரியேன் எனக் கூறிய வாக்குறுதி மீறியதால் கண்களை இழக்கின்றார்.

"மூன்று கண்ணுடை யாய்அடி யேன்கண்
கொள்வ தேகணக் குவழக் காகில்
ஊன்று கோல்எனக் காவதொன் றருள்வாய்"

எனத் துன்பந்தாளாத உணர்வை வெளிப்படுத்துகிறார். வாக்குறுதியை மீறும் மானுட வாழ்வியலுக்குச் சுந்தரர் மொழி ஓர் அபாய அறிவிப்பன்றோ!

இழந்தால் பெறமுடியாதது காலம். அதைப் பொன்போன்றது என்பர். ஆனால் அது பொன்னைவிட உயர்ந்தது என்கிறது திருமுறை.

"கள்ளனேன் கள்ளத் தொண்டாய்
காலத்தைக் கழித்துப் போக்கி"

என்றும், "களவு படாததொர் காலங் காண்பான் கடைக்கணிக் கின்றேன்." என்றும் அப்பரடிகள் காலம் கொள்ளை போவதை எண்ணி ஏங்குகிறார்.

அதிலும்

"பாலனாய்த் கழிந்த நாளும் பனிமலர்க் கோதை மார்தம்
மேலனாய்க் கழிந்த நாளும் மெலிவொடு மூப்பு வந்து
கோலனாய்த் கழிந்த நாளும் குறிக்கோளி லாது கெட்டேன்"

எனக் குறிக்கோளில்லாமல் காலத்தைப் பாழாக்கியதற்குப் பெரிதும் இரங்குகிறார். எனவே காலத் தொடுபட்ட தனிமனித வாழ்வியலைத் திருமுறைகள் உயர்வுடையதாகக் கருதத் தூண்டுகின்றன.

இன்றைய உலகம் பொருளியல் சார்ந்த உலகம். பேராசைகள் மலிந்த போலித் தனங்கள் மதிப்படையும் காலம் இது. இதனால் முறையல்லாத செயல்பாடுகள் "ஊழல்" என்ற பெயரில் உலாவருகின்றன. இந்த ஊழலின் ஊற்றுக்கண்ணை அழிக்கவல்ல தலைமை, தேவை என்பதைத் திருமுறை உணர்த்துகிறது.

அப்பரடிகளை அழைத்துவர ஆணையிடும் பல்லவன் "இவர் சொன்ன தீயோனைச் செறுவதற்குப் பொருள் கொண்டுவிடாதென்பால் கொடுவாரும்" எனக் கூறி ஆட்களை ஏவுகிறான். இக் கூற்றில் ஊழல் செய்வோரால் காரியம் கெட்டுவிடும் என்ற செய்தி நன்கு பளிச்சிடுகிறது. இக்கூற்றை மன்னர் கூறியதாகக் கூறியவரும் ஓர் அமைச்சர் என்பதை உணரும்போது அடிமுடிதேடுதலாக வளரும் இன்றைய ஊழலால் பாழ்பட்டுப்போன அரசியல் வாழ்வுக்கு ஏங்காமலிருக்க ஒல்லுமோ?

இம்மட்டோடன்றி அரசியல் போலிகளை, பொய்மையாளர்களைக் கால்வருடிப் புகழும் பொல்லாங்கையும் திருமுறைகள் சாடாமலில்லை. "பொய்ம்மையாளரைப் பாடாதே" எனச் சுந்தரர் மானுடவாழ்வியலின் போலிகளை அடையாளம் காட்டி எச்சரிக்கின்றார்.

எல்லாவற்றிற்கும் மேலாக மானுட வாழ்வென்பது கூடிவாழும் கூட்டாட்சித் தத்துவத்தைச் சிறப்பாகக் கொண்டது என்பதும் இச்சிறப்பிற்கு ஒருவர்க்கொருவர் பழகிக்கொள்ளும் பழகும் பாங்கியலே அடிப்படையானது என்பதும் திருமுறையால் உணர்த்தப்படும் வாழ்வியல் கருத்தாகும்.

ஒருவர்க்கொருவர் கொள்ளும் உறவு பேச்சால் அமைவது. அப்பேச்சு இனிமையுடையதாக இருக்கவேண்டும். இனிமைகலந்த பேச்சு எல்லோரையும் மயக்கவல்லது. இதுவே பழகும் பாங்கியலின் அடித்தளமாக உள்ளதை உணர்ந்த திருமூலர் "யாவர்க்குமாம் பிறர்க்கு இன்னுரை தானே" எனக் கூறுகிறார். எனவே உறவுக்குரிய தொடக்கம் இனிமையுடையதாக இருந்தால் வாழ்வு மங்கலமுடையதாக அமையும் என்ற உண்மை, திருமுறையின் பங்களிப்பாக மானுடவாழ்வியல் பெற்ற பரிசன்றோ!

உலகில் உள்ள ஒவ்வொரு மொழிக்கும் ஒருசிறப்பு உண்டு. ஆங்கிலம் அகில உலகமொழி, பிரஞ்சு நீதிமொழி, கிரேக்கம் காதல்மொழி. தமிழ் தெய்வ மொழி. மொழியைத் தெய்வமாக, தெய்வத்தை மொழியாகப் பார்த்த சிறப்பு தமிழ் மொழிக்கு மட்டுமே உண்டு. அதனால்தான் தமிழ் தெய்வத் தமிழ் எனப்பட்டது.

அத்தெய்வத் தமிழ் பேசுவோரும் நல்ல நூல்களின் வழிகாட்டுதலால் தெய்வத்தன்மையை அடைவர் என்பது திருமுறைகளால் உணரப்படும் அகங்கை நெல்லி உண்மையாகும்.

ஊனடைந்த உடம்பின் ஆன்மாவுக்கு ஊதியம் தரவல்லது திருவருட் கலப்பமைந்த திருமுறைகளே என்பதால் முறையாக உள்ளதை முறை என்றல்போல முறைப்படுத்தவல்லதையும் (நூல்களையும்) முறை என்றல் பொருந்தும் என்ற பெயர்ப்பொருத்தத்தில் திருமுறைகளில் படிந்த மானுட வாழ்வியலைச் சிந்திப்பது ஆயுந்தொறும் இன்பத்திற்குரியது.

– வாழ்க உலகெலாம்! –

# திருமுறைகளில் வழிபாட்டியல்

பேராசிரியர் மதுரகவி தா.ம. வெள்ளைவாரணம்
பொறையாறு

**1. வழிபாடுவிளக்கம்:**

கடவுள் நம்பிக்கை உடையோர் கடவுளை ஆண்டானகவும் தம்மை அடிமை யாகவும் கருதி, அக்கடவுளுக்குத் தமது நன்றியைப் புலப்படுத்தும் முகமாகச் செய்யும் தொழுகையே வழிபாடாகும். திருமுறைப் பாடல்கள் வழிபாட்டைப் பூசை, பூசனை, அருச்சனை, வழிபாடு என்ற சொற்களால் குறிக்கின்றன.

"பூசை செய்து அடியார் நின்று புகழ்ந்தேத்த" (2–64–8) எனவும்
"மலைமகள் பூசை மகிழ்ந்தருளும் சிட்டர்" (4–96–7) எனவும்
"அன்பரிட் டுகந்து ஆர்மலர் பூசை இச்சிக்கும் இறைவர்"
(7–18–8) எனவும்

வரும் திருமுறைத் தொடர்களில் பூசை என்ற சொல் இடம் பெற்றிருப்பது அறிய வருகிறது.

"பூசனை உவந்து என் சிந்தையுட் புகுந்து" (8–37–7) எனவும்
"அணையவந்து புக்கு அயவந்தி மேவிய அமுதின்
துணை மலர்க்கழல் தொழுது பூசனை செயத் தொடங்கி"
(12–நீலநக்க புரா–9) எனவும்
"எண்ணில் ஆகமம் இயம்பிய இறைவர் தாம் விரும்பும்
உண்மையாவது பூசனை என உரைத்தருள"
(12–திருக்குறிப்–புரா–51) எனவும்

வரும் திருமுறைத் தொடர்களில் பூசனை என்னும் சொல் வந்திருப்பதைக் காண முடிகிறது.

"அண்ணலார்தனை அர்ச்சனை புரிய ஆதரித்தாள்
பெண்ணின் நல்லவ ளாகிய பெருந்தவக் கொழுந்து"
(12–திருக்குறிப்–புரா–51)

எனவரும் தொடரில் அர்ச்சனை என்ற சொல் அமைந்துள்ளதை அறிய முடிகிறது.

"தொண்டர் அஞ்சு களிறும் மடக்கிச் சுரும்பார் மலர்
இண்டைகட்டி வழிபாடு செய்யும் இடம் என்பரால்" (2–114–1)

எனவரும் திருமுறைத் தொடரில் வழிபாடு என்னும் சொல் வந்துள்ளமையைக் காண முடிகிறது.

**2. வழிபாட்டுக்கு வேண்டும் பொருள்கள்:**

தண்ணீர், மலர், தூபம், தீபம், சாந்தம் (சந்தனம்), மாலை, ஆடை, அணிகலன், திருவமுது முதலான பொருள்கள் பூசைக்கு வேண்டுவனவாகும்,

இதனை,

"தூயகா விரியின் நன்னீர் கொண்டு இருக்கு ஓதி ஆட்டிக்
குங்குமக் குழம்பு சாத்தி இண்டை கொண்டு ஏற நோக்கி"
(4–75–1) எனவும்
"பொன்னியல் நறுமலர் புனலொடு தூபம்
சாந்தமும் ஏந்திய கையின ராகி" (1–79–6) எனவும்,
"சலம் பூவொடு தூபம் மறந்தறியேன்" (4–1–6) எனவும்,
"நறப்படு பூ மலர் தூபம் தீபம் நல்ல
நறுஞ்சாந்தம் கொண்டேத்தி நாளும் வானோர்
சிறப்போடு பூசிக்கும் திருவா ரூரில்" (6–30–5) எனவும்
"அங்கணர் பூசைக்கான நாறுகுங் குலியம்"
(12–குங்குலிய புரா–11) எனவும்
"பூவும் நீரும் பலியும் சுமந்து" (2–115–4) எனவும்
"அணிகொள் ஆமை, அம்பூண், அணிமாலை
அமுது செய்து, அமுதம் பெறு சண்டி" (7–65–2) எனவும்

வரும் திருமுறைத் தொடர்களால் அறிய முடிகிறது.

3. வழிபாட்டின் அங்கங்கள்:

இறைவன் திருமேனியைத் தொடாமல் செய்யும் தொண்டுகள், சரியை நெறிச் செயல்களாகும். இறைவன் திருமேனியைத் தொட்டுச் செய்யும் தொண்டுகள், கிரியை நெறிச் செயல்களாகும். இவ்விரண்டு நெறிகளில் அடங்கும் எல்லாச் செயல்களும் வழிபாட்டின் அங்கங்களாக உள்ளன.

அலகிடுதல், மெழுக்கிடுதல், பூமாலை புனைதல், ஏத்துதல், பாடுதல், கும்பிடுதல், கூத்தாடுதல் முதலான செயல்கள் சரியை நெறியில் அடங்கும் அங்கங் களாகும். இவற்றை,

"நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும்எம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கும் இட்டுப்
பூமாலை புனைந்துஏத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்தும் ஆடி" (6–31–3)

எனவரும் அப்பர் தேவாரப் பாடற்பகுதியால் அறியமுடிகிறது.

திருமஞ்சனம், சாத்துபடி, தூபம், தீபம், நிவேதனம் முதலான செயல்கள் கிரியை நெறியில் அடங்கும் அங்கங்களாகும்.

"தூயகா விரியின் நன்னீர்
கொண்டிருக்கு ஓதி ஆட்டி" (4–75–1) எனவும்
"பாலினுல் நறுநெய் யால்
பழத்தினுல் பயின்ருட்டி" (1–61–5) எனவும்

"செய்ய மேனியன் தேனெடு பால் தயிர்
நெய்ய தாடிய நீலக்குடியரன்" (5–72–2) எனவும்
"நெய்யினெடு பால் இளநீர் ஆடி" (6–52–5) எனவும்
பால் நறு நெய் தயிர் ஐந்தாடு பரம்பரனை" (7–84–7) எனவும்

வரும் திருமுறைத் தொடர்களால் திருமஞ்சனம் என்னும் அங்கமும், திருமஞ்சனத்தின் போது நன்னீர், பால், தயிர், நெய், பழம், இளநீர், பஞ்சகவ்வியம் என்னும் பொருள்கள் பயன்படுத்தப்பட்டன என்பதும் தெரியவருகின்றன.

"குங்குமக் குழம்பு சாத்தி
இண்டை கொண்டு ஏற நோக்கி" (4–75–1) எனவும்
"நறுஞ்சாந்தம் கொண் டேத்தி" (6–30–5) எனவும்

வரும் திருமுறைத் தொடர்களால் சாத்துபடிக் கிரியை அறியவருகிறது.

"முருகன் செய் கோலம் கண்டு கண்டு கண்குளிர"
(2–92–3) எனவரும்

திருமுறைத் தொடரால் முருகநாயனர் புகலூர் வர்த்தமானீச்சரத்து இறைவர்க்குச் செய்த சாத்துபடியின் சிறப்பு அறியவருகிறது.

"தூமம்நல் அகிலும் காட்டி" (4–42–8) எனவும்
"தூமமும் தீபமும் காட்டி" (4–37–2) எனவும்

வரும் திருமுறைத் தொடர்களால் தூப தீபம் காட்டுதலான கிரியை அறியமுடிகிறது.

"பூவும் நீரும் பலியும் சுமந்து" (2–115–4) எனவும்
"வாய் கலசம் ஊன் அமுதம்" (8–15–3) எனவும்
பூசனை ஈசனார்க்குப்
போற்றுஅவி காட்டி னேமே" (4–76–4) எனவும்

வரும் திருமுறைத் தொடர்கள் நிவேதனக் கிரியையைப் புலப்படுத்துகின்றன.

"தண் மலரிட்டு முட்டாது இறைஞ்சேன்" (8–5–5) எனவும்
"பங்கயம் ஆயிரம் பூவினில் ஓர்பூக் குறைய" (8–15–10) எனவும்
"பேராயிரம் பரவி வானேர் ஏத்தும்" (6–54–8) எனவும்

வரும் திருமுறைத் தொடர்களால் மலர் தூவி அருச்சனை புரியும் கிரியையை உய்த்துணர முடிகிறது.

4. வழிபாட்டுக்கு உரிமை உடையோர்:

தற்காலத்தில் தமிழக ஆலயங்களில் ஆதி சைவ அந்தணர்கள் மட்டுமே கிரியை வழிபாட்டுக்கு உரிமை உள்ளவராக இருக்கிறர்கள்; ஏனைய சாதியார்க்கு இந்த உரிமை இல்லை. திருமுறைப் பாடல்களை ஆராயும்போது, திருமுறை தோன்றிய காலத்திலும், புராண காலத்திலும் ஆலயங்களில் கிரியை வழிபாடு செய்வதற்குத் தேவர்களும் முனிவர்களும் மானிட வர்க்கத்தில் அந்தணர்களும் ஏனைய சாதியார்களும் பறவைகளும் விலங்குகளும் உரிமை பெற்றிருந்த வழக்கம் தெரியவருகிறது.

"மலைமகள் பூசை மகிழ்ந்தருளும்
சிட்டர்த் திருச்சத்தி முற்றத் துறையும் சிவக்கொழுந்தே"
(4–96–7) எனவும்

"திகழும் மாலவன் ஆயிரம் மலரால்
ஏத்துவான் ஒரு நீள் மலர் குறைய" (7-66-3) எனவும்
"பூமகள் அலரொடு புனல்கொடு வழிபடு புறவமே" (3-84-5) எனவும்
"வந்தொர் இந்திரன் வழிபட மகிழ்ந்து
வானநாடு நீ ஆள்க என அருளி" (7-65-5) எனவும்
"பூவலர்ந்த கொண்டுமுப் போதும் உம் பொற்கழல்
தேவர் வந்து வணங்கும் மிகுதெளிச் சேரியீர்" (2-3-1) எனவும்

வரும் திருமுறைத் தொடர்களால் மலை மகளும், திருமாலும், நான்முகனும், இந்திரனும், தேவர்களும் ஆகிய விண்ணவர்கள் கிரியை வழிபாடு செய்தமை தெரியவருகிறது. மற்றும்,

"சந்தி மூன்றிலும் தாபரம் நிறுத்தி
சகளிசெய்து இறைஞ்சு அகத்தியன்" (7-65-5) எனவும்
நரரானபல் முனிவர் தொழ இருந்தானிடம்......
.... ..... ..... ..... ......
முரசார் வரு மணமொய்ம்புடை முதுகுன்றடைவோமே." (1-12-4) எனவும்

வரும் திருமுறைத்தொடர்கள் அகத்தியரும் பிற முனிவர்களும் கிரியை வழிபாடு செய்ததைக் குறிக்கின்றன. மேலும்,

"முட்டாமே நாள்தோறும் நீர் மூழ்கிப் பூப்பறித்து மூன்றுபோதும்
கட்டார்ந்த இண்டைகொண்டு அடிசேர்த்தும் அந்தணர்" (7-30-3) எனவும்
"பூவேந்தி மூவா யிரவர் தொழப் புகழேந்து மன்று" (9-3-8) எனவும்

வரும் திருமுறைத் தொடர்களாலும் அறியப்பெறும்.

முருகநாயனர், நீலநக்கநாயனர், புகழ்த்துணை நாயனர் என்னும் ஆதிசைவ அந்தணர்கள் முறையே திருப்புகலூர், சாத்தமங்கை, அரிசிற்கரைப்புத்தூர் என்னும் தலங்களில் கிரியை வழிபாடு செய்தவற்றைப் பெரியபுராணம் எடுத்துரைப்பதாலும் ஆலயங்களில் ஆதிசைவ அந்தணர்கள் கிரியை வழிபாடு செய்யும் உரிமை பெற்றிருந்தார்கள் என்பது அறியவருகிறது.

"பூசை செய்து அடியார் நின்று புகழ்ந்து ஏத்த"(2-64-8) எனவும்
"தொண்டர்தாம் மலர்தூவிச் சொன்மாலை புனைகின்ற
இண்டைசேர் சடையானை" (4-7-4) எனவும்
"பத்தரோடு பலரும் பொலியும் மலர்
அங்கைப் புனல் தூவி"
"ஒத்த சொல்லி உலகத்தவர் தாம் தொழுதேத்த" (1-3-1) எனவும்
"நீர்கொண்டு அடிமேல் அலரிட்டு முட்டாது உலகினுர் ஏத்த நின்ருன்"
(3-57-5) எனவும்

"பொன்னியல் நறுமலர் புனலொடு தூபம்
சாந்தமும் ஏந்திய கையின ராகிக்
கன்னியர் நாளும் வேடமே பரவும்" (1-79-6) எனவும்

வரும் திருமுறைத் தொடர்களால் அந்தணர்களைப் போல ஏனைச் சாதியாரும் கிரியை வழிபாட்டுக்கு உரிமை பெற்றிருந்தது தெரியவருகிறது.

ஈண்டு அடியார், தொண்டர், பத்தர், பத்தரொடு பலர், உலகினர், கன்னியர் என்ற சொற்கள், அந்தணர்களையும் ஏனைச் சாதியாரையும் உள்ளடக்கி அனைவர்க்கும் பொதுவாக நிற்கும் சொற்கள் என்பது குறிப்பிடத்தகும். இன்னும் "மந்தி ஏறி இனமாய் மலர்கள் பல கொண்டு முந்தித்தொழுது வணங்கும்" (2–64–2) எனவும்

"இரவி நீள் சுடர் எழுவதன் முன்னம்
எழுந்து தன்முலைக் கலசங்கள் ஏந்திச்
சுரபிபால் சொரிந்து ஆட்டிநின் பாதம்
தொடர்ந்த வார்த்தை....." (7–65–4) எனவும்

"வெள்ளானை வந்து இறைஞ்சும் வெண்காட் டானை" (6–43–4) எனவும்

"வேதத்தின் மந்திரத்தால்
வெண்மணலே சிவமாகப்
போதத்தால் வழிபட்டான்
புள்ளிருக்கு வேளூரே" (2–43–5) எனவும்

வரும் திருமுறைத் தொடர்களால் குரங்கு, பசு, யானை என்னும் விலங்குகளும் சடாயு என்னும் பறவையும் கிரியை வழிபாடு செய்தமை தெரியவருகிறது.

திருமுறை ஆசிரியர்களின் காலத்திலும் அதற்கு முற்பட்ட காலத்திலும் ஆலய கிரியை வழிபாட்டுக்கு அனைத்துச் சாதியாரும் உரிமை பெற்றிருந்தமை தெரிவதனாலும், வடநாட்டு ஆலயங்களில் அனைத்துச் சாதியார்க்கும் கிரியை வழிபாட்டுரிமை தற்காலத்திலும் வழங்கப்பட்டு வருவதாலும், தற்காலத்தில் தமிழகத்தில் ஆலயங்களில் கிரியை வழிபாட்டுரிமை அனைத்துச் சாதியார்க்கும் வழங்கப் பெற வேண்டும் என்பது அவா.

**5. வழிபாட்டு மொழி:**

வடக்கே இமயம் முதல் தெற்கே குமரிவரை உள்ள நமது இந்திய நாட்டின் வெவ்வேறு மாநிலங்களில் வெவ்வேறு மொழி பேசப்பட்டு வந்தாலும், ஆங்காங்கு உள்ள சைவ, வைணவ ஆலயங்களில் வடமொழியே வழிபாட்டு மொழியாக இருந்து வருவதை யாவரும் அறிவர். இங்ஙனம் வழிபாட்டு மொழி வடமொழியாக அமைந்திருப்பதற்கு இரண்டு காரணங்கள் உள்ளன.

சைவ சமயமும் வைணவ சமயமும் வெவ்வேறு கோட்பாடுகளை உடையனவாயினும், இவ்விரு சமயங்களும் வடமொழி வேதத்தையே தமது சமய நூலாக ஏற்றுக்கொண்டுள்ளன. ஆகவே ஆலயங்களில் வடமொழி மந்திரங்களை ஓதி வழிபாடு நடத்தப்படுகிறது. இது ஒரு காரணம்.

ஒரு மொழி பேசும் மாநிலத்தார், வேற்று மொழிகள் பேசப்படும் மாநிலங்களில் உள்ள புண்ணியத் தலங்களுக்கு யாத்திரை செய்து வருவது நடைமுறையில் இருந்து வருகிறது. எனவே எந்த ஒரு மொழிக்காரரும் ஆலய வழிபாட்டைப் புரிந்து கொள்வதற்கு வாய்ப்பாக ஒரு பொது மொழி இருப்பது நலம் என்று கருதி முற்காலத்திலேயே ஆலய வழிபாட்டின் பொது மொழியாக வடமொழியை மேற்கொண்டுவிட்டார்கள். இது இரண்டாவது காரணம்.

திருமுறைப் பாடல்களும் அக்காலத்தில் ஆலயங்களில் வடமொழி, வழிபாட்டு மொழியாக இருந்ததைச் சுட்டிக் காட்டுகின்றன.

"சதுரம் மறைதான் துதிசெய்து வணங்கும்
மதுரம் பொழில்சூழ் மறைக்காட்டுறை மைந்தா" (2–37–1) எனவும்
"வேதத்தின் மந்திரத்தால் வெண்மணலே சிவமாகப்
போதத்தால் வழிபட்டான் புள்ளிருக்கு வேளூரே" (2–43–5) எனவும்
"தூயகா விரியின் நன்னீர் கொண்டு இருக்கு ஓதி ஆட்டி"
(4–75–1) எனவும்
"இருக்கு வாய்மொழியால் தனை ஏத்துவார்" (5–16–6) எனவும்
"ஆரணம் கொண்டு பூசுரர்கள் வந்து அடிதொழ
சீரணங்கும் புகழ்த் தென் குடித் திட்டையே" (3–35–9) எனவும்

வரும் திருமுறைத் தொடர்களால் வடமொழி, வழிபாட்டு மொழியாகப் பயன்படுத்தப் பட்டதை அறியமுடிகிறது.

இங்ஙனம் இருப்பினும், அக்காலத்தில் வடமொழியல்லாத பிற மொழிகளும் வழிபாட்டில் பயன்படுத்தப்பட்டதையும் திருமுறைப் பாடல்கள் எடுத்துரைக்கின்றன.

"செந்தமி ழோர்கள் பரவி ஏத்தும்
சீர்கொள் செங்காட் டங்குடி யதனுள்" (1–6–9)

எனவரும் திருமுறைத் தொடரில் ஞானசம்பந்தர் செந்தமிழோர்கள் என ஓர் இனத்தாரைப் பிரித்துக் காட்டி அவர்கள் வழிபட்டதையும் குறிப்பிட்டுள்ளார். எனவே, தமிழர்கள் தமிழ் மொழியால் வழிபட்டிருப்பர் என்பது ஊகிக்கப்படுகிறது. மேலும்,

"சலம் பூவொடு தூபம் மறந்தறியேன்
தமிழோடிசை பாடல் மறந்தறியேன்" (4–1–6)

எனவரும் திருமுறைத் தொடரில் நாவுக்கரசர் சலம்பூவொடு என்று கூறுவதால் இது கிரியை வழிபாடு என்பது அறியப்படும். இவ்வழிபாட்டில் தமிழோடு இசை பாடுதல் கூறப்படுவதால் ஈண்டு வழிபாட்டு மொழி தமிழாக இருந்ததை ஊகிக்க முடிகிறது. மற்றும்

"செந்தமிழர் தெய்வமறை நாவர்செழு
நற்கலை தெரிந்தவ ரோடு
அந்தமில் குணத்தவர்கள் அர்ச்சனைகள் செய்ய
அமர்கின்ற அரனூர்" (வீழி மிழலை) (3–8–4)

எனவரும் திருமுறைத் தொடரில் செந்தமிழரும் மறைநாவரசரும் அர்ச்சனை (வழிபாடு) செய்ததாகச் சம்பந்தர் குறிப்பிடுவதால் திருவீழிமிழலையில் தமிழும் வடமொழியும் வழி பாட்டு மொழிகளாக இருந்ததை அறியமுடிகிறது. மேலும்,

"தென்சொல் விஞ்சமர் வடசொல் திசைமொழி எழில் நரம்பெடுத்து
துஞ்சு நெஞ்சிருள் நீங்கத் தொழுதெழு தொல்புகலூரில்"
(2–92–7) எனவும்,
"கல்லால் நிழல் மேய கறைசேர் கண்டா என்று
எல்லா மொழியாலும் இமையோர் தொழுதேத்த" (1–85–1) எனவும்

வரும் திருமுறைத் தொடர்களில் தமிழ் மொழியும், வடமொழியும், திசை மொழியும் ஆகிய எல்லா மொழிகளாலும் ஆலய வழிபாடு நடைபெற்றதை அறிய முடிகிறது.

வடமொழி வழிபாட்டு மொழியாக இருந்து வருவதற்கு இரண்டு காரணங்கள் பேசப்படுவதாலும், வழிபாட்டு மொழியாக வடமொழியையும் திருமுறைகள் ஏற்றுக் கொள்வதாலும் ஆலய வழிபாட்டிலிருந்து வடமொழியை அறவே ஒதுக்கிடவேண்டும் என்ற வாதம் தக்கதாகாது என்பது தெளிவு.

எனினும் திருமுறைப் பாடல்கள் வடமொழியோடு கூடத் தமிழ் மொழியையும் திசை மொழியையும் அதாவது எல்லா மொழிகளையும் வழிபாட்டு மொழிகளாக ஏற்றுக் கொள்வதால், வடமொழிதான் வழிபாட்டு மொழி என்ற விடாப்பிடி தளரவேண்டும். அதோடு தமிழ் நாட்டு ஆலயங்களில் தமிழ் மொழியிலும் வழிபாடு நடத்த இடம் அளிக்கப்படவேண்டும்.

---

பத்துத் திசையும் பரமொரு தெய்முண்டு
எத்திக் கிலரில்லை யென்ப தினமலர்க்
கொத்துத் திருவடி நீழல் சரணெனத்
தத்தும் வினைக்கடல் சாராது காணுமே.

கானுறு கோடி கடிகமழ் சந்தனம்
வானறு மாமல ரிட்டு வணங்கினும்
ஊனினை நீக்கி யுணர்பவர்க்கு அல்லது
தேனமர் பூங்குழல் சேரவெண் ணாதே.

இதுபணிந்து எண்டிசை மண்டலம் எல்லாம்
அதுபணி செய்கின் றவளொரு கூறன்
இதுபணி மானுடர் செய்பணி யீசன்
பதிபணி செய்வது பத்திமை காணே.

அன்பின் உருகுவன் நாளும் பணிசெய்வன்
செம்பொன்செய் மேனி கமலத் திருவடி
முன்புநின்று ஆங்கே மொழிவது எனக்குஅருள்
என்பினுட் சோரி யிலங்குகின் றனே.

– திருமந்திரம்

# தலைமை உரை

கலைமாமணி திருமிகு. எம்.பி.என். சேதுராமன்

தமிழ்நாட்டின் மிகப் பழமையான, தனிச் சிறப்புடைய இசைக் கருவி நாதசுரமாகும். இராஜவாத்யம் என்று போற்றப்படும் நாதசுரம் இசையையும், தெய்வீகத் தன்மையையும் ஒருங்கிணைக்கும் பாலமாக விளங்குகிறது. சிலப்பதிகாரத்தின் அரங்கேற்றக் காதையில் வரும் 'வங்கியம்' என்ற கருவிக்கு அடியார்க்கு நல்லாரால் வகுக்கப்பட்டுள்ள இலக்கணம் யாவும் நாதசுரத்திற்குப் பொருத்தமாக உள்ளது. சிலப்பதிகாரத்திற்கு முந்தைய காலத்து நூலாகிய அகத்தியர் சூத்திரங்களிலும், பிற நூல்களிலும் ஒவ்வோர் அங்கங்களின் அதிதேவதைகளும் கூறப்பட்டுள்ளன.

வங்கியம் வாசிக்கும்போது ஏழுதுளைகளைப் பற்றி ஏழுவிரல்களால் வாசிக்க வேண்டும். இதனால் நாதசுரம் 'ஏழில்' எனப் பெயர் பெற்றது.

" ஓங்கிய மூங்கிலுயர் சந்தனம் வெள்ளி கஞ்சம்
தாங்கு கருங்காலி செங்காலி தந்தம் – பூங்குழலாய்
நாதசுரஞ் செய்யவே நன்றென்றா ரிப்புவியில்
பாக மறிந்திடுவோர் பார்"

– என அரபத்த நாவலர் நாதசுர இலக்கண நூலில் கூறியுள்ள பாடலில் இருந்து மூங்கில், சந்தனமரம், வெண்கலம், கருங்காலி, செங்காலி மரங்கள், தந்தம் இவற்றால் நாதசுரம் செய்யப்பட வேண்டும் என்பதை அறியலாம்.

நாதசுரம் ரிக் வேதத்திலிருந்து தோன்றியது என்பதோடு ஒவ்வொரு அங்கத்திற்கும் அதிதேவதைகள் கூறப்பட்டுள்ளன. அடிவட்டம் – சூரியன், மேற்சுற்று– அஷ்ட நாகம், மேலிடுசில் – சந்திரன், மேற்சிறுதுளை – சத்தி, உட்பெரும் துவாரம்– விஷ்ணு, சந்தை எனும் பகுதி – பிரமன், ஏழுதுளைகள் – சப்த மாதர்கள், எழுகின்ற நாதம் – சிவபெருமான் எனப் பின்வரும் பாடல் கூறுகிறது.

"இருக்கு வேதத்திலே நின்றேழு நாதசுரத்தின் தோற்றம்
அருக்கனா முன்செய் வட்டமட்ட மாநாகங்குழல்
சுருக்கமாஞ்சில்லே சோமன் தோன்றி பொள்ளல் சத்தி
பெருக்கமா முட்டு வானம் மாலெனப் பேசுவாரே".

நாதசுவரத்தில் அளவு 32 விரல் நீளமும், நாலரைவிரல் சுற்றளவும், மேல்துளை நெல்லளவாகவும் இருக்க வேண்டுமென்று கூறப்பட்டிருக்கிறது. நாதசுரம், தவில், மத்தளம் முதலிய கருவிகள் செய்வதற்கு 42 வயதுள்ள மரங்களால் செய்யின் உத்தமம் என்றும், உத்தமக் கருவிகளில் பயில்வோருக்குக் கீர்த்தியும், அதிக சம்பத்தும் அஷ்டசித்தியும் உண்டாகும் என்றும் கூறப்படுகிறது. இவற்றால் நாதசுரத்தின் பழமை விளங்கும்.

ஆலயங்களில் நடைபெறும் அனைத்துச் சடங்குமுறைகளிலும் நாதசுர இசை இடம்பெறுகிறது. கோவில்களில் தினப்படி நடைபெறும் நாதசுரத்தின் இசை முறையையும்,

திருவிழாக்காலங்களில் இசைக்கப்படும் திட்டங்களையும் ஊன்றி நோக்கினால் ஒரு உண்மை புலப்படும். கையாளப்படும் ராகங்களையும் பாடல்களையும் கேட்கும்போதே கடிகாரத்தின் உதவியின்றியே நேரத்தைத் தெரிந்து கொள்ளலாம்.

காலை 4 மணி சுமாருக்குப் பூபாளம், பௌளி, மலையமாருதம், காலை 6 மணிக்குப் பிலஹரி, கேதாரம், 8 மணிக்கு தன்யாசி, சாவேரி, அசாவேரி 10 மணிக்கு சுருட்டி, ஸ்ரீராகம், மணிரங்கு, உச்சிவேளையில் முகாரி, பூரண சந்திரிகா, மாலை 2 மணிக்கு மேல் நாட்டைக் குறிஞ்சி, உசேனி, மாலை 4 மணிக்கு பூர்விகல்யாணி, கல்யாணி, மந்தாரி, மாலை 6 மணிக்கு மேல் சங்கராபரணம், பைரவி, இரவு 8 மணிக்கு காம்போதி, தோடி, இரவு 10 மணிக்கு மேல் ஆனந்த பைரவி, நீலாம்பரி, நடுநிசியில் பேகடை, சாமா, இரவு 2 மணிக்கு மேல் 4 மணிவரை மோஹனம், இந்தோளம் போன்ற ராகங்களை முறைப்படி வாசிப்பது வழக்கம். செவியுணர்ச்சி ஒரு பக்கம் பெருக, இசையைக் கேட்டவுடன் காலநிர்ணயமும் ஆகும். கோயில் கால அட்டவணைப்படி காலை முதல் இரவு வரை கோயிலில் நடைபெறும் எல்லாவகை வழிபாடுகளையும் அப்போது பாடப்படும் இசையைக்கேட்டே தொலைவில் உள்ளோர் மனக்கண்ணால் கண்டுகளிக்கலாம்.

நேரத்திற்கேற்ப இராகங்களும் பாடல்களும் வகுத்ததுபோல உற்சவ காலங்களில் இறைவன், பவனி வரும் இடங்களுக்கேற்பவும், தகுந்த இசை வகுத்துள்ளனர்.

பவனி வரும் இறைவனின் மண்டகப்படி தீபாராதனைக்கு நைவேத்தியம் எடுத்துவரும் போது மிஸ்ரமல்லாரி, தீபாராதனைக்குத் தேவாரம், திருப்புகழ் வாசிப்பது வழக்கம், ஆண்டவன் புறப்பாட்டு முன் தவிலில் "கண்டநடை"யில் அலாரிப்பு வின்யாசம் நடக்கும். சுவாமி தூக்கும் பணியாளர்கள் அலாரிப்பு கேட்டதும் பல திக்குகளிலிருந்தும் வந்து தயாராக நிற்பர். இதைத் தொடர்ந்து நாதசுரத்தில் நாட்டை ராக ஆலாபனை கேட்டதும் பக்தர்கள் சுவாமி புறப்பாட்டுத் தரிசனத்திற்குக் கூடுவார்கள். புறப்பாடானதும் பிரகாரம், யாகசாலை வரையில் திருபுடை தாளம் தவிர்ந்து மற்ற தாளங்களில் மல்லாரி நடைபெறும். வழிபாட்டு மல்லாரிக்குச் சாஹித்யம் பிரதானமில்லை. லயமே முக்கியம்.

சாதாரணமாகப் பெரிய கோபுர வாயிலிருந்து தேரடி வரையில் மிச்ரமல்லாரி நடைபெறும். தேரடி முதல் ராக ஆலாபனை தொடங்கித் தெற்கு வீதி பாதி வரையிலும், பிறகு தெற்கு வீதி பாதி முதல் மேலவீதி பாதி வரையிலும் பல்லவி ராக மாலிகைகள் வாசிப்பார்கள். இதற்கிடையே ரத்தி மேளமும் வாசிப்பது உண்டு, ஈசானிய மூலையிலிருந்து பரத நாட்டியமும், பாட்டும் கோயில் வரை நடைபெறும், கோயிலுக்குள் மீண்டும் துரித கால திருபுட மல்லாரி ஒலிக்கும். யதாஸ்தானம் நெருங்கும்போது யதுகுல காம்போதியிலும், சாவேரியிலும் எச்சரிக்கை வாசிப்பது உண்டு.

வழிபாட்டை ஆதாரமாகக் கொண்டு ஆண்டவன் திருப்பணியிலீடுபட்டு தனது இசையின்மூலம் மக்களுக்கு இசை உணர்ச்சியையும், இசையறிவையும் வளர்ப்பதற்கு நாதசுரம் பயன்படுகிறது. வேற்றுமை பல இருந்தாலும் வழிபாடு, இசை, தொழில் கல்வி ஆகிய பல துறைகளையும் ஒன்றுபடுத்தும் தனிப் பெருமை நாதசுர இசைக்கு உள்ளது. ஆகவே வழிபாட்டிலும் அது தனியிடம் பெறுவதில் வியப்பில்லை.

ooooo

# ஆலய நாதசுர இசைமரபுகள்

நாதசுரக்கலைஞர் ஆண்டாங்கோயில்
திரு. ஏ.வி. செல்வரெத்தினம்

குஞ்சரமா முகத்தோ டைந்து கரத்தோனை
பிஞ்சுமதியணி மகனை பிரணவத்தின் பொருளானை
வஞ்சியுமை பாலகனை யாகூவிலமர்ந்தோனைத்
தஞ்சமென்று வணங்கியே தமிழ் புனைந்தளித்திடுவோம்.

தோற்றுவாய்

இயல் இசை நாடகம் என்ற முப்பெரும் பிரிவு தமிழ்மொழிக்கே உரியது. பெருமை வாய்ந்த இந்த முக்கலையும் "ஆசை தரும் கோடி அதிசயங்கள் கண்டதிலே ஓசைதரும் இன்பம் உவமையிலா இன்பமன்றோ" என்று பாரதியார் குறிப்பிடுகின்றார்" முக்கண்ணனாகிய இறைவனுக்கு உரியதாகிய இக்கலையில் மங்கல வாத்யமாக வழங்கிடும் குழல்வகை, நாதஸ்வரம் என்பது பற்றிக் கட்டுரை எழுதிடக் குருவருளாலும், இறைவனின் திருவுள்ளப் படியும், பெரியோர்களின்ஆசியுடன் முன்வந்துள்ளேன். குறையிருப்பின் நீக்கி நிறைகளைப் போற்றியருளக் கோருகின்றேன்.

கற்பனை கடந்த ஜோதி கருணையே
உருவமாகி அற்புதக்கோல நீடி
அருமறைச் சிரத்தின் மேலாம்
சிற்பர வியோமமாகும் திருச்சிற்றம்பலத்துள் நின்று
பொற்புடன் நடஞ்செய்கின்ற பூங்கழல் போற்றி போற்றி!
– சேக்கிழார்.

சிவபெருமான் மனம் வாக்கு காயங்களுக்கு எட்டாதபடி அவைகளைக் கடந்து நிற்பவன். ஆதியும் அந்தமும் இல்லாத அருள்பெருஞ் ஜோதியாகிய சிவபெருமான் தன்னுலும் அறியப்படாத அபார மகிமையை உடையவர். ப்ரும்மா, விஷ்ணு போன்ற தேவர்களாலும் வேதாதி நூல்களாலும் அறியப்படாதவர்.

சிவத்யானம்

இந்துநிப பஞ்சமுக ஹஸ்த தஸயுத்தம்
குலவர டங்கமஸ வஜ்ர அபயம்ச லயது
பாசவரதங்குச மனிதர்கண வாமே
ஸ்வேத கமலாஸன சதா சிவஸ் வரூபம்.
– ஆகமநூல்.

சிவபெருமான் – பாலச்சந்திரன், கங்கை, கொன்றை, முதலியன விளங்கும் சடாமுடியையும், ஐந்து திருமுகங்களையும், பத்துத் திருக்கரங்களையும் உடையவராய்; சூலம், மான், மழு, வாள், அக்னி, டமருகம், நாகம், பாசம், அங்குசம், கண்டாமணி, தாமரைமலர், பரிவட்டம், மாதுளம்பழம், மாத்திரைக்கோல் ஆகியவற்றைத் தரித்தவராய், அபயவரத ஹஸ்த்தராய் சுத்த ஸ்படிக வடிவராய், உமையொரு பாகத்துடன் ஸ்ரீ கைலாயத்தில் வீற்றிருப்பார். ஆன்மாக்களுக்கு அருள்புரியும் பொருட்டுச் சிவபெருமான், அருவமாகவும், உருவமாகவும், அருஉருவமாகவும் விளங்குகின்றார்.

அருவ வழிபாடு

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளல் பிரானார்க்கு வாய் கோபுரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப்புலன் ஐந்தும் காளாமணி விளக்கே

– திருமூலர் திருமந்திரம்.

எங்கும் வியாபித்திருக்கும் இறைவனை நம் மனத்தினுள் ஜோதி ரூபமாக வழிபடுதலாலும், சிவலிங்கத்திலிருந்து தோன்றிய இருபத்து ஐந்து உருவ மூர்த்தி களாகவும், சிவபெருமான் அருளிய இருபத்தெட்டு சிவாஹமம் மூலமாகவும் வழி பட்டு இறையருள் பெறலாம். இவை அனைத்திலும் மிகமேலானதாகவும் நான்காம் படியாகவும் அமையப்பெற்றது இறைவனை இசையால் வழிபடுதல், இயலிசை நாடக மாய் எழுவேல்களாய் வழிபடும் அன்பர்களின் உள்ளத்தில் எப்பொழுதும் இறைவன் இருப்பதைக் குறிப்பிடும். கபிலதேவ நாயனாரின் பதினோராந் திருமுறைப் பாடலை உவமை கூறலாம். சுந்தரமூர்த்தி நாயனார்க்கு வெள்ளையானை அருளி சாயுச்சிய பதவிக்கு இறைவன் அழைத்துக் கொண்டதான வரலாறு நாம் அறிந்ததே. சுந்தரமூர்த்தி நாயனாரின் பக்தியான இறைவழிப் பாமலர்களுக்கு இறைவன் மகிழ்வுற்றான்.

ஏழாந்திருமுறை

மந்திரம் ஒன்றறியேன் மனைவாழ்க்கை மகிழ்ந்தடியேன்
சுந்தரவேடங்களால் துரிசேசெயும் தொண்டன்எனை
அந்தரமால் விசும்பின் அழகானை அருள்புரிந்த
சுந்தரமோ நெஞ்சமே நொடித்தான்மலை உத்தமனே.

கீதக்கவி

ஓடும் கொடிய விஷப்பாம்பும் பேயும் இசைகேட்டு உள்ளுருகி
ஆடும் கருங்கல் அசைந்துவரும் அழுகுழந்தை குரல் கேட்கும்.
மாடும் இசை கேட்டு ஓடிவரும் வந்த பசுவும் பால் சுரக்கும்
பாடும் இசைகேட்டு உருகாரை என் சொல்வேன் பாவலரே!

சிதம்பரத்தில் ஸ்ரீ நடராஜ மூர்த்தியின் ஆனந்த தாண்டவத்தின்போது ஈசனின் உடுக்கை ஒலியிலிருந்து ஸமஸ்க்கிருத வியாகர்ண சாஸ்த்திரம், சங்கீதம், நாட்டிய சாஸ்த்திரம், வேதாந்தம் போன்றவை தோன்றியதாகத் தலவரலாறு கூறுகின்றது.

செய்யுள்

தத்ததீம் தாம் தோமென்று நர்த்தனம் செய்கின்ற
சித்சபா நாதருடைய ஐந்து முகங்களிலும்
சச்சபுடம் முதல் ஐந்து தாளங்களும் முறையே
இத்தரை மீதினில் இசைக்கென்று பிறந்தனவாம்.
கங்கை தரித்தோன் முகத்தில் காணும் ஐந்து தாளமுடன்
தங்குதள துங்கமுனி நூற்றியெட்டும் சொல்லவே
வடக்கு அரிபாதத்தை வைத்த செழுஞ்ஞானக்
கடக்குன்றிற்கும் ஞானக்காப்பு.

அகஸ்த்திய முனிவரால் நூற்றெட்டுத் தாளங்கள் தோற்றுவிக்கப் பட்டதாகத் தெரியவருகிறது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் இயற்றப் பெற்ற காமிக சாஸ்த்திரத்தில் கோயில் பூஜா காலங்களுக்காக நூற்றெட்டு வாத்யங்கள் உபயோகப்படுத்தி வந்ததாகவும் கூறப்பட்டுள்ளது.

இசைக் கருவிகள் நான்கு வகை

துளைக் கருவிகள், நரம்புக் கருவிகள், தோல் கருவிகள் கஞ்சக்கருவிகள் என நான்கு வகைப்படுத்தி, கோயில் பூஜைக்கெனவும், மணவினைக்கெனவும், விளையாட்டிற்கெனவும், வீரத்திற்கெனவும், விழாவிற்கெனவும் வழங்கி வந்துள்ளன. இவைகளைப் பற்றிச் சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, முதலிய பழம்பெரும் நூல்களின் வாயிலாக அறியக்கிடக்கின்றன. எல்லாவற்றையும் தனித்தனியே விளக்கிடுவதற்குக் கட்டுரை இடமளிக்காது. எனவே, இங்கு அவசியமானதாகிய குழல் வகைகள் மாத்திரம் சொல்லப்படுகின்றது.

துளைக்கருவிகள்

சங்கு, தவளச்சங்கு, திருச்சின்னம், பூரி, நபூரி, எக்காளம், கவுரி காளம், தாரை, கோணத்தாரை, பெருந்தாரை, முகவீணை, வங்கியம், பெருவங்கியம் நாதஸ்வரம், திமிரி நாதஸ்வரம் என்பவை துளைக் கருவிகளாகும்.

கோயில் பூஜா காலங்களுக்கு என்று தற்போது குழல் வகைகளில் எஞ்சி நிற்பது நாதஸ்வரம், சங்கு, முகவீணை, திருச்சின்னம், எக்காளம், நபூரி, ஆகியவை மட்டுமே. இவைகளில் முதன்மைநிலை வகிப்பது "நாதஸ்வரமே". சுவாமி புறப்பாட்டில் இறைவனுக்கு நேராக நின்று வாசிக்கப்படும் சேவகமுறை நாதஸ்வர மேளத்துக்குத்தான் கொடுக்கப்பட்டுள்ளது. மற்றைய குழல்வகைகள் மேளத்துக்குப் பின்புறமும், தேவாரம் திருப்பல்லாண்டு முதலியன சுவாமிக்குப் பின்புறமும் சேவகமுறை கொடுக்கப்பட்டுள்ளது. இதன் காரணம்:

## புராண வரலாறு

துர்வாச முனிவரின் சாபத்திஞல் தேவேந்திர மகாராஜாவின் ஆஸ்த்திகளனைத்தும் கடலுக்குள் சங்கமமாகி விடுகின்றன. தேவேந்திரன் மகாவிஷ்ணுவிடம் முறையிடுகின்றார். இதன் காரணமாக மகாமேரு பர்வதத்தை மத்தாகவும் வாசுகி என்ற பாம்பினைக்கயிறாகவும் கொண்டு தேவர்கள் ஒருபுறமும் அசுரர்கள் ஒருபுறமாகவும் நின்று திருப்பாற்கடலைக் கடைகின்றபோது ஸ்ரீ மகாலெட்சுமி அமிர்த குடத்தோடு பிரஸன்னமாகின்றார். தேவர்கள்புறம் அமிர்தம் கிடைக்கப்பட்ட உத்வேகத்தில் வெற்றி முழக்கமாகப் பாம்பின் வாலையே கொம்புபோல் வாயில் வைத்து ஊதி சுயம்பிரகாசமாகிய நாதத்தை எழுப்பியதாகச் சொல்லப்படுகின்றது. ராஜ வாத்யம் – மங்கள வாத்தியம் என்பதான பெயர்களுடன் விளங்கிவரும் நாதஸ்வரத்துக்கு நாதஸ்வரமா? நாகஸ்வரமா என்ற வழக்கு ஒன்று உள்ளது. நாக சர்பத்தின் உருவ அமைப்போடு விளங்குவதஞல், நாகஸ்வரம் என்று சொன்ஞலும், நாதஞல் நாதத்தை எழுப்பி நாதோபாசனையே செய்துவரும் இந்த வாத்யத்துக்கு "நாதஸ்வரம்" என்ற பெயரே மிகவும் பொருந்தும்.

## நாதஸ்வரம் செய்விக்கும் மரம்

ஓங்கிய மூங்கிலுயர்சந்துவெண்கலமே
பாங்குடை செங்காலி கருங்காலி பூங்குழலாய்
கண்ணனுவந்த கழச்சிவையாமென்றார்
மண்முழுது நூலுணர்ந்தோர் வைப்பு

பஞ்சபுராண நூலில் கண்டுள்ள இந்தச் செய்யுளில், ஐந்துவகைகள் தான் சொல்லப்பட்டுள்ளன. எங்கள் மூதாதையர்களின் குறிப்பின்படி சந்தணம் – கருங்காலி, செங்கருங்காலி எனச் சொல்லப்படும். ஆச்சாமரம் – வேங்கை மூங்கில் – தோதகத்தி– வில்புளா – வெண்கலம் – வெள்ளி – பொன் – யானைத் தந்தம் இப்பதினொன்றில் ஏதாவது ஒன்றிஞல் நீளம் 120 நெல் – கீழணசு வைக்கும் நீளம் விரல் 1 நெல் 4; மேலணசு வைக்கும் நீளம் விரல் 2 நெல் 4; சுரத்தின் துவாரம் சுற்றளவு நெல் 1; உளவின் சுற்றளவு மேல் புறம் 2 1/2 விரல் கீழ்புறம் 4 1/2 விரல். நாதசுரத்தின் முழுநீளம் 32 விரல்கள் என்று சொல்லப்படுகின்றது.

இந்த விவரப்படி 28 அங்குலம் நீளம் (ஒரு நெல் 1.1/2 சென்டிமீட்டர்) அஞ்சுகட்டை ஸ்ருதி உள்ள நாதஸ்வரம் இந்தக் கணக்குவரும்.

என் தந்தையார், ஆண்டாங்கோயில், வீராசாமி பிள்ளை அவர்கள் இந்த அளவுள்ளதான தங்க நாதஸ்வரம் வாசித்துள்ளார். "தங்க நாயனக்காரர் வீடு" என்பதாக எங்கள் வீடு அடையாளம் சொல்லப்படும் வழக்கம் இன்றும் நடந்து வருகின்றது.

நாதஸ்வரம் தற்போது செங்கருங்காலி என்னும் ஆச்சா மரத்தில் மட்டுமே செய்விக்கப்படுகின்றது. இம்மரம் 42 வயதுள்ளதாகவும் கூடுதல் குறைச்சல் வயதுடையது கூடாது என்பதாகவும், 42 வயது தாஞ என்று சோதித்திட, அம்மரத்தைக் கொஞ்சம்

சீவி விளக்கில் பிடித்தால் தீபம்போல் எரியுமென்றும் கூடுதல் குறைச்சல் வயதுள்ளதாயின் கருகிவிடும் என்றும் சொல்லப்படுகின்றது.

ரிக்வேதத்தில் உத்தாலவேணு என்னும் பெயர் நாதஸ்வரமே என்பதை ஜெர்மானிய ஆராய்ச்சியாளர்கள் ஆராய்ச்சி செய்து கண்டறிந்து தெளிவாக்கி யுள்ளார்கள். வேத சாஸ்த்திர முறைப்படி நாதஸ்வர உடற்கூறின் தேவதைகள் சொல்லப்படுகிறது.

அடிவட்டம் சூரியன், மேல்சுற்று அஷ்டமாநாகம், அதன்மேல் காணப்படும் சில் சந்திரன், மேலே உள்ள ஸ்வரத்தின் துளை சக்தி, உள்ளே பெருந்துளை விஷ்ணு, சுயம்பிகாசமே நாதம்,

துளைகளில் எழும் ஒலி ஸப்தமாதர்கள்; சுரங்கள் தேவர்கள். கிருஷ்ணு, இந்திரன் வலதுகனிஷ்டை சரஸ்வதி – அருமிகை – இந்திராணி – மத்திமை – வைரவி – தர்சனி – வராகி இடது அருமிகை – காளி – மத்திமை – நாராயணி – தர்சனி – துர்கை – என்பதாகச் சொல்லப்படுகின்றது.

(இது நந்தி மதமாம்)

1) எகிப்தில் உள்ள இரண்டு பிரமிடுகளிலும், மலேஷியாவில் உள்ள ஒரு புராதன ஆலயத்திலும் நாதஸ்வர வாத்யம் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட் டுக்கள் காணப்படுவதாக ஆராய்ச்சியாளர்கள் குறிப்பிடுகின்றனர்.
2) சிலப்பதிகாரத்தில் வங்கியம் என்ற பெயரில் நாதஸ்வரம் குறிப்பிடப்படுவதினை, அந்நூல் உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் சொல்லியுள்ளார்.
3) கி.பி. 1100ஆம் ஆண்டில் எழுதப்பட்ட சிங்கிராஜ புராணம் என்ற கன்னட நூலிலும்
4) ஸ்காந்தம் என்ற பழைமையான ஸமஸ்க்ருத நூலில் சிவரகஸ்ய காண்டம் என்ற அத்யாயத்திலும் நாதஸ்வரம் பற்றிய விவரங்கள் உள்ளதாக ஆராய்ச்சிக் கட்டுரைகள் வெளிவந்துள்ளன.
5) கி.பி.1400ஆம் ஆண்டு துவங்கிக் காணப்படும் பல கல்வெட்டுகளும் நாதஸ்வர–தவில்–வித்வான்களுக்கு மான்யம் வழங்கப்பட்டதற்கான செப்பேடுகளும் உள்ளதாக ஆராய்ச்சிக் கட்டுரைககள் வெளிவந்துள்ளன.

இத்தகைய தொன்மை வாய்ந்த நாதஸ்வரக்கலையினை இறைவன் தனக்கே உரியதாக வைத்துக்கொண்டுள்ளதே மிகவும் சிறப்புடையதாகும். உலகில் திருக்கோயில்கள் தோன்றிய நாளாய் குழலொலியும் – பாவராக தாளத்துடன் அமையப்பெற்ற கூத்தொலியும், பெரியமேளம் சின்னமேளம் என்கின்ற பெயருடன் ஈசனின் பூஜைக்குச் சேவகம் செய்யப்பட்டு வந்துள்ளது.

சேந்தனுர் திருப்பல்லாண்டு

குழலொலியாழொலி கூத்தொலி ஏத்தொலி எங்கும் குழாம் பெருகி
விழவொலி விண்ணளவும் சென்று விம்மி மிகு திருவாரூரின்
மழவிடையார்க்கு வழி வழியாளாய் மணஞ்செய் குடிப்பிறந்த
பழ அடியாரொடும் கூடி எம்மானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

இளங்கோவடிகள்

"குழலிலும் யாழிலும் குரல் முதல் ஏழும்
வழுவின்றிசைத்து வழித்திறன் காட்டும்
அரும்பெறன் மரபிற்பெரும்பாண் இருக்கையும்"

என்பதாகச் சிலப்பதிகாரத்தில் குழலைத்தான் முதன்மையாகக் கொண்டு பாடியுள்ளார்கள்.

நாதஸ்வரத்துக்குச் சில நியதிகள்

இன்னின்ன நேரத்தில் ராகங்கள் (நிறங்கள் என்றும் சொல்லலாம்) வாசிக்கப்பட வேண்டும். ஒவ்வொரு நிறங்களுக்கும் உள்ள சிறப்புக்கள் என்ன என்பதையும் முன்னோர்கள் வகுத்துத் தந்துள்ளார்கள். அவற்றின் விவரங்கள் கீழேதரப்பட்டள்ளன. அக்காலத்தில் சங்கீதத்தை மிகவும் பக்தியுடனும், காயகதோஷம் வராமலும் கையாண்டுள்ளார்கள். உதாரணமாக மண்பாண்டங்களில் சமைத்துப் படைத்திட எவ்வளவு பக்குவம் வேண்டுமோ அத்தகைய முறையில் ஆக்கியளித் துள்ளார்கள். இசையுலகில் என்றென்றும் வாழுபவர்களாகிய மகானுபவர்களால் சொல்லப்பட்ட வழிமுறைகளை என் சிற்றறிவுக்கு எட்டியவற்றினைத் தெரிவித்துள்ளேன்.

இலக்கணமுறை இராக நிறங்களும் அவற்றின் மெய்யுணர்வுகளும்

| | | | |
|---|---|---|---|
| 1. | நாட்டை | : | இது இறைவன் பவனி வருவதைப் பறைசாற்றிடவும், இறைவணக்கத்துடன் நற்காரியங்கள் துவங்கிடவும், வீரமுழக்கமாக அமைந்த நிறம் |
| 2. | கௌளை | : | மனதில் தெய்வபக்தியைப் பெருக்குவதற்கும், இறைவனுக்கு அபிஷேகம் நடக்கும்போதும் தென்றல் வடிவை உணரச் செய்யும் நிறம். |
| 3. | ஆரபி | : | இறைவனை ஜோதியாகத் தியானம் செய்வதற்கு உகந்த நிறம். |

| | | | |
|---|---|---|---|
| 4. | வராளி | : | பந்தபாசங்களை மறந்து மனத்தை ஒரு நிலைப்படுத்தி "ஒன்றென்ற ஒன்றே காண்" என உணரச்செய்து யோக நிலையளிக்க இந்த நிறம் உகந்தது. |
| 5. | ஸ்ரீராகம் | : | உமையொருபாகம் என்பதை, பரமனில் பாதி ஸ்ரீ என்னும் தத்துவத்துடன் அர்த்தநாரீஸ்வரராக உணரச் செய்வது, ஸ்ரீ ராகம் என்னும் நிறம். |
| 6. | கல்யாணி | : | மகிழ்ச்சியாய் அமர்ந்துகொண்டு இன்ப உணர்ச்சியுடன் இசையை ஆராதிப்பது இந்த நிறத்துக்குப் பொருந்தும். |
| 7. | தன்யாசி | : | கடவுளிடம் நம் குறைகளை முறையிட்டு ஆபத்ஸஹாயராக வந்து அருளக்கோரிடுவதற்கு இந்த நிறம் ஏற்றது. |
| 8. | கேதாரகௌளை | : | மிகவும் துன்பப்படுவதாய் வேண்டி, குறைதீர்க்கும்படி கேட்டுக்கொள்ளுவதற்கு இந்த நிறம் உரியது. |
| 9. | பூர்விகல்யாணி | : | பாவம்செய்யாதே மனமே என்று தன்மனத்தையும் தரணியிலுள்ள பேர்க்கும் இந்நிலை அருள்வேண்டும் என்பதற்காக வேண்டுவது இந்த நிறம். |
| 10. | பெஹாக் | : | தான் விரும்பிய கோரிக்கை நிறைவேறிட நன்றியுடையவனுக வேண்டிக்கொள்ளுவது இந்த நிறம். |
| 11. | யதுகுல காம்போதி | : | மெய்யறிவுத் தோற்றம் உண்டாகவே, அதற்குமுன் தான் செய்த பாபச்செய்கைகளைக் குறித்து இரங்குதலும், இனி அவ்வாறான செய்கைகளில் ஈடுபடாமல் உறுதி மனம் வேண்டிடுவதாக அமையப்பட்டது இந்த நிறம். |
| 12. | பிலகரி | : | நல்லகாரியங்களைச் செய்வதற்குத் துணிவு, புலன்களை வெற்றிகொள் எனத் தூண்டுதல் செய்வதற்கு இந்த நிறம் பெரிதும் தகுதியுடையதாகும். |
| 13. | ஸகாஞ | : | ராகதேவதைகளிடம் மன்னிப்புக் கோரிட இந்த நிறம் பொருந்தும். |

| | | | |
|---|---|---|---|
| 14. | ஆனந்தபைரவி | : | நிலைபெற்ற சாந்தம் கோரிடுவதற்கு இந்த நிறம் உகந்தது. |
| 15. | தோடி | : | கடவுளிடம் நம்பிக்கையுடைய ஒரு அன்பன் தனக்கும் கடவுளுக்கும் உள்ள பேதாபேதங்களை வெளிப்படுத்த இந்த நிறம் தகுதியுடையது. |
| 16. | பூபாளம் | : | அருணோதயத்தின் மெய்யுணர்வும் சாந்த மனோ நிலையும் அமைதியும் தரும் நிறம். |
| 17. | மோகனம் | : | கடவுளின் எல்லையில்லாப் புகழினைப்பாடிப் பரவசப் படும் நிறம். |
| 18. | நீலாம்பரி | : | நற்சாந்த நிலையில் அமைதியாய்த் தூங்கி, தேக வலிமை மனோவலிமை புத்துணர்ச்சியும் பெற்று வாழ் என்று வாழ்த்தும் நிறம். |
| 19. | முகாரி | : | துக்கத்தை வெளிப்படுத்திப் புலம்பலாகக் கோரிக்கை விடுக்கும் நிறம். |
| 20. | நாட்டைக்குறிஞ்சி | : | எல்லோரும் இன்பசாகரத்தில் திளைத்து இனிய மன மகிழ்வு பெறும் நிறம். |
| 21. | நாதநாமக்கிரியை | : | நாதமும் வேதமும் கீதமுமாகிய இறைவனின் கிரியா சக்தியைப் போற்றிப்புகழும் நிறம். |
| 22. | புன்னாகவராளி | : | மெய்ம்மறந்து மகாதேவனிடம் மனம் லயித்துக் கூத்தாடி மகிழச்செய்யும் இந்த நிறம். |
| 23. | சாவேரி | : | கடவுளிடம் கொண்டுள்ள தூயதான பக்திக்காதலை வெள்ளப்பெருக்காகப் பெருக்கெடுத்து ஓடச் செய்வது இந்த நிறம். |
| 24. | சங்கராபரணம் | : | கைலைநாதரைக் கல்யாணசுந்தரராகக் கொண்டு கண்டு மகிழ்வுபெறும் உணர்வினைத் தூண்டச் செய்யும் நிறம். |
| 25. | வேகடை | : | சத்தியத்தையே கடைபிடித்து வரும் ஒரு அன்பருக்கு எதிர்பாராத இன்னல்வந்து நேர்ந்துள்ளபோது, நண்பனாக வந்து காத்தருளும்படியாக இறைவனிடம் வேண்டியழைக்க இந்த நிறம் உகந்தது. |

26. மத்தியமாவதி : பக்தியுடன் பகவானை அனுதினமும் போற்றும் பாவலர்களுக்கும் பாமரர்களுக்கும் கோரிக்கை யில்லாமலேயே ஸர்வமங்களங்களும் கங்காள தாரணர் அருள்பாலித்திடுவார் என்பதைக் குறித்திடும் இந்த நிறம்.

இம்மாதிரி நிறங்களின் சுவை உணர்ச்சி தக்கவிதத்தில் பொருந்துவதாய், இன்பமயமாய், அநிர்வன்யமாய்ப் புகழத்தக்க விதத்தில் நிற ஆளத்தியென்பது நம் தமிழ் நாட்டிலேயே தொன்றுதொட்டு மரபாக வழங்கி வருகின்றது, இந்த நிறமாகிய இராகமும், நிறத்தின் ஆலாபனை முறையும் நம் தமிழினத்தோரின் பூர்வீகச் சொத்து.

திருக்கோயில்களில் அன்றாடம் நடைபெறும் பூஜாகாலங்கள்

அதிகாலை 5 மணிக்கு துவக்கம் உஷகாலம்
காலை 9 மணிக்குத் துவக்கம் காலசந்தி
பகல் 12 மணிக்குத் துவக்கம் உச்சிக்காலம்
மாலை 5 மணிக்குத் துவக்கம் சாயரட்சை
இரவு 7 மணிக்குத் துவக்கம் இரண்டாங்காலம்
இரவு 9 மணிக்கு அர்த்தஜாமம் – பள்ளியறை பூஜை.

பள்ளியறை பூஜை சமயம்
ஆந்தபைரவி – நீலாம்பரி – ஸகாஞ ஆகிய நிறங்களில் ஏதாவது ஒன்று வாசித்துக் கதவடைப்பாட்டு என்று சக்கரவாக இராக நிறத்திலமைந்த பாடல் வாசிக்கப்படும். மற்றும் இராக நிறங்களைப் பூஜாகாலங்களுக்கென்று பன்னிரண்டு பாகமாகப் பிரித்துக் காண்பிக்கப்பட்டுள்ளதின்படி அந்தந்தக் காலம் நேரத்துக்கு ஏற்ப வாசித்திடுவதே வழக்கம்.

அதிகாலை மணி 4 முதல் 6 வரை
பூபாளம் – பௌளி – மலயமாருதம் – வலஜி நாத நாமக்கிரியை – மாயாமாளவ கௌளை.

காலை மணி 6 முதல் 8 வரை
பிலகரி – கேதாரம் – கௌளிபந்து – ஜகன்மோகினி –

காலை மணி 8 முதல் 10 வரை
தன்யாசி – அசாவேரி – சாவேரி – ஆரபி – தேவகாந்தாரி – தேவமனோகரி.

**10 மணி முதல் பகல் 12 மணிவரை**

சுருட்டி – ஸ்ரீராகம் – மத்யமாவதி – மணிரங்கு – பிருந்தாவன சாரங்கா – தர்பார்

பகல் மணி 12 முதல் 2 மணிவரை

சுத்தபங்களா – பூர்ணசந்திரிகா – கோபிகா திலகம் – முகாரி – கௌட மல்லார்.

பிற்பகல் 2 மணி முதல் 4 மணிவரை

நாட்டைக் குறிஞ்சி – உசேனி – ரவிச்சந்திரிகா – வர்த்தனி – ஹம்ஸா
னந்தி – மந்தாரி.

மாலை 4 மணி முதல் 6 மணிவரை

பூர்விகல்யாணி – பந்துவராளி – வஸந்தா – லலிதா – சரஸ்வதி –
சீளாங்கி – கல்யாணி – போகவசந்தம் – ஹம்ஸப்பரமரி.

மாலை 6 மணி முதல் இரவு 8 மணி வரை

சங்கராபரணம் – பைரவி – கரகரப்பிரியா – பைரவம் – நாராயணி –
ஹம்ஸத்வனி – கௌளை – இரத்னும்பரி.

இரவு மணி 8 முதல் 10 வரை ,

காம்போதி – ஷண்முகப்பிரியா – தோடி – நடபைரவி –
ஹரிகாம்போதி – கமாஸ் – அமிர்த வஸந்தம் – ஸ்ரீரஞ்சனி.

இரவு 10 மணி முதல் நள்ளிரவு 12 மணிவரை

சிம்மேந்திரமத்யமம் – சாருகேசி – கீர்வாணி – ரீதிகௌளை – ஆனந்த
பைரவி – நீலாம்பரி – யதுகுலகாம்போதி – கார்த்தியாயனி – அம்ஸ நாதம்.

நள்ளிரவு 12 மணி முதல் 2 மணி வரை

அடாளு – கேதாரகௌளை – வேகடை – சாமா – வராளி – தர்மாவதி – பூஷவளி.

2 மணி முதல் அதிகாலை 4 மணிவரை

ஹேமவதி – கர்ணாடக தேவகாந்தாரி – ரசாளி – பாகேஸ்வரி – மோகனம் –
அருணக்கிரியா.

உற்சவ காலங்களில்

ஏர்படி உத்ஸவ காலங்களில் பத்து தினங்கள் சுவாமி வீதியுலா நடைபெறும். காலை விழாவில் கோயில் ஆஸ்தான கலைஞர்கள் வாசிப்பார்கள்.

இரவு புறப்பாட்டிற்கு ஏர்படி மேளம்

இரவு வீதியுலாவிற்குச் சிறப்பு நாதஸ்வர கச்சேரிபத்து தினங்களுக்கும் ஒரே குழுவினரோ, இரண்டு பகுதியாக, ஐந்து தினங்களுக்கு ஒரு செட்டோ, ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும். முக்கிய திருவிழாக்களில் இரண்டு குழுவினா் சந்தித்து வாசிக்கும்படியாகவும் அதிகமாகச் செட்டு ஏற்பாடு செய்வது வழக்கம்.

மல்லாரி

சுவாமிக்கு மண்டகப்படி தீபாராதனை நடக்கும் எழுந்தருளும் சமயம். கெம்பீர நாட்டை தவில் அலாரிப்புடன் முழங்கிடும். பிறகு மல்லாரி.

மல்லாரி என்பது கலைஞர்களின் கைவண்ணமே

ஆதியில் காளிதேவியுடன் தாண்டவம் புரிந்து சிவபெருமான் கால் சலங்கையுடன்ஆகாயத்தில் உயரக்கிளம்பி ஆகாயமளாவி இறங்கும்போது அவரது புஜம் துடைபாதம் நிலத்தில் விழுந்தபோது தா,தீ,தொம், நம், என்ற ஜதி பிறந்தது. அது ஜாதிவர்ணங்களினுல் மிருதங்காதி வாத்யங்களுக்குப் பிரதானமாகவும் சக்தி, சிவம் பொருந்திய இரண்டு கைகளினுலும் தீம் தீம் தீமி தாம் தாம் என்று அடிக்கும்போது உண்டாகிய தொனியானது ஸப்தஸ்வரங்களினுடைய நாதம் என்றும் சொல்லப்பெறும். இதன் காரணமாகத் தான் தோல்கருவியாகிய தவில் வாத்யத்தில் தவுல் சொல் "குந்த குந்தகு திருத குந்தகு" என்பதாக அலாரிப்பு வாசிக்கச்செய்து பிறகு கெம்பீர நாட்டை நிறமும் மல்லாரியும் துவங்கப்படுகிறது.

மல்லாரியென்பது என்ன?

பஞ்சமுக பரமனின் பாதசலங்கையில் ஒலித்து, பவனிவரும் நாட்டை கொளளை ஆரபி வராளி ஶ்ரீராகம் இணைந்து அலாரிப்புடனே தாளம் தவிலுடன் தழுவிக் குழலில் நடனம் செய்யும். மல்லாரியென்று சொல்லும் காவியக்கலையிதுவே.
பரமனுரின் பாத சலங்கையிலிருந்து தோற்றுவிக்கப்பட்டவையே அனைத்தும் என்பதான கருத்துடன் இந்த ஸாஹித்யம் செய்யும்படி எனக்கு அருள் கிட்டியது. இதற்கு உவமையாகத் திருவாசகத்திலிருந்து ஒரு வாசகம் தருகிறேன்.

குயிற்பத்து

கீதமினிய குயிலே கேட்டியேல் எங்கள் பெருமான்
பாதமிரண்டும் வினவில் பாதாள மேழினுக்கப்பால்
சோதிமணிமுடி சொல்லிற் சொல்லிறந்து நின்ற தன்மை
ஆதிகுணமொன்றுமில்லான் அந்தமில்லான் வரக்கூவாய்.

பாதங்கள் வினவிடும் சொற்கள் ஏழுபாதாளங்களுக்கு அப்பாலும் பேசிடுவதாகவும், மற்ற எந்தச் சொற்களும் உயிரற்றதாகவும் மாணிக்கவாசகர் சொல்லிடும் பாதங்கள் இரண்டும் வினவிடும் சொற்கட்டுகளையே தாளக்கட்டுப்பாட்டுடன் மல்லாரியாக அமைத்து சுரக்கோர்வை ஆகியவைகளுடன் அவாளவா திறமைக்கேற்ப மல்லாரி உருப்பெற்று முழங்கி வழங்கிடப்படுகின்றது.

கெம்பீரநாட்டை நிறத்தில்தான் மல்லாரி வாசிக்கப்படவேண்டும். ரிஷபம் பிடித்துப் பாடப்படும் சலநாட்டையில் மல்லாரி வாசிக்கக் கூடாது. இறைவனுக்குக் கட்டியம் கூறிடுவதான கருத்துடன் அமைந்துள்ளதுதான் மல்லாரி. மல்லாரியில் லயவேலைப்பாடுகள் முடிந்து, பிறகு அன்னியராகமாக (அதாவது ராகமாலிகை) கனபஞ்ச இராகங்கள், நாட்டைக்குப் பிறகு கௌளை, ஆரபி, வராளி, ஸ்ரீராகம் இந்த ஐந்து ராகங்களும் தேரடிவரை வாசிக்கலாம். இவ்வகைப் பஞ்சராகங்களின் சிறப்புகள் கீழே தரப்பட்டுள்ளன.

| | |
|---|---|
| பவனி வருங்கால் | நாட்டை |
| பக்திப் பெருக்கால் | கௌளை |
| பரம்ஜோதியே | ஆரபி |
| பந்தத்தை மறக்க | வராளி |
| பரமனில்பாதி | ஸ்ரீ |

சுவாமி புறப்பட்டுக் கோபுரவாயில் வந்தவுடன் கோபுரதெரிசன தீபாராதனை செய்யப்படும். அது சமயம் கெட்டிமேளம் வாசிக்கப்படும். "கெட்டிமேளம்" அரஹரா அரஹரா என்று இறைஞ்சி முழங்கிடுவதான பொருள். அங்கு முப்பத்து முக்கோடி தேவர்கள், நாற்பத்து எண்ணுயிரம்கோடி ரிஷிகள், அஷ்டவசுக்கள், கின்னரர், கிம்புருடர், சித்த வித்யாதரர், ஏகாதசருத்ராள் துவாத சாதித்தர், ஆகியோரெல்லாம் வந்து அருள்பாலிப்பதாகிய மெய்யுணரவேண்டும், சகலவாத்யம் சாதுஜன சங்கமம்!

தேரடி வந்து வாஹனங்களில் எழுந்தருளிய பிறகு தலைமை (நிறம்) இராகம் வாசித்திடுவது ஸம்ப்ரதாயம்.

காலம் கண்டு இராகம் வாசித்தல்

கலைஞர்களின் அப்போதைய மனோபாவத்துக்கேற்பத் தலைமை இராகம் (நிறம்) எடுத்துக்கொள்ளப்படும். தெற்குக்கோபுரவாசல் வந்தவுடன் பல்லவி–ரக்தி ஆகியவை வாசித்து லயவின்யாசங்கள் செய்யப்படும். அதன் பிறகு கிருதிகள் மற்றும் ரஸிகப்பெருமக்கள் அவாவைப்பூர்த்தி செய்வதாகியன வாசிக்கப்படும்.

வீதிவலம் வந்து கீழவாசலில் திருஷ்டி சுத்தும்போது தேவாரம் முதலிய திருமுறைப்பாடல்கள், வாசிக்கவேண்டும். சுவாமி கருவறைக்கு வரும்போது எச்சரிக்கை பதம் ஜாவளி ஆகியவை வாசித்து நிறைவு செய்யப்படும். ஐந்தாம் திருவிழாவன்று தெருவடைச்சான் என்னும் ஓலை சப்பரக்காட்சி. பஞ்சமூர்த்திகளும் புறப்பட்டுக் கோபுர தெரிசனம்வரை வாசித்திட வேண்டும்.

எட்டாந்திருவிழா

பிக்ஷாடனர், புவியிலுள்ளோர்களின் பாவங்களைப் போக்கிடுவதான பொருள் படிப்பகவான் பிச்ஷாடனராக வீதிவலம் வரும் காட்சி அன்று உடற்கூறு வாசித்திட வேண்டும். நாத நாமக்கிரியா நிறத்திலமைந்த சந்தம். நாதனுடைய நாமக்கிரியைகளைப்

போற்றிப்புகழ்வதாக இந்த உடற்கூறு அமைகின்றது. மூன்றுமணி நேரத்துக்கும் அதிகமாகவே, இதே உடற்கூறும் லய வின்யாசங்களும் செய்து வந்து தங்கரதத்தில் பரமேஸ்வரன் எழுந்தருளும் வரை வாசித்திட வேண்டும்.

ஒன்பதாம் திருவிழா

காலை சுவாமி ரதத்துக்குப் புறப்படுதல், ரதயாத்ராதானம் தேர் மல்லாரி (பஞ்சாட்ச்சரம்) ஐந்து அட்ச்சரங்களைக் கொண்டதாகிய கெண்ட நடையில் வாசிக்கப்படும். தேரில் எழுந்தருளும்வரை, இதையேதான் வாசித்திடல் வேண்டும். மாறுதல் செய்யக்கூடாது. மூன்றுமணி நேரம் ஆகிவிடும். வீதியில் உத்ஸவமேளம் வாசிப்பது இல்லை. இரவு 7 மணியளவுக்குத் தேர் நிலையடி வந்த பிறகு ஆயிரங்கால் மண்டபம் வரை முத்துத் தாண்டவர் பதங்கள் வாசித்து அழைத்து வரவேண்டும்.

பத்தாம் திருவிழா

அதிகாலை தீர்த்தமல்லாரியுடன் திருமஞ்சனம் எடுத்துவரப்பட்டு அபிஷேகம் அலங்காராதிகளுக்குப் பிறகு தளிகை மல்லாரியுடன் நிவேதனங்கள் கொண்டு வரப் பட்டுத் தீபாராதனை, பிறகு தெரிசனம் ஞானகான சித்சபா பிரசேஸக் காட்சி.

ஐவகை மல்லாரிகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | தீர்த்தமல்லாரி | – | திருமஞ்சனம் எடுத்துவரும்போது |
| 2. | தளிகை மல்லாரி | – | நிவேதனம் எடுத்துவரும்போது |
| 3. | கும்பமல்லாரி | – | பூர்ண கும்பம் கொடுக்கப்படும்போது |
| 4. | தேர் மல்லாரி | – | சுவாமி தேர்க்குப்புறப்படும்போது |
| 5. | புறப்பாட்டு மல்லாரி | – | சுவாமி புறப்படும்போது. |

விடையாற்றி

விடையாற்றி முத்துப்பல்லக்கில் பஞ்ச மூர்த்திகளும் வீதியுலா. அன்று உஸேனி நிறம்தான் ஆலாபனைக்கு முக்கியமாக எடுத்துக்கொண்டு பல்லவி ஆகியவை, வழக்கப்படி சுவாமி கருவறைக்கு வந்து சேர்ந்த பிறகு லாலி ஊஞ்சல், மங்களம் வாசித்து நிறைவு செய்யப்படும்.

தில்லை கோவிந்தராஜ பெருமாள் ஆலயத்தில்

நவராத்திரி ஒன்பது நாள்களும், கோயில் உள்ளே பிரகாரம் மட்டும் ஸ்ரீ தாயார் புறப்பாடு இவ்விழாவில் பெருமாள் சந்நிதிக்கு நேராக வந்து நிறுத்தி, மாலை மாற்று வைபவம் நடைபெறும். சுமார் ஒருமணி நேரம் மாலைமாற்றுப் பாடல்கள் சங்கராபரணம், சுருட்டி, ரீதிக்கௌளை, ஆனந்த பைரவி, உஸேனி, மத்யமாவதி, ஆகிய நிறங்களிலமைந்து ஸ்ரீ தியாகராஜ சுவாமிகள் உத்ஸவசம்பிரதாயப் பாடல்கள் வாசிக்கப்படும், தாயார் சந்நதிக்கு வந்தவுடன் திருவந்திகாப்பு (வைஷ்ணவஸம் பிரதாயத்தில் பெயர்) திருஷ்டி சுத்து நடைபெறும்.

தேவாரம் மற்றும் சில நிறங்கள் வாசித்து எச்சரிக்கை வாசித்துக் கருவறை சேர்த்திடல் வேண்டும். உத்ஸவம் மறுநாள் உண்டு என்றால் மல்லாரியை ஒரு சுற்றுக் காண்பித்து நிறுத்துவது வழக்கம் பூர்த்தியன்று மங்களம் வாசித்துப் பூர்த்தி செய்திடவேண்டும்.

இந்த வழிமுறைகள் யாவும் குருகுல வாசத்தின் மூலமாகவும் அனுபவ வாயிலாகவுமே பெறமுடியும். இந்தக் கட்டுரையை நான் எழுதிட அடிப்படை எங்கள் மூதாதையர்கள் என் தகப்பனார் ஆண்டாங்கோயில் வீராசாமி பிள்ளை அவர்களும் என் தமையனார், ஆண்டாங்கோயில் ஏ.வி. கருப்பையா பிள்ளை அவர்களும் மிகவும் பிரபலமான, அடிப்படையுடையவர்களான நாதஸ்வர வித்வான்கள், அவர்கள் விட்டுச்சென்ற கையெழுத்துப் பிரதிகளாகிய இசைக்குறிப்புகளைப் பார்த்தும் எனது மைத்துனரும் மாமனாருமாகிய நாதஸ்வர வித்வான் கலைமாமணி சிதம்பரம் ஸ்ரீ ராதாகிருஷ்ண பிள்ளை அவர்களிடம் 15 வயது முதல் கூட வாசித்த அனுபவமும் மற்றும் இசை இலக்கிய இலக்கண நூல்களைப் பார்த்தும் கடவுளனுக்ரஹத்துடன் சங்கீதம் ஒரு நுண்கலை மட்டுமல்ல இசை வழிபாட்டிற்கு உறுதுணையானது என்பதினைப் பணிவுடன் ஆன்றோர்கள் தாள் பணிந்து ஸமர்ப்பிக்கின்றேன்.



# மல்லாரி

கலைமாமணி, அரித்துவாரமங்கலம் திரு.ஏ.கே. பழனிவேல்

இறையும் இசையும் ஒன்றெனக் கண்டவன் தமிழன். அதன் காரணமாகவே தன் வழிபாட்டுக்கென்று அவன் உருவாக்கிய இறைவடிவங்களோடு, இசைக் கருவிகளையும் இணைத்தான். கலைத்தேவியின் கரங்களில் வீணை, கண்ணனின் கரத்தில் வேய்ங்குழல், சிவபெருமானின் கரத்தில் டமருகம் மற்றும் சில சமயங்களில் வீணை – இவ்வாறு இறைவன் அல்லது இறைவனின் பிரதிமைகளில் இசைக்கருவிகள் இருப்பதைக் காண முடிகிறது. இது தவிர, வழிபாட்டுக் காலங்களின் போதெல்லாம், பூசைகளின் அங்கமாக இசை, நாட்டியம், போன்றவற்றையும் அமைத்திருப்பது தமிழனின் பக்தியுணர்வையும், இசையின்பால் ஈடுபாட்டையும் நமக்குத் தெள்ளெனத் தெரிவிக் கின்றன. ஆலயங்களில் அன்றாடமும் மற்றும் திருவிழாக் காலங்களிலும் நடத்தப்பெறும் வெவ்வேறு வழிபாடுகளின்போது இசை, நாட்டியம் முதலியன எவ்வாறு பயன்பெறவேண்டுமென்றவொரு நியதியையும் மனிதன் வகுத்துக்கொண்டான். அவன் வகுத்த நியதியே, ஆகமங்களில் இடம் பெறலாயிற்று. இறைவனுக்கான ஆலய அமைப்பு, அங்கே நடத்தப்பெறவேண்டிய வழிபாடுகள், இறைப்படிமத்தின் அமைப்பு, இசை, நாட்டியத்தின் பங்கு என்பன போன்ற பல்வேறு அரிய செய்திகளை நமக்கு உணர்த்த எழுந்த சாத்திரங்களே ஆகமங்கள் எனப்பட்டன.

இசைமூலமான வழிபாடு என்னும்போது திருமுறை அல்லது திவ்வியப்பிரபந்தம் விண்ணப்பித்தல், நாதஸ்வரம் தவில் இசைமுழக்கம், நாட்டியம் ஆகியவை இடம்பெறும். தினசரி வழிபாடுகளின்போது, எந்தெந்த இறைவனுடைய சந்நிதியில் என்னென்ன ராகம் வாசிக்கப்படவேண்டுமென்ற மரபு உண்டு. பொதுவாகத் தமிழகத்துக் கோவில் களில் இறைவனுடைய வீதியுலா என்று கூறும்போது, அங்கே நாதஸ்வரம்– தவில் வாத்தியங்களுக்கு – முதலிடம் அளிக்கப்பட்டுள்ளது. அந்த வகையில் தோற்றம் பெற்றதுதான் 'மல்லாரி' எனும் இசைவகை. இந்த ஆய்வரங்கத்தின் தலைப்பு 'மல்லாரி' என்ற காரணத்தால், அதைப்பற்றிச் சிறிது விளக்க முற்படுகிறேன். எனது விளக்கங்களுக்கு ஆதாரமாக அமைந்தவை இரண்டு, முதலாவது மரபின்முறை பிசகாமல் இக்கலைகளைத் தொன்றுதொட்டுக் கையாண்டுவந்துள்ள, நான் அறிந்த மூத்த கலைவல்லுநர்களின் வாயிலாக நான் கேட்டறிந்தது. அடுத்து, நாதஸ்வரம்– தவில் வாத்தியங்கள், ஆலயச் சேவையில் அவற்றின் பங்கு, ஆகமங்களின் கூற்று முதலியவற்றை நன்கு ஆராய்ந்தறிந்த அறிஞர்களிடம் கேட்டறிந்தவை. எனவே, இங்கே நான் கூறவிருக்கும் செய்திகள் மரபின் வழி கையாளப்பட்டு வருவது மட்டும் அன்றி ஆதாரபூர்வமானது என்பதைக் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

'மல்லாரி' – இறைவன் அல்லது இறைவி வீதியுலாவுக்க எழுந்தருளும்போது நாதஸ்வரத்தில் ஒலிக்கப்படும் ஒரு இசைவகை. வீதியுலா என்றால், ஸ்வாமி ஆலயத்திலிருந்து வெளியே வந்து ஆலயத்தைச் சுற்றியுள்ள நான்கு வீதிகளிலும் பவனி வருதல் என்பது மட்டும் அல்ல. கோயிலின் பிரகாரத்தைச் சுற்றி வந்தாலும், அது இந்தத் தலைப்பில் அடங்கும். காரணம், சுவாமி, தன் இருப்பிடத்தை விட்டு நகர்ந்தாலே அங்கே 'மல்லாரி'க்கு முதலிடமுண்டு. சுவாமி புறப்பாட்டின்போது

மட்டுமே மல்லாரி இசைக்கப்படுமென்று பொதுவாக எல்லோரும் நினைப்பார்கள். ஆனால், வேறுசில சந்தர்ப்பங்களிலும் மல்லாரிக்கு இடமுண்டு. இதுபற்றி உரிய கட்டத்தில் கூறுவேன்.

'மல்லாரி'யை ஒரு 'அடையாள இசை' யென்றும் கூறலாம். நெடுந்தொலை விலிருப்போர்கூட, மல்லாரியின் ஒலிகாற்றிலே தவழ்ந்து வரக் கேட்கும்போது, அருகாமையில் எங்கோ சுவாமி புறப்பாடு நடைபெறுகின்றதென்பதை உடனே அறிந்து கொள்ள உதவி செய்கின்றது. 'மல்லாரி' என்ற சொல் எந்த மொழியில் அமைந்ததென்பதை அறுதியிட்டுத் திட்டவட்டமாகக் கூறமுடியாதது ஆயினும் அது வடமொழிச் சொல் என்று சொல்வதற்குான ஆதாரங்கள் கூறப்படுகின்றன. 'மல்லர்' என்றால் மல்யுத்தம் புரிபவர்கள் என்றும், இறைவனுடைய திருமேனியைத் தாங்கி வாகனத்துக்குக் கொண்டு வருபவர்கள் என்றும் பல பொருள்கள் உள்ளன. சுவாமி தூக்குபவர்களை 'மல்லர்' என்றழைக்கும் வழக்கம் முற்காலத்தில் இருந்துள்ளது. மல்லர்களின் உற்சாகமான கோஷத்தை 'மல்லாரி' என்ற குறிப்பிட்டார்கள். வடமொழியில் 'ரி' என்ற சொல்லுக்குக் 'கோஷம்' 'பேரொலி' எனப்பொருள். எனவே மல்லர்–அல்லது மல்ல ரி–மல்லரி என்று ஏற்பட்டு, வழக்கில் திரிந்து, குறில் நெடிலாகி 'மல்லாரி' என்றாகிவிட்டது என்பதும் அறிஞர்களின் கருத்து. மல்லாரி வெறும் கோஷமாக இல்லாமல், அது இசையோடு கூடியதாக, இசைக்கப்படுவதாக இருக்கவேண்டுமென்ற காரணத்தால், சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான முத்துசாமி தீட்சிதரின் தந்தையாரான ராமசாமி தீட்சிதர் 'மல்லாரி'யை வடிவமைத்தார் என்று கூறுப்படுகிறது. அப்படியானால், அவருடைய காலத்துக்கு முன் எவ்வித இசை கையாளப்பட்டது என்ற கேள்வி எழுவது இயற்கை. 'பிரபந்தம்' என்றொரு இசைவகை உண்டு. 72 மேளகர்த்தாக்களை நமது இசைக்கு வடித்துத்தந்த வெங்கடமகி என்பவர் (17ஆம் நூற்றாண்டு) பல்வேறு பிரபந்தங்களைத் தன் நூலில் உதாரணங்களுடன் கொடுத்துள்ளார். கைவரப்பிரபந்தம், ஸ்ரீரங்கப்பிரபந்தம், உமாதிலகப் பிரபந்தம் – இப்படியாகப் பல. இவற்றுள், ஸ்ரீரங்கப்பிரபந்தம், கம்பீர நாட ராகத்திலேயே, மல்லாரிக்குப் பெரிதும் ஒற்றுமையுடையதாகக் காணப்படுகிறது. அதுவும் தத்தக்காரங்களைக் கொண்டதே. ஆயினும், இறுதியில் மட்டும் ஓரிருவரிகள் பாடல் என்றவாறு கொண்டிருக்கும். இந்த ஸ்ரீரங்கப்பிரபந்தத்தின் வழியெழுந்தது மல்லாரி என்று கருத இடமுண்டு.

'மல்லாரி' எவ்வாறிருக்கும், அதில் எத்தனை வகைகள், அது எப்போது இசைக்கப்படும் என்பது பற்றியெல்லாம் காணும் முன்பு வேறு சிலவற்றையும் நாம் கவனித்து அறிய வேண்டியது அவசியமாகும். இது ஐந்து ஸ்வரங்களை ஸ–க–ம–ப–நி–ஸ–நி–ப–ம–க–1– என்ற ஐந்து ஸ்வரங்களை மட்டுமே கொண்டதும், வீரச்சுவை மிக்கதுமான 'கம்பீரநாட்ட' என்ற ராகத்தில் மட்டுமே இசைக்கப்பெறுவதாகும். ஞானசம்பந்தப்பிள்ளையாரின் முதல் தேவாரப்பாடலான 'தோடுடைய செவியன்' என்பதோ, நாலாயிரத்திவ்வியப்பிரபந்தத்தின், பெரியாவாழ்வரின் முதற்பாசுரமான 'பல்லாண்டு பல்லாண்டு' என்பதோ, நாட்டயிடைப்பண் எனும் கம்பீர நாட்ட ராகத்தில் மட்டுமே இசைக்கப்படுவதை நாம் கேட்கின்றோம். பஜனை சம்பிரதாயத்தில்கூடி முதலாவதாகத் தொடங்கப்படும் 'ஜயஜானகி ரமண' என்ற தோடயமங்களப்பாடலும் இதே கம்பீர நாட்ட ராகத்திலேயே பாடப்பட்டு வருவதை இன்றும் கேட்க முடிகின்றது. சிவபெருமானுக்கு

ஐந்து முகங்கள், பஞ்ச சக்தி, பஞ்ச இந்திரியங்கள், பஞ்சபூதங்கள், ஐந்தெழுத்து –என்றெல்லாம் ஐந்து என்ற எண்ணோடு தொடர்பு கொண்டவை மிகப்பல. இறைவனுடைய வழிபாடு என்றால், அங்கே முதன்மைப் படுத்தவேண்டியது ஐந்து என்ற எண்ணிக்கை என்பதை ஆகமங்கள் தெளிவுறத் தெரிவிக்கின்றன. இசையில் ஐந்து என்பது ஐந்து ஸ்வரங்களைக் கொண்ட ராகம், ஐந்து அட்சரங்களைக் கொண்ட தாளம் என்றுதான் அமைந்தன. இவ்வாறுதான் அந்தக் குறிப்பிட்ட வழிபாடு ஆரம்பிக்கப்படவேண்டுமென்பது நியதி, ஆகமங்களின் விதி. இதைப்பின்பற்றியே பண்டைய பெருங்கலைஞர்கள் மல்லாரி–அது எவ்வகைப் பட்டதாயினும்–கம்பீரநாட்ட ராகம் ஒன்றில் மட்டுமே இருக்கவேண்டுமென்ற மரபைத் தோற்றுவித்து, அதை அனைவரும் பின்பற்றி வந்துள்ளனர். மல்லாரியை முறைப்படி கம்பீரநாட்ட ராகத்தில் வாசித்துவிட்டு, ஸ்வரப்பிரஸ்தாரம் செய்யும்போது கௌளை, ஆரபி, வராளி, ஸ்ரீ என்ற ராகங்களை மாலையாகத் தொடுத்து மீண்டும் கம்பீர நாட்ட ராகத்திலேயே மல்லாரியை எடுத்து முடிப்பது வழக்கம். ஆனால், மல்லாரியையே ராகமாலிகையாக ஆக்குவதோ, காடை ஜோன்புரி அல்லது வேறு ஏதோவொரு ராக்த்தில் வாசிப்பதோ மரபுக்கு முரணான செயல் என்பதைக் குறிப்பிடாமலிருக்க முடியாது. முன்னவர்கள் செய்ததையே நாமும் செய்யவேண்டுமா? புதுமையாக அமைப்பதில் தவறென்ன என்று சிலர் கேட்கலாம். புதுமை மரபைப்பின்பற்றித்தான் அமைய வேண்டும் என்பதையாரும் மறுக்க முடியுமா? ஏழுஸ்வரங்களை விடுத்துப் புதுமையாகப் புதிதாக யாராலும் கண்டுபிடித்திருக்கிறார்களா? மரபை மதிப்பதுதானே நமக்குப் பெருமை?

'மல்லாரி' என்பது வெறும் தத்தகாரமாக அமைவதுதான்; அதற்கு ஸாஹித்யம் கிடையாது. ஸாஹித்தியமிருக்குமானால் அது மற்ற பாடல்களுக்கொப்பாக ஆகிவிடுமென்று கருதியும் வீரச்சுவை குறைவதற்கான வாய்ப்பு அதில் உண்டு என்பதாலும் ஸாஹித்யத்துக்கு மல்லாரியில் இடந்தரவில்லை. கொரநாடு நடேசபிள்ளை போன்ற ஸாஹித்யகர்த்தாக்களான நாதஸ்வரக் கலைஞர்கள், திருவாரூர் சாமிநாதபிள்ளை, திருப்பாம்புரம் நடராஜ சுந்தரம்பிள்ளை போன்ற மிகப்பெரும் நாதஸ்வரக்கலைஞர்கள் நினைத்திருந்தால் மல்லாரிக்கு ஸாஹித்யம் இயற்றியிருக்கலாம். பெரியவர்கள், நமக்கு முன்பிருந்த வித்வான்கள் ஏதோ நியாயமான காரணத்தைக் கொண்டுதான் மல்லாரிக்கு ஸாஹித்யம் அமைக்கவில்லையே தவிர, அவர்கள் அமைக்கத் தெரியாதவார்கள் அல்லர் என்பதை நாம் மனத்திற்கொள்ளவேண்டும். தற்காலம் சிலர் மல்லாரிக்கு ஸாஹித்தியம் அமைக்க முனைந்திருக்கிறார்கள். நாதஸ்வரத்தில் ஸ்வரங்களாகத்தான் மல்லாரிகள் ஒலிக்குமே தவிர, ஸாஹித்தியமாக இருக்க முடியாது, தவிர அவ்விதம் இயற்றப்படும் ஸாஹித்தியம் உதாரணமாக அம்பாள் பேரில் இருப்பதாக வைத்துக் கொண்டால், அது சிவனுக்கோ அல்லது திருமாலுக்கோ பொருந்துமா? கவிதை அல்லது பாடல் புனையும் திறமையை வெளிக்காட்ட வேறு பல வாய்ப்புகள் இருக்கும் போது, மரபுக்கு முரணான வீண் வேலைகளில் சிலர் இறங்குவதைக் காண வேடிக்கையாகவும் வருத்தமாகவும் இருக்கிறது.

'மேளம்' அல்லது 'நாதஸ்வரக்குழு' என்றால் முதன்மை கொண்ட வாத்தியம் நாதஸ்வரமே; தவில் அதற்குத்துணையாக அமைவதுதான். ஆயினும் தொன்மைக்காலந்தொட்டே வேறு எதிலும் காணமுடியாத ஒருமரபை இக்குழுவில்

மட்டும் காணலாம். நாதஸ்வரம் ஒலிப்பதற்கு முன்பாக முதலில் தவில் முழக்கந்தான் தொடங்கும். அது ஆலயங்களாகட்டும், வீடுகளாகட்டும் வேறெந்த சமூக நிகழ்ச்சிகள் ஆகட்டும், இதுவே அன்று தொட்டு இன்றளவிலும் கைக்கொள்ளப்பட்டுள்ள மரபு முறை.

மல்லாரிக்கு முன்பாகவும் தவில்தான் முழங்கப்பெறும். அப்போது விதிகளுக்கும், மரபுக்கும் உரியவாறு ஐந்து அட்சரங்களைக் கொண்ட "கண்டகதி" மட்டுமே அமர்த்தி வாசிக்கப்படும். இதை 'அலாரிப்ப' என்பார்கள். பரதநாட்டிய நிகழ்ச்சிகளில் கூட முற்காலத்தில், முதல் அம்சமாக அமைந்து வந்த 'மேளப்பிராப்தி' என்பது இந்தக்கண்டகதியில் தான் அமைந்திருக்கும். முன்பே நான் குறிப்பிட்ட 'தோடுடைய செவியன்' 'பல்லாண்டு பல்லாண்டு' 'ஜயஜானகீரமண' முதலிய பாடல்கள் எல்லாமே கண்ட கதியில் அல்லது கண்டசாபு தாளத்தில் மட்டுமே அமைந்தவை என்பது கண்கூடு. பண்டைய பெரியோர்களால் பகுத்து, வளர்க்கப்பட்ட மரபுக்கு, நாதஸ்வரக்கலைஞர்கள் மட்டுமல்ல, தவிற்கலைஞர்களும் பெரிதும் மதிப்பு தந்து, வளர்த்து வந்திருக்கிறார்கள். நாதஸ்வரக் கலைஞர் கூட 'மல்லாரி'யை வேறு ராகத்தில் வாசித்து மரபை மாற்றலாம், ஆனால், தவிற்கலைஞர்களிடம் இவ்விதக் குறையைக் காண முடியாது.

மல்லாரியில் பலவகையுண்டு. சின்னமல்லாரி, பெரிய மல்லாரி, திரிபுடதாள மல்லாரி, தேர் மல்லாரி, தீர்த்த மல்லாரி, தளிகைமல்லாரி, பள்ளியறை மல்லாரி என்றெல்லாம் வகைப்படுவன அவை. சிவன் கோவில்களில் சுவாமி ரிஷப வாகனத்தில் எழுந்தருளும் போது, முதலாவதாக வாசிக்கப்படுவது பெரிய மல்லாரி; பெரிய மல்லாரி அல்லாத வேறு சில 'சின்ன மல்லாரி' எனப்படுவன. ஸ்வாமி புறப்பாடு என்றால் ஒரே மல்லாரி அல்லது மேலும் ஒன்றிரண்டு மல்லாரிகளை வாசிப்பதுண்டு. சுவாமி, கீழவீதியின் நடுவே அமைந்திருக்கும் தேர்நிலை என்ற இடத்தை அடைந்தபோது 'திரிபுடதாள மல்லாரி' வாசிக்கப்படும். ஸ்மிஸ்ர சாபு என்ற தாளம் ஏழு அட்சரங்களைக் கொண்டது. அது தகிட—தகதிமி என்று மூன்றும் நான்குமாக இருக்கும். இதையே 'தகதிமி—தகிட' என்று நான்கும் மூன்றுமாக வைத்துக்கொண்டால் அதைத் 'திரிபுட' தாளம் என்பார்கள். இவ்விதமான திரிபுட தாளத்தில் உள்ள மல்லாரியே திரிடபுட தாளமல்லாரி. குறைந்தது 45 நிமிடங்கள் பிடிக்கும், இந்த மல்லாரியைச் சாதாரணமாக வாசிப்பதற்கென்றால், இதில் லய நுணுக்கங்களை மேலும் புகுத்தி, கல்பனை ஸ்வரப்பிரஸ்தாரம் செய்து முடிக்க எத்தனை நேரம் ஆகுமென்பதை நீங்களே ஊகித்துக்கொள்ளலாம். அமரர் திரு மெய்ஞ்ஞானம் நடராஜசுந்தரம் பிள்ளையவர்கள் இந்தத் திரிபுடதாள மல்லாரியை வாசிக்கக் கேட்டவர்க்கு அது தெரியும்.

தேர்த்திருநாளன்று இசைக்கப்படுவது 'தேர்மல்லாரி', இதுவும் ஐந்து அட்ஷரங்களைக் கொண்ட கண்டத்தில் அமைந்திருக்கும். சுவாமி புறப்படுவதற்கு முன்பு 'யாத்திராதானம்' என்ற சடங்கு நடைபெறும்போது தொடங்கும் தேர் மல்லாரி, அன்று பூராவும் மீண்டும் மீண்டும் வாசிக்கப்படும். வேறு மல்லாரிகள் வாசிக்கப்படுவது கிடையாது.

சுவாமி புறப்பாட்டுக்கு மட்டுமே மல்லாரி அமைந்ததென்று கூறுவதற்கில்லை என்பதை முன்பே குறிப்பிட்டேன். தினசரி பூஜாகாலங்களிலும்கூட மல்லாரிக்கு இடமுண்டு. சுவாமிக்கு நிவேதனம் செய்வதற்காகத் திருமடைப்பள்ளியிலிருந்து தளிகை

(அல்லது படையல் வகை) எடுத்து வரும்போது மல்லாரி இசைக்கப்படும். அதற்குத் 'தளிகை மல்லாரி' என்று பெயர். இதேபோலத் தினந்தோறும் சுவாமிக்குத் திரு நீராட்ட, ஆற்றிலிருந்தோ, திருக்குளத்திலிருந்தோ ஜலம் எடுத்துவரும்போதும் மல்லாரி இசைக்கப்படும். இதைத் 'தீர்த்த மல்லாரி' என்பார்கள். குடமுழுக்குக்காலத்தில் யாகசாலையிலிருந்து நீர் நிரம்பிய குடங்களை எடுத்துவரும்போதும் இதே மல்லாரிதான் வாசிக்கப்படும். திரிபுடதாள மல்லாரியோடு அமைப்பில் ஒற்றுமை கொண்டதாயினும் இது மாறுபட்டது, சிறியதாக இருக்கும். தாளம் மட்டும் திரிபுடதான்.

இவையெல்லாம், நீங்க, வேறொரு சந்தர்ப்பத்திலும் மல்லாரிக்கு இடம் தரப் பட்டுள்ளது. ஆனால், மல்லாரி விரிவாக வாசிக்கப்படாமல் ஓரிரு அடிகளை மட்டுமே வாசிப்பது மரபு. ஆலயங்களின் திருவிழாக்காலங்களில், கடைசித் திருநாள் மட்டும் இது இருக்காது, மற்ற நாள்களில், சுவாமி வீதியுலா முடித்து ஆலயம் திரும்பியபின் அலங்காரத்தைக் கலைத்துப் பள்ளியறைக்கு எடுத்துச் சென்றதும் லாலி, ஊஞ்சல் பாட்டு எல்லாம் வாசித்தபின் கதவைத் தாளிட்டதும் மல்லாரியைக் கொஞ்சம் வாசித்து முடிக்கவேண்டும் என்பது மரபு. அதாவது, மறுநாளும் வீதியுலா (காலையிலோ, மாலையிலோ அல்லது இரு வேளைகளிலுமோ) உண்டென்பதைக் குறிக்கவே இவ்வாறு மல்லாரியைச் சிறிது வாசித்து, அன்றைய நிகழ்ச்சிகளை முடிப்பது மரபு. 'திரிபுட தாள மல்லாரி', 'தேர்மல்லாரி' 'தளிகை மல்லாரி' இவற்றைத் தவிர மற்ற மல்லாரிகளுக்கென்று குறிப்பிட்ட தாளம் கிடையாது. நாதஸ்வரக்கலைஞர் தம் கற்பனைக்கேற்ப ஏதோவொரு தாளத்தில் இயற்றிக் கொள்வார்கள். தீர்த்தமல்லாரி, தளிகை மல்லாரி போன்ற ஒருசில நீங்கலாக மற்ற மல்லாரிகள் எல்லாமே திரிகாலம் செய்யப்படுவது (அதாவது, மூன்று காலங்களிலும் வாசிக்கப்படுவது) உண்டு. நாதஸ்வர–தவில் இசைமரபில் 'மல்லாரி' என்பது இனிமை கொண்டது மட்டுமல்ல, பல லய சம்பந்தமான நுட்பங்களைக் கொண்டு பிரமிப்பூட்டுவதும் கூட. காலங்காலமாக, நம் முன்னோர்கள் ஆய்ந்து, அறிந்து, அமைத்து, வளர்த்து, நமக்குத் தந்து போயிருக்கும் பெருமைக்குரியதும், சிறப்புமிக்கதுமான மரபை நாம் மதித்துப் போற்றிக்காத்து மேலும் வளர்ந்துவரச் செய்வது, நம் நாதஸ்வரத்–தவிற் கலைஞர்களின் தலைமையான கடமையாகும் என்பதில் ஐயமில்லை.



# தவில் கருவியின் சில விவரங்கள்

ஸ்ரீமுருக உபாஸகர்
கே.ஆர். கோவிந்தராஜன்
நாகை மாவட்டம்

இசை உலகம் பெரிது. இறைவன் இசை வடிவானவன். சப்த்ஸ்வர ஓங்காரத்திலிருந்து பிறந்தது இசைக்கலை:

மயில், எருது, ஆடு, கிரௌஞ்சப் பட்சி, குயில், குதிரை, யானை முதலிய பிராணிகளின் ஓசையே, சரிகம பதநி என்ற ஏழு சுரங்களாகி ஆரோகண, அவரோகணக் கிரமத்தில் ஷாடவம், ஔடவம், சம்பூர்ணம், என்ற கூட்டில் பலராகங்களாகிப் பிரகாசிப்பது மிக அருமை. இசைக்கலையில் மேளம் என்ற முறையில் முக்யஸ்தானம் வகிப்பது நாதசுரம். அதற்கு மிக உறுதுணையானது தவில், சுருதிமாதா, லயம் பிதா. தாயாரிடம் பாசப் பிணைப்புடனும் தந்தையாரிடம் கட்டுப் பட்டும் சேயர்கள் நடப்பதே இயற்கை வழக்கு. நாதஸ்தவரத்திற்குத் தாயாகிய சுருதி முக்கியமானது. அதுபோலத் தவிலுக்கு தா என்ற சொல் முக்கியமானது. தா என்ற சொல் சரியான உருவத்துடன் ஒலிக்கவில்லையானால் தா(ய்) இல்லாத குழந்தைக்கு ஒப்பாகும் என்பது குறிப்பிடத்தக்கது.

மந்தார சுருதி தவில்

தவில் என்பது தற்போது அதிகபட்சம் பலா மரத்தில்தான் செய்யப்படுகிறது. ஆனால் 25 ஆண்டுகளுக்கு முன்னதாக, வேம்பு மரத்தில் தவில் தயார் செய்து வாசித்து வருகிறேன். அத்துடன் அளவிலும் முன் இருந்ததை விடச்சற்று குறைத்து, திமிறி தவில் என்ற முறையில் தயார் செய்து வாசித்து வருகிறேன்; நல்ல நாதத்துடன் ஒலிக்கிறது. அத்துடன் தவில் தயார் செய்து வாசித்ததில் ஆதிகாலம் தொட்டே, பலாமரம், பூவரசு, சரக்கொன்றை போன்ற மரங்களிலும் தவில் தயார் செய்து முன்னோர்கள் கையாண்டு இருக்கிறார்கள். அதுமட்டுமல்ல, நூறு ஆண்டுகளுக்கு முன்னதாகத் தொட்டு, தவில் உயரம் 24 அங்குலம், வாய்வட்ட அகலம் 13 அங்குலம் வாய்கனம் அரை அங்குலம், மத்தியில் மரகனம் ஒரு அங்குலம், மையச் சுற்றளவு நாற்பத்தெட்டு அங்குலம், வண்டோதரி, குண்டோதரி, வளயம் அதில் ஆட்டுத்தோல் பொருத்தி, 11 கண்கள் ஏகாதஸ ரத்ராளி, மகிஷவாரினால் கோர்த்து இழுத்துக் கட்டி 12 அங்குல நீளத்தில், திருவாட்சி என்னும் மரத்தில் தவில் கம்பு தயாரித்து வாசித்து இருக்கிறார்கள். அந்த வகையிலும், நாளாக நாளாகத் திருவாட்சி மரம் கிடைப்பது அரிதாகப் போன காரணத்தினுல், நல்ல சந்தனமரம், கருங்காலி, ஆச்சா, அந்தமான், படாக் மரத்திலும் நான் தயார் செய்து வாசித்து வருகிறேன். இடையில் பாணா என்னும் மரத்திலும் தற்காலம் தவில் கம்பு தயார் செய்து வாசிக்கும் நிலை உருவாகி விட்டது, அத்துடன் ஆட்டுத்தோலில் தான் தட்டுகள் தயார் செய்து வாசிப்பது என்ற வழக்கம் மாறுதல் அடைந்து, மகிஷம், காமதேனு, இளங்கன்றுகள் தோலின் மூலமும் தயார் செய்து வாசிக்கும் நிலை இருபத்தைந்து ஆண்டுகளாகப் புழக்கத்தில் வந்துவிட்டது. அத்துடன் இதை முதன் முதலாக அறிமுகப்படுத்தித் தவிலில் குண்டோதரி

வளையத்தில் சொருகி வாசித்து நல்லதொரு நாதம் கிடைக்கவே, இதைக் கச்சேரியில் அறிமுகப்படுத்தியவர் தவில் மேதை கீழ்வேளூர் கே.ஆர். முத்துவீரப்பிள்ளை என்பவர்தான்.

அதுமட்டுமல்ல பிறகு வண்டோதரி வளையத்தில் சொருகி அதை நல்ல முறையில் வார்மூலம் தவில் இழுத்து வாசிக்கும் காலத்திலேயே வண்டோதரியின் நாதம் நல்ல முறையில் ஒலித்த காரணத்தினால், எனது தவில் எடுத்துக்கொண்டு மங்கநல்லூரில் திருவிடைமருதூர் நாதசுர வித்வான் ஸ்ரீமான், வீரசாமி பிள்ளையின் நினைவு நாள் ஊர்வலத்தில் வாசித்தேன். அப்போது அரித்துவாரமங்கலம் அன்புத் தம்பி ஏ.கே. பழனிவேல் அவர்கள் வண்டோதரி ஒலியைக்கேட்டு, என்னிடம் இது என்ன தோல் என்று கேட்டுத் தெரிந்து கொள்ளும் நிலை ஏற்பட்டது. அப்போது உண்மையைச் சொல்லும் வண்ணமாக இந்தத் தோல் மகிஷத்தின் கன்றுத்தோல் என்று சொன்னேன். அப்படியானால் தாங்கள் ஊர் சென்றதும் எப்படியாவது எனக்கும் ஒரு தோல் அவசரமாக அனுப்பிவையுங்கள். நான் கொழும்பு ஆடிவேலுக்கு வாசிக்கப் போகிறேன். அதற்குத் தாங்கள் அனுப்பி வைக்கும் தோலையே தட்டுச் சொருகி வாசிக்க எடுத்துச் செல்ல விரும்புகிறேன். விரைவில் அனுப்பிவையுங்கள் ஏன்று கேட்டுக் கொண்டதின் பேரில் உடனே கீழ்வேளூர் வந்ததும், தோல் கைவசம் இருந்த காரணத்தினால் உடனடியாகப் போஸ்டல் மூலமாக அனுப்பிவைத்தேன். அவரும் அதை உடனே தயார் செய்து சிலோனுக்கு வாத்யத்தை எடுத்துச் சென்று ஆடிவேல் விழாவில் அவர் வாசித்ததையும் வானொலி மூலம் நானும் கேட்டு அனுபவிக்கும் வாய்ப்பும் கிடைத்தது. அத்துடன் ஏற்கனவே மகிஷவார் மூலம் இழுத்து வாசித்த வழக்கம் மாறுதல் அடைந்து, வாருக்குப் பதிலாக தவில் நடுப்பாகத்தில் வளையம் ஒன்று வைத்து 22 துவாரம் போட்டு இரும்பு வட்டை அல்லது எவர்சில்வர் பட்டை மூலம் கோர்த்து போல்ட்டு ஆணி மூலம் டைட் செய்து வாசிக்கும் வழக்கம் பரவலாகிவிட்டது, இதையும் முப்பது ஆண்டுகளுக்கு முன்னதாகவே எனது தந்தையார் ச. இராமையா தவில் வித்வான் அவர்கள் (தவில், கொடுக்கட்டி, மிருதங்கம் அனைத்தும் வாசிக்கும் திறமை படைத்தவர் அதனால்) முதன் முதலில் கொடுக்கட்டி வாத்யத்திற்குப் போல்ட்டு சிஸ்ட்டம் தயார் செய்து வாசித்துக் காட்டியதோடு, திருவாரூர் தியாகேசன் திருக்கோவிலுக்கு அவரே கொடுக்கட்டி தயார் செய்து கொடுத்தார். அதன்பிறகு தவில் வாத்தியத்துக்கும் இதே போல்ட்டு சிஸ்டம் தயார் செய்து எனக்கும் எனது தமையனார் கீழ்வேளூர் கே.ஆர். முத்துவீரப்பிள்ளைக்கும் தயார் செய்து எங்களது தகப்பனார் கொடுத்தார்கள். அன்று முதல் போல்ட்டு சிஸ்டம் அமைத்துத் தவிலை வாசித்து வருகிறோம். இதை நாளடைவில் அனைத்து வித்வான்களும் கையாண்டு வருகிறார்கள். அதுமட்டுமல்ல, இதை முதன்முதலில் தவில் வித்வான்களுக்கு அறிமுகப்படுத்தி வைத்த பெருமை எங்களது தகப்பனார் ச. இராமையபிள்ளையே சாரும் என்பதை உறுதியாகச் சொல்கிறேன்.

பாட்டுக்குச் சுருதி கூட்டுவதுபோல் இறைவணக்கமாகவும், பிள்ளையார் பாடம், தா, தீ, தொம், நம் முதல்பாடமாகத் துவங்கப்படுகிறது. ஆதியில் ஆனந்தத் தாண்டவம் செய்யும் சதாசிவனது, ஈசானம், தத்புருடம், அகோரம், வாமதேவம், சத்யோஜாதம் என்று சொல்லப்பட்ட ஐந்து முகங்களில் நின்றும், தா, தீ, தொம், நம், ஜெம் என்ற

இவ்வைந்தும் பிறந்தனவாம். எம்பெருமானுடைய கையிடத்தே விளங்குகின்ற டமருகமென்னும் வாத்யத்தில் நின்று கிஸத்துருணு, சிடத்ருணு ரிம், டிண்டிம், கிர்ர, திருதங்ழம், ஹம் ஆகிய நவவகைகளும் பிறந்தன, 14 சூத்திரங்கள், மேலே காட்டப்பட் டுள்ள வகைகளுக்குள், ஸமர்த்தஜதி, சொற்கட்டுகளும் அடங்கி இருக்கின்றன.

தவில் வாசிப்பதற்குத் தாளம் அவசியம். த ஹாரமே ருத்ரனாம், சார்ந்தளஹாரம் பகருகின்ற பார்வதியாம் பண்ணும் மஹர ஒற்றும் மாலாம ஹரமே மாம்பிரம்மமாகு மென்று சேலார் விழியாய் தெரிதாளம் என்னும் மூன்றெழுத்தில் தஹர ஒற்று, விஷ்ணு அஹாள கரங்களிலே நின்ற அகர உயிர் நாத சொருபமாகிய பிரம்மமாம்.

தத்தீன் தொம் தாமென்று தாண்டவம் செய்கின்ற சபை அத்தமுக மைந்தனுடமாமறையே உற்கடிதம் சம்பத் வேஷமடன் சட்சதா புத்திரிகம் சட்ச்சபுடம் சாசபுடமாம் தத்த தீம் தொம் தாமென்று நர்த்தனம் செய்கின்ற சபா நாதனுடைய ஐந்துமுகங்களிலும் சட்சபுடம் முதல் ஐந்து தாளங்களும் முறையே தோன்றுமென்று கூறினார்.

அங்கதாளம், உபாங்கதாள பங்கதாளம், விவாங்கதாளம், சுத்ததாளம், அனுதாளம் என ஆறு விதமாகவும் கூறுவர்.

கங்கை தரித்தோன் முகத்தில் காணுமைந்து தாளமுடன் தங்குதன்துங்கமுனி நூற்றெட்டும் சொல்லவே வடக்கு அரிபாதத்தை வைத்த செழும் ஞானக்கடக்குன்றிற்கும் ஞானகாப்பு.

மேற்கண்டவாறு அகஸ்த்திய மாமுனிகள் 108 தாளங்களுக்கும் விளக்கம் தந்துள்ளார்கள். "ஆனாலும் நின்றன் அதிசயங்கள் யாவிலுமே கானாமுதம் படைத்த காட்சி மிகு விந்தையடா காட்டு நெடுவானம் கடலெல்லாம் விந்தையெனில் பாட்டினைப் போல் ஆச்சரியம் பாரின் மிசை இல்லையடா" என்று மஹாகவி பாரதியார் கூறியுள்ளதைப்போல் அறுதியிட்டுக் கூறமுடியாதது சங்கீதக்கலை. தாளம் என்பதற்கு ஒரு ஸ்தானம் கொடுத்திருப்பது மேளம் என்பது. மேளம் என்பது ஒரு நல்ல குடும்பம். அதைப் பல்கலைகழகமாகக் கச்சேரிகளில் அமைத்துக்காட்டுவதற்குத் தவில் பெரும்பங்கெடுத்து நாதசுரக்காரர்களை உற்சாகப்படுத்தி வேண்டிய பொறுப்பான பணியை நினைவில் கொள்ளவேண்டியது மிக அவசியமாகும்.

"கலையின் உள்ளம் கடவுளைக்காட்ட வீடுதிருந்தநாடு சிறக்கவே" என்று கவியோகி மகரிஷியார் அவர்களின் கூற்றின்படி எல்லையிலாச் சங்கீத சாஹரத்தில் யாம் கற்றறிந்த சிறுதுளி, அவரவர்க்குகந்த, சுருதியுத்தி அநுபவமூலம் நல்லமுறையில் உலகத்திற்குப் பயன்படும்படி செய்வது இசை வடிவமான இறையருளே.

மத்தளக்கொட்டுக்கு மரங்கள் வகைகள்

சந்தனம், பலா, மாவிலங்கம், நுணா, செம்மரம், கருங்காலி, வேம்பு, வேங்கை, பூவரசு, பனைவைரம் இதுபோன்ற விருட்சங்களில் மிருதங்கம் தயார் செய்யலாம். ஆதிகாலத்தில் இருந்த அளவுகள் அடியில் இருந்து உயரம் 32 அங்குலம், வாய் வட் டம் 8 அங்குலம், சிறுவிரல் கனத்துக்கு அப்பால் அரை அங்குலம், நடுகனம் ஒரு அங்குலம், சுற்றளவு 16 அங்குலம், 16 கண்கள், பசுவின் தோலால் முத்திரைவைத்து

மகிஷதோல் வாரினால் இழுத்துக் கட்ட, ஒருபக்கம் வெளியில் சாதம் வைத்து, இன்னொரு பக்கம் உள்ளே சாதம் வைத்துத் தயார் செய்தால் சுத்தமத்தளம், ஆனால் இப்போது கச்சேரிகளில் வாசிக்கும் மிருதங்கம் அளவு 22 அங்குலம் நீளமாகக் குறைந்து வந்து நடைமுறையில் வாசித்து வருகிறார்கள். டோலக் என்னும் வாத்தியத்துக்கு வண்டோதரி பக்கம் வெட்டு, தட்டு அகலக் குறைவாக வைத்து, குண்டோதரி பக்கம் வெளியில் சாதம் வைத்தும், வண்டோதரி பக்கமும் வெளியில் சாதம் வைத்துத் தயார் செய்தால் டோலக் என்னும் வாத்யம் உருவாகிறது. எப்படிப் பார்த்தாலும் தோல் வாத்யம் கைலாயத்தில், நந்திகேஸ்வர் வாசித்து இறைவனை மகிழவைத்தவர் என்பதை நாம் நினைவில் கொண்டு நாம் செய்யும் இசைக்கலையை இறைவனுக்கு அர்ப்பணிக்கும் எண்ணத்தோடு பணியைச் செய்வோமானால் இறைவன் நம்பக்கம் தான்.

---

முத்திசெய் ஞானமும் கேள்வியும் ஆய்நிற்கும்
அத்தனை மாயா அமரர் பிரான்றனைச்
சுத்தனைச் தூய்நெறி யாய்நின்ற சோதியைப்
பத்தர் பரசும் பசுபதி தானென்றே.

அடியார் அடியார் அடியார்க்கு அடிமைக்கு
அடியனுய் நல்கிட்டு அடிமையும் பூண்டேன்
அடியார் அருளால் அவனடி கூட
அடியான் இவனென்று அடிமைகொண் டானே.

ஆன்கன்று தேடி யழைக்கும் அதுபோல்
நான்கன்ருய் நாடி அழைத்தேன்என் நாதனை
வான்கன்றுக்கு அப்பாலாய் நின்ற மறைப்பொருள்
ஊன்கன்ருன் நாடிவந்து உட்புகுந் தானே.

உறுதுணை நந்தியை உம்பர் பிரானைப்
பெறுதுணை செய்து பிறப்பறுத்து உய்மின்
செறிதுணை செய்து சிவனடி சிந்தித்து
உறுதுணை யாய்அங்கி ஆகிநின் ருனே.

வானவர் தம்மை வலிசெய்து இருக்கின்ற
தானவர் முப்புரஞ் செற்ற தலைவனைக்
கானவன் என்றுங் கருவரை யானென்று
மூனத னுண்ணினைந் தொன்றுபட் டாரே.

–திருமந்திரம்.

# ஒன்று அவன் தானே

பாலகவி. வயிநாகரம் திரு.வே.இராமநாதன் செட்டியார் (ஸ்ரீதத்புருஷதேசிகர்)
தேவகோட்டை

கடவுள் ஒருவரே என்பது எல்லா மதவாதிகளாலும் ஏற்றுக் கொள்ளப் பெறுவது. குடியாட்சி நாட்டில் அப்பொறுப்பை மேற்கொண்ட தலைவனே முடியாட்சி நாட்டில் அந்நாட்டை ஆளும் அரசனே பலராக இருக்கமுடியாது. ஆனால் அரசாங்க அலுவல்கள் பல அதிகாரிகளால் மேற்கொள்ளப்பெறும். அதுபோலவே முதற்பொருளாகிய கடவுள் ஒருவராயிருக்க, அவரது ஆணையினைப்பெற்ற தெய்வங்கள் பலவாயிருந்து, அவரது கட்டளைப்படி உயிர்கள் போகங்களை உண்பதற்கு உதவி செய்து கொண்டிருக் கின்றன. இவ்வுண்மை வேதாகாமங்களில் கண்ட முடிவானது. இதனை உணரமாட்டாதார், வைதீக நெறிபற்றி அமைந்த திருக்கோயில்களில் இருக்கும் தெய்வத் திருவுருவங்கள் பலவற்றையும், முதற்பெருங் கடவுளின் உருவத்திருமேனிகள் சிலவற்றையும் கண்டு, "பல் கடவுளரை வழிபடுபவர் நாம்" என்று சொல்லித் தங்களது அறியாமையை வெளிப்படுத்திக் கொள்கின்றனர். இது, அரசனது ஆணையைப் பெற்று அரசாங்க அலுவல்களில் ஈடுபட்டுள்ள அனைவரையும் அரசனென்றே கருதுவதையும் அரசன் அணிந்து கொள்ளும் ஆடையணிகலன்களின் வேறுபாடுபற்றி, அவனை ஒருவனல்லன் என்று துணிவதையும் ஒக்கும்.

அரும்பொருள்கள் பலவற்றைக் தமிழுலகத்திற்கு வழங்கத் திருமூல தேவநாயனர், திருக்கயிலாய பரம்பரையிலிருந்து வந்தார். ஒப்புயர்வற்ற பரம்பொருளின் பேரருளைக் குறைவறப்பெற்ற அவர், தவம்கிடந்து வெளிப்படுத்திய முதலுண்மை,

ஒன்றவன் தானே இரண்டவன் இன்னருள்
நின்றனன் மூன்றினு நான்குணர்ந் தான் ஐந்து
வென்றனன் ஆறு விரித்தனன் ஏழுஉம்பர்ச்
சென்றனன் தான்இருந்தான் உணர்ந்து எட்டே.

என்னும் திருப்பாடலாகத் திருமந்திரத்தில் முதலிடம் பெற்று விளங்குகின்றது. மனிதர்களாகப் பிறந்த அனைவரும், கடவுளுண்மையை ஏற்றுக் கொள்ளுகின்றவர்கள் என்று சொல்வதற்கில்லை. "கடவுள் உண்டு" என்ற நிச்சயபுத்தி வருவதற்கு, மனித ராகவே சில பிறவிகள் எடுக்கவேண்டும் என்று மணிவாசகப் பெருந்தகையார் கூறுவர். கடவுள் நிச்சயம் ஏற்பட்ட பின்னரும் அக்கடவுளாவார் யார் என்பதில் தெளிவு உண்டாக, மேலும் பல பிறவிகள் எடுத்தேயாகவேண்டும்.

வைதீக நெறியாளரனைவருக்கும் வேதம் பிரமாண நூல். வேதத்தில் கடவுளின் இலக்கணம் விரிவாகப் பேசப்பெற்று, அவ்விலக்கணங்களெல்லாம் அமைந்த கடவுளாவார் யார் என்பது சுருக்கமாகவும், குறிப்பாகவும் பேசப்பெற்றுள்ளது. வேதாந்தமாகிய உபநிடதங்களையும் சித்தாந்தமாகிய சிவாகமங்களையும் உணர்ந்தவர், முழுமுதற் கடவுள் உண்மையில், தெளிவுடையராயிருப்பர். அவ்வேதாந்த சித்தாந்தங் களின் சாராமயிருப்பவை, செந்தமிழ்த் திருமுறைகளும் மெய்கண்ட சாத்திரங்களுமாம். திருமுறைகளில் ஒன்றுன திருமந்திரம் வேதத்தைப்போல, முதலில் கடவுள் இலக்கணத்தை உணர்த்த முற்பட்டு, மேற்கண்ட திருப்பாடலை நமக்கு வழங்கியுள்ளது.

உபநிடதம் "ஏகம் ஏவ" என்று இறைவனைக் குறித்துக் கூறும். அதனைத் திருமூலர் "ஒன்றவன் தானே" என்று அருளினர். வாக்கு மனாதீத கோசரனுய், ஆன்ம போதத்திற்கு நெடுந்தொலைவில் இருப்பவன் ஆண்டவன் என்பதைக் குறிக்கச் சேய்மைச் சுட்டுச் சொல்லாகிய 'அவன்' என்பதை ஆசிரியர் இங்கே பயன்படுத்திக் கொண்டார். சுட்டிக்காட்டி உணர்த்த முடியாதவற்றை எல்லாம் இங்ஙனம் சேய்மைச் சுட்டால் அறிவிப்பது நமது பழைய மரபு. ஆளுடைய பிள்ளையார், சிவஞானம் பெற்ற நிலை, அறிந்தறிவிக்க முடியாத பெருநிலையாகும். அதனை அருண்மொழித் தேவராகிய சேக்கிழார் சுவாமிகள் "தவ முதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தார் அந்நிலையில்" என்று அருளிச் செய்திருப்பது இங்கே நினைவு கூருதற்குரியது.

கடவுள், உயிர்களோடு கலந்து அவையேயாயும், அவற்றிற்கு அப்பாற்பட்டுத் தானேயாயும், அவற்றின் தொழிற்பாட்டுக்குக் காரணமாய் அவற்றோடு உடனுயு மிருப்பவர். இம் மூன்று நிலைகளில் எல்லாவற்றையும் கடந்து அப்பாற்பட்டு இருக்கும் நிலையே அவனது தன்னிலையாகும். இந்த நிலையிலேயே அவர் "ஏகன்" என்று பேசப்பெறுகிறுர். இந்தத் "தானேயானதன்மையில் அக்கடவுள் ஒருவராகவே உள்ளார்" என்பதனேடு, கடவுளுடன் இணையாக வைத்துப் பேச இரண்டாவது ஒரு பொரு ளில்லை என்ற உண்மையும், "ஒன்று அவன் தானே" என்பதிலிருந்து உணர்த்தப் பெறுகின்றது. "ஒருவனுய் உலகத்தே நின்ற நாளோ" என்ற அப்பர் சுவாமிகள் திருவாக்கும், "ஒருவன் என்னும் ஒருவன் காண்க" என்ற மணிவாசகமும் இக்கருத்துப் பற்றி எழுந்தனவேயாம்.

தன்னிலையில் ஒருவராயிருக்கின்ற கடவுள், ஆன்மாக்கள் பொருட்டாக அநேகராகி, அவைகளெல்லாம் அவருக்கு அடிமையாய் இருக்க, அவர் அவைகளுக்கு ஆண்டவனுகி இறைவனுகிறுர். இதனைச் சிவபுராணம் "ஏகன் அநேகன் இறைவனடி வாழ்க" என்ற வரியில் வைத்துக் கூறும்.

எல்லாவற்றையும் கடந்து நின்ற கடவுள், உயர்களை நோக்கி அவற்றை உலகத்தோடு தொடர்புபடுத்தக் கருதி, அவ்விரண்டனேடு தானும் கலக்க முற்படும் வேளையில் சிவம் சத்தி என்னும் இரண்டு பொருள்களாக எழுந்தருளி இருப்பார். உயிர்களுக்கு அவ்வவற்றின் நல்வினை, தீவினைகளுக்கேற்ப, உடம்பு, உட்கருவி, உலகம், நுகர்ச்சி ஆகியவற்றை இறைவன் கூட்டுகின்றுன். பாசச் சேர்க்கை, சுதந்திரமின்மை முதலியவற்றுல் அறிவுடைய பொருளாகிய உயிர், அறிவில் பொருளைப் போலச் செயலற்றுக்கிடந்த வேளையில், அதன்பால் ஆண்டவன் கருணைக்கொண்டு உதவி செய்யத் தொடங்கி இடையீடின்றி எக்காலமும் அதனைச் செய்தே வருகின்றுன். இந்த இறைவனது பெருங்கருணையே சத்தி என்று சொல்லப்பெறுவது.

"அருளது சக்தி யாகும் அரன்தனக்கு அருளையின்றித்
தெருள்சிவ மில்லை அந்தச் சிவமின்றிச் சக்தி இல்லை"

என்று சிவஞானசித்தியார் இறைவனது ஐந்தொழில்களுள், முதற்றெழிலாகிய படைத்தலைச் செய்ய அவன் முற்படும்பொழுது, அவனும் அவனது அருளும் என இரண்டாகப் பிரிந்து அமையும் நிலை அவனுக்கு உண்டாகின்றது. சிவமும் சத்தியும் நெருப்பும் சூடும் போலக் குண குணித்தன்மையால் இரண்டாக உரைக்கப்பெற்றன வேனும், பிரிக்கமுடியாத ஒற்றுமை பற்றி ஒன்றுகவே கொள்ளவேண்டியனவாகும்.

இத்திருமந்திரத்தில் 'ஒன்றவன் தானே' என்பது சிவபெருமானது சொரூப நிலை. "இரண்டவன் இன்னருள்" என்பது முதலியபவை அவனது தடத்த நிலை.

கடவுள் செய்கின்ற ஐந்தொழில்களுள் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் மூன்றும் உடல் பற்றியன. மறைத்தல், அருளல் ஆகிய இரண்டும் உயிரைப் பற்றியன. காணப்பெறுகின்ற இந்தத் தூல உடலுக்குள்ளே, காணப்பெருத சூக்கும உடல்கள் நான்கு உள்ளன. அவற்றிற்கு உள்ளே உள்ளது உயிர். உடலை விட்டு உய்தி பெறவேண்டிய உயிர், உடலைவைத்தே உய்திக்குரிய வழியைத் தேடிக் கொள்ள வேண்டும். இதனுலேயே நமது திருமூலதேவ நாயனுர்

"உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்"

என்றருளிச் செய்தார். உயிருய்ய உடம்பு சாதனமாயிருப்பது பற்றி, உயிருக்குரிய மறைத்தல், அருளல்களை உடம்புக்குரிய தொழில்களாகிய காத்தல், அழித்தல்களுடன் அடக்கிச் சொல்வதும் உண்டு. முத்தொழில்களுள் அடங்கும் ஐந்தொழில்கள், இறைவன் நேரே செய்வனவும், பிறரைக்கொண்டு செய்விப்பணவுமென இரண்டு முறைகளில் அமைவன. முன்னது உயர்ந்த தகுதியில் உள்ள ஆன்மாக்கள் பொருட்டாக நிகழும், பின்னது தாழ்ந்த தகுதியிலிருப்பவர் பொருட்டாக நடைபெறும். உயர்ந்தோர் சுத்தமாயா புவனவாசிகள் என்றும், தாழ்ந்தோர் அசுத்த மாயா புவனவாசிகள் என்றும் நூல்கள் கூறுகின்றன.

அசுத்த மாயாபுவனவாசிகளுக்குப் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களையும் இறைவன் நேரே செய்வதில்லை. எனினும் பிரமன், திருமால் உருத்திரன் ஆகியவர்களுக்கு அவ்விறைவன் வழங்கிய அதிகாரமே அத்தொழில்களை அவர்கள் செய்யும் தகுதியில் அவர்களை வைத்திருக்கிறது. தானே செய்வனவும், தனது அதிகாரம் பெற்றவர்களைக் கொண்டு செய்விப்பனவுமாகிய இவ்விருவகை முத்தொழில்களிலும் இவன் ஒருவனே நின்று விளங்கி அருள்புரிகின்ருன். இதனையே "நின்றனன் மூன்றினுள்" என்று திருமந்திரம் கூறியது. மேலே கூறப்பெற்ற மூன்று பொருள்களும் இந்த வரிசையிலேயே வைத்துத் திருவெழு கூற்றிருக்கையில் "ஒருருவாயினை மாணுங்காரத், தீரியல் பாயொரு விண்முதல் பூதலம், ஒன்றிய இருசுடர் உம்பர்கள் பிறவும், படைத்தளித் தழிப்பமும் மூர்த்திகளாயினை" என்று திருஞானசம்பந்த சுவாமிகளால் திருவாய் மலர்ந்தருளப் பெற்றுள்ளன.

மேலும் "நின்றனன் மூன்றினுள் என்பதற்கு" அருவம், அருவுருவம், உருவம் ஆகியவற்றில் சிவபெருமான் எழுந்தருளியிருந்து உயிர்களுக்கு அருள்புரிகின்ருன் என்றும் கொள்ளலாம்.

சிவபெருமாணுகிய முதற்கடவுளை விசுவாதிகன் என்றும், விசுவகாரணன் என்றும், விசுவாந்தரியாமி என்றும் விசுவரூபி என்றும் வேதங்கள் கூறுகின்றன. பொருள்கள் எல்லாவற்றிலும் கலந்தும், அவையனைத்தையும் கடந்தும் விளங்குகின்ற இறைவனது சொரூப, தடத்த நிலைகள் இங்ஙனம் ஈரிரண்டு நிலைகளில் உள்ளன என்பதை

உலகினை இறந்து நின்றது அரனுரு என்ப தோரார்
உலகவன் உருவில் தோன்றி ஒடுங்கிடும் என்ப தோரார்

உலகினுக்கு உயிரும் ஆகி உலகுமாய் நின்ற தோரார்
உலகினில் ஒருவன் என்பர் உருவினை உணராரெல்லாம்

என்று சிவஞானசித்தியாரும் அறிவிக்கின்றது. இதனையே ஆசிரியர் திருமூல தேவநாயனர் "நான்கு உணர்ந்தான்" என்று அருளினர். உணர்ந்தான் என்னும் தன்வினை முடிவு, உணரப்பெற்றான் என்னும் பிறவினை முடிவுப் பொருளையுடையது. மேலும் "நான்குணர்ந்தான்" என்பதற்கு இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் ஆகிய நான்கு வேதங்களையும் உணர்ந்தவன் என்று பொருள் கொள்வாரும் உண்டு. சிவபெருமானும் உயிர்களும் அறிவு உடையனவாயினும் சிவபெருமானது அறிவு, யாரும் அறிவிக்காது தானே விளங்குவது; உயிர்களின் அறிவு பிறர் அறிவித்தாலன்றி ஒன்றையும் அறியமுடியாதது. இங்கே சிவபெருமான் யாரும் உணர்த்த உணராது தானே உணர்ந்தவன் என்பதை ஆசிரியர் அறிவுறுத்துகிறார்.

மெய், வாய், கண், மூக்கு, செவியாகிய ஐம்பொறிகளையும் அடக்கி ஆள்பவர் பெரியோர். இவர்களிடத்தும் கூட அப்பொறிகள் தத்தம் சேட்டைகளை இடமறிந்து செய்துகொண்டுதான் இருக்கும். அங்ஙனம் செய்யுங் காலத்து அவற்றிற்கு அடிமைப் பட்டு உள்ளத்தை அவற்றின் வழியே செல்லவிடாது, அவர் தடுத்து நிறுத்துவர். செயற்கையால் பொறி புலன்களை அடக்கி ஆளும் சிவஞானிகளுக்கு மேலாகச் சிவபெருமான், இயற்கையாகவே புலன்களை வென்றவராயிருக்கிறார். பொறிகள் புறப்பொருள்களின்பாற் செல்லக்கண்டு அங்ஙனம் செல்லவிடாது அடக்குதல் இறைவன் தன்மையன்று. பொறிகள் பொருள்களின் பால் செல்லாதிருத்தலே அவன்பாலுள்ளது என்பதை உணர்த்த "ஐந்து வென்றனன்" என்று உணர்த்தியருளினர்.

சித்தும் சடமுமாகக் காணப்பெறுகிற எல்லாப் பொருள்களிலும் கலந்திருக்கின்ற இறைவன், எல்லாத் தெய்வங்களுமாயிருந்து உயிர்களுக்குப் போக போக்கியங்களை வழங்கி வருகின்றான். இறைவனது திருவருள் உயிர்களுக்கு ஐந்தொழில்களின் வாயிலாகவே வந்து அமைகின்றது. அவ்வைந் தொழில்களையும் ஆண்டவன் பிரமன், திருமால், உருத்திரன், மகேசுவரன், சதாசிவன் ஆகிய திருவுருவங்களில் இருந்தும், அத்தொழில் நிகழ்ச்சிக்கு மூலமான பிரணவ வடிவ விநாயகப்பெருமான் திருவுருவத்திலிருந்தும் செய்கின்றான் என்பது சாத்திர முடிவு. நமது உடம்பினுள்ளே இவ்வறுவகைத் திருவுருவங்களையும் கொண்டு, ஆண்டவன் எழுந்தருளி இருக்கின்ற இடங்களை ஆறு ஆதாரங்கள் என்று கூறுவர். அவை மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரதம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்பன.

சதாசிவத்துக்கு மேற்பட்டுப் பரசிவமாகத் துவாத சாந்தமாகிய ஏழாமிடத்தில் விளங்கிக் கொண்டிருக்கின்ற இவ்விறைவனே, மற்றை ஆறிடங்களிலும் வெவ்வேறு திருவுருவங்களையுடையவனாய் எழுந்தருளியிருந்து அநுக்கிரகம் செய்கிறான் என்னும் உண்மை "ஆறு விரிந்தனன் ஏழும்பர்ச் சென்றனன்" என்ற பகுதியில் அறிவிக்கப் பெறுகிறது.

பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், சூரியன், சந்திரன், இயமானன் என்னும் எட்டுப் பொருள்களும் இறைவனது வடிவங்கள் என்று சொல்லப்பெறும் இவற்றை அட்ட மூர்த்தங்கள் என்பர். "மேவ, வரும் அட்டமூர்த்தமாம் வாழ்வே" என்பது கந்தர்கலிவெண்பா. உருவாயும், அருவுருவமாயும், அருவமாயும் அவற்றிற்கு அப்பாற்பட் டும் இருக்கின்ற ஆண்டவன், அந்நிலைகளைத் தன்பாற்கொண்ட அட்ட மூர்த்தங்களின்

வடிவமாயிருக்கிறான் என்று உணர்ந்து கூறினர் ஆன்றோர்:

"இருநிலனாய்த் தீயாகி நீரும் ஆகி
இயமா னாய் எரியும் காற்றும் ஆகி
அருநிலைய திங்களாய் ஞாயி றாகி
ஆகாச மாய் அட்ட மூர்த்தி யாகி"

என்பது அப்பரடிகள் திருவாக்கு.

பார்க்குமிடம் எங்கும் ஒரு நீக்கமற நிறைந்திருக்கின்ற நிலை, உயர்ந்த ஞானிகளுக்கே புலப்படும். அப்பெருஞானிகளே, அட்டமூர்த்தங்களிலும் ஆண்டவனது கலப்புண்மையை நன்குணர்வர். இவ்வட்ட மூர்த்தங்களின் சொரூபமாக அவனை உணரப் பெற்றவர்களுக்கு அவன் உள்ளே இருந்து அருள்புரிவான் என்பதை "தான் எட்டு உணர்ந்திருந்தான்" என்று இறுதியில் அறிவுறுத்தியருளினர் நமது ஞானாசிரியர்.

இங்ஙனம் ஒன்று முதல் எட்டுவரை எண்ணலங்காரம் பொருந்தச் செய்யுளை அமைத்து, இறைவனது சொரூபம், தடத்தம் என்னும் இருபெரும் நிலைகளையும் தமது திருமந்திரமாலை முதற் செய்யுளின் மூலமாக நமக்கு வழங்கிய ஆசிரியர் திருமூலதேவ நாயனாரை வந்தித்து வாழ்த்துதல் கடமையாகும்.

நலம் பெருகுக.

---

## ஆகமம்

அஞ்சன மேனி அரிவையோர் பாகத்தன்
அஞ்சொடு இருபத்து மூன்றுஉள ஆகமம்
அஞ்சலி கூப்பி அறுபத்து அறுவரும்
அஞ்சா முகத்தில் அரும்பொருள் கேட்டதே.

"அண்ணல் அருளால் அருளும் சிவாகமம்
எண்ணில் இருபத்தெண் கோடி நூறாயிரம்
விண்ணத்தவர் ஈசன் விழுப்பம் உரைத்தனர்;
எண்ணிநின்று அப்பொருள் ஏத்துவன் நானே"

மாரியுங் கோடையும் வார்பனி தூங்கநின்று
ஏரியும் நின்று அங்குஇளைக்கின்ற காலத்து
ஆரிய மும்தமி ழும்உட னேசொலிக்
காரிகை யார்க்குக் கருணைசெய் தானே.

– திருமந்திரம்.

# திருவாதிரைச் சிறப்பு

டாக்டர் சுப. திண்ணப்பன் – சிங்கப்பூர்
(நன்யாங் தொழில் நுட்பப் பல்கலைக்கழகம்)

சிவபெருமானை முழு முதற்பொருளாகக் கொண்டு வழிபடும் செந்நெறியே சைவ சமய நன்னெறியாகும். சிவபெருமானுக்குகந்த நட்சத்திரமாகக் கருதப் பெறுவது திருவாதிரை நட்சத்திரமாகும். சிவபெருமானுக்குரிய குணங்களை எட்டாகக் கூறும் திருக்குறள். "எண்குணத்தான்" என்னும் கடவுள் வாழ்த்துக் குறள் (9) தொடர்க்குப் பொருள் கூறும் பரிமேலழகர் தன்வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கை உணர்வினனாதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருள் உடைமை, முடிவு இல் ஆற்றல் உடைமை, வரம்பு இல் இன்பமுடைமை என இவ்வாறு சைவாகமத்துட் கூறப்பட்டது என்று உரைப்பர். சிவபெருமானின் வடிவை, நிலம், நீர், தீ, காற்று, விசும்பு, ஞாயிறு, திங்கள், ஆன்மா என்று எட்டுவகையாக – அட்டமூர்த்தங்களாகத் திருமுறைகள் கூறும். சிவபெருமானின் வீரச் சாதனை புரிந்த தலங்களும் எட்டு. (கண்டியூர், கோவலூர், அதிகை, பறியலூர், விற்குடி, வழுவூர், குறுக்கை, கடவூர்). எனவே சிவபெருமானுக்கு உகந்த நட்சத்திரமாகிய திருவாதிரையின் சிறப்பை மொழியியல், அறிவியல், சோதிட இயல், இலக்கியம், சமுதாய இயல், சமயம், பண்பாடு, தத்துவம் என்னும் எட்டுவகை நோக்கில் காண்பதே இக் கட்டுரையின் நோக்கம். மேலும் உலகியலில் ஒரு பொருளை அல்லது கட்டிடத்தைக் கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, வடகிழக்கு, வடமேற்கு, தென்கிழக்கு, தென்மேற்கு, ஆகிய எட்டுத் திசைகளிலிருந்து நோக்கினால் அது தெளிவாகத் தெரியும். அது போலத் திருவாதிரையின் சிறப்பும் மேற்கண்ட எட்டுவகை நோக்கில் காணும்போது தெளிவுறும் என்பதில் ஐயமில்லை.

## மொழியியல் நோக்கில்

திருவாதிரை என்னும் சொல்லின் அமைப்பு, பிறப்பு, பொருள் பற்றி விளக்குவது மொழியியல் நோக்கு எனப்படும். திருவாதிரை என்னும் தொடர் திரு என்னும் அடைமொழியும் ஆதிரை என்னும் தலைச் சொல்லும் இணைந்த ஒன்றாகும். ஆதிரை என்னும் சொல் ஆருத்ரா என்னும் சமஸ்கிருதச் சொல்லின் திரிபு என்று சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி கூறுகிறது. ஆதிரை என்பது தமிழ்ச் சொல் என்று கருதுவாரும் உளர். திரு என்னும் அடைமொழிக்கு அழகு, தெய்வத்தன்மை, செல்வம் எனப் பல பொருள் உண்டு. ஆதிரை என்பது சிவபெருமானுக்கு உகந்த நட்சத்திரமாக இருப்பதால் திரு என்னும் அடைமொழி பெற்றுள்ளது எனக் கருதலாம். இருபத்தேழு நட்சத்திரங்களில் திரு என்னும், அடைமொழியுடன் திகழ்வன இரண்டு; ஒன்று திருவாதிரை; மற்றொன்று திருவோணம். இவற்றுள் முன்னையது சிவனுக்கும் பின்னையது திருமாலுக்கும் உகந்தவை. திரு என்னும் சொல்லும் ஆதிரை என்னும் சொல்லும் சேரும்போது இரண்டுக்கும் இடையே 'வ்' என்னும் உடம்படுமெய் எழுத்து தோன்றியுள்ளது. இறைவனையும் உயிர்களையும் உடன்படுத்துகின்ற இணைக்கின்ற

மெய் எழுத்து; மெய்ப்பொருளாகிய இறையை இது குறிக்கின்றது. அவனருளாலே அவன்தாள் வணங்குவது தானே இயல்பு. இங்கு ஆதிரை என்பது பெயர்ச்சொல். இதனடியாக ஆதிரை நாச்சியார், ஆதிரைக்களி என்னும் தொடர்களும் அமையும். திருவாதிரை என்னும் சொல்லுக்கு 1. 27 நட்சத்திரங்களில் 6ஆவது நட்சத்திரம் 2. ஒரு விழா 3. நகரத்தார் மரபில் கொண்டாடப்பெறும் ஒரு சடங்கு என்று சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி பொருள் கூறும்.

அறிவியல் நோக்கில்

அறிவியலில் நட்சத்திரங்கள், கோள்கள் பற்றி ஆராயும் பிரிவு வானவியலாகும். இதனடிப்படையில் திருவாதிரை பற்றிய செய்திகளைத் தமிழ்க் கலைக்களஞ்சியத்தின் துணை கொண்டு பின்வருமாறு தொகுத்துக் கூறலாம். திருவாதிரை நட்சத்திரத் திற்குரிய பெயர் Betelgeuse. இது வானில் உச்ச ஒளியுள்ள ஓரையன் (Orion) என்னும் நட்சத்திர மண்டலத்திலுள்ள பிரகாசமான நட்சத்திரங்களில் ஒன்று; மஞ்சட் சிவப்பு நிறம் உடையது; இதனுடனுள்ள மற்ற நட்சத்திரங்கள் வெண்ணிறம் உடையவை. எனவே இஃது எளிதில் கண்ணுக்குப் புலப்படும். பார்ப்பதற்கு இது சில சமயம் செவ்வாய்க்கிரகம் போலத் தோன்றும். இது சூரியனைப் போல 1200 மடங்கு ஒளி உடையது. சூரியனிடமிருந்து 325 ஒளி ஆண்டுத் தொலைவிலுள்ளது. இது செகண்டுக்கு 15 மைல் வீதம் சூரியனிடமிருந்து விலகிச் செல்வதாகக் கணிக்கப் பட்டுள்ளது. இதில் சோடியம், மக்னீசியம், இரும்பு இருப்பதாக இதன் நிறமாலை Spectrum காட்டுகிறது. இதனை இந்திய வானவியலார் பிரஜாபதி என்று கூறுவர்.

சோதிட நோக்கில்

சோதிட நோக்கில் திருவாதிரையின் பண்புகளைக் காணலாம். 27 நட்சத்திரங்களில் 6ஆவது நட்சத்திரமான திருவாதிரை மிதுன ராசிக்குரியது. இதற்குரிய பெயர்ச் சிறப்பெழுத்துக்கள் கு, க, ங, ச என்பன.

"திருவாதிரையில் ஜனித்தோர்கள் திறமாய்ப் பொய்யைப் பேசிடினும்
மருவொன்றில்லா வாசகமாய் மதிப்பார் உலகோர்; திடகாத்திர
உருவாய் விளங்கிடுவோர்; வறுமை உற்றே தரித்திரம் எய்திடினும்
பெருமையாளனைப் போலப் பேசித் சமர்தராயத் திரிகுவரே"

என்று சோதிட அரிச்சுவடி என்னும் நூல் திருவாதிரையில் பிறந்தோர்க்குரிய இயல்புகளைக் கூறும். கீர்த்தி, பொய்பேசுதல், மனோதைரியம், கோபக்குணம், இடம்பம், சரீரபலம், சினேக பட்சம், பிடிவாதம், முதலிய குணங்கள் இந்நட்சத்திரத்தில் பிறந்தோர்க்குண்டு என்பர்.

பஞ்சாங்கங்களில் தீதுறு நட்சத்திரங்களில் ஒன்றாகத் திருவாதிரை கருதப்பெறுகிறது. "ஆதிரை பரணி கார்த்திகை ஆயிலியம் முப்பூரம் கேட்டை, தீதுறு விசாகம் சோதி சித்திரை மகம் ஈராறில், மாதனம் கொண்டார் தாரார்;

வழிநடை போனார் மீளார், பாயினில் படுத்தார் தேறார், பாம்பினில் வாய்த்தேரை தானே" என்று பஞ்சாங்கங்களில் உள்ள பாடல் இதனைக் கூறும். மேலும் திருஞானசம்பந்தப் பெருமான் பாடிய கோளறு பதிகத்தில் "என்பொடு கொம்பொடாமை" என்று தொடங்கும் இரண்டாவது பாடலில் குறிப்பிடப்பெறும் தீதுறு நட்சத்திரங்களில் ஒன்று திருவாதிரை என்பதும் கருதத்தக்கது.

திருவாதிரை பற்றிய கதை ஒன்று அபிதான சிந்தாமணி என்னும் நூலில் உள்ளது. அது வருமாறு: பிரம்மன் சரசுவதியைப் படைத்துத் தான் புணரச் செல்லுகையில், சரசுவதி மான் உருக்கொண்டு ஓடினாள். பிரமனும் அவ்வுருக் கொண்டு தொடர்ந்தனன். தேவர் வேண்டுகோளால் சிவமூர்த்தி வேடுருக் கொண்டு ஆண்மானை எய்ய, அதனின்றும் ஒரு சோதி தோன்றி ஆதிரை நாளாயிற்று. இக்கதையை ஒத்த ஒரு கதை கிரேக்கப் புராணத்திலும் இருப்பதாகக் கலைக் களஞ்சியம் கூறுகிறது. Orion ஓரையன் என்பவன் அழகும் ஆற்றலும் நிரம்பிய ஒரு வேடன். கடல் தேவனான போசைடனின் மகன். ஈனோப்பியன் என்னும் அரசனுடைய மகள் மிரப்பி என்பவளை மணஞ் செய்ய விரும்பி அவளைத் தூக்கிக் கொண்டு போக முயன்றான். அதனால் ஓரையனை அரசன் மதுவருந்துமாறு செய்து கண்களைக் குத்திக் குருடாக்கினான். ஓரையன் தேவர் கம்மியனான ஹிப்பெஸ்ட்டஸ் உதவியால் ஞாயிற்றை நோக்கிக் கண்களைப் பெற்றான். அதன்பின் அவன் வேட்டையாடி வரும்போது அப்பாலோ என்னும் தேவனுடைய தங்கை ஆர்ட்டிமிஸ் என்பவள் ஓரையன் மீது காதல் கொண்டாள். இதனை அவள் அண்ணன் அறியான். ஓரையன் மீது அவன் அழுக்காறு கொண்டு கொல்ல முயன்றான். ஒரு நாள் காட்டுவழியில் தங்கையுடன் செல்லும்போது ஓரையன் குளத்தில் குளிப்பதைக் கண்டு தன் தங்கையை அவன் மீது அம்பெய்து கொல்லப்பணித்தான். தன் காதலன் என்பதை அறியாது அவளும் அவ்வாறு செய்து கொன்றுவிட்டாள். பிறகு அறிந்து பெருந்துயருற்றாள். காதலனை அவள் நாயுடன் வானத்தில் ஒரு நட்சத்திர மண்டலமாகச் செய்தாள். இதுதான் அக்கதை.

### இலக்கிய நோக்கில்

திருவாதிரை பற்றித் தமிழ் இலக்கியங்களில் வரும் செய்திகளைத் தொகுத்துக் காண்பதே இலக்கிய நோக்காகும். தமிழ் இலக்கியத்தில் முதன்முதலாகப் பரிபாடல் என்னும் சங்க இலக்கியத்தில் திருவாதிரை பற்றிய குறிப்பு வருகிறது. பரிபாடலில் 8ஆவது செய்யுளில் முருகப் பெருமான் உறையும் திருப்பரங்குன்றம் பற்றிப் பேசும்போது "ஆதிரை முதல்வன்" என்னும் ஒரு தொடர் வருகின்றது. இது திருவாதிரை நட்சத்திரத்திற்குகந்த தலைவனாகிய சிவபெருமானைக் குறிக்கும். பரிபாடலில் 11ஆவது செய்யுளில் பாவை நோன்பு பற்றிய குறிப்பு வருகின்றது. இதற்கு அப்போது அம்பா ஆடல் என்று பெயர். "வெம்பாதாக வியனில வரைப்பு" (இவ்வுலகம் வெம்மை நீங்குக) என்று வழிபடும் இந்த விழா தொடங்கப் பெற்றதைச் சுட்டும்போது "மாயிருந் திங்கள் மறு நிறை ஆதிரை விரிநூல் அந்தணர் விழவு தொடங்க" என்னும் அடிகள் வருகின்றன. மார்கழி மாதத்தில் ஆதிரை நாளன்று இவ்விழா தொடங்கியது என்பது இதன் வழி

நாம் அறியும் கருத்து. கலித்தொகை என்பது சங்க இலக்கியங்களில் ஒன்று. அதன் பகுதியாகிய நெய்தற்கலியில் "அரும்பெறல் ஆதிரையான் அணிபெற மலர்ந்த" என்னும் தொடர் (கலி 150 – 20) வருகின்றது. திருவாதிரைக் காலத்துச் சிவபெருமான் அணிகளை அணிந்திருப்பது போல அமைந்த ஒரு செண்பகமரம் பற்றிய குறிப்புப் பற்றியது இந்தத் தொடர். இங்கும் ஆதிரையான் என்பது சிவபெருமானைச் சுட்டி நிற்பதை அறியலாம்.

மூவேந்தர்களைப் பற்றி வெண்பா யாப்பில் பாடும் இலக்கியம் முத்தொள்ளாயிரம். இதன் கடவுள் வாழ்த்து வருமாறு:

மன்னிய நாள்மீன் மதிகனலி என்றிவற்றின்
முன்னம் படைத்த முதல்வனைப் –பின்னரும்
ஆதிரையான் ஆதிரையான் என்றென்(று) அயருமால்
ஊர்திரை நீர்வேலி உலகு.

நாள், நட்சத்திரம், சந்திரன், சூரியன் முதலியவற்றைப் படைத்தவன் முதல்வனாகிய சிவபெருமான்தான். அவனை உலகம் ஆதிரையான், ஆதிரை நட்சத்திரத்துக்குகந்தவன் என்று கூறி மயங்குகிறதே ஏன்? என்று இப்பாடல் கேட்கிறது. 27 நட்சத்திரங்களையுமே படைத்தவன் சிவபெருமான் தானே. அப்படி இருக்க அவனுக்குத் திருவாதிரை நட்சத்திரத்தை மட்டும் உரியதாக – உகந்ததாக ஆக்குவது ஏன்? இதனை எண்ணிப் பார்க்க வேண்டும். குணம் குறி கடந்தவன் சிவபெருமான்; ஒருநாமம் ஒருருவம் இல்லாதவன். பிறவான் இறவானாகிய பெரியான். இது சிவபெருமானின் சொரூபநிலை. இவன் ஆன்மாக்களாகிய உயிர்களை உய்விக்கும் பொருட்டுப் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழிலையும் செய்ய உருவம் கொண்ட நாள் திருவாதிரை என்றும் இந்த நாளில் சிவன் கோயில்களில் பஞ்சகிருத்திய உற்சவம் நடத்துவர் என்றும் கலைக் களஞ்சியம் கூறும். நடராசப் பெருமானின் திருவுருவம் ஐந்தொழில் தத்துவத்தைக் காட்டுவது என்பதை அனைவரும் அறிவர்.

"தோற்றம் துடியதனில்; தோயும் திதி அமைப்பில்;
சாற்றிடும் அங்கியிலே சங்காரம்; – ஊற்றமாய்
ஊன்று மலர்பதற்கே உற்ற திரோதம் அம்முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு"

என்று சாத்திர நூல் கூறும். எனவே நடராசப் பெருமானின் திருவுருவத்துடன் நெருங்கிய தொடர்புடையதாகத் திருவாதிரை கருதப்பெறுவது பொருத்தம்தானே? மேலும் தாருகாவனத்து முனிவர்களின் செருக்கை அடக்கிய சிவபெருமான் முதன்முதல் உமை அம்மையார் காண நாட்டியம் ஆடினான். அம்முனிவர்கள் ஏவிய பாம்பு முதலிய பொருள்களைக் கையில் கொண்டு அவன் ஆடிய நடனம் திருவாதிரை நாளன்று நிகழ்ந்ததாகவும் கூறுவர். சிதம்பரத்தில் பதஞ்சலி வியாக்ரபாதருக்காக நடனக்காட்சி காட்டிய நாள் தைப்பூச நன்னாள் என்பதையும் அறியவேண்டும்.

மணிமேகலை என்னும் காப்பியத்தில் ஆதிரை பற்றிய குறிப்பு ஒன்றுள்ளது. இது சைவ சமயச் சார்பு பற்றியதன்று. மணிமேகலையில் 16ஆவது காதை ஆதிரை பிச்சையிட்ட காதை என்பதாகும். ஆதிரை என்பது நகரத்தார் மரபைச் சார்ந்த ஒரு பெண்ணின் பெயர். ஆதிரை என்பவள் பூம்புகார் நகரத்துச் சாதுவன் என்னும் நகரத்தார் வணிகன் மனைவி. தீய பழக்கம் காரணமாகப் பொருளிழந்த சாதுவன் கடல் கடந்து பொருள் தேடச் சென்ற இடத்தில் கலங்கவிழப் பெற்று நாக நாடு சென்று அங்கு அவர்களுக்கு அறிவுரை நல்கினான். அவன் நகர் திரும்பாததால் அவன் இறந்ததாகக் கருதி ஆதிரை தீப் புகுந்தாள். அவளைத் தீ சுடாமையால், கணவன் வரவைப் பற்றி அசரீரி சொல்லக் கேட்டுப் பின் கணவன் வரக்கண்டு கூடி வாழ்ந்தாள். மணிமேகலை அமுதசுரபியைப் பெற்றவுடன் அதில் யாரிடம் முதலில் பிச்சை ஏற்பது என்று எண்ணும்போது அவள் தோழி காயசண்டிகை என்பவள் சிறந்த பத்தினிப் பெண்ணாகத் திகழும் ஆதிரை நல்லாளிடம் முதலில் பிச்சை வாங்குவது சிறந்தது என்று சொன்னாள். அதற்கேற்ப மணிமேகலை ஆதிரையிடம் வந்து முதற்பிச்சை பெற்றாள். ஆதிரை "பாரகமடங்கலும் பசிப்பிணி அறுக" என்று கூறிப் பிச்சையிட்டாள். பிறகு தான் அமுதசுரபியில் அன்னம் எடுக்க எடுக்கக் குறையாததாயிற்று. மணிமேகலையும் மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க்கெல்லாம் உண்டி கொடுத்து உயிர்கொடுத்தோள் ஆயினாள். இந்த ஆதிரையை நினைத்தே நகரத்தார் மரபினர் கன்னிப் பெண்களுக்குத் திருவாதிரை என்னும் சடங்கு – விழாக் கொண்டாடுகின்றனர். மார்கழித் திருவாதிரை நாளன்று கன்னிப் பெண்கள் கூட்டம் கூட்டமாக அண்டை வீடுகளுக்குச் சென்று கைகளில் வெள்ளிச் சட்டியுடன் சென்று மங்கல மகளிரிடம் "ஆடி ஆடி வாரோம் அவரைக்காய் போடுங்கள்; பாடிப் பாடி வாரோம் பாடவரங்காய் போடுங்கள், கூடிக் கூடி வாரோம் கூட்டுக்காய் போடுங்கள்;" என்று பாடிக் கூட்டுக் காய்கறிகள் வாங்கி வந்து வீட்டில் கூட்டாஞ்சோறு சமைத்து "ஆதிரையாள்" கும்பிடுவார்கள். மணிமேகலைக்குப் பிச்சையிட்ட தம் மரபுப் பெருமாட்டியை இவ்வாறு இவர்கள் வழிபாடு செய்கிறார்கள். இந்தச் சடங்க நடத்திய பெண்களே முழு மனிதர்களாகக் கருதப்பெறுவர். ஒரோவழி அவர்கள் இறந்தால் எரியூட்டுவர். இந்தச் சடங்குக்கு முன் இறந்தால அவர்கள் புதைக்கப் பெறுவர்.

திருஞானசம்பந்தர் மயிலாப்பூரில் பூம்பாவையை எழுப்புவதற்காகப் பாடிய பதிகத்தில் சைவசமயத் தொடர்பான பல விழாக்களைக் குறிப்பிட்டு அவற்றைக் "காணாதே போதியோ பூம்பாவாய்?" எனக் கூறுகிறார். அங்கே "கபாலீச்சரம் அமர்ந்தான் ஆதிரை நாள் காணாதே போதியோ பூம்பாவாய்" என்று ஒரு பாடலின் ஈற்றடி அமைந்துள்ளது. சைவ சமய விழாக்களில் ஒன்றாக ஆதிரை நாள் விழா, ஞானசம்பந்தர் காலத்தில் இருந்ததை நாம் உணர முடிகின்றது.

திருநாவுக்கரசர் தேவாரத்தில் 4ஆம் திருமுறையில் திருவாதிரைத் திருப்பதிகம் என்று ஒரு பதிகமும் (10 பாடல்கள்) உள்ளது. அதற்குரிய பண் குறிஞ்சி. திருவாரூரில் கொண்டாடப்பட்ட திருவாதிரைத் திருவிழாவின் சிறப்பினை விரிவாக இப்பதிகம் விளக்குகிறது. இப்பதிகத்தின் ஒவ்வொரு பாடலும் "ஆரூர் ஆதிரை நாளால் அது வண்ணம்" என்னும் ஈற்றடி கொண்டது.

"நணியார் சேயார் நல்லார் தீயார் நாடோறும்
பிணிதான் தீரும் என்று பிறங்கிக் கிடப்பாரும்
மணியே பொன்னே மைந்தா மணாளா என்பார்கட்கு
அணியான் ஆரூர் ஆதிரை நாளால் அது வண்ணம்"

என்பது அந்தப் பதிகப் பாடல்களில் ஒன்று.

திருவாசகத்தில் திருவெம்பாவையில் "மார்கழி நீராடேல் ஓர் எம்பாவாய்" என்று வருவதையும், திருவெம்பாவை திருவாதிரைத் திருநாளுடன் தொடர்புடைய ஒன்று என்பதையும் அனைவரும் அறிவர்.

சேக்கிழாரின் பெரிய புராணத்தில் திருநாவுக்கரசர் புராணம், (1505) திருஞானசம்பந்தர் புராணம் (2398) ஆகிய புராணங்களில் திருவாதிரைத் திருநாள் பற்றிய குறிப்பு வருகின்றது. திருப்புகலூரில் திருஞானசம்பந்தரைத் திருநாவுக்கரசர் திருவாரூரிலிருந்து வந்து சந்திக்கிறார். அப்போது சம்பந்தர் திருவாரூர்ச் சிறப்புப் பற்றி வினவ அதற்குத் திருநாவுக்கரசர் முன்னே குறிப்பிட்ட திருவாதிரைப் பதிகம் பாடி ஆதிரை நாள் சிறப்பைக் குறிப்பிட்டார் எனச் சேக்கிழார் கூறுகிறார்.

"மேவு திருவாதிரை நாள் வீதி விடங்கப் பெருமான் பவனி தன்னில்
தேவர்கள் முனிவர்கள் முன் சேவிக்கும் அடியார்களுடன் சேவித்து
மூவுலகும் களிகூர வரும் பெருமை முறைமையெலாம் கண்டு போற்றி
நாவினுக்குத் தனியரசர் நயக்கும் நாள்......."

"சித்தம் நிலாவும் தென் திரு ஆரூர் நகராளும்
மைத்தழை கண்டர் ஆதிரை நாளின் மகிழ் செல்வம்
இத்தகைமைத்து என்று என்மொழிகேன்" (1505)

என்று "திருவாதிரை நிகழ் செல்வம் சொன்னார்" (2398).

இந்தப் பாடல்களில் சேக்கிழார் திருவாதிரை நாளில் திருவாரூரில் செய்யப்படும் வழிபாடுதான் உண்மையான செல்வம் என்று போற்றுகிறார். "செல்வத்துட் செல்வம் செவிச் செல்வம்" என்றும் அருட்செல்வம் செல்வத்துட் செல்வம்" என்றும் கேள்வியையும் அருளையும் திருவள்ளுவர் குறிப்பிடுகிறார். பக்திக் காலத்தில் "செல்வன் கழலேத்தும் செல்வம் செல்வமே" என்று ஞானசம்பந்தர் பாடுகிறார். வழிபாடுதான் சிறந்த செல்வமாகக் கருதப்பெற்றது. "மண்ணினிற் பிறந்தார் பெறும் பயன், மதி சூடும் அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தல், கண்ணினால் அவர் நல்விழாக் காணுதல்". எனவே திருவாதிரை நாள் வழிபாடு சிறந்த செல்வமாக, மானிடப் பிறவியின் மாண்புறு பயனாகக் கருதப்பட்ட நிலையை இங்கே காணுகிறோம்.

திருவாதிரை நாளை ஒட்டிச் சைவ சமயச் செந்நெறிக்கு இரண்டு நூல்கள் கிடைத்துள்ளன. ஒன்று திருப்பல்லாண்டு; மற்றொன்று கொடிக்கவி. முன்னையது தோத்திரம்; பின்னையது சாத்திரம். திருப்பல்லாண்டு பாடியவர் சேந்தனார். இவர்

சிதம்பரத்தில் விறகு வெட்டி விற்று வரும் ஊதியத்தில் நாள்தோறும் சிவனடியார்க்கு உணவிட்டுப் பின் உண்ணும் நெறியினர். ஒரு நாள் இரவு நடராசப்பெருமானே சிவனடியாராக இவரிடம் சென்று களியுண்டு (கூழுண்டு) அந்தக் களியை மறுநாள் தம் திருமேனியில் காட்டிச் சேந்தனார் பெருமையை உலகுக்கு வெளிப்படுத்தினார். இந்த அற்புதம் அவரால் நிகழ்ந்ததோ என்று ஐயம் கொண்டவர்க்கு ஐயம் நீங்கத் திருவாதிரை நாளன்று ஓடும் தம் திருத்தேரை அழுந்தச் செய்து சேந்தனார் திருப்பல்லாண்டு பாடத் திரும்பத் தேரை ஓடச் செய்தார் நடேசப்பெருமான். மன்னுயிர் அனைத்தையும் வாழ்த்தும் மாண்புடைய திருப்பல்லாண்டு – இறைவனை வாழ்த்தும் திருப்பல்லாண்டு எழுந்த நாள் திருவாதிரை நன்னாளே ஆகும். திருப்பல்லாண்டு ஒன்தாம் திருமுறையிலுள்ள பதிகம், எனினும் பஞ்சபுராணத்தில் ஒன்றாக வைத்துப் பாடப் பெறும் சிறப்புடையது. திருவாதிரை நாளில் திருவாதிரைக் களி வைப்பதற்குரிய காரணமும் இப்போது விளங்கும்.

அவிழ்ந்த துணியில் அவிழ்ந்த அவிழை
"அவிழ்ந்த மனத்தால் அவிழ்க்க – அவிழ்ந்த சடை
வேந்தனார்க்கு இன்னமுத மாயிற்றே மெய்யன்பில்
சேந்தனார் செய்த செயல்" (53).

என்று திருக்களிற்றுப்படியார் சேந்தனார் பெருமையைச் செப்புகிறது. கொடிக்கவி என்பது சைவ சித்தாந்த சாத்திரங்களில் ஒன்று; அளவால் மிகச் சிறியது. கட்டளைக் கலித்துறை ஒரு பாடலும் 3 வெண்பாக்களும் கொண்ட ஒரு சிறிய நூல். இதனை இயற்றியவர் உமாபதி சிவாச்சாரியார். கிபி 14ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். தில்லைத் தீட்சிதர்களில் ஒருவர். இவர் மறை ஞானசம்பந்தர் என்னும் வேளாளரைத் தம் குருவாகக் கொண்ட காரணத்தால் தில்லைத் தீட்சிதர்கள் இவரை ஒதுக்கி வைத்துவிட்டனர். இது பொறாது நடராசப் பெருமான் திருவாதிரைத் திருநாளில் கொடியேறாது தடைப்படுத்தித் தீட்சிதர்களிடம் அசரீரி வாயிலாக உமாபதி சிவாச்சாரியரை அழைத்து வந்து கொடிக்கவி பாடுமாறு பணித்தனன். அதன்படி உமாபதியார் வந்து கொடிக்கவி பாடியதும் கொடியேறி விழா நடந்தது. எனவே கொடிக்கவி என்னும் சாத்திர நூல் தோன்றுவதற்குத் திருவாதிரை நாள் காரணமாய் இருந்திருக்கிறது. கொடிக்கவியில் உள்ள ஒரு பாடல் வருமாறு:

"அஞ்சு எழுத்தும் எட்டு எழுத்தும்
ஆறு எழுத்தும் நால் எழுத்தும்
பிஞ்சு எழுத்தும் மேலைப் பெருவெழுத்தும் – நெஞ்சழுத்திப்
பேசும் எழுத்துடனே பேசா எழுத்தினையும்
கூசாமல் காட்டக் கொடி".

"மாதங்களில் நான் மார்கழி" என்பது கீதை வாக்கு. மார்கழி மாதம் திருவாதிரைத் திருநாளை ஒட்டிப் பத்து நாட்கள் திருவெம்பாவை கோயில்களில் ஓதப்படுகின்றது. ஓதுவார்கள் இந்தப் பத்து நாட்களும் ஏனைய திருமுறைப் பாடல்களுக்குத் திருக்காப்பிட்டு வைத்து விட்டுத் திருவெம்பாவை மட்டுமே ஓதுவர். திருவெம்பாவை என்பது பரிபாடலில் கூறப்பட்ட அம்பா ஆடலுடன் தொடர்புடையது. மார்கழியில் கன்னிப் பெண்கள் பாவை ஒன்று செய்து நாள்தோறும் காலையில் எழுந்து சென்று குளித்துவிட்டு நோன்பு நோற்று வழிபடுவர். இந்த நோன்பின் நோக்கம் இரண்டு; ஒன்று நாடு செழிக்க நல்ல மழை பெய்ய வேண்டுதல்; இன்னொன்று வீடு செழிக்க நல்ல கணவன் வாய்க்க வேண்டுதல் (சிவனடியார்கள் தாம் கணவனாக வரவேண்டுதல்)

பரிபாடலில் தைந்நீராடல் என்ற ஒன்று சுட்டப்பட்டுள்ளது. அதன் வளர்ச்சியே மார்கழி நீராடல் என்று கூறுவர். கன்னிப் பெண்கள் காலையில் எழுந்து ஒருவரை ஒருவர் எழுப்பிச் சென்று பொய்கையில் சிவன் பெருமைபாடி நீராடுதலை இது சுட்டும். மார்கழி நீராடேல் ஓர் எம் பாவாய் என்று திருவெம்பாவையில் இது பேசப்படுகின்றது.

திருவாதிரை சிவபெருமானுக்குகந்த விரதங்களில் ஒன்று. மார்கழித் திருவாதிரை நாள் தொடங்கி, அடுத்த மார்கழித் திருவாதிரை வரை இருக்க வேண்டிய ஒன்று. உபதேச காண்டத்தில் இதுபற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது.

"செவ்வழிச் சின்மயச் சிதம்பரத் தலத்து
இவ்வழி இந்த நோன்பியற்றுவாரவர்
வெவ்வழித் தன்மைய வினையின் நீங்கி மற்று
உய்வழி அருங்கதி ஒடுங்குவார்களே"

இவ்விரதம் இருந்து முருகன், வியாக்ரபாதர், விஜயன் சிறப்புற்றதாகக் கூறுவர்.

திருவாதிரை அன்று தரிசனம் தரப்பெறும். தரிசனம் என்றால் திருவருட் காட்சி. நடராசப் பெருமான் தன் நடனக் காட்சியை முதலில் உமையம்மையாருக்குக் காட்டினார். பிறகு முப்பத்து முக்கோடி தேவர்களுக்குக் காட்டினார். முப்பது முக்கோடி தேவர்கள் பசுமாட்டில் உறைவதாக நம்புவதால்தான் தரிசனத்தன்று முதலில் பசுமாட் டிற்குக் காட்சி கொடுக்கப்படுகின்றது. பிறகு பதஞ்சலி, வியாக்ரபாதர் வேண்டுகோளுக்காகத் தில்லையில் மண்ணுலகில் சிதம்பரத்தில் நடனக்காட்சி காட்டினார். அவர் ஆன்மாக்களாகிய நமக்குக் காட்சி அளிக்குமாறு நடராசப் பெருமானை உமையம்மையாருடன் அழைத்து வந்து காட்சி கொடுக்கச் செய்கிறார். இதனால்தான் திருவாதிரைத் தரிசனம் என்று இவ்விழா அழைக்கப்படுகின்றது. நடராசப் பெருமானுக்கு ஆண்டுக்கு ஆறு முறை அபிடேகம் நடக்கும். திருவாதிரை நாள் அபிடேக நாட்களில் ஒன்று.

**சமுதாய நோக்கில்**

நகரத்தார் மரபினர் கன்னிப் பெண்களுக்குச் செய்யப்படும் திருவாதிரைச் சடங்கு இப்போது இரண்டு நாட்கள் மார்கழித் திருவாதிரை அன்றும், மறுநாள் அன்றும் நடத்தப்படுகின்றது. முதல் நாள் அன்று மணிமேகலையில் கூறப்படும் ஆதிரை நல்லாளை வழிபாடு செய்து கொண்டாடப்படும்: கன்னிப்பெண்கள் வீடுவீடாகச் சென்று மங்கல மகளிரிடம் காய்கறி வாங்கி வந்து கூட்டாகச் சோறு சமைத்து ஆதிரையாளைக் கும்பிட்டு வழிபடுவர். அடுத்த நாள் நடராசப் பெருமான் தரிசனக் காட்சியின்போது கன்னிப் பெண்கள் மணப்பெண்கள் போல அணி செய்யப் பெற்று ஊர்வலமாக வருவர். இது திருவெம்பாவை நோன்புடன் தொடர்புடைய ஒன்று. நகரத்தார்கள் வழிவழிச் சைவர்கள் ஆதலினால் "எங்கொங்கை நின் அன்பர்அல்லார் தோள் சேரற்க; எங்கை உனக்கல்லாது எப்பணியும் செய்யற்க" (திருவெம்பாவை 19) என இறைவனை வேண்டுவதாகும். கன்னிப் பெண்களுக்குச் செய்து வந்த இச் சடங்குகள் இப்போது அருகியே காணப்படுகின்றன.

சேந்தனார்க்கு இறைவன் நடராசப் பெருமான் திருவாதிரை நாளில் களியுண்டு அருள் செய்தது, திருப்பல்லாண்டு பாடச் செய்து தேரோடச் செய்தது ஆகிய நிகழ்ச்சிகள் சைவ சமயத்தில், இல்லாரும் உள்ளாரும் கீழ் நிலையிலுள்ளாரும் மேல் நிலையிலுள்ளாரும், திருவருளைப் பெறுவதற்கு எவ்விதத் தடையும் இல்லை என்பதை உணர்த்துகின்றன.

"சாத்திரம் பல பேசும் சழக்கர்காள்;
கோத்திரமும் குலமும் கொண்டு என் செய்வீர்;
பாத்திரம் சிவனென்று பணிதிரேல்
மாத்திரைக்குள் அருளும் மாற் பேறரே"

(திருநாவுக்கரசர் தேவாரம்)

என்பது திருமுறை வாக்கு. சைவத்தில் கடையனுக்கும் கடைத்தேற்றம் உண்டு என்பதை இந்நிகழ்ச்சிகள் காட்டுகின்றன.

உமாபதி சிவாச்சாரியார் வாழ்வில் நடந்த கொடிக்கவி நிகழ்ச்சி குருவாகக் கொள்வதற்குக் குலத்தாழ்ச்சி உயர்ச்சி கருதுதல் பாவம் என்னும் கோட்பாட்டை வலியுறுத்துகிறது. குருவாகக் கொள்ளத் தகுதி—அறிவும் அருளும் ஒழுக்கமும் பெற்ற தகுதி தான் பார்க்க வேண்டுமே ஒழியப் பிறப்பு வேறுபாடு கருதக் கூடாது. அப்பூதி அடிகளாகிய அந்தணர் திருநாவுக்கரசராகிய வேளாளரைக் குருவாகக் கொண்டு வழிபட்டதைப் பெரிய புராணம் காட்டவில்லையா என்ன?

**தத்துவ நோக்கில்**

தத்துவ நோக்கில் திருவாதிரை என்னும் தொடரைப் பார்ப்போம். இத்தொடரில் திரு ஆ திரை என்னும் மூன்று சொற்கள் இருப்பதைக் காண முடிகிறது. திரு என்பது சிவத்தை – இறைவனைக் குறிக்கும், "திருவே என் செல்வமே" என்னும் திருநாவுக்கரசர் தேவாரத் தொடரை நோக்குக. திரு என்பது திருவருளையும் குறிக்கும்.

"சென்றடையாத திருவுடையானை" என்னும் திருஞான சம்பந்தர் தேவாரத் தொடரையும் "கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்" என்னும் பெரிய புராணத் தொடரையும் பார்க்க. ஆ என்பது பசு; ஆன்மாக்களாகிய உயிர்களைக் குறிக்கும். திரை என்பது தடை – தளை. அதாவது ஆன்மா இறைவனை அடைய விடாது இடையில் இருக்கும் பாசம். எனவே திரு ஆ திரை என்பது பதி, பசு, பாசம் என்னும் சைவசித்தாந்தக் கோட்பாடு வலியுறுத்தும் முப்பொருள் உண்மையையும் உணர்த்து கிறது. நம் ஆலயங்களில் சிவலிங்கம், நந்தி, பலிபீடம் (பதி, பசு, பாசம்) இருக்கும் வரிசை முறையும் திரு ஆ திரை என்னும் சொற்களின் வரிசை முறையையும் உணர்த்துகிறது. எனவே திருவாதிரை என்பது நம் கோயில் தத்துவத்தின் உயிர்நாடியையும் சுட்டுவதாகவுள்ளது.

திருவெம்பாவையில் பாவை நோன்பு நோற்கும் பெண்கள் ஒருவர் எழுந்து மற்றொருவருடன் சேர்ந்து ஒருவர் இருவர் மூவர் கூட்டமாக ஒவ்வொருவர் இல்லத்திற்கும் சென்று அங்குத் துயின்று கொண்டிருக்கும் தம் தோழிமாரை எழுப்பிச் சென்று நீராடுவதைப் பார்க்கிறோம். அதாவது பக்குவம் பெற்ற ஆன்மா பக்குவம் பெறாத ஆன்மாக்களைத் தட்டி எழுப்பிக் கண்ணைத் துயின்று அவமே காலத்தைப் போக்காதே விண்ணுக்கு ஒரு மருந்தை வேத விழுப்பொருளைக் கண்ணுக்கு இனியானைப் பாடிக் கசிந்துருகுமாறு தூண்டுவதாகக் கொள்ள வேண்டும். இறுதியில் எல்லோரும் நீராடுவதை இறைவனின் திருவருட் பொய்கையில் திளைப்பதாகக் கருதவேண்டும்.

திருவெம்பாவையின் தத்துவம் சக்தியை வியந்தது ஆகும். சக்தி என்பது திருவருளையே குறிக்கும். பொய்கை திருவருட் சக்தியைக் குறிக்கும். மழை என்பதும் திருவருளையே சுட்டும். இறுதிப் பாடலில் எட்டுப் போற்றிகள் இடம் பெற்றுள்ளன. முதல் இரண்டு, இறைவனின் தோற்றம், ஒடுக்கம் ஆகியவற்றை வாழ்த்துகின்றன. அடுத்த ஐந்து போற்றிகளும் இறைவனின் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களைப் போற்றுகின்றன. எட்டாவது மார்கழி நீராடலை, வழிபாட்டுக்கு வழிவகுத்த மார்கழி நீராடலைப் போற்றுகிறது. இறைவன் தொழிற்பட இயங்கும் நிலைதானே சக்தியுடன் கூடிய நிலை? எனவே இந்த நிலையை வியக்கும் போது போற்றும்போது சக்தியை வியந்ததாகின்றது.

திருவெம்பாவைக்கு உரை எழுதிய பேராசிரியர்கள் சிலர் மனோன்மணி முதலிய நவசக்திகளை எழுப்பி வழிபடுவதாகவும் திருவெம்பாவையின் முதற்பகுதிக்கு விளக்கம் தருவர்.

பண்பாட்டு நோக்கில்

திருவாதிரையை ஒட்டித் தோன்றிய திருவெம்பாவைத் திருவிழா தமிழகத்தைக் தாண்டிக் கடல் கடந்து தாய்லாந்து நாட்டுக்குச் சென்று கொண்டாடப்பெறும் நிலையைத்தான் பண்பாட்டு நோக்கு என்று கூறுகிறோம். "தாய்லாந்தில் திருவெம்பாவை திருப்பாவைத் திருவிழா" பற்றி மலாயாப் பல்கலைக் கழக இந்தியத் துறைப் பேராசிரியர் ச.சிங்காரவேலு அவர்கள் ஆய்வுகள் செய்து பல கட்டுரைகள் எழுதியுள்ளார்.

தாய்லாந்தில் கொண்டாடப்படும் திருவெம்பாவை திருப்பாவைத் திருவிழா அந்நாட்டு மொழியில் "லோஜின்ஜா" என்று அழைக்கப்பட்டது. இதற்குப் பொருள் ஊஞ்சலை வலித்தல் என்பதாகும். இது ஊஞ்சல் திருவிழா. தைமாதத்தில் கொண்டாடப்பட்டது. உயரமான ஊஞ்சலில் ஆடுபவர்கள் அருகே மூங்கில் கழியில் கட்டப்பட்ட பொற்கிழியைப் பல்லால் கடித்துப் பெறுவர். ஊஞ்சல் ஆடும் இடத்தின் அருகே சிவன் விஷ்ணு, கணேசர் கோயில்கள் உள்ளன. ஊஞ்சல் ஆடும்போது சங்கம் ஒலிக்கப்பெறும். கோயில் சடங்குகளின்போது திருவெம்பாவை, திருப்பாவைப் பாடல்கள் அரச அந்தணரால் ஓதப்பெறும். இவ்விழாவின் நோக்கம் சிவன் நிலவுலகிற்கு வருகை தந்து வரம் அளிப்பதாகும். இதனைத் தாய்லாந்து அரசரே அவ்விழாவிற்கு வருகைதந்து சிவனாகக் காட்சி அளிப்பதன் மூலம் உணர்த்தினர். அவ்வாறு அரசர் சிவனாக வீற்றிருக்கும் போது பாவைப் பாடல்கள் ஓதப்பெற்றன. மக்கள் மண்டியிட்டு வணங்கினர். அரசர்கள் அவர்களுக்குப் பரிசுகள் அளித்தனர். இப்பரிசளிப்பு சிவன் வரந்தருதற்கு நேராகும். ஊஞ்சல் விழாவிற்குப் பின் மழைத்திரு விழா நடக்கும். அப்போது ஊஞ்சலாடியவர்கள் மாட்டுக் கொம்பினைக் கையில் ஏந்தித் தண்ணீர்த் தொட்டியைச் சுற்றி நடனமாடிக் கொண்டு கொம்பில் நீரை நிரப்பி வாரி இறைப்பர். இந்த ஊஞ்சலாட்டமும் மழை நடனமும் திருவெம்பாவை – திருப்பாவை தொடர்புடையன. ஊஞ்சல் கிழக்கு மேற்காக ஆடுவது ஆதிரையான சிவபெருமானையும் குறிக்கும். நீர்த்தொட்டியில் நீராடுவது திருவெம்பாவையில் இடம் பெறும் குடைந்து குடைந்து நீராடுதலை உணர்த்தும். இல்லங்கள் தோறும் எழுந்தருளுதல் என்னும் திருவெம்பாவைக் கருத்து அரசன் சிவனாக வருதலுடன் ஒத்துள்ளது. அரசனின் இறைத்தன்மையை உணர்த்துகிறது. (சிங்கார வேலு, ச.) இந்த ஆய்வுக் கருத்துகள் திருவெம்பாவை தென்கிழக்கு நாடுகளில் பெற்ற செல்வாக்கை – பண் பாட்டுச் செல்வாக்கை நமக்கு நன்குணர்த்துகின்றன.

முடிவுரை

எண் குணத்தானாகவும் எண் வடிவினனாகவும் இலங்கும் இறைவனாகிய சிவபெருமானுக்குகந்த நட்சத்திரமாகிய திருவாதிரையையும் மொழியியல், அறிவியல், சோதிட இயல், இலக்கியம், சமயம், சமுதாயம், தத்துவம், பண்பாடு ஆகிய எண்கோணங்களில் நோக்கி ஆராயும் இக்கட்டுரை வழி திருவாதிரையின் சிறப்பு நன்கு வெளிப்படும். ஆதிரையின் பெருமையை அறிந்து ஆதிரையானாகிய சிவனை மனத்தால் நினைத்து, வாயால் துதித்து, மெய்யால் வழிபட்டு முன்னேறுவோமாக.

---

## துணை நூல்கள்

1. திருக்குறள்
2. சென்னைப் பல்கலைக் கழகப் பேரகராதி
3. தமிழ்க் கலைக் களஞ்சியம்
4. சோதிட அரிச்சுவடி
5. அபிதான சிந்தாமணி
6. பரிபாடல்
7. கலித்தொகை
8. முத்தொள்ளாயிரம்
9. திருஞான சம்பந்தர் தேவாரம்
10. பெரியபுராணம்
11. திருக்களிற்றுப்படியார்
12. உபதேச காண்டம்
13. தாய்லாந்தில் திருவெம்பாவை திருவிழா பேராசிரியர் ச. சிங்காரவேலு



"உறுதுணை யாவது உயிரும் உடம்பும்
உறுதுணை யாவது உலகுறு கேள்வி
செறிதுணை யாவது சிவனடிச் சிந்தை
பெறுதுணை கேட்கிற் பிறப்பில்லை தானே"

– திருமந்திரம்

# துவார பாலகர்

டாக்டர். அ. விசுவநாதன் தமிழ்த்துறைத் தலைவர்
அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி–3

---

ஓர் அரசன் மக்களின் தலைவன் மட்டுமல்லன். மக்களின் காவலனும் ஆவான். அரசனின் தலையாய கடமை மக்களைக் காத்தலாகும். அதனாற்றான் அரசன் காவலன் என அழைக்கப்பெற்றான்.

"வையங் காவலர்" (புற.நா:8:1)
"ஞாலங் காவலர்" (புற.நா:18:14)

என வருதல் கருதத்தக்கது. அரசன் 'கோ' என்றும் அழைக்கப் பெற்றனன்.

"ஓம்பா தீயும் ஆற்றல் எங்கோ" (புற.நா:22:33)
"எம் கோ வாழிய குடுமி" (புற.நா:9:8)
"வரையா ஈகைக் குடவர் கோவே" (புற.நா:17:40)

அரசன் வாழ்ந்த இல்/இல்லம் கோயில் என்று வழங்கப் பெற்றது.

'வாயில் விடாது கோயில் புக்கு' (புற.நா:67:10)
'சாயின் றென்ப ஆஅய் கோயில்' (புற.நா:127:6)
" ............................ மற்றவன்
திருக்கிளர் கோயில் ஒருசிறை தங்கி" (–பொருந 90)

சங்க காலத்திலேயே கடவுள்/தெய்வத்தின் வாழிடம் கோயில் என்று அழைக்கப் பெற்றது.

"வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலுள்" (புற.நா:241:3) மக்களைக் காக்கும் மன்னன் வாழிடம் கோயில்: மன்னனையும் மக்களையும் காக்கும் தெய்வம் வாழிடமும் கோயில் எனப்பட்டது. முதலில் மன்னனுக்காகிப் பின்னர்த் தெய்வத்திற்கு வழங்கிற்று. மக்கள் மன்னனைத் தம் உயிராகப் போற்றினர்.

"நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்
அதனால் யானுயிர் என்ப தறிகை
வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே" (புற.நா:186)

மன்னனது காத்தல் தொழிலை இறைவனிடத்துச் சார்த்திக் கண்டனர். திருமால் காத்தல் கடவுளாகக் கருதப் பெற்றார். அரசன் இறைவனாகக் கருதப் பெற்றனன். "திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே" என்ற ஆழ்வார் கருத்துச் சங்க காலக் கோட்பாட்டின் வளர்ச்சியே ஆகும்.

மன்னன் மக்களின் காவலனாக இருந்தாலும் அம்மன்னனுக்கும் காவலர்கள் இருந்தனர். அரசனுடைய கோயில், முரசம், காவல் மரம் போன்றவற்றைச் சிறப்பாகக் கருதிக் காத்தனர். அரண்மனை வாயிலில் காவலர்கள் இருந்தனர்; அவர்கள் வாயிற் காப்போர் எனப்பட்டனர்.

மன்னனுக்குக் கோயில் கண்டமை போலக் கடவுளர்க்கும் கோயில்கள் கண்டனர். கோயில்களும் காலந்தோறும் பரிணாம வளர்ச்சி பெற்றுள்ளன. கோயில்களில் அமர்த்தப் பெற்ற தெய்வத் திருவுருவங்களும் பரிணாம வளர்ச்சி பெற்றன.

"கள்ளி நீழல் கடவுள் வாழ்த்தி" (புற.நா:260)
"தெய்வம் சேர்ந்த பராரை வேம்பு" (அகம்:309)

மரத்தடிகள் இறைவன் இருப்பிடங்கள். இவை தொடக்க கால நிலை. இன்றைய நிலை என்ன? கருவறை, அருத்த மண்டபம், மகா மண்டபம், முக மண்டபம், நந்தி, பலிபீடம், கோபுர நுழைவாயில் போன்ற பல பகுதிகள் தோன்றி வளர்ச்சி பெற்றுள்ளன. பரிவார தெய்வங்கட்குத் தனித்தனிச்சிறு கோயில்கள், நவக்கிரக சந்நிதி என்று பிற்கால வளர்ச்சிகள் வேறு, அரசனுடைய வாயிலைக் காத்து நிற்போர் வாயிற்காவலர் என்றும் அழைக்கப் பெற்றனர். அவர்களுடைய அனுமதியுடன் தான் அரசன் இருப்பிடம் சேர இயலும். பரிசிலர்கள் கோப்பெருஞ் சோழனின் அரண்மனைக்குள் காவலர்க்கு உணர்த்தாமலே தடையின்றிச் சென்றனர்.

"வாயில் விடாது கோயில் புக்கு" (புற.நா:67:10)
"பரிசிலர்க் கடையா வாயிலோயே" (புற.நா:206–54)

கணவனை இழந்த கண்ணகி, பாண்டிய மன்னனிடம் வழக்குரைக்கச் சென்றக்கால் காவலனிடம் அறிவித்து, மன்னன் அனுமதி பெற்ற பின்னே அரசனிடத்துச் சென்றனள்.

"வாயி லோயே வாயிலோயே
அறிவற்ற போகிய பொறியது நெஞ்சத்து
இறைமுறை யிழைத்தோன் வாயி லோயே" (சிலம்பு:20:24–26)

என்ற கண்ணகியின் கூற்று காவலர் இருந்தமையை உணர்த்தும்.

அரசனுடைய வாயிலைக் காத்து நிற்கும் காவலர்கள் போல, இறைவனுடைய கருவறையையும் காத்து நிற்கும் வாயிற் காவலர் துவார பாலகர் எனப் பெற்றனர்.

துவாரம்–துவார:

துவாரம்: வாயில், தொளை என்று தமிழ் லெக்சிகன் பொருள் கூறும். துவாரம் சிறிய வழி: தொடக்க காலத்தில் மனிதன் அமைத்த வீட்டில் சிறிய வாயிலே இருந்தது. ஓர் ஆள் நுழைந்து உள்ளே செல்ல இயலும். இன்று தேவைக்கேற்பப் பெரிதாக உள்ளது.

நகரின் முற்பகுதியில் அமைந்தது வாயில்; இதன் வழியாகத்தான் வீரர்கள் உள்ளே நுழைவதாக இருந்தாலும், நகரை விட்டு வெளியே செல்வதாக இருந்தாலும்

செல்ல வேண்டும். இத்தகைய துவாரம் அசோக மன்னனது காலத்தே உள்ளது என்று, இந்தியப் பண்பாட்டுக் களஞ்சியம் சுட்டும்.[1]

துவார பாலகர்:

வாயிற்காப்போர் என்று ஐத்திரேய பிராமணத்தில் குறிக்கப் பெற்றுளது. பின்னர் இறைவனின் இரு புறங்களிலும் உள் மண்டபத்தே இருந்து காவல் புரிபவர் என்று அந்நூல் மேலும் குறிப்பிடும்.[2]

துவார தாரா:

"பௌத்த வச்சிராயன இன மக்களின் பெண் வாயில் காவல் தெய்வங்கள் நால்வரைப் பற்றிய குறிப்பு நிசுபன்னயோக வல்லியில் இடம் பெற்றுள்ளது. அவர்கள் தாலிகா, குஞ்சி, கபாடா, படதாரிணி, முதல் தெய்வம் வெள்ளை, இரண்டாவது மஞ்சள், மூன்றாவது சிவப்பு, நான்காவது நீல நிறங்களில் காணப்பெறும். ஒவ்வொரு தெய்வத்துக்கும் இரண்டு கைகள் மட்டுமே இருந்தன"[3] என்று அதே கலைக் களஞ்சியத்தில் காணப்படுகின்றது.

மேலைச் சான்றுகளை நோக்குங்கால் துவ்ார பாலகர் – வாயிற் காப்போர்– முதலில் அரசனுக்கு அமைந்து பின்னர்த் தெய்வங்கட்கும் அமைக்கப் பெற்றமை புலனாகின்றது. பெண் வாயிற் காவல் தெய்வங்கள் இருந்தமையும் அறியக் கிடக்கின்றது.

திருக் கோயில்களில் இறைவனின் வாயிற் காவலராக அமைந்த துவார பாலகர்களின் திருவுருவ அமைதியை விரிவாகக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

துவார பாலகர்களின் திருவுருவங்களின் அமைப்புக் குறித்த இலக்கண நூல் தமிழில் இல்லை. இலக்கியம், சிற்பம், ஓவியம் முதலியன நுண்கலைகளுள் அடங்கும். இவற்றை உருவாக்கும் படைப்பாளர்கள் புலவன், சிற்பி, ஓவியன் என்று அழைக்கப்பெற்றனர். ஒரு பெண்ணை முடி முதல் அடி வரை தன் புலமைத் திறத்தால் கவிஞன் பாடலாகப் படைக்கிறான். ஒரு சிற்பி அதே பெண்ணின் உருவத்தைக் கல்லில் சிற்பமாகத் தன் திறமை முழுதும் காட்டி வடிக்கிறான். ஓவியன் தன் திறம் காட்டி கிழியில் ஓவியமாகத் தீட்டுகிறான். மூவரும் கலைஞர்கள் தாம். இவர்கள் படைப்பு இவ்வாறு தான் அமைய வேண்டும் என்று வரையறுக்கும் இலக்கண நூல்கள் இல்லை. இலக்கியம் கண்ட பிறகே இலக்கணம் உருவாயிற்று. இந்தக் கோட்பாடு இலக்கியத்திற்கு மட்டுமன்றி ஏனை இரண்டனுக்கும் ஏற்புடையது.

கவிதைப் படைப்பாளன்–இலக்கியப் படைப்பாளன் தன் படைப்பு உலகில் நிலைபெற்று நிற்க வேண்டும் என்பதற்காகத் தன் கற்பனைத் திறத்தால் பற்பல புதிய உத்திகளைக் கையாள்வான். கற்பனைத் திறத்திற்கெல்லாம் இலக்கணம் வடிக்க முடியாது. வான்மீகத்தில் வில்லொடித்த இராமனைத் தான் சீதை கண்டாள். கம்பன், முதல் நாளே ஒருவரை ஒருவர் நோக்க வைத்தான். அண்ணலும் நோக்க அவளும் நோக்கினள். வான்மீகி இராவணன் சீதையைத் தன் கைகளால் தூக்கிச் சென்றான்.

கம்பனின் இராவணன் சீதையைத் தொடாமல் அவள் இருந்த பர்ணசாலையோடு தூக்கிச் சென்றான். இவ்வாறு புலவர்கள் தம் படைப்புகளின் நிலைபேற்றிற்காக மேற்கொண்ட உத்திகளை விரித்துப் பேசப் புகின் மிகும்.

மேற்கூறிய அதே சூழ்நிலை தான் சிற்பிக்கும். எந்த உருவத்தையும் எப்படியும் வடிக்கலாம். சான்றாக ஒரு திருமேனியின் முடியலங்காரத்தை எப்படியும் அழகுபடுத்திக் காட்டலாம். அணிந்திருக்கும் அணிகலன்களைத் தன் கற்பனைத் திறத்தால் வடித்துக் காட்டலாம். சிற்பியின் மன வளத்திற்குத் தக இவையெல்லாம் அமையும். இரண்டு கைகள் படைக்கலாம். அவற்றை நான்காக்கியும் வடிக்கலாம். சிற்பங்களின் உருவவேறுபாட்டிற்குக் காரணன் சிற்பியே.

மேற் கூறிய அதே சூழ்நிலை தான் ஓவியனுக்கும். சொல்லில் படைத்ததை கல்லில் வடித்ததைத் திரையில் தீட்டுகின்றான். முடியலங்காரம், உடையலங்காரம், அணி அலங்காரம், வண்ணப்பூச்சு எல்லாம் ஓவியன் கற்பனைத் திறத்திற்குத் தக அமையும். திருமகள் உருவத்தைத் தீட்டுங்கால் இரண்டு கைகளுடன் தீட்டலாம், நான்கு கைகளும் படைத்துத் காட்டலாம்.

இத்தகு கவின் கலைகளுக்கு நுண்கலைகட்கு நடைமுறை இலக்கணங்கள் காலத்தாற் பிற்பட்டன. கலை வல்லோனுக்குப் பிறகே கணிப்பு வல்லோன் தோன்றினன். இக்கோட்பாட்டினை அடிப்படையாகக் கொண்டு, எவ்வகைப் படைப்பினையும் திறன் காணுதல் சீரிதாகும்.

பண்டைத் தமிழ் இலக்கியங்களில் கடவுளர் தெய்வங்கள் பற்றிய குறிப்புகள் பலவுள. ஆனால் அவற்றின் திருவுருவ அமைதி குறித்த செய்திகள் மிகமிக அருகியே காணப் பெறுகின்றன. திருமுருகாற்றுப் படையில் முருகனின் திருக்கோலம் சுட்டப் பெறுகின்றது. பாரதம் பாடிய பெருந்தேவனார் இறைவனின் திருமேனி அழகை, திருவுருவ அமைப்பைப் புறநானூற்றில் சொல்லால் வடித்துக் காட்டுகின்றார்.

"கண்ணி கார்நறுங் கொன்றை காமர்
வண்ண மார்பிற் றாருங் கொன்றை
ஊர்தி வால்வெள் ளேறே சிறந்த
சீர்கெழு கொடியும் அவ்வே றென்ப
கறைமிட றணியலு மணிந்தபின் றக்கறை
மறைநவி லந்தணர் நுவலவும் படுமே
பெண்ணுரு வொருதிற னாகின் றவ்வுருத்
தன்னு ளடக்கிக் கரக்கினும் கரக்கும்
பிறைநுதல் வண்ண மாகின் றப்பிறை
பதினெண் கணனுமேத்தவும் படுமே
எல்லா வுயிர்க்கும் ஏம மாகிய
நீரற வறியாக் கரகத்து
தாழ்சடைப் பொலிந்த வருந்தவத் தோற்கே".

திருவுருவ அமைதியை விரிவாகக் கூறும் சிறப்பான பாடல். இவ்வுருவத்தை இன்று சிற்பத்திலும் காண்கிறோம். ஓவியத்திலும் காண்கிறோம். காலத்திற்கேற்பத் திருக்கோலங்கள் வேறுபாடுகளுடனும் காட்சியளிக்கின்றன. மண்ணாலும் மரத்தாலும் அமைந்த பண்டைக் கோயில்கள் காலவெள்ளத்தால் அழிந்து பட்டன. தமிழகத்தில் அழியாத பாறைக் கோயில்களை அமைத்த பெருமை பல்லவர்களையே சாரும். அவர்கள் அமைத்த குடைவரைக் கோயில்கள், பாறைக் கோயில்கள், கட்டுமானக் கோயில்கள் இன்றளவும் அழியாக் கோயிற் களஞ்சியங்களாய்த் திகழ்கின்றன.

மலைப் பாறைகளைக் குடைந்து குடைவரைக் கோயில்களைத் தமிழ் நாட்டில் முதன் முதல் அமைத்தவன் முதல் மகேந்திர வர்மன் ஆவன். (கி.பி. 580–630) இவன் காலத்திய குடைவரைக் கோயில்கள் (1) தளவானூர் (2) திருச்சிராப்பள்ளி (3) மண்டகப் பட்டு (4) பல்லாவரம் (5) மகேந்திரா வாடி (6) வல்லம் (7) மேலைச்சேரி (8) சிங்காவரம் (9) திருக்கழுக்குன்றம் (10) கீழ் மாவிலங்கை ஆகிய ஊர்ளில் காணப்பெறுகின்றது.

தெலுங்கு தேசத்தில் பெஜவாடா, மொகல்ராஜபுரம், உண்டவல்லி, பைரவகொண்டா ஆகிய ஊர்களிலும் குடைவரைக் கோயில்கள் காணப் பெறுகின்றன. இங்குள்ள குடைவரைக் கோயில்கள் மகேந்திரவர்மன் காலத்தன போன்றுள்ளன. மகேந்திரவர்மன் தமிழகத்திற்கு வருவதற்கு முன்னர் அப்பகுதியில் இத்தகைய குடைவரைகளை அமைத்திருக்கலாம் என்று அறிஞர்கள் கருதுகின்றனர்.[4] மகேந்திரவர்மன் அமைத்த குடைவரைகளில் துவார பாலவர் உருவங்கள் உருவாக்கப் பட்டுள்ளன. சிற்பங்களாகச் செதுக்கப் பெற்றன. அவற்றின் திருவுருவ அமைதியினைப் பலவாறாகப் பிரித்துக் காண்போம்.

1. பல்லாவரம்:

பல்லாவரம் குடைவரை மண்டப அமைப்பு உடையது. குடைவரையில் வாயிற்காப்போர் உருவங்கள் செதுக்கப் பெறவில்லை.

2. பெரும்பாலான குடைவரைக் கோயில்கள் மண்டபம், மண்டபத்தினுள் ஒன்றும் அதற்குக் கூடுதலான கருவறைகளையும் கொண்டுள்ளன. பெரும்பாலான கருவறைகள் கிழக்கு நோக்கியன.

(அ). தளவானூர்:

தளவானூர் செஞ்சியிலிருந்து 10 கல் தொலைவில் உள்ளது. ஊருக்கு வடக்கே உள்ள பாறையின் தென்புறம் குடைவரை உள்ளது. மண்டபத்தினுள் கருவறை அமைந்துள்ளது. கருவறையின் இருபுறமும் வாயிற் காப்போர் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

பார்வை நேர் பார்வை, கருவறையை நோக்கி வரும் பார்வையாளர்களைப் பார்க்கும் நிலை–தலைகள் கருவறையை நோக்கிச் சற்றே சாய்ந்துள்ளன. இரண்டு கைகள்தாம்; வலது பக்கம் உள்ளதில் வலது கையும், இடது பக்கம் உள்ளதில் இடது கையும் மடங்கி அபயகரமாகத் தோன்றுகின்றன. மார்பில் பூணூல் காணப்படுகிறது. கையில் கைத் தண்டு இல்லை. தலையில் முடியும் அணிகலன்களும் காணப்படுகின்றன.

(ஆ) கருவறையில் மட்டுமன்றி மண்டபத்தின் இருப்பக்கங்களிலும் வாயிற் காப்போர் உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இரண்டும் வெவ்வேறு அமைப்பின. பாறையின் மேற்குப் பக்கம்–வலப் பக்கம் உள்ளதில் வலது கை இடுப்பில் ஊன்றி உள்ளது. இடது கை வணங்குமாறு உயர்ந்துள்ளது. கிழக்குப் பக்கம் – இடது பக்கம் உள்ளதில் வலது கை கைத்தண்டு மீது தாங்குவதாக உள்ளது. இடது கை வணங்குமாறு உயர்ந்துள்ளது. இரண்டிலும் இடுப்பு வலது கைப் பக்கம் சாய்ந்துள்ளது. பார்வை நேர்பார்வை. மண்டபத்திலும் கருவறையில் உள்ளவாறு துவார பாலகர்களுக்கு இரண்டு கைகளே உள்ளன. நான்கு கை அமைப்பின அல்ல.

(இ) சிங்காவரம்:

சிங்காவரம் செஞ்சிக்கருகிலுள்ள மேலைச் சேரியிலிருந்து ஒரு கல் தொலைவில் தெற்கே உள்ளது. வாயிற் காப்போர் உருவங்கள் தளவானூரில் உள்ளன போலவே அமைந்துள்ளன.

3. திருச்சிராப்பள்ளி

மலைக்கோட்டையின் மேலுள்ள குடைவரை மகேந்திரவர்மன் காலத்தது. தென்பக்கம் பார்த்த குடைவரை. மண்டபத்தின் கிழக்குப் பக்கச் சுவரில் மேற்குப் பார்த்த வண்ணம் கருவறை உள்ளது. கருவறையின் இருபக்கமும் வாயிற் காப்போர் உருவங்கள் உள்ளன.

கருவறையின் வலதுபக்கம்

வடக்குப் பக்கம் இடது கை; கைத்தண்டின் மீது ஊன்றிய தோற்றம். வலது கை மார்பின் குறுக்கே வணங்கிய நிலை. இடது கால் வலதுகாலின் மீது மடங்கிய நிலை. நேர்பார்வை. தலையில் மகுடம். இடுப்பின் மேற்பகுதி இடது பக்கம் சற்றே சாய்ந்த நிலை.

கருவறையின் இடதுபக்கம்

தெற்குப் பக்கம் வலது கை கைத்தண்டின் மீது வளைந்த நிலை. இடது கை மார்பின் குறுக்கே வணங்கிய நிலை. வலது கால் இடது காலின் கீழ் மடங்கிய நிலை. தலையில் மகுடம்; நேர்பார்வை; வலது பக்கம் சற்றே சாய்ந்தநிலை. இவ்விரு உருவங்களிலும் ஒரு தெளிவான அமைப்புக் காணப்படுகிறது. ஒன்றுக்கொன்று நேர் மாறுபட்ட, ஒத்த அமைப்புடையன.

4. மண்டகப்பட்டு

விழுப்புரம் புகைவண்டி நிலையத்திலிருந்து வடக்கே 12 கல் தொலைவில் உள்ளது மண்டகப்பட்டு. குடைவரை மண்டபம். வடக்கு நோக்கியது. மூன்று கருவறைகள் உள்ளன. கருவறையில் குழிகள் மட்டும் காணப்படுகின்றன. தெய்வத் திருவுருவங்கள் இல்லை. மும்மூர்த்திகளுக்கும் ஆன குடைவரையாகும். மண்டபத்தின் இரு கோடியிலும் வாயிற்காப்போர் உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. கிழக்குப்பக்கம் வலதுபக்கம் –

உள்ளதில் இடது கால் மடங்கி வலது காலின் கீழ் உள்ளது. பார்வை கருவறை நோக்கியது. பார்வையாளர்கட்குப் பக்கப் பார்வையாகத் தோன்றும். இடுப்பின் மேற்பகுதி இடது பக்கம் சற்றே சாய்ந்த நிலை. தலையலங்காரம் உண்டு.

மண்டபத்தின் மேற்குப் பக்கம் – இடப் பக்கம் – உள்ள சிற்பத்தில் நிறைந்த தலையணிகள் காணப்படுகின்றன. பார்வை நேர் பார்வை. பார்வையாளர்களைப் பார்க்கும் பார்வை. வலதுகை இடுப்பின் மீது இடதுகை; பெரிய கைத்தண்டுமீது பொருந்திய நிலை. கால் மடங்குதல் இல்லை.

நடுவில் உள்ள கருவறையின் இருபுறங்களில் மட்டும் வாயிற் காப்போர் உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. ஏனைய இரு கருவறைகளிலும் இல்லை. இவ்வாயிற்காப்போர் பாம்பு வடிவ அணிகலன்களை அணிந்துள்ளனர்.

இம்மண்டபத்தில் காணப்படும் கல்வெட்டு வாசகம் வருமாறு;

"செங்கல் இல்லாமலும், மரம் இல்லாமலும் உலோகம் இல்லாமலும்
சுண்ணாம்பு இல்லாமலும் பிரம்ம ஈசுவர விஷ்ணுக்களுக்கு விசித்திர
சித்தன் என்னும் அரசனால் இக்கோயில் அமைக்கப்பட்டது".

5. வல்லம்:

செங்கற்பட்டிலிருந்து இரண்டு கல்தொலைவில் கிழக்கே உள்ளது வல்லம். கிழக்குப் பார்த்த மண்டபம். அதனுள் கருவறை உள்ளது. கருவறையின் இருபக்கமும் வாயிற் காப்போர் உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. திருச்சிராப்பள்ளியில் உள்ளன போன்ற தோற்றம். தலையலங்காரத்துடன் வளைந்த கொம்பு போன்ற அமைப்பு இரு புறமும் காணப்படுகிறது. இத்தகைய கொம்பின் அமைப்பு மாமல்லன் காலத்தில் மிகுதி. மகேந்திரன் காலத்தே அரிதாகவே காணப் பெறுகின்றது.

6. திருக்கழுக்குன்றம்

செங்கல்பட்டு மாவட்டத்தில் உள்ளது. மலை உச்சியில் வேதகிரீசுவரர் கோயில் உள்ளது. மலையின் மேலே கிழக்குப் பார்த்த குடைவரை. இதை ஒற்றைக் கல் மண்டபம் என்று அழைக்கின்றனர். மண்டபத்தில் நடுவிலுள்ள கருவறையின் இருபக்கமும் வாயிற் காப்போர் உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இரண்டு கைகள், ஒரு கை இடுப்பின் மீது ஊன்றிய நிலை. மற்றொரு கை பெரிய கைத்தண்டின் மீது தாங்கி நிற்கும் நிலை.

மண்டபத்தின் வடபுறச் சுவரிலும் தென்புறச் சுவரிலும் இரண்டு (துவார பாலகர்) உருவங்கள் ஒன்றை ஒன்று பார்த்தால் போல் உள்ளன. கருவறைத் துவார பாலகர்களைப் போல் அல்லாமல் கடவுளைப் போற்றுவதே போல் ஒரு கையை உயரத் தூக்கிக் கொண்டும் மற்றொரு கையை இடுப்பில் ஊன்றிக் கொண்டும் தோன்றுகின்றன. ஒற்றைக்கல் மண்டபத்தின் இரண்டு பகுதிகளிலும் வாயிற் காப்போர் உருவங்கள் இல்லை.

மகேந்திர வர்மன் காலத்திய துவார பாலகர் உருவங்களை ஒரு சேர ஆராய்ந்து பார்க்கின் கீழ்க்காணும் முடிவிற்கு வரலாம்.

1. துவார பாலகர் இல்லாத குடைவரைகளும் உண்டு.
2. துவார பாலகர் ஒவ்வொருவருக்கும் இரண்டு கைகளே உள்ளன.
3. துவார பாலகர்களின் பார்வை நேர்பார்வை – பார்வையாளரை நோக்கும் நிலை.
4. கையில் கைத்தண்டு இல்லாத உருவங்கள் உள.
5. கைத்தண்டின் மீது கைகள் தாங்கிய நிலை உள.
6. கால்கள் மடங்கியும் / மடங்காமலும் உள்ளன.
7. மண்டபங்கள் வடிவமைப்பு – அதனுள் கருவறை அமைப்பு – மண்டபங்கள் பெரும்பாலான வாயிற் காப்போர் உருவங்கள் பெற்றுள. மிகச் சிலவற்றில் இல்லை.
8. கருவறையின் முகப்பில் வாயிற்காப்போர் உருவங்கள் கட்டாயம் உண்டு.
9. ஒரு சில, மார்பில் பூணூலுடன் காணப்படுகின்றன.
10. தலையணியுடன் வளைந்த கொம்பு அரிதே காணப்படுகின்றது.
11. சைவ வைணவக் குடைவரைகளில் வாயிற்காப்போர் உருவங்களில் வேறு பாடில்லை.
12. தெலுங்கு நாட்டில் உள்ள குடைவரைக் கோயில்களில் கருவறைகள் – கருவறை முகப்பில் வாயிற் காப்போர் உருவங்கள் காணப்பெறுகின்றன. இரண்டு கைகள் மட்டுமே உள்ள உருத் தோற்றம். கையில் கைத்தண்டு தலையணி – வளைந்த கொம்பு மகேந்திர வர்மன் தெலுங்கு தேசத்துடன் கொண்ட தொடர்பும் – அங்கிருந்து வந்தவர்கள் என்ற கருத்தும் உறுதியாகின்றன.
13. துவார பாலகர் உருவங்கள் கருவறையை நோக்கிய பார்வையுடனும், நேர் பார்வையுடனும் காணப்படுகின்றன. கீழ் மாவிலங்கை மண்டகப்பட்டு ஆகிய ஊர்களில் உள்ளவற்றின் பார்வை கருவறையை நோக்கியுள்ளது.
14. மும்மூர்த்திகட்கும் ஒரு சேரத் தனித் தனிக் கருவறைகள் அமைத்தவன்.
15. இவன் காலத்தே பெண் தெய்வங்களுக்காகக் குடைவரைகள் தோற்றம் பெற்றில.

மேற்கூறிய உருவ அமைதிகளை நோக்குங்கால் ஓர் வரையறுக்கப்பட்ட நெறிமுறை காணப்படவில்லை. வாயிற் காப்போர் கருவறைக்கு உண்டு என்பது தெளிவாகின்றது. மற்றபடி குடைவரைகளைக் குடைந்து உருவாக்கிய வர்களின் கற்பனைக்கும் கை வண்ணத்திற்கும் ஏற்ப, துவார பாலகர்கள் உருவாக்கப் பெற்றுள்ளனர் என்பது புலனாகின்றது.

**மேற்கோள் விளக்கம்**


1. Encyclopaedia of Indian culture I PP (408-409).
2. Ibid. P. 409
3. Ibid. P. 408
4. Pallava Architecture Vol. I P. 22




# நகரத்தார்களின் வாகனத் தருமம்

டாக்டர் தே. சொக்கலிங்கம், எம்.ஏ., பிஓ.எல்., பிஎச்.டி
இணைப் பேராசிரியர், அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி–3.

---

திருக்குளம், திருக்கோயில் என்று அறப்பணிகளைச் செய்து வந்த நகரத்தார்கள், இறை வழிபாட்டுக்கு நிலையான களங்களை அமைத்த பின்னர்த் திருக்கோயில் தொடர்பான அகவளர்ச்சிகளிலும் புறவளர்ச்சிகளிலும் ஈடுபடலாயினர்.

**திருக்கோயில் அகவளர்ச்சி:**

அகவளர்ச்சி என்பது திருக் கோயிலுக்கு உள்ளே வழிபாட்டுக்கும் விழாவுக்கும் தேவையானவற்றைச் சேர்த்துக் கொள்வதாகும். மடைப்பள்ளி, அதற்கு வேண்டிய பாத்திரங்கள், உரல், உலக்கை, அம்மி, தண்ணீர் அண்டாக்கள், என்பன ஒரு வகையின; ஆல வட்டம், சுருட்டி, தேர், கொடி, குடைகள், தீவட்டி, என்பன மற்றொரு வகையின; இவை திருவிழாவுக்குரியன; விளக்குகள், கற்பூரத்தட்டுகள், திருவாட்சிகள், சோடச உபசாரக் கருவிகள் ஆகியன வழிபாட்டுக்குரிய கருவிகள்; இவை இன்னொரு வகையின. இவையனைத்தும் திருக்கோயிலில் நடைபெறும் நித்திய பூசைக்கும் திருவிழாவுக்கும் வேண்டியவை. இவற்றைக் கோயிலுக்கு மக்கள் தங்கள் கொடையாக வழங்கியிருக்கின்றனர். மேற்சுட்டிய கருவிகள் கோயிலினுள்ளே நடைபெறும் காரியங்களுக்காகக் கோயிலுக்குள்ளேயே காப்பாக வைக்கப்பட்டிருக்கின்றன.

**புற வளர்ச்சி:**

கோயிலில் நடைபெறும் பல்வேறு வேதாகமச் சடங்குகளுக்காகக் (வேதம் ஓதல், தேவாரம் பாடல், பால் அபிஷேகத்துக்குக் கொடுத்தல், என்பன) கோயிலுக்கு வெளியே தேவையானவற்றை உருவாக்குதல், கோயிலின் புற வளர்ச்சியாகும். இது கோயிலைச் சார்ந்து நகர விடுதியாகவும் பசுமடமாகவும் வேத பாட சாலையாகவும் ஆகம பாடசாலையாகவும் தேவார பாடசாலையாகவும் நகரச் சத்திரமாகவும் வளர்ந்த வளர்ச்சியாகும். இவற்றை நகரத்தார்கள் நிறையப் பொருட் செலவு செய்து நிறுவி நடத்தி வந்திருக்கின்றனர். இவ்வாறு திருக்கோயில் வழிபாட்டுக்கு வேண்டியவற்றைக் கோயிலுக்கு வெளியிலிருந்தே அணியமாக்கியிருக்கின்றனர். ஆகம வழிபாட்டு மரபுகள் பெருகப் பெருகத் துணைக் கருவிகளும் பிறவும் பெருகத் தொடங்கின.

**நிலையான அமைப்பும் வளர்ச்சியும்:**

ஒருவன் தனக்கு நிலையாக வருமானம் ஏற்பட்ட பின், தான் வாழச் சொந்தமாக வீடு அமைத்துக் கொண்டபின் தன்னுடைய பிற தேவைகளைப் பெருக்கிக் கொள்ளவும் வசதிகளை அமைத்துக் கொள்ளவும் செய்வான்; அதன் பின் சிறுகச் சிறுகத் தனக்கு வேண்டியவற்றை அவன் சேகரிக்கத் தொடங்குவான். அது போலச் சிவபெருமான் எழுந்தருளச் சாலச் சிறந்ததும் திட்ப நுட்பம் அமைந்ததுமாகிய திருக்கோயிலை

நகரத்தார்கள் கட்டி முடித்தனர். பாடல் பெற்ற திருத்தலங்களில் எல்லாம் கல் திருப்பணி செய்யப் பெற்றுச் செவ்வனே நிறைவேறிற்று. அவர்கள் வாழ்ந்த ஊர்களிலும் விநாயகர் கோயிலோ அம்மன் கோயிலோ சிவன் கோயிலோ கட்டப்பட்டன. திருக் கோயில்கள் கட்டிமுடித்தபின் தொடர்ந்து நகரத்தார்களின் மனம் தெய்வத் திருத் தொண்டிலேயே ஈடுபடலாயிற்று. தெய்வப் பணியை விழைந்த அவர்கள் உள்ளம், கோயில் வளங்களைப் பெருக்கிடச் சென்றது. இறைபணியே இனிய பணி என்று மேன் மேலும் நகரத்தார்கள் பெருகிய செல்வத்தைக் கோயில் வழிபாட்டுத் தொண்டுகளிலேயே செலவிட்டனர்.

திருக்கோயில் திருப்பணி, நகரத்தார்களுக்குப் பலவேறு சமூகத்தினருடன் உறவாட வழி வகுத்ததது. ஸ்தபதிகளுடனும் சிவாச்சாரியார்களுடனும் பழகிய நகரத்தார்கள், அவர்களுடைய கலைத் தொடர்பான அறிவுண்மைகளை அறியலாயினர்; அவர்களிடையே கருத்துப் பரிமாற்றங்கள் ஏற்பட்டன. சிற்ப சாத்திரம், ஆகம சாத்திரம் ஆகியன பற்றிய அறிவும் நகரத்தார்களுக்கு உண்டாயிற்று. இதனால் கோயில் தொடர்பான பணிகளில் நகரத்தார்கள் ஈடுபட வாய்ப்பேற்பட்டது.

இறைவன் திருவுலா:

கோயிலில் இருந்த இறைவன், கோயிலுக்கு வெளியே வந்து அடியார்களுக்கு அருள் புரிய எழுந்தருளினான். அவ்வாறு இறைவன் வெளிப் போந்த போது எவ்வாறு வரவேண்டும் என்று அடியார்கள் எண்ணலாயினர். இறைவன் உலா வந்திட எந்நாளில் என்ன வாகனத்தில் வரவேண்டும் என்று ஆகமங்களால் நகரத்தார்கள் அறிந்தனர். இதனால் கோயிலுக்குத் தேவையான புதிய புதிய வாகனங்களை அவர்கள் செய்யலாயினர். அம் முயற்சியில் தச்சாசாரிகளும் கொல்லாசாரிகளும் பங்கு பெற்றனர். இதனால் திருக்கோயிலில் பல்வேறு வாகனங்கள், மரத்தால் செய்யப்பட்டன; அவற்றுக்கு வண்ணங்கள் பூசப்பெற்றன. மரத்தில் வாகனங்கள் செய்யப் பெற்றுத் திருவிழாக்கள் சீரும் சிறப்புமாக நிகழ்ந்தன.

வாகனங்களும் ஆகமமும்:

திருக்கோயில் திருவிழா, பத்து நாள்களோ அதற்குக் கூடுதலான நாள்களோ நிகழும். இதனால் ஒவ்வொரு நாளும் வெவ்வேறு வகையான அலங்காரமும் வாகனமும் தேவையாயின, இதனால் திருக்கோயில்களில் வாகனங்களின் எண்ணிக்கை கூடிற்று. காரணாகமம், 'இன்ன நாளில் இன்ன வாகனத்தில் இறைவனை எழுந்தருளச் செய்ய வேண்டும்' என்று விதிக்கிறது.

| நாள் | காலை வாகனம் | மாலை வாகனம் |
|---|---|---|
| முதல் | முடு பல்லக்கு | ஹம்ஸம் |
| இரண்டு | சூரிய பிரபை | சந்திர பிரபை |
| மூன்று | சிம்மம் | பூதம் |
| நான்கு | நாகம் | மகரம் |
| ஐந்து | கட்டில் | ரிஷபம் |
| ஆறு | கேடயம் | யானை |
| ஏழு | இரதம் (தேர்) | பிரயத் சித்ரம் |
| எட்டு | புருஷாமிருகம் | குதிரை, பாரிவேட்டை |
| ஒன்பது | பீடம் அல்லது தேர் | புலி, கிருஷ்ணகாந்தம் சாத்தல், நடேசர்வீதிவலம் |
| பத்து | சிம்மாசனம் | கைலாச வாகனம் |
| பதினொன்று | விமானம் | சக்தி ஊடல் |

இவ்வாறு காரணாகமம் வாகனங்களைக் குறிப்பிட்டாலும் நகரத்தார்கள் மேற் கட்டிய வாகனங்களையெல்லாம் திருக்கோயில்களுக்குச் செய்து கொடுத்தனர் என்று கூற முடியாது. இந்த நாள் விழாவுக்கு இன்ன வாகனம் என்று விதித்த ஆகமங்கள், இன்ன வாகனம் செய்து கொடுத்தால் இன்ன பலன் ஏற்படும் என்று குறிப்பிட்டுள்ளன.

## வாகனங்களின் பயன்கள்

| வ.எண் | வாகனம் | பயன் |
|---|---|---|
| 1. | பெருச்சாளி | எக்காரியமும் தடையின்றி நிறைவேறும்; செல்வமுண்டாகும். |
| 2. | மயில் | செல்வங்கள் பெருகும்; புகழ், ஜன வசீகரம் உண்டாகும். |
| 3. | சிம்மம் | அரசாங்க ஆதரவு, அதிகாரவிருத்தி, மக்கள் பணிவாக நடப்பார்கள். |
| 4. | யானை | எந்தச் சிரமங்கள் ஏற்பட்டாலும் அவை ஒரு நொடியில் தீர்ந்து விடும்; கிராம தேவதை அருள் சித்திக்கும். |
| 5. | பூதவாகனம் | சோர பயம் தீரும்; தன் பொருள்கள் காப்பாக இருக்கும். |
| 6. | ரிஷபம் | எடுத்த காரியங்கள் வெற்றி, சகல நன்மைகளும்போக போக்யங்களும் உண்டாகும். |

| வ.என் | வாகனம் | பயன் |
|---|---|---|
| 7. | ஆட்டுக்கிடாய் | சகலரோக நிவர்த்தி, இஷ்டசித்திகள் நடைபெறும். |
| 8. | சூரியபிரபை | உஷ்ண வியாதி நிவர்த்தி, தீர்க்காயுசு. |
| 9. | சந்திரபிரபை | சீதள வியாதி நிவர்த்தி, ஆரோக்கியம், பாபநிவர்த்தி, மன சந்துஷ்டி, வமிச விருத்தி |
| 10. | கற்பகவிருட்சம் | நாடிய பொருள் கைகூடும், நினைத்த காரியங்கள் வெற்றி செல்வம் பெருகும். |
| 11. | காமதேனு | பசு விருத்தி, பால் பாக்கியம், தேவியின் அருள் கிட்டும் |
| 12. | மஞ்சம் | ராஜயோகம். |
| 13. | சிம்மாசனம் | அரசபதவி, ராஜ்ய அனுகூலம், ஆட்சி, பதவி உயர்வு |
| 14. | திருத்தேர் | தெய்வ கடாட்சம், அரச பதவி, அஷ்ட ஐஸ்வரியம், நல்ல மனைவி, மக்கள், சதா இறையன்பு ஆகியன உண்டாகும். |

இதில் குதிரை சுட்டப்படவில்லை. இன்ன வாகனம் செய்தால் இன்ன பயன் விளையும் என்பதை உணர்ந்து நகரத்தார்கள் வாகனங்கள் செய்திருக்கலாம்; பயனை அறியாமல் வாகனம் செய்திருக்கவும் கூடும். செட்டிநாட்டில் நகரத்தார்களுக்குச் சொந்தமாக உள்ள சிவன் கோயில்களில் ஒன்றோ இரண்டோ வெள்ளி வாகனங்கள் இருக்கும்; மர வாகனங்களும் காணப்படும். இவற்றை நகரத்தார்களே செய்தளித்திருப்பர்.

மரவாகனம் வெள்ளியாதல்:

தொடக்கத்தில், திருமேனிகளைக் கையில் தூக்கியும் படிச் சட்டப் பலகைகளில் வைத்துத் தூக்கியும் உலாவாகக் கொண்டு திருவிழாச் செய்த மக்கள், இறைவனுக்கு வாகனங்கள் அமைத்து அவற்றில் இறைவனை எழுந்தருளச் செய்தனர். இதற்காக மரத்தில் வாகனங்கள் செய்தனர். மரவாகனங்களைத் திருவிழாவில் எழுந்தருளிச் செய்ய அவற்றுக்கு எண்ணெய் பூசியும் வண்ணம் பூசியும் அழுகுபடுத்தினர். மரவாகனங்களின் வண்ணம் ஒரிரு ஆண்டுகளில் குலைந்து விடுவதாலும் கறையான் பிடித்து அழிந்து போவதாலும் வாகனங்களை அடிக்கடி செப்பனிட வேண்டியதிருந்தது; ஆண்டுதோறும் அவற்றைப் புதுப்பித்து வண்ணம் பூச வேண்டியிருந்தது. எனவே வாகனங்களை நெடுநாள் காக்க என்ன வழி என்ற எண்ணம் ஓடலாயிற்று; நகரத்தார்களிடம் செல்வமும் நிலையாகக் குவிந்தது; சொத்துகளும் சேர்ந்தன; இதனால்

மரவாகனங்கள், வெள்ளியால் செய்யப்பட்டன. வெள்ளி வாகனங்கள், நெடுநாள் கெடாதனவாயும் திருவிழாவில் எழுந்தருளி வரும்போது அழகு தருவதாயும் விளங்கின.

வாகனத் திருப்பணியாக வளர்தல்:

தெய்வத் திருப்பணியே தங்களின் வளர்ச்சிக்கும் வள வாழ்வுக்கும் அடிப்படை என்பது நாட்டுக் கோட்டை நகரத்தார்களின் நம்பிக்கை. அவர்கள் தங்கள் வருமானத்தைத் தெய்வங்களுக்குச் செலவு செய்ய வேண்டும் என்று எண்ணினர். ஒருவர் கோயில்களுக்குச் செலவு செய்து வளமும் நலமும் பெற்றதைக் கண்டு அவரைப் பார்த்துப் பிறரும் கோயில்களுக்குச் செலவு செய்யலாயினர். இவ்வாறு செலவு செய்யத் தொடங்கிய போது, மரவாகனங்களுக்குத் தங்கத்தகடு போர்த்தியும் வெள்ளித் தகடு போர்த்தியும் புதிய வாகனங்களை உருவாக்கினர்; நகரத்தார்களின் திருப்பணி, வாகனங்கள் செய்யும் பணியாக வளர்ச்சி பெற்றது.

பாடல் பெற்ற திருத் தலங்களிலே தான் முதற் கண் வெள்ளி வாகனங்கள் செய்யும் பணி தொடங்கப் பெற்றது. பின் நகரத்தார்கள் தாங்கள் வாழ்ந்த ஊர்களிலேயுள்ள கோயில்களிலும் இப்பணியை மேற்கொண்டனர். இவர்கள் திருக்கோயில்களில் தனியாகவும் கூட்டாகவும் கோயில் வாரியாகவும் (இளை யாத்தக்குடி, மாத்தூர் என்பன போல) பொருள் திரட்டிப் பல்வேறு வாகனங்களைச் செய்தனர்.

மனம் விரும்பிய கடவுளர்:

நாட்டுக் கோட்டை நகரத்தார்கள், எந்தக் கடவுளுக்கு என்ன வாகனம் உரியது என்பதை உணர்ந்து, அவர்கள் வாகனங்களைச் செய்து வழங்கினர். சிவன் கோயிலை, நகரத்தார் அனைவரும் பொதுவாகக் கட்டும்போது, எல்லாத் தெய்வங்களின் கருவறைகளையும் பொதுவாகக் கட்டுவதுண்டு. சில கோயில்களில், விநாயகர் கருவறையை ஒரு குடும்பத்தாரும் முருகன் கருவறையை ஒரு குடும்பத்தாரும் கட்டியதுமுண்டு. இவ்வண்ணம் தாம் விரும்பும் கடவுளை மிகுதியாக வணங்குவதும் அதற்குப் பல்வேறு அணிகலன்களைச் செய்து அளிப்பதும் நகரத்தாரியற்கை. சிவன் கோயிலில் அந்த ஊரைச் சேர்ந்தோர் எந்தக் கருவறையைக் கட்டினாரோ அத் தெய்வத்திற்குரிய வாகனங்களை அவரே செய்து கொடுத்திருப்பார். திருக்கோயிலிலுள்ள ஒவ்வொரு கடவுள் மீதும் ஒருவர் பற்றுதல் கொண்டு அக் கடவுளுக்குத் தேவையானவற்றைச் செய்தளித்திருப்பர். இவ்வாறு திருக் கோயிலிலுள்ள எல்லாத் தெய்வங்களுக்கும் அணிகலன்கள், வெள்ளிக் கவசம், வாகனம் ஆகியவை இருக்கும்.

கடவுள் காட்சிதரக் காளை வாகனம்:

நகரத்தார்கள் சிவன் கோயிலுக்கு வழங்கிய வாகனங்களில் மிகுதியானவை, காளை வாகனமே (ரிஷபம்), இது சிவபெருமானுக்கு உகந்த வாகனம்; இன்றியமையாத வாகனம். திருஞானசம்பந்தரைப் 'பால் கொடுத்தது யார்? காட்டு' என்ற கேட்டபோது, அவர் அங்க அடையாளங்களுடனே 'என்னை இது செய்த பிரான் இவனே' என்று காட் டினார். உலகத்தவர்க்கு இறைவரைக் காட்டியருளிய முதல் திருப்பாட்டில் 'தோடுடைய

செவியன் விடையேறியார் தூவெண் மதிசூடி' என்று திருஞான சம்பந்தர் குறிப்பித்தார். சிவபெருமான் அடியார்க்கெல்லாம் காட்சி தந்தமையைத் 'துணையுடன் விடைமேல் கண்டார்' (399) என்றும் "மழவிடை மேல் எழுந்தருளி வந்தது" (3657) என்றும் திருத்தொண்டர் புராணமும் பேசுகின்றது. இதனால் சிவபெருமான் நயந்த ஊர்தி காளை வாகனம் என்பது பெறப்படும். எனவே நகரத்தார்கள், திருக்கோயில்களுக்கு ரிஷப வாகனம் செய்வதில் பேரீடுபாடு காட்டினர்.

சிவன் கோயில்களில் ரிஷப வாகனம் மிகப்பெரியது, பெரியது, சிறியது என்று பல அளவுகளில் இருந்தன. திங்கள் தோறும் பிரதோஷ விழாவில் இறைவன் எழுந்தருளச் சிறிய காளை வாகனம் உண்டு. இவ்வாகனத்தில் பிரதோஷத்தன்று பிரதோஷ நாயகர் அல்லது உமாமகேசுவரர் எழுந்தருளிக் காட்சி தருவார். இந்த ரிஷப வாகனம் அழகியதாயும் சிறியதாயும் குறைந்த எண்ணிக்கையுள்ளவர்களால் தூக்கக் கூடியதாயும் விளங்கும். மற்றைய காளை வாகனங்கள் இதைவிடப் பெரியனவாக இருக்கும். பெரிய ரிஷபம், பஞ்சமூர்த்தி திருவுலாக் காட்சியில் பங்குபெறும். எல்லாக் காளைகளும் கட்டைக் கொம்புடனும் அளவான திமிலுடனும் நின்ற கோலமாகக் காணப்படும்; இதன் கழுத்தில் மணிக்கோவையும் கொம்பில் கொப்பியும் கால்களில் சலங்யையும் திகழ்கின்றன. ஓர் அழகிய வெண்ணிறக் காளை உயிருடன் நிற்குமாறு ரிஷபம் விளங்கும். காளையின் உடலில் பல அணிகள் நிறைந்து அழகு வீசச் சிற்பி உருவாக்கியிருக்கும் கலைச் சிறப்பு, நகரத்தார் கலை வரலாற்றில் குறிப்பிடற்பாலது.

மிகப் பெரிய காளை வாகனம்:

கீழச்சிவல்பட்டி ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயிலில் உயிருள்ள பெரிய காளை மாடு போன்ற மாபெரும் ரிஷபம் ஒன்று வெள்ளியில் செய்யப்பட்டிருந்தது. அதனைப் பலர் கூடினாலும் தூக்க முடியாது. அந்த வெள்ளி ரிஷப வாகனத்தைச் சகடையில் வைத்தே பொருத்தியிருந்தனர். இது மிக அழகான வடிவம்; ஐம்பெருங் கடவுள் திருவுலாக் காட்சியில் அம்மையப்பர் அதில் வீற்றிருந்து உலாவரும் காட்சி வேறு எங்கும் காணமுடியாதது. இதனைச் சூரக்குடிக்கோயிலைச் சேர்ந்த கருப்பஞ்செட்டியார் குடும்பத்தினர் செய்திருந்தனர். சிவபெருமான் எல்லாக் கடவுளிலும் பெரியோன் என்பதை இந்தப் பெரிய வாகனத்தின் மூலம் அவர்கள் காட்டினர். எதிர்பாரா வண்ணம் இந்த அரிய வாகனம் திருடர்களால் சிதைக்கப்பட்டுவிட்டது. இத்தகைய பெரிய காளை வாகனம் தமிழகத்தில் வேறெங்கும் கிடையாது.

அமராவதிபுதூர் வயிநாகரம் குடும்பத்தார் சீர்காழியில், வெள்ளிக் காளை வாகனம் செய்து வைத்திருக்கிறார்கள். திருவண்ணாமலை அண்ணாமலையார் கோயிலுக்குக் கோட்டையூர் அ.க.ராம.அரு.அருணாசலம் செட்டியார் பிரதோஷத்திற்கு வெள்ளியில் சின்ன ரிஷபம் கொடுத்திருக்கிறார். புதுவயல் பெரி.யெ.குடும்பத்தினர் சாக்கோட்டை வீரசேகரருக்கு வெள்ளி ரிஷபம் செய்திருக்கின்றனர். அதுபோலஅவ்வூர்க் கிள்ளான் வீரப்ப செட்டியார் குடும்பத்தினர் அம்மைக்கு வெள்ளி ரிஷப வாகனம்

செய்துள்ளார். கோயிலூர் குட்டையப்ப சுவாமிகள் மதுரை ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானுக்கு அஷ்டமிப் பிரதட்சிணத்தில் தெற்கு வீதிக்கு சுவாமி ` எழுந்தருள வெள்ளி இடப வாகனம் அமைத்திருக்கிறார்.

தெய்வங்களுக்கேற்ற வாகனங்கள்:

நகரத்தார்கள் வெள்ளிக் காளை வாகனம் செய்து சிவபெருமானுக்கும் அம்மைக்கும் கொடுத்தது போல அவர்கள் பெரு விருப்புடன் முருகப் பெருமானுக்கு வெள்ளி ரதம் (வெள்ளித் தேர்) மாடுபூட்டி ஒட்டும் வண்ணம் அமைத்து நல்கியுள்ளமை குறிப்பிடத்தக்கது. கீழச்சிவல்பட்டிச் சிவன் கோயிலில் க.தெ.நா. அங்கப்ப செட்டியார் வெள்ளிரதம் ஒன்று செய்து வைத்திருக்கிறார். ஐப்பசித் திங்கள் சூரன் திருவிழாவின் போது முருகப் பெருமான் வெள்ளித் தேரில் உலாவருவார். ஆத்தங்குடியில் வெள்ளித்தேர் நகரப் பொதுவில் செய்யப்பட்டது. நாட்டரசன்கோட்டை கண்ணுடையம்மனுக்கு நகரத்தார்கள் 18.5.1930 இல் வெள்ளித் தேர் செய்தனர். செய்கோன், சிங்கப்பூர்க்கோயில்களுக்கும் வெள்ளித் தேர் செய்தனுப்பப் பெற்றது. இங்ஙனம் திருக்கோயில் கடவுளர் உலாவரச் சிவன் கோயில்களில் வெள்ளியாலும் தங்கத்தாலும் நிறைய வாகனங்கள் ஏற்பட்டன. நகரத்தார் தொடர்புடைய செட்டிநாட்டுக் கோயில்களில், மரவாகனங்களைக் காட்டிலும் வெள்ளியால் செய்யப் பெற்ற வாகனங்களே மிகுதி.

விநாயகர்க்குப் பெருச்சாளி வாகனம்; முருகனுக்கு மயில் வாகனம் அல்லது வெள்ளிரதம்; இவையன்றிக் கேடகமும் செய்யப் பெறும். அம்மையப்பருக்குத்தான் பலவகையான வாகனங்கள் நகரத்தாரால் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ரிஷப வாகனம் போலக் குதிரை வாகனமும் உண்டு. குதிரை வாகனம் வெள்ளியாலும் தங்கத்தாலும் செய்யப்பட்டன, கைலாச வாகனம், காமதேனு, இந்திர விமானம், பல்லக்கு, சூரியபிரபை, சந்திரபிரபை என்பன வாகனங்கள்; கைலாய வாகனம், அஃது ஊர்தியன்று.

இலக்கியம் உருவாக்கிய வாகனம்

கைலாச மலை, சிவபெருமானைத் தாங்கி நிற்பது. இம்மலையை இராவணன் பெயர்த்தெடுக்க முயலவே, சிவபெருமான தன் கால் பெருவிரலால் சிறிது அழுத்தவே அதில் மாட்டிக்கொண்டு அலறினான்; பின் அரக்கன் இராவணா அஸ்தம் என்னும் யாழைப் பூட்டிச் சாம வேதம் பாடி உய்திபெற்றான். இதனைத் திருநாவுக்கரசர் தாம் பாடிய தேவாரப் பதிகங்களின் பத்தாவது பாடல் கருத்தாகக் கொண்டு தமக்கு அருள் செய்யப் பாடியிருக்கிறார்.

"நரம்பெழு கைகள் பிடித்து நங்கை நடுங்க மலையை
உரங்களெல் லாம் கொண் டெடுத்தான் ஒன்பதும் ஒன்றும் அலற
வரங்கள் கொடுத் தருள் செய்வான் வளர்பொழில் வீரட்டஞ் சூழ்ந்து
நிரம்பு கெடிலப் புனலும் உடையார் ஒருவர் தமர் நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவதும் இல்லை"

என்று திருநாவுக்கரசர் தமக்கும், இராவணனுக்குக் கருணை செய்தது போலச் செய்யவேண்டும் என்ற குறிப்பமைப் பாடினார். மண்ணுலகில் வாழ்வார்கள் பிழைத்தாலும் வந்தடையில் கண்ணுதலான் பெருங் கருணைக் கைக் கொள்ளும் என்று காட்டிட அமைந்த காட்சியைக் கைலாச வாகனம் என்ற பெயரால் சிற்பாசிரியர்கள் துணையோடு நகரத்தார்கள் உண்டாக்கினர். தேவார திருமுறைகளை
ஓதியோதி உணர்ந்ததன் வாயிலாக இந்த வாகனம் உருவாகியிருக்கிறது.

கற்பகத் தருவும் காமதேனுவும்:

கைலாச வாகனம் மரத்தாலும் வெள்ளியாலும் செய்யப்பட்டிருக்கிறது. கற்பக விருட்சம் தேவலோகத்திலுள்ளது. இது வேண்டுவார்க்கு வேண்டுவன நல்கும் தன்மைபது. கற்பக மரம் போன்ற வடிவில் இவ்வாகனம் இருக்கும். "திண்டேர் கற்பகத் தருவோடு ஈந்தான்" (திருவால வாயுடையார் புராணம். 37:75) என்று கற்பகத் தருவாகிய வாகனம் வழங்கியமை பேசப்படுகிறது. கற்பக மரம், தேவர்கள் பாற்கடல் கடைந்த காலத்தில் தோன்றியது. மரங்களைப் போல எட்டுக் கிளைகளுடன் காமவல்லி என்ற கொடி படர்ந்திருக்க அமைக்கப் பெறும். காமதேனு, அமிர்த மதன காலத்தில், தோன்றிய தெய்வீகப் பசு; காமதேனு வாகனத்தை ஆவின் தோற்றமும் மனித முகமும் தலையில் கொம்பும் மார்பில் முலையுமாக நான்கு கால்களுடன் விளங்கும் பௌராணிக விலங்கு. இது வேண்டுவார்க்கு வேண்டுவன நல்கும். இதனை இறைவன் உலாவர நகரத்தார்களும் பிறரும் செய்தளித்திருக் கின்றனர்.

குதிரையும் கேடகமும்:

சிவன் கோயிலில் அம்மைக்குரிய வாகனங்களில் தனிச் சிறப்பாகக் குறிக்கத் தக்கது, குதிரை வாகனம். சிவபெருமான் இன்றி அம்மை மட்டும் தனியே உலாவரும் போது வெள்ளிக் குதிரை அல்லது தங்கக் குதிரை, அல்லது மரக் குதிரை வாகனத்தில் தான் எழுந்தருளி வருவார். கீழச்சிவல்பட்டிச் சிவன் கோயிலில் தங்கக் குதிரை வாகனமுள்ளது. நவராத்திரி விழாவில் அம்மை அம்பு போடவரும் போது குதிரை வாகனத்திலே தான் எழுந்தருளி வருவாள். போருக்குச் செல்லும் வீரன் குதிரையில் செல்லுமாறு அம்மையும் பகையை அழிக்கக் குதிரையிலேயே புறப்படுகின்றாள். சிவபெருமானைத் தனியே குதிரையில் எழுந்தருளச் செய்வதில்லை.

கேடகம் நான்கு கால்களையும் கூம்பு வடிவிலான கூரையையுமுடைய தேர் போன்ற அமைப்பினது; ஓடுவதற்குச் சக்கரம் இன்றி ஆட்கள் தூக்குமாறு இருக்கும். 'திருவாசியோடு கூடியதாய் விக்கிரகத்தை எழுந்தருளப் பண்ணுதற்கு உதவும் தோளுக்கினியான் என்னும் வாகனம்' என்று தமிழ் லெக்சிகன் (தொகுதி: 2.ப.1092) கூறுகிறது. இதில் எல்லாத் தெய்வங்களையும் எழுந்தருளச் செய்வர். கேடகங்கள் சிறியதும் பெரியதுமாகப் பல அளவுகளில் அமைந்திருக்கும். சண்டேசுவரர், மாணிக்கவாசகர், சுந்தரர் போன்ற அடியார்களை இதில் வைத்து அலங்காரம் செய்வர். இதனை ஆட்கள் தூக்கி வருவதும் சகடையில் ஏற்றிவருவதும் உண்டு. கோயில்

மூர்த்தியை எளிதாகத் தூக்கிச் செல்லக் கூடிய வாகனம், தோளுக்கு இனியான். நாள்தோறும் சிவபெருமான் அம்மையின் பள்ளியறைச் செல்லப் பயன்படுத்துவது பல்லக்கு. இது சிவபெருமானுக்குரியது என்பதால், பல்லக்கை வெள்ளியாலோ தங்கத்தாலோ நகரத்தார்கள் செய்து கொடுத்திருக்கின்றனர்.

தேரும் தேர்ச் சிறப்பும்:

திருக்கோயில்களில் தேரோட்ட விழா சீரும் சிறப்புமாக நடைபெறும்; இங்கு மக்களும் பெருந்திரளாகக் கூடுவர். தேரோட்டத்தில், பெரியதேரை இழுப்பதும் உண்டு; சில ஊர்களில் படிச்சட்டத் தேர் இருக்கும்; இத் தேரை இழுப்பது எளிமையானது. பல ஊர்களில், நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் தேர் செய்து வைத்திருக்கின்றனர். தொல்பொருள் துறை அறிஞர் பி.ஆர். ஸ்ரீநிவாசன் "பெரும்பான்மையாக இவ்வகைத் தேர்கள் தெய்வ பக்தியுள்ள பணக்காரர்களால் தானம் செய்யப்பட்டவைகளாகும். இவர்களில் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் ஒரு பெரும் பகுதியினர் எனலாம்" (கலைக் களஞ்சியம் -- தொகுதி: 6.ப.173) என்று குறிப்பர். நகரத்தார்கள் செய்தளித்த தேர்கள் பல. திருமா ஸ்ரீபாதாளேச்சுவரர் திருக்கோயில் தேர்வாரியப்பட்டி நகரத்தார் செய்தது; அதனை ஒழுங்காகக் காப்பாற்றாமல் அது சிதைந்துவிட்டது.

திருவாரூர்த் தேர், புதிதாகச் செய்தற்கு முதன் முதலில் கையெழுத்திட்டுக் கொடுத்தவர் சக்கந்தி உல.க.கண. சோமசுந்தரம் செட்டியார். அவருடைய கைராசியால் திருவாரூர்த் தேர் வேலை முற்றுப்பெற்றது. இவ்வாறு தேர் செய்யக் கூட்டாகவும் தனியாகவும் நகரத்தார்கள் பெரும் பொருளைச் செலவு செய்திருக்கின்றனர். அண்மையில் பாகனேரி புல்வாநாயகிக்கு நகரத்தார்கள் முயற்சியில் பல இலட்சம் ரூபாய் செலவில் தேர் செய்யப்பட்டிருக்கிறது.

திருக்கோயில் விழாக்களில் பயன்படுத்த நகரத்தார் பலர் வாகனங்கள் செய்திருக்கின்றனர். நகரத்தார் ஒருவர், திருக்கோயிலில் மண்டகப்படி செய்தால், அந்த விழாவில் எழுந்தருளப் பண்ண என்று தனியே வாகனம் செய்து வைத்ததுமுண்டு.

செய்யும் முறைமை:

வெள்ளியாலோ தங்கத்தாலோ வாகனம் செய்தால், அந்த வடிவத்தை முதற்கண் மரத்தில் செய்து கொள்ளவேண்டும். முதலடிப்படை மரத்தில் செய்வதுதான். வாகனம் செய்யத் தக்க மரங்களைத் தேர்ந்தெடுத்துச் செய்ய வேண்டிய வாகனத்தைச் செய்து கொள்ளுவர். அதன் பின் வெள்ளித் தகட்டைப் பயன்படுத்தி அந்த வடிவத்தைப் போர்த்தி வெள்ளி ஆணிகள் இட்டுத் தகட்டை முடுக்கிவிடுவர்; பின்னர் அணிகலன்கள், கோடுகள், போன்ற இழைப்பு வேலைகளும் நகாசு வேலைகளும் செய்யப்பெறும். வெள்ளி வாகனங்கள் செய்ய வெள்ளி அளவு மிகுதியாக இருக்க வேண்டும்; கூலியும் சேதாரமும் மேலும் செலவாகும்.

வெள்ளி வாகனம் செய்வதில், பெரிதும் வெள்ளியே பயன்படுத்தப்படுகிறது. தங்க வாகனத்தைத் தங்கத் தகடு போர்த்திச் செய்வதில்லை. செப்புத் தகட்டில் தங்க முலாம் பூசியோ இலேசான தங்கத் தகட்டை ஒட்டியோ தங்க வாகனங்கள் செய்யப்பட்டன. முழுக்க முழுக்கத் தங்கத்தால் வாகனங்கள் செய்வது மிக அருமை.

வெள்ளோட்டம்:

வாகனங்கள் முழுமையாகச் செய்யப்பட்ட பின் நன்னாள் பார்த்துச் சாத்திர முறைப்படி வெள்ளோட்டம் நிகழும். அப்போது அதனை உருவாக்கியவர்களுக்கு வேட்டி துணி முதலியன வழங்கி மரியாதை செய்யப்பெறும். இது திருக்கோயிலைச் சார்ந்த விழாவாகும்.

வாகனங்கள் செய்யப்பெறும்போது, அவற்றின் முதுகில் கடவுள் வடிவம் வீற்றிருக்கும் வண்ணம் பீடம் அமைக்கப்பட்டிருக்கும், அல்லது கொக்கிகள் இருக்கும். பீடப் பலகையை வாகனத்தின் மீது வைத்துக் கட்டிப் பின் இறைத் திருமேனியை அதன்மேல் செவ்வனம் நிறுவி நூல் கயிறிட்டுக் கட்டிச் சாத்துப்படி (அலங்காரம்) நடத்துவர்; கேடகம், தேர் போன்றவற்றில் நடுவில் இருக்கை காணப்படும். இதனால் வாகனங்களின் மீது தெய்வ உருவங்களை வைத்துச் சாத்துப்படி செய்வது மிக எளிமை

பூத் தேவையின் மிகுதியும் குறைவும்:

எந்த வாகனத்தில் இறைவனை எழுந்தருளச் செய்தாலும் அஸ்தம் பாதம் (கை,கால்) வைத்துத் துணிமணிகள் அணிவித்து அணி மணிகள் பூட்டி அலங்காரம் செய்குவர். ரிஷபம், சிம்மம், அன்னம் போன்ற வாகனங்களில் கடவுளரை எழுந்தருளச் செய்தால், பல்வேறு மாலைகள் அணிவிக்கப் பெறும்; இறை உருவத்தைச் சுற்றிப்பூவாலாகிய திருவாட்சி மேலும் கீழும் அமையும். இவை அரை வட்டமாக இருக்கும். இரண்டும் இணைந்து இறைவனைச் சுற்றிப் பூவட்டம் காட்சி தரும். இந்தத் திருவாட்சியில் சிவப்பு, பச்சை, மஞ்சள், கருப்பு (வேர்) என்று வண்ணப் பூக்கள் அமைந்து காண்போர் கண்ணைக் கொள்ளையிடும். இறைவடிவிற்கும் திருவாட்சிக்கும் பூக்கள் மிகுதியாக வேண்டும். குதிரை வாகனத்திற்கு இவ்வளவு பூ அலங்காரமில்லை. கேடகம், படிச்சட்டப் பலகை போன்றவற்றிற்குப் பூத் தேவை குறைவு; வாகனங்களில் தெய்வங்களை எழுந்தருளச் செய்தால், பூத் தேவை மிகுந்து பொருட் செலவு கூடுதலாகும். பொருட் செலவு குறைவாக இருக்க வேண்டும் என்று கருதுவோர், வாகனங்களில் இறைவனை எழுந்தருளச் செய்யாமல், கேடகத்தில் எழுந்தருளச் செய்வர்.

சிறு தெய்வக் கோயில்கள்:

திருக்கோயில் திருவிழாவுக்குத் தேவையான பல வகையான வாகனங்களை நகரத்தார்கள் தனதாகவும் பொதுவாகவும் பொருள் திரட்டிச் செய்து கொடுத்திருக்கின்றனர். நகரத்தார்களைப் போலப் பிற இனத்தாரும் வாகனங்கள் செய்திருக்கின்றனர். அங்காளம்மன், அய்யனார், கருப்பர் போன்ற சிறு தெய்வங்களுக்குத்

தேவையான வாகனங்களும் நகரத்தாரால் செய்யப்பட்டிருக்கின்றன; இவற்றில் மரத்தால் அமைந்தவையே மிகுதி.

உலாவரும் கடவுளரும் வாகனக் கவியும்:

கடவுளரை வாகனங்களில் எழுந்தருளச் செய்து உலா வருகின்ற காட்சியைப் புலவர்கள் பாடியமையைத் தனிப்பாடல்களால் அறிய முடிகின்றது. காள மேகப் புலவர் திருமாலைப் 'பருந்து எடுத்துப் போகுதுபார்' என்று பாடுவது இதற்குச் சான்றாகும். இறைவன் வாகனங்களில் எழுந்தருளி வருகின்ற காட்சியைச் சிறப்பித்துப் பாடுவது, 'வாகனக் கவி' எனப்படும். ஐந்து, அல்லது பத்துச் செய்யுட்கள் இச் சிறுநூலில் இருக்கும். அரியக்குடி, சீனிவாசப் பெருமாள் பற்றிய வாகனக் கவி, நகரத்தார் ஒருவரால் பாடப் பெற்றிருக்கிறது. இது திருக்கோயில் திருவிழாவை ஒட்டி எழுந்த புதிய இலக்கிய வகையாகும். திருக்குற்றாலக் குறவஞ்சி போன்ற நூல்கள் சிவபெருமான் வாகனத்தில் உலாவருதலைப் பாடுகின்றன. இதுபோன்ற குறிப்புகள், திருவிழாவில் வாகனத்தில் இறைவன் வருதலைப் பற்றியனவேயாகும்.

இன்ன வாகனத்தில் இறைவன்–இறைவி வருதலைக் கண்டால் இன்ன பயன் கிட்டும் என்றும் நூல்கள் நவில்கின்றன.

| வ.எண் | நாள் | வாகனம் | இறைவன் | தரிசனப்பயன் |
|---|---|---|---|---|
| 1 | முதல் | மஞ்சம் | சுவாமி அம்மன் | லெட்சுமிகடாட்சம் உண்டாகும். |
| 2 | இரண்டாம் | யானை<br>அன்னம் | சுவாமி அம்மன் | கஷ்டங்கள் நிவர்த்தி |
| 3 | மூன்றாம் | பூதம் | சுவாமி அம்மன் | அரசாங்க நன்மை துஷ்டதேவதை அணுகாது. |
| 4 | நான்காம் | வெள்ளிரதம்<br>மயில் | சுவாமி<br>அம்மை | செல்வம் பெருகும் பூர்வீக சொத்துக் கிட்டும் |
| 5 | ஆறாம் | ரிஷபம் | – | எல்லாச் செல்வங் களும் உண்டாகும். |
| 6 | ஏழாம் | கைலாச வாகனம் வெள்ளிரதம் | சுவாமி அம்பாள் | முகவசீகரம் சங்கீத வண்ணம் உண்டாகும். |

| | | | | |
|---|---|---|---|---|
| 7 | எட்டாம் | பாரிவேட்டை குதிரை வாகனம் காலை | – | யுத்த சன்னத்தமாகக் காட்சியளித்தலை வணங்கினால் மனோ தைரியமும் வீரமும் தெய்வ அருளுமுண்டாகும். |
| | | குதிரை வாகனம் இரவு | சுவாமி அம்பாள் | மனோரதங்கள் நிறைவேறும். |
| 8 | ஒன்பதாம் | தேர் | சுவாமி | சகல நன்மைகளும் புத்திர பாக்கியமும் வீடு நிலம் வாங்கும் பாக்யமும் கிடைக்கும். |

இவ்வாறு நகரத்தார்கள் திருக்கோயில் கட்டுவதில் பெரும் பொருள் செலவழித்திருப்பது போல வாகனங்கள் செய்வதிலும் நிறையப் பொருளைச் செலவழித்திருக்கின்றனர்.

வாகனம் செய்தோர்
இப்பட்டியல் முழுமையானதன்று

| எண் | ஊர் | | வாகனம் | செய்தோர் |
|---|---|---|---|---|
| 1 | திருவண்ணாமலை அண்ணாமலையார் கோயில் | 1 | மகாரதம் (1913) | கானாடுகாத்தான் வெ.சா.நாகப்ப செட்டியார் |
| | | 2 | அம்மன்தேர் (29.6.1956) | நகரத்தார்–பொது |
| | | 3 | வெள்ளிரதம் | இராமச்சந்திரபுரம் தீ.நா.பொதுக்குடும்பம் |
| | | 4 | சுவாமிதேர் | கோட்டையூர் பெ.க.அ. சித. வீரப்ப செட்டியார் மற்றும் நகரத்தார்கள். |
| | | 5 | பெரிய வெள்ளி ரிஷபம் | கோட்டையூர் அ.க.அ. மெ.குடும்பத்தினர் |
| | | 6 | வெள்ளி பெரிய இந்திரவிமானம் | கோட்டையூர் பெ.க.அ. சித. வீரப்ப செட்டியார் |

| | | | | |
|---|---|---|---|---|
| | | 7 | வெள்ளி சின்ன இந்திரவிமானம் | கோட்டையூர் பெ.க.அ. சித. வீரப்ப செட்டியார் |
| | | 8 | அம்மன் தேர் | கானாடுகாத்தான் கா.ராம மு.ராம. ராமசாமி செட்டியார் |
| | | 9 | வெள்ளிக்காம தேனு–சகடை | காரைக்குடி முத்து அரு. சாமிநாதச் செட்டியார் |
| | | 10 | வெள்ளிக் கற்பக விருட்சம்–சகடை | " |
| 2 | பட்டமங்கலம் | 11 | வெள்ளி வாகனங்கள் | |
| 3 | கொ.லெட்சுமிபுரம் | 12 | பெரியகோவில் சிவன்கோயில் வெள்ளிக் கைலாச வாகனம் (19.5.1950) | கொ.லட்சுமிபுரம் ந.சொ.அரு. அருணாசலம் செட்டியார் |
| 4 | சீர்காழி | 13 | வெள்ளி ரிஷபம் | அமராவதிபுதூர் வயிநாகரம் குடும்பத்தார் |
| 5 | வைத்தீசுவரன் கோயில் | 13 | வெள்ளித்தேர் | கானாடுகாத்தான் கரு.தூ |
| 6 | திருநாரையூர் | 14 | பிள்ளையார் பெருச்சாளி வாகனம் | காரைக்குடி ப.ராம.லெ. ராம.இலக்குமணச்செட்டியார் |
| 7 | திருச்சிக்கல் | 15 | சிங்காரவேலர் வாகனங்கள் (5–6–1933) | ஆ.தெக்கூர் கருமுத்து அழ. அழகப்ப செட்டியார் |
| 8 | திருக்களர் | 16 | வெள்ளிக்கேடகம் | அழகாபுரி சி.சு. சுப்பிரமணியன் செட்டியார் |
| 9 | திருப்பாதிரிப்புலியூர் | 17 | வெள்ளிரதம் | கடியாபட்டி தீ.சொ.பொது |
| | | 18 | அம்மைக்குத் தங்கப் பல்லக்கு | " |
| | | 19 | தங்கத்தோளுக்கு இனியான் | கடியாபட்டி தீ.சொ.பொது |
| 10 | குன்றக்குடி | 20 | சண்முகநாதப் பெருமான் – தங்கக்கேடகம் நகரத்தார்கள் | காரைக்குடி அண.சா.அள. சாமிநாதன் செட்டியார் அன்னையார் வெள்ளச்சி ஆச்சி முயற்சியால் உதவியுடன் செய்யப்பெற்றது. |
| 11 | எழுவங்கோட்டை | 21 | வாகனங்கள் | நடுவிற்கோட்டை பெருமரு தூருடையார் |

## மங்கல வாழ்த்து

சிந்தையிலும் என்தன் சிரத்தினிலும் சேரும்வகை
வந்தவனை மண்ணிடைநாம் வாராமல் – தந்தவனை
மாதினுடன் எத்திறமும் வாழ்ந்திருக்க என்பதலால்
ஏதுசொலி வாழ்த்துவேன் இன்று.

– திருக்களிற்றுப் படியார்

"என்றும் இன்பம் பெருகும் இயல்பினால்
ஒன்று காதலித்து உள்ளமும் ஓங்கிட
மன்று ளார்அடி யார்அவர் வான்புகழ்
நின்றது எங்கும் நிலாவி உலகெலாம்"

– திருத்தொண்டர் புராணம்



